ஜாதக கணிதாரம்ப மென்னும்

# சோதிட ஆசான்

(நான்கு பாக கட்டடம்)





சண்முகானந்தா புக் டிப்போ
67, T. K. முதலி தெரு,
சூளை, சென்னை—600 112.



[விலை ரூ.]

ஜாதக கணிதாரம்பமென்னும்

# சோதிட ஆசான்

சோதிடர் உதவியின்றி கற்கும் முறை

(நான்கு பாகங்கள் அடங்கியது).



நூலாசிரியர் :

மா. தெய்வசிகாமணி சோதிடரவர்கள்

சண்முகானந்தா புக் டிப்போ,

67, T. K. முதலி தெரு

சூளை, சென்னை-600112



 [விலை ரூ 60

குரு சிஷ்ய சம்பாஷணை

என்னும்

# ஹஸ்தரேகை சாஸ்திரம்

சோதிடக் கலைகளுள். உயர்ந்கதுய். உண்மையானதும் கைரேகைக் கலையாகும். அதனுள் மறைந்து கிடக்கும் பல கிடத்தற்கரிய மாபெரும் நுணுக்கங்களை மிக எளிதில் புரிந்து கொள்ளும் வண்ணம் பல நூற்றுக்கணக்கான படங்களுடன் விளக்கி வெளியிடப்பட்டுள்ளது அதிலும் குறிப்பாக ஆசிரியர் மாணவரிடையே கேள்வி பதில் ரூபத்தில் வெளியிட்டுள்ளது. கைரேகை நூல்களிலேயே முதல் முறையாகும்

(அழகிய முகப்புடன் கூடியது விலை.) ரூ-20

---



# கொக்கோகம்

அல்லது

## இரதிமன்மதன் திருவிளையாடல்

மர்ம விஷயங்கள் பச்சையாக விளக்கப் பட்டுள்ள கொக்கோக சாஸ்திரம் காம உற்பத்தி ஆண், பெண் சரீர அமைப்பு, நான்கு வகை பெண்களின் லக்ஷணம் சமயோகம் செய்யவேண்டிய முறை. அமுர்தநிலை ஆலிங்கன வகைகள் பெண்களை வசீகரப்படுத்தும் மார்க்கம மர்மமான லீலா சாஸ்திரத்திற்குரிய [illegible] பூஜா, விதானத்தோடு அமிர்தநிலை சக்கரம் ஸ்ரீ பஞ்சாக்ஷர மனோ வசீகர சக்கரம் முதலியவைகளும் அடங்கியது.



விலை ரூ-15

---

சண்முகானந்தா புக்டிகோ

67, K. T. முதலி தெரு,

சூளை, சென்னை-600 112

# முகவுரை



சிவபெருமான் திருவருளை முன்னிட்டு முழுமுதற் கடவுளால் உண்டாக்கப் பட்ட வேதங்கள் நான்கினுள் நேத்திரமென்று சொல்லும் இச்சோதிடத்தை அறியபெரிய நூலாசிரியர்கள் எளிய நடையில் அனேகம் எழுதியுள்ளார் ஆயினும் என் சிற்றறிவுக் கெட்டியவாறு இந்நூல் அமைக்க லாயினேன்.

இப்பூவுலகில் ஆத்ம கோடிகளாய் பிறந்த 14-லக்ஷம் ஜீவர்களுள் மக்கட் பிறவியையுடைய நம்மிற் சிலர் செல்வ முடையோராகவும் சிலர் தரித்ததிரராகவும் சிலர் உருவத் தாலும் குணத்தாலும் நடக்கையாலும் வாழ்க்கை ஆயுள் முதலியவைகளாலும ஒருவர்க்கொருவர் மாறு பட்டிருக்கி ரேமேயொழிய ஒருவரைப்போன்றே மற்றவரை எண்ண இடமில்லை இவ்வாறு நாம் பலவேறு விதங்களில் மாறு பட்டிருப்பது எல்லாம் வல்ல இறைவன் கட்டளையாயினும் சுகம் துக்கம் முதலியவைகளையும் கடவுள் தன் நேத்திரத் தால் பாரபக்ஷமாய் பார்ப்பாரா ஒருக்காலும் பார்க்கார் அவ்வாறு ஏக சொரூபமாயுடைய கடவுள் அனுக்கிரகம் பெற்ற நம்மில் சிலர் விசனக் கஷ்டம் தரித்திரம் முதலிய வைகளையே அனுபவிப்போரும் மற்றும் சிலர் சந்தோஷச் சுகம் முதலியவற்றை அனுபவிப்போருமாய் இருப்பதற்கு காரணம் வேண்டுமாகையால் அவ்வித காரணத்தையும் வருங்கால பலனையும் விளக்குவதே இச்சோதிடத்தின் முக்கிய கருத்தாகும், சோதிடம் என்பதை ஆதியில் பரசிவம் தன் பத்தினிக்குபதே சித்ததாய் வேதாந்தங்களிலே கூறப் பட்டிருக்கின்றன வாயினும் இந்நூலுல் பொதுப்பாயிரம் என்று எழுதிய செய்யுளால் (அதாவது) பூமருவ பாரத்தை என்ற செய்யுளினுல் வேதவியாசர் பூலோக ரகசியங்களை சொல்லவும், விக்னேஸ்வரா தன் ஒற்றைக் கொம்பினுல்

மேருகிரியின் மேல் வடமொழியில் எழுதி வைத்ததாயும் உரைப்பதை யறியலாம்.

தற்காலத்தில் அனேக அரும்பெரும் சோதிட நூற்கள் வெளிவந்துள்ளனவென்று கூறியுள்ளேன். ஆயினும் அதிலுள்ள விஷயங்கள் வடமொழி நூற்களையறிந்த பெரியோரேயறியலாமன்றி எம்போன்றோர்க் கியலாதென வறிந்தேயான் எளிய நடையின் இந்நூலெழுதலானேன், எப்படியெனில் ஓர் சிறிய குழந்தைக்கு ஓர் உபாத்தியாயர் அஆ என்கிற அக்ஷரங்களை எவ்வாறுரைப்பாரோ. அவ்ாறே இந்நூலிலுள்ள விஷயங்கள் பெரும்பாலும் எளிதிலறியும் முறைப்படி கூறியதாகும். ஆதலால் இந்நூல் சிவசுப்ரமண்யர் கிருபையால் அனைவருக்கு நன்கு பிரயோஜனமாகுமென்று நம்புகிறேன்.

இந்நூலிலேயுள்ள விஷயங்கள் யாவும் பெரும் பாலும் பற்பல வடமொழி சாஸ்திரங்களினின்று மொழிபெயர்த்து எழுதிய பல நூற்களினின்று ஒருங்கு சேர்த்து லக்கின ஸ்புடம் செய்யும் விதம் லக்கின காரகன் நக்ஷத்திர உரிச்சொல் லக்கின பலன் அஷ்டவர்க்கம் திசை புத்தி அந்தரம் யோகம் அவயோகம் பாலாரிஷ்டம் சகடதிசை புத்தி பலன் யோகமுண்டாகும் காலம் முதலிய அறிய விஷயங்களைத் தக்க உதாரணங்களுடன் விளக்கிக்காட்டியிருப்பதையறியலாம். சோதிட நூலின் மர்மமறியாத சிலர் சோதிடத்தை தூஷித்து நம்பிக்கை யில்லாதிருப்பது அவர்களறியாமையின் பயனாகும், ஆயினும் இச்சோதிடமானது எனது முன்னோர் எழுதி வைத்துள்ள பற்பல ஏட்டு பிரதிகளாலும் சோதிடத்தையே ஆபரணமாய் பூண்டுள்ள எனது தகப்பனார் காவேரிபாக்கம் மு. மார்க்கலிங்க சோதிடர் அவர்களின் சம்மதியாலும் என்னிடமிருந்துள்ள பற்பல பழைய நூற்கள் சிதருண்டு போகாவண்ணமும் சேர்தது திரட்டிய

தாகும், மேற்சொல்லியவாறும்

வாங்கி வாசிப்பார்களாயின் இதனுண்மை விளங்கும் ஆதலால் சோதிடங் கற்க விரும்புவோர்.

பரவிய ஜோதிடந்தனை யாராய்ந்து
பகருவோ ரகமகிழ செய்து
நெறியுட னித்தியக் கடனதைக்காலை
நினைவுடன் மாலையு முடித்து
தரை தனில் தூய ஜலமதைக்கண்டு
தானுமே சுத்த நீராடி
கரிமுகனோடு குருபரனை ருளைக்கருத்தினில்
நிறுத்தி நீர் தரித்து
திருமகள் நாக திரிபுரை சமேதன்
திருகலைமா துரை வேதன்
திருமலர் கழல்கள் தியானமே செய்து
சிந்தித்து பாசனங் கொண்டு
குருவருள் பூண்டு கபடதை மறந்து
குறைவிலாக் காருண்ய ராகி
பெருகிடம்ப வேஷமும் நீக்கி
பேணுதல் ஜோதிடர்க் கழகாம்.

என்ற எறைப்படி சோதிடங் கற்க விரும்புவோர் அதிகாலை யின் எழுந்து நித்திய கடனை முடித்து சுத்த ஜலத்தில் நீராடி விக்கேஸ்வரர் சிவசுப்ரமண்யக் கடவுள் பிரம்மன் உருத்திரன் விஷ்ணு முதலிய தெய்வ வழிபாடு செய்துக் கொண்டு கப்டம் வஞ்ச முதலிய உலோப குண்ங்களை மறந் தவராய் குருவருளைக் கொண்டு சோதிடத்தினுல் பொருள்

சம்பாதிக்கவேண்டுமென்கிற எண்ணத்தை மறந்து அனை வரிடத்திலும் காருண்யமுடையவர்களால் பெருமையின்றி யுரைப்பாரசயின் நாளுக்கு நாள் கலை வளர்வது போல் இச்சோதிடம் விருத்தியடைவதோடு இப்பூவுலகெங்கும் பிரகாசிக்கும் என்பதற்கு சிறிதேனும் ஐயமில்லை.

இச்சோதிடநூல் நாள்டைவில் தயாரித்தெழுதியதாயி னும் இதனை வெளியிடுவோரியின்றி இருந்ததை எனது நண்பரும் சண்முகானந்த புத்தகசாலையின் சொந்தக்காரரு மான K A மதுரை முதலியார் அவர்கள் விருப்பந்தின் படி வெளியிடக் கருத்துக்கொண்டதோடு, இதனை தனது சீனிவாச அச்சகத்தில் அச்சிட்டதற்கும் என் மனமார்ந்த நன்றி செலுத்தக் கடவேனாகவும்

இதில் ஏதேனும் எழுத்துப் பிழைகளிருக்குமாயின் வாசகர்கள் திருத்தி வாசிக்குமாறு கேட்டுக்கொள்ளும.

தங்கள் அன்புள்ள

A .R. M தெய்வசிகாமணி

பால சோதிட கணித நூற்புலவர்

# விஷய அட்டவணை



---

அரக்கோணம்
குப்புசாமி பாகவதர் எழுதிய

# சாற்றுக்கவி

———

சீர்பெரும் சோழமண்டல மதற்கே
செப்பிய வடமேற்காகும்
தார் புகழ் காவேரிப்பாக்க மரநகரில்
தன் யராம் ஜோதிட மரபில்
பேர்பெரும் மார்கலிங்கரின் தவத்தின்
பேருறுக் கொண்டதே வெங்க
பார்மிசை யுதித்த பானுவைப் போன்று
மகலிலோர் மதலையே தோன்ற
இன்னிசை தெய்வசிகாமணி யர்மென்றி
கற்றியே நாமமும் சூட்டி
பன்னியக் கல்விப்பகுதிற் பலவும்
பயன் பெற கற்றிட விடுத்தார்
பின்னவர் ஜோதிடப் பெருங்கடல் தனிலோர்
புறமரும் நீரதை யருந்தி
உன்னியே புவியிவரை ரவர்பலனை
உரைத்திடத் தோன்றினு ரென்னே
மண்புகழ் சென்னை மாநகர் தன்னில்
மருவிய பெரும் புகழ்பெற்று
கண்யமாய் பலர்கள் கருதும் ஜாதகமாம்
காட்டிய பலனதை யறிந்து
வுண்மையாய் பொருளை உறுதியா யுரைத்தோர்
உலகினி லரும்புகழ் பூண்டோர்
வுண்மையாய் ஜோதிடந்தனை யுணர்ந்தே
வழுத்துவோர் ரவர் புகழ் மிக்காம்

வயதொரு பதினாறது முதலி துகார்
வழுத்தியே ஓங்கிடும் ததியில்
நயமுடம் மதுரை முதலியாரிவரை
நண்ணியே பரிவுடன் கேட்க
பயனுட ஜோதிட ஆசானென்று
பட்டமும் சூட்டியே வரைந்து
வியந்து இருபத்தைந்தவர் வயதி
கோங்கிட உலகினில் விடுத்தார்.

———

ஆரிய சித்தாந்த கணித பஞ்சாங்க ஆசியரும்
கணித சித்த ஜோதிடம்

## சீ. வி. அருட்பெருஞ் ஜோதி, பி. ஏ.

இந்நூலைப்பற்றி சிறப்பித்துப் பாடியது,

வரைந்தென்ன நாள்வாரம் திங்கள் ஆண்டில்
வரும் பலனிற் நன்மையோடு தீமை நோய்கள்
அறிந்துரைக்கத் தெள்ளியநற் பதங்கள் சேர்த்து
அவரவர்க ளறிந்திடவும் ஒருவர்க்கோத
நிறைந்திடு ஜாதகஜன்ம லக்கினத்தோடு
நிச்சயமாய் கோசாரம் தோய்க்காண
சிறந்திடு ஜோதிட ஆசானிதைப் பயின்றோர்
சித்தியோடு புத்தி அதி சிறப்புற்றுய்வார்

## இந்நூலமைத்தவரின் நகரச்சிறப்பு.

மாவொடு தென்னைக் கமுகொடு புன்னை
 மணங்கமழ் கோங்குமந்தாரை
தாவுமாதுளையும் தோன்றும் பலாவும்
 துய்யதற் கொய்யாவும் கதலி
நாவினிற்கினிய நற்சீனி திராக்ஷி
 நலமுன அத்தி ஆலரசு
மேவியே குளிர்ந்து மிகுசிறப்புடனே
 மேன்மையாம் சோலை சூழ் நகராம்
பாயுநீரோடை பங்கயமல்லி
 படர்ந்த தடாகநற் றுறவும்
ஆயற்சிங்க பெருமாள் முத்தீர்சர்
 அன்னையாம் செல்வியம்மன்
தூய ஆலயங்கள் சிறந்துரும் காக்ஷி
 சுந்தர காஞ்சிமா நகர்க்கே
வாயுவில் காவேரிபாக்க மென்றையும்
 வள்ர் சதுர்வேத மங்கலமாம்.

---

### வேலூர் ஜோதிடர் சதாசிவ முதலியார்

பிள்ளையார் கோவில் தெரு, வேலப்பாடி, வேலூர்

இந்நூலானது பெரும்பாலும் எளியநடையில் அரிய விஷயங்களைச்சேர்த்துத் திரட்டி ஓர் நூலென அமைத்திருப்பதால் இவை ஆரம்ப சோதிடர்களுக்கு பெரிதும் பயன் படுமென்பதில் சந்தேகமில்லை. இவ்வரிய நூலையமைத்த சோதிடம் தெய்வசிகாமணி என்பவருக்கு கடவுள் கிருபை யால் நாள்டைவில் இச்சோதிடம் விருத்தியடையுமாறு கடவுள் உதவி செய்வார்,

## வா. உ. தேசிகாச்சாரியார்

### வானமாமலை

புண்ணிய பூமியாம் இப்பரதகண்டத்தில் வேதகால முதல் இற்றைஞான்று வரையின் சோதிட நூல்கள் கணக்கில் அடங்காத அத்துணை அபரிமிதமாக மலிந்துடக்கின் பூனஎன்பது நாம் கூருமலேவிளங்கும். பண்டைக்காலம் போல் சொன்னதை அப்படியே கண்மூடித்தனமாக ஏற்றுக்கொள்ளாது எடுத்ததற் கெல்லாம் அது எப்படி இது எப்படி என்று கேள்விக்கேட்கும் அறிவியல் வாதிகள் விஞ்ஞான மேதாவிகள் பூகோள் ககோள விர்பன்னர்கள் காலமாகிய இவ்விருபதாம் நூற்றுண்டில் ஒரு புறம் பல்லாயிர வருடங்களாக நடை முறையில் இருந்துவரும் சோதிட கலையை (அதன்பலனையே நம்புவதற்கு முடியவில்லை யென்றும், மற்றொரு புறம் சோதிடநூற்றாலே சரியானமுறையில் கணிக்கத்தெரிந்த சிறந்தகணிதவல்லுனர் தற்காலம் இல்லை என்றும். வேறொரு புறம் பிழையற்ற கணித நூல்களே கலியுகத்தில் கிடையாதென்றும் பலவாருக் கூறிவரும் இது காலே சோதிடத்தின் தன்மையை செவ்வனே விளக்க வேண்டி சோதிட ஆசான் என்னும் இந்நூல் சோதிட பரம் பரையில் தோன்றியவரும் சோதிடத்தை துருவித்துருவி ஆராய்ந்து தேர்ச்சிபெற்ற மு. மா. தெய்வசிகாமணி சோதிடரவர்களால் மேற்கூறிய ஐய்யப்பாடுகளை ஒழித்து நன் முறையில் தெள்ளிய நடையில் ஒழுங்கு பெற அமைத்து யாவரும் ஒத்துக்கொள்ளக்கூடிய முறையில் எழுதியதை சென்னை பிரபல புத்தக வியாபாரியும் பல நூல்களை அச்சிட்டு வெளிப்படுத்திய பெருமைக்குரிய வருமானதிருவானர் K, A. மதுரை முதலியார் அவர்கள் தன் முயற்சியால் தன் சிரமத்தையும் பொருள் கஷ்டத்தையும் பாராது சோதிட உலகத்திற் சோதிட ஆசான் என்ற இந்நூலைத் தந்துதவி பதற்கு சோதிடர்கள் நன்மதிப்புக்கும் நன்றியறிதலுக்கும் உரியவராவர். இன்னும் பலநூல்களை வெளிப்படுத்துவான்

வேண்டி சகல சம்பத்தும் நீண்ட ஆயுளையும் திட காத்தி ரத்தையும் முழுமுதற் கடவுள் கொடுத்துதவ வேண்டி நிற்கும்.

---

திருப்பாபுலியூர்

பிரசண்ட உத்தண்ட

நம்புலைய சோதிடரவர்கள் பாடிய

## நூற் பெருமை

வெண்பா

பன்னும் சீர் ஜோதிட நூற்பல உணர்ந்தே வதிற் சிறந்த
நன்னிய சாராம் சமதை நன்கறிந்தே—பின் திரட்டி
தரணிதனிலெல்லோரு முணர்ந்து தாம்கற்க ஜோதிட்நூற்
குருமலர்தான் சிரமிசையிற் கொள்வாம்,

விருத்தம்

அகத்தியர் புலிப்பரணி, ஆதிபோகர்
அத்திரிமகரிசி அங்கிராமர் வியாசர்
இகத்தில் பாரசரர் வதிஷ்டர்
ரோமர் கற்கர்
இயம்புபுகர் நாரதர் காசீபர்
சவுனர்
ஜலத்தில் முனி கௌசிகனும்
ஜனகன் நந்தி
சாங்கோபமாய் புகன்ற சகல
நூற்கள்
மருவிறயத் தோடுணர்ந்து
நுட்பமாக
மாந்தர்கள் கற்றுய்யவிதை
வரைந்திட்டாரே

---

## அருளுரை வணக்கம்

திருமடந் தையர்வாழ் தொடுக்காட்டில் வாழ்
செல்வர் விமேசுர ரருள்சேரவே
யுரியநாள் ராசிகேட்போர் நிகண்டு நன்
குற்றதாகுங் கணிதபஞ் சாங்கமு
மருணன் சோமன் குஜன் புதனந்தண
னறைந்த சுங்கன் சனி ராகு கேதுவும்
கருதும் வட்டமுந் தூமம் வீன்னுட்பமும்
கணித சாரநிலை முதற்காட்டுமே

உலகிற்பிறந்த மானிடர்களுக்கு தன் வருங்கால பலனை தெரிந்து கொள்வதாயின்.

மன்னுகோள் நட்பாக்ஷி யுச்ச நீச்சம்
வகுத்த தசவர்க்கு கிரியாக மனந்திக்கில்
உன்னுப கிங்யரகி உயிர்த்தங் கிரகங்கூடல்
உதயமத்த மாம்பார்வை திசைகால சக்கரம்
பின்னுமங்கச் சக்கரம் கிரணப் பயிண்டிகமும்
பேசிலட்ட வர்க்கமுடன் சருவாட்ட வர்க்கம்
மின்னுதயம் பகலிரவீ ராசிகுணகாரம்
வேதைநாட்டி திருவருடம் முதற்பலன் சாதகமே

என்ற சாதக சிந்தாமணியின் நூலுதவிய பொருள் என்ற 11-ஆம் செய்யுளின்படி நவகோட்களென்னும் சூரியன் சந்திரன், குஜன், புதன், குரு, சுக்கிரன், சனி இராகு கேது இவர்களும் அவர்களுடையும் நட்பாக்ஷி உச்சம், நீச்சம், பகை என்னும் விதங்களையும் கிரகங்களின் சேர்க்கை யாலும் பார்வையாலும் உண்டாகும் சுபங்களாலும் பார்வை திசை காலசக்கரம் அஷ்டவர்க்கம் சர்வ அஷ்டவர்க்கம் மண்டலம் சமயம் சாரம் பருவமெனவரும் விதங்களையும் திதி. நட்சத்திரம் கரணயோகம், வாரம், மாதம்-வருட அயனம் முதலியவைகளைப் பற்றியும் ஆராய்ந்து சொல் வதே சோதிடர்களின் முக்கியக் கடமையாகும்.

உ

ஜாதக கணிதாரம்பம் என்னும்

# சோதிட ஆசான்

—:○:—

பாயிரம்

பூமருவும் பாரதத்தை தவராச முனிராசன்
புகழ்ந்து கூற
மாமருவு மேருகிரி யேடாக எழுத்தாணி
வெண்கோட்டாக
தேமருவும் பொருளுணர்ந்து விரைந்தெழுதுங்
காரணத்தான்—செவ்வேண்முன்னேன்
காமருவோர் கொம்பனிரு செவியன முக்கண்ணுல்வை
யங்கரத்தோன் கார்ப்பாம்,

சோதிடம் என்பது இப்பூவுலகெங்கும் பிரகாசித்திருப்பது கற்றறிந்தோர் நன்கு அறியலாமாயினும், சோதிடம் என்பதே தற்போது அதன் ஒளியற்று உருவங் குறைந்திருக்கிறது. ஏனெனில், ஏர் சோதிடனை ஆருடம் கேட்பாராயின், தற்போது ஜீவராசி நடக்கிறது ஜீவனைப்பற்றிக் கேட்டாயா இல்லையே வென்று, கேட்க வந்தோரை வினவ கேட்க வந்தோர் ஜீவன் என்பது என்னவோ வென்று விழிக்க வேண்டியதாயும், சோதிடமென்பதை ஆராய்ந்து சொல்லாத ஆபாச சோதிடர்களிடம் கேட்டுக் கொண்டு அதன்படி நடக்காவிட்டால் சோதிடமென்பதே பொய் என்றும் சோதிடத்தில் நம்பிக்கையில்லாது சிதருண்

இடக்கின்றன தற்காலத்தில் ஆயிரக்கணக்கான சோதிட கள் வெளிவந்துள்ளன வாயினும் அதனின் றிருக்கும் விஷயங்கள் வெளிப்படையாய் இல்லாது மறைப்பொருளாய் இருப்பதால் என்போன்ற சிற்றவுரிடையோர்க்கு அவை பயன்படாதிருப்பது கருதியே யான் இந்நூலை வெளியிடலானேன்.

அரப்பளீசுர சதகத்தில்,

துதிபெருக வருமூன்று காலமும் அறிந்த பேர்
துய்யகோடியி லொருவராம்

என்றிருப்பதை நன்கு அறியலாம் மூன்று காலங்களையும் அறிந்த மக்களை கோடிக் கொருவரேயாகும். நம் போன்ற ஆத்துமாக்களுக்கு முக்கியமாய் அவரவர்களுக்கு ஆதார பூதமாய் இருப்பதானபிருதிவு, அப்பு. தேயு, வாயு என பஞ்ச பூதமேயாம் இப்படிச்சொல்லும் பஞ்ப பூதங்களை ஒரு மனப்பட்டு நிருத்தித் தன் வசமாக்கியவன் ஆத்மஞானி எனவும் கூறுவதுண்டு. சாதாரண மனிதர் சோதிடம் கற்கவேண்டுவோர் அதிகாலையிலெழுந்து காலைக்கடனைத்தமது குலசார விதிப்படி நேமநிஷ்டைகளும் முடிக்காமுன்னர் சோதிட நூலைக் கையாலும் தொடப்படாதென்பது சாஸ்திர சித்தம் இவ்வாறிருக்கும் ஆத்மாக்களுக்கே சோதிடம் சித்திக்கும் என்பதற் ஐயமில்லை சோதிடர்களுக்கு முக்கிய ஆதாரம் சூர்யோதயமும் அஸ்தமானமும் மறுபடியும் சூரிய உதயமுமாகும். இன்று சூர்யோதயமாகும் நேரம் என்ன? அஸ்தமன நேரம் என்னவென்று அறிந்துகொண்டாவரே சோதிட நிபுணர்கள் என்று கூறலாம். கோளத்தை 360 பாகையாக பங்கிட்டுருப்பதை) மேல் நாட்டாராலும் நம் நாட்டிலுள்ள கணிதவல்லுனர்களாலும் ஒத்துக்கொள்ளப்படுகின்றன மேற்சொன்னபாகைகள்360-க்குராசிகள் 2-எனக் கூறப்பட்டிருக்கின்றன.

அவையாவன:—

| | |
|---|---|
| மேடம் | துலாம் |
| ரிடபம் | விருக்ஷிகம் |
| மிதுனம் | தனுசு |
| கடகம் | மகரம் |
| சிங்கம் | கும்பம் |
| கன்னி | மீனம் |

இவ்வகை ராசிகள்-12 உள்ளனவாதலால் ராசி ஒன்றுக்கு பாகை 30 என்பதை வாசிப்போர் நினைவிலிருக்குமாறு கேட்டுக்கொள்ளுகின்றேன் மேற்சொன்ன ராசிகள் 12-க்கும் நாழிகையின் அளவைக்கூற வேண்டுவதாயின்.

பேருமினொரு நாலேகா லாகுமே
    பெரியசால் விடை நாலேமுக்காலதாம்
வீறுதண்டரி தேள் அறஓரைகாண்
    மிக்கநாழி கையைந்தே ஞலாகுமே
தேறுகன்னிகோலும் மைந்து நாழிகை
    சீலையுங் கொண்டலுமைந்தரை நாழிகை
மாறிலாசிவன் ஞெடுக்காடர்தான்
    வணங்காற சீயுதயமுன் கூறுமே

| | | | |
|---|---|---|---|
| மேடம் | சவ | 4 | 15 |
| ரிடபம் | சதெ | 4 | 45 |
| மிதுனம் | ருகவ | 5 | 15 |
| கடகம் | ரு½ | 5 | 30 |
| சிங்கம் | ருவ | 5 | 15 |
| கன்னி | ரு | 5 | |
| துலாம் | ரு | 5 | |

| | | | |
|---|---|---|---|
| விருஷிகம் | ருவ | 5 | 15 |
| தனுசு | ரு½ | 5 | 30 |
| மகரம் | ருவ | 5 | 15 |
| கும்பம் | சதெ | 4 | 45 |
| மீனம் | சவ | 4 | 15 |

மேற்சொன்ன ராசிகள் பன்னிரண்டையுமே 12 மாதங்கள் எனப்படும். அவையாவன:—

| | | |
|---|---|---|
| சித்திரை | ஆவணி | மார்கழி |
| வைகாசி | புரட்டாசி | தை |
| ஆனி | ஐப்பசி | மாசி |
| ஆடி | கார்த்திகை | பங்குனி |

என்பனவாம். ஆதலால் சித்திரைமாதம் என்றால் மேடமாதம் எனவும், வைகாசி மாதம் என்றால் ரிடபமாதமெனவும், மற்றும் முறையே கூறுவதுண்டு. சோதிடர்களின் கட்மை என்னவெனில் ஒவ்வோர் மாதத்திற்கும் கோளி பேதத்தால் ஏற்படும் நாட்களின் வித்தியாசப்படி ஏற்படும் நாட்களுக்குப் பங்கிட்டு ஒவ்வொர் நாளுக்கும் தெரிந்து கொள்வதேயாம்.

யாதாமொருவர் தனது புத்திரர்களுக்கு ஜாதகம் கேட்குமிடத்து முதன் முதலாக அவர்கள் சொல்லும் மணி நிமிஷங்களைத்தெரிந்து அவர்கள் குறிப்பிட்ட நேரத்தில் ஆண் எனவும் கண்டு சொல்லவேண்டும். இதற்கு ஒரை, ராசி கிரகம் இவை முக்கியமாகும்.

இதை யறிவதெனில், முன்சொல்லிய கோளபேதத்தாலேற்படும் அன்றைய சூர்யோதயம் எத்தனை மணிக்கு என அறிதல் வேண்டும். இதனை விசேஷமாய் ஒவ்வோர் வருஷமும்வெளிவரும் பஞ்சாங்கத்தில் காணலாம்.

உதாரணமாக சூர்ய உதயம் 5-54 என்ருல் அன்று பகல்மணி 2-க்கு குழந்தை பிறந்ததாயின் அப்போது 8 மணி நேரமும் 6-நிமிஷமுமாகும் அதனை தமிழ் நாழிகை யாக்க வேண்டின் மணி ஒன்றுக்கு 2½ நாழிகையாக, நாழிகை 20, வினடி 15 எனப்படும் இவ்வாரே ஒவ்வோர் நாளும், சில நிமிஷங்கள் குறைந்தது, அதிகமாகியும் சூரியன் உதயமாவதினலே 365 கால் நாள் கொண்டது ஒருவருஷமேனப்படும் பொதுவாய்பகல் நாழிகை 30 இரவு நாழிகை-30 கொண்டது ஓர் நாள் எனப்படும். மேலே சொல்லியபடி உதயாதி நாழிகையைக் கணக்கிட்டு முன்சொல்லியபடி அம்மாதத்திற்குறிய ராசியின் நாழிகை எவ்வளவோ அதனை அம் மாதத்தின் மொத்த நாட்களுக்குப்பங்கிட்டு ஜெனனமான தேதி வரையில் எத்தனை நாட்கள் சென்றனவோ அத்தனை பாகத்தைக் கழித்துவிட்டு மிகுந்த நாழிகை, வினடிகளுடன், ஜெனன நாழிகை வினடிகளுடன் ஜெனன நாழிகை வரையில் எத்தனை ராசிகள் நடக்கின்றனதென வறிந்து கொள்வதே அவன் பிறந்த லக்கினமாகும்.

உதாரணமாக ஸ்ரீ முக ஸூ, ஆவணி மாதம் 13-ம்தேதி யன்று அம்மாத ராசி நாழிகையில், சென்றது போக இருப்பு நாழிகையைக்காண வேண்டுவதாயின் முன் சொல்லியபடி மாதத்திற்குரிய ராசியான சிங்கராசியின் நாழிகை யான 5-வினடி 15 யை அம்மாதத்தின் நாட்களாகிய 31க்கு பாகிக்க வேண்டுமாயின், மேற்சொல்லிய நாழிகை வினடிகளை மொத்த வினடியாக்கி பங்கிட்டுத் தெரிந்துக் கொள்வது நலம் எப்படி எனில் விபரம் பின் வருமாறு சிங்கராசியின் நாழிகை 5, வினடி 15-க்கு நாழிகை ஒன்றுக்கு 60 வினடியாகக்கணக்கிடுவோமாகில் 365வினடியாகும் இதனை

அம்மாதத்திற்குறிய நாட்கள் 31-க்கு பாசிக்க நாள் ஒன்றுக்கு வினுடி 11கால் ஆகும்

முன்சொன்ன ஆவணிமீ 13-ம் தேதியன்று இருப்பு நாழிகையக்கான 12-ம் தேதி வரையில் நாழிகை 2, வினுடி 21 சென்றன போக.

| | | |
|---|---|---|
| மிகுந்துள்ள | நாழிகை—2 | வினுடி—54 |
| ஆகமொத்தம் | ,, 5 | ,, 15 |

இப்பால் அவரவர்கள் உத்யராசி நேற்றவாறு பின் வரும் ராசி நாழிகை வினுடிகளைக் கணக்கிட்டுத் தெரிந்து கொள்வதே லக்கினம் எனப்படும். ஷை தேதியில் இரவு 4-மணிக்கு பிறந்த தாயின் அப்போது சூர்யோதய நாழிகை 55 ஆகும் அந்த தேதியின்,

| | | | | |
|---|---|---|---|---|
| சிங்கராசியின் இருப்பு | நாழிகை | 2 | வினுடி | 54 |
| இப்பால் கன்னி | ,, | 5 | ,, | 0 |
| துலாம் | ,, | 5 | ,, | 0 |
| விருக்ஷிதம் | ,, | 5 | ,, | 15 |
| தனும் | ,, | 5 | ,, | 30 |
| மகரம் | ,, | 5 | ,, | 15 |
| கும்பம் | ,, | 4 | ,, | 45 |
| மீனம் | ,, | 4 | ,, | 15 |
| மேஷம் | ,, | 4 | ,, | 45 |
| ரிஷபம் | ,, | 4 | ,, | 15 |
| மிதுனம் | ,, | 5 | ,, | 18 |
| கடகம் | ,, | 5 | ,, | 0 |
| ஆகமொத்தம் நாழிகை | | 57 | ,, | 39 |
| பிறந்த சூர்ய உதயாதி நாழிகை | | 55 | ,, | 0 |

கடகராசியில் இருப்பு நாழிகை-2 வினடி 39
ஷ. ராசியில் சென்றது ,, 2 ,, 51

இவையே ஜெனன ராசி சென்றது போக இருப்பு நாழிகையும் விநாடியுமாம்.

## காரக நிகண்டு

### மேடம்

மேடராசியானது ஆட்டின் உருவமும் இடங்களில் காடெனவும் ஜெந்துவில் நாற்காலெனவும், இராசியில் தாதுவெனவும், திசையில் கீழ் திசை என்றும், நிறத்தில் சிவப்பும் ஜாதி அரசனென்றும் ஆண் ராசி என்றும் குஜனுக்குச் சேர்ந்த வீடென்றும் கூறுவர்.

### ரிடபம்

ரிடபம் பசுவுருவமும், வெண்மைநிற மெனவும் கிழக்கு திசை என்றும் வேளாளஜாதி எனவும் நாற்கால், மூலராசி எனவும் பெண்ராசி எனவும் நிலைத்த ராசி என்றும் இராக்காலத்தில் விழிக்கும் தன்மையுடைய தெனவும், சுக்ரன் வீடெனவும் கூறுவர்.

### மிதுனம்

மிதுனம் ஆணும் பெண்ணும் உள்ள உருவமாய் வீணை தடி முதலியவைகளைக் கொண்டும் வணிகனென்னும் சாதியாய் கருப்பு நிறமும் நீச்சசாதி எனவும் அதன் வீடெனவும் தென் கீழ் திசை எனவும் சிரவுதயராசி எனவும், பகலில் விழிக்கும் ராசி எனவும் புதன் வீடெனவும் கூறுவர்.

### கடகம்

கடகம் நண்டுருவமாயும் பிராமண குலமென்றும் தெற்கு திக்கென்றும் பகலில் நூங்கும் தன்மையையுடையதும் தாது ராசி எனவும், வெள்ளை நிறமெனவும் சந்திரனுக்கு சொந்த வீடென்றும் கூறுவர்.

### சிங்கம்

சிங்கம் சிங்கத்தைப் போன்ற உருவமும், மலைகளிருக்கு மிடமென்றும் தெற்குதிசை என்றும், சிவப்பு நிறமெனவும். பகலில் விழிக்கும் தன்மையும் மூலராசி எனவும் நாற்கால் எனவும் சூரியனுக்குச்சொந்த வீடென்றும் கூறுவர்,

### கன்னி

கன்னி என்பது பெண் உருவத்துடன் கனலேந்தியும் வேளாள ஜாதி என்றும் தென்மேற்கு திசை எனவும் இரு காலுடையதெனவும். உபயராசி என்றும். கருப்பு நிறமுடையதென்றும் புதனுக்கு ஆக்ஷீ வீடென்றும் கூறுவர்,

### துலாம்

துலாம் என்பது தராசைப்போன்ற உருவமுடையது வணிகளைப் போன்றதும் இரண்டு காலுடையதும் வெள்ளை நிறமெனவும் வணிகஜாதி எனவும் தரது ராசி எனவும் மேற்கு திசை என்றும் இரவில் தூங்கும் தன்மையையுடையதென்றும் சுக்கிர வீடென்றும் கூறுவர்.

### விருக்ஷிகம்

விருக்ஷிகம் என்பது தேளுருவமாகவும் கிணறு போன்றதென்றும் பகல்ராசி என்றும் பிராமணஜாதி எனவும் மேற்கு திசை என்றும் பெண் எனவும் பகலில் விழிக்கும் தன்மையும் பசுமை நிறமும் குஜனுக்குச் சொந்த வீடென்றும் கூறுவர்,

## தனுசு

தனுசு, என்பது குதிரையின் மேல் மனிதனிருக்கும் தன்மையும். அதன் கையில் வில்லை ஏந்தி நிற்கும் உருவமும், தோற்றம் மன்னவன், சிவப்பு நிறம், இருகால்களையுடையதும் ஆண் ஜீவன் உபயராசி, குருவுக்குச் சொந்த வீடென்றும் கூறுவர்,

## மகரம்

மகரம் என்பது சுரு எனவும் வடதிசையும் முதலிய இடமும். வேளாள ஜாதி எனவும் பறவை என்றும் பெண் எனவும் தாதுவெனவும், கருப்புநிறமென்றும் இரவில் விழிக்கும் தன்மையுடைய தெனவும் சனிக்குச் சொந்த வீடெனவும் கூறுவா.

## கும்பம்

கும்பம் என்பது புருடனாகவும் கையில் குடத்தை ஏந்தி நிற்கும் பூமி எனவும் வாணிபனென்றும், இருகால்களையுடையதென்றும் வடதிசை என்றும் பச்சை நிறத்தையுடையதும் பகலில் விழிக்கும் தன்மையுடையதெனவும் சனிக்கு ஆக்ஷி வீடென்று கூறுவர்.

## மீனம்

மீனம் என்பது மீனைப்போன்ற வாலும் தலையும் உடையதாயும் வட்டவடிவமாயும் விழுவதும் எழுவதும் உடையதாய் பிராமணஜாதியென்றும். வடகிழக்கு திசை என்றும் ஜலம் என்றும் பெண்ணெனவும் பச்சைநிறத்தையுடையதும் பகலில் விழிக்கும் தன்மையுடைய தெனவும், குருவுக்கு ஆக்ஷிவீடெனவும் கூறுவர்,

இதுவரை இராசிகளின் காரகங்களைக் கூறிவந்த படி ஒவ்வொருவரும் முன் சொல்லியபடி கணக்கிட்டுக் கண்ட

ராசியின் காரகங்களை யறிந்து பின்பு இராசிகளின் திக்கு நோக்கைத் தெரிந்துக்கொள்வது அவசியம் எப்படி யெனில்.

ஆடுகீழ்ப்பாலை நோக்கிடும் சிங்க
 மருஞ்சிலைத்தான் தென்கீழ் நோக்குங்
கூடிடுமிடத் தெறிசை நோக்குங்
 கூர்கன்னி மாரந்தென் மேற்கு
காடுறநோக்கு மிதுனமேல் நோக்கு
 தற்கும்பத் துலாம் வடமேற்காம்
ஊடுறநோக்கு ஜெண்டு மீன்றேளு
 முகந்து கீழ் வடதிசை நோக்கும்.

(இ-ள்) மேடம் கீழ்திசையும். சிங்கமும். தனுசும் தென் கிழக்கும் ரிடபம் தெற்கு திசையும் கன்னியும் மகர மும் தென்மேற்கு திசையும் மிதுனம் மேல் பார்வையும், கும்பம் துலாம் வடமேற்காயும் கடகம் விருக்ஷிகம் மீனம் இவைகள் வடகிழக்கு திசையாகவும் நோக்கும் என்பன வாம்,

## லக்கின ஸ்புடம் செய்யும் விபரம்

உதயாதி நாழிகையை 4-ல் பெருக்கி அதனோடு மேஷ முதல் ஜெனனராசி வரையில் எண்ணிய தொகையும் ஜென னராசி சரமாகில், சரம்-5ஸ்திரம் 10 உபயம்-15 எனவும் ஸ்திரமாகில் ஸ்திரம் 10 உபயம் 15, எனக்கூட்டியும் உபய மாகில் உபயம் 5, எனக்கூட்டியும் அந்த மொத்த எண்களை 27: ஆல் வகுத்த மீதியை ஜெனன காலப்போது சுக்கில பக்ஷமாகில், அஸ்வனி முதலாகவும் கிருஷ்ண பக்ஷமாகில் அவிட்ட முதலாகவும் எண்ணிவரும் நக்ஷத்திரம். ஜெனன நக்ஷத்திரமாவது அதற்கொன்பதாம் நக்ஷத்திரமாகாவ வதுவரின், அவை உதயாதி நாழிகை சரி எனவும் மாருக வரில் முன் சொன்ன உதய நாழிகையை முன் பின்னுகவும் கழித்துக் கூட்டியும் மேற்சொன்ன படி பார்ப்பதேயாம்.

## ஜெனன நக்ஷத்திரத்திற்கு 9-க்கு 9-ஆம் நக்ஷத்திரம்

| | | |
|---|---|---|
| அஸ்வனி | மகம் | மூலம் |
| பரணி | பூரம் | பூராடம் |
| கிருத்திகை | உத்திரம் | திருவோணம் |
| ரோகணி | அஸ்தம் | உத்திராடம் |
| மிருகசிரம் | சித்திரை | அவிட்டம் |
| திருவாதிரை | சுவாதி | சதயம் |
| புனர்பூசம் | விசாகம் | பூரட்டாதி |
| பூசம் | அனுஷம் | உத்திரட்டாதி |
| ஆயில்யம் | கேட்டை | ரேவதி |

மேற்சொன்னபடி 9-க்கு 9-ஆம் நக்ஷத்திரங்கள் வரின் அந்த நாழியையே சுத்தம் என்பதாம். இப்பால் ராசிகள் 12-க்கும் சரம் ஸ்திரம், உபயமென்பவைகள் பின்வருமாறு அறிந்துக்கொள்ளவும்.

| | | | |
|---|---|---|---|
| உபயம் 15 | சரம் 5 | ஸ்திரம் 10 | உபயம் 15 |
| ஸ்திரம் 10 | | | சரம் 5 |
| சரம் 5 | | | ஸ்திரம் 10 |
| உபயம் 15 | ஸ்திரம் 10 | சரம் 5 | உபயம் 15 |

இப்பால் நக்ஷத்திரங்கள் 27 உள்ளன. அவைகளின் பெயரும் ஆத்யந்த நாழிகைகளும்.

| | | | |
|---|---|---|---|
| அஸ்வணி | 65 | சுவாதி | 65 |
| பரணி | 50 | விசாகம் | 61 |
| கிருத்திகை | 56 | அனுஷம் | 60 |
| உரோகணி | 56 | கேட்டை | 62 |
| மிருகசிரம் | 56 | மூலம் | 63½ |
| திருவாதிரை | 56 | பூராடம் | 62 |
| புனர்பூசம் | 52 | உத்திராடம் | 55 |
| பூசம் | 52 | திருவோணம் | 55 |
| ஆயில்யம் | 56 | அவிட்டம் | 66½ |
| மகம் | 54 | சதயம் | 35½ |
| பூரம் | 53 | பூரட்டாதி | 66½ |
| உத்திரம் | 56 | உத்திரட்டாதி | 63½ |
| அஸ்தம் | 57 | ரேவதி | 64 |
| சித்திரை | 60 | | |

## ஷ. நக்ஷத்திரங்களின் தியாஜியகாலம்

அஸ்வனிக்கு 50, பரணி, பூராடம், உந்திரட்டாதிக்கு 24, கிருத்திகை, ரேவதி, மகம், புனர்பூசதிதிற்கு 30, உரோகணிக்கு 40, மிருகசிரம் ரிஷபம், சுவாதி, விசாகம், கேட்டைக்கும் 14 திருவாதிரைக்கு 21 உத்திராடம் பூசம் பூரம் சித்திரை, மூலத்திற்கு 21 திருவோணம் அவிடடம், அனுஷத்திற்கு 10, அஸ்தத்திற்கு 22, உத்திரம் சதயத்திற்கும் 18, பூரட்டாதிக்கு 16, ஆயில்யத்திற்கு 22-க்கு மேல் அந்தந்த நக்ஷத்திரங்களுக்கு விஷகடிகை சேர்ந்து முன்றே முக்கால் நாழிகை நிற்குமென்றறிக.

இராசிகள் 12-லும் பிறந்தவன் பலன்களானவன,

## மேடம்

மேடலக்கினத்தில் பிறந்தவன் ராஜாக்களால் பூசிக்கப் படுவோனும், சஞ்சாரமுடையவனும், சம தேகமும் எல்

லோருக்கும் தெரிந்தவனும், விசாலமான நேத்திரங்களை யுடையவனும், எக்காரியங்களிலும் சமர்த்துடையவனும் பயிர்த்தொழில் செய்வோனும் சத்திய முடையவனும். ஈயாதவனும், தந்த ரோகமும் ஸ்தூலித்த தேகமும் ராஜாக்களிடத்தும் துர்ச்சனர்களிடத்தும் பிரியமுடையவனும் ஆவான்.

## ரிஷபம்

ரிஷப லம்கினத்தில் பிறந்தவன் கணித வித்தையும் அதிக பெரசிப்பாளனும் தேவதா பிரியனும், திடமனத்தனும் அன்னிய தாரங்களின்மீது இச்சையுள்ளவனும் சவுக்கிய தேகனும் அலங்காரத்தோடிருப்பவனும் யாவரும் போற்றத் தக்க கண்டிதவார்த்தைகளையுடையவனும் சத்யமுடையவனும் அழகனும் தன்பந்து ஜனப்பிரியனும், குழந்தைகளைப் பிரியனும் குழ்ந்தைகளைப்போல் விளையாடுபவனும் புத்திரப் பேருடையவனுமாவான்.

## மிதுனம்

மிதுன லக்கினத்தில் பிறந்தவன் ஸ்திரீகளின் மோக வலையிலாழ்ந்தவனும். வெட்கமுடையவனும், பச்சைநிறத்தின் மீது ஆசையுள்ளவனும் பிரிய சைனத்தைச் சொல்லுபவனும் சொர்ன பூஷணங்களை யுடையவனும் வாதபித்த தேகமுடையவனும் வாசனை நிறைந்த புஷ்பங்களின் மேல் பிரியமுள்ளவனும் சாஸ்திரப்பிரியனும், அன்னியரை தூஷணிப்பவனுமாவான்.

## கடகம்

கடக லக்கினத்தில் பிறந்தவன் சீதள பூமியில் வசிக்கப் பிரிமுடையவனும் தற்குலத்தினையிடையவனும். சஞ்சலனும் நல்ல நேத்திரங்களை யுடையவனும் பல பொன்னு

ணயங்களை யுடையவனும் சாத்ரீகனும் அடையாளம் ஒன்றுடையவனும் அன்னியகள்தர ஆசையுடையவனும் சம்பத்தும் அனேக தான்ய வகைகளை யுடையவனுமாவான்,

## சிங்கம்

சிங்க லக்கினத்தில் பிறந்தவன் சர்வஜனப் பிரியனும் நல்ல புத்தியை யுடையவனும், தெய்வ பிராமன பக்தியும் தைரியமத்னதுடனும் வெகு போகிப்பாள்னும் சப்பத்துடையவனும் வயிற்றுவலியையுடையவனும், முற்கோபியும் கைகால்களில் மச்சரேகையுடையவனுமாவன்

## கன்னி

கன்னியெனு லக்கினத்தில் பிறந்தவன் கீலேச நெஞ்சுடையவனும், சீலமுடையவனும், தன் பந்து ஜனப்பிரியனும் நல்லொழுக்கமும், சகல காரியங்களிலும் சமர்த்தனும் முதலில் தரித்திரத்தை யுடையவனும், பின் வயதில தனமும் தான்யமும் உடையவனும், சொந்த இல்லத்தை யுடையவனும் ஆவான்.

## துலாம்

துலா லக்கினத்தில் பிறந்தவன் எல்லா ஜனங்களிடத்தும் பிரியமுடையவன் உயர்குலத்தோனும் சம்பத்துடைய ராஜ பூஜிதனும் அபிமானியும் களத்திர ஜனத்திரளுள்ளவனும் கள்ளரால் கொஞ்சம் பயமுடையவனும் ஆவானென்றும் கூறுக

## விருச்க்ஷிகம்

விருச்சிகலக்கினத்தில் பிறந்தவன் மாதுருபீதுர் கர்மியும் அபிமானியும் விரதசீலனும் பாக்யமுடையவனும் பட்

படைப்புடையவனும் விஷவார்த்தையாளனும் தனது நண்பர்களிடத்தும் சினமுள்ளவனும் வகையரா ஜனங்களின் மேல் ஆசையுள்ளவனும் தேவர்களின் திருப்பணி செய்பவனும் ஆவான்.

## தனுசு

தனுசு லக்கினத்தில் பிறந்தவன் மாதுரு பக்தியுள்ளவனும் சன்மார்க்கமுடையவனும் சாஸ்திரங்களைக் கற்றுணர்பவனும் வாலிபமுதல் ஐஸ்வரிய முடையவ்னும் கெண்டமாதி பிணிகளையுடையவனும் அபிமான முடையவனும் வாசனை நிறைந்த புஷ்பங்களின் மேல் மிகுந்த ஆசையுடையவனும் ஆவான்.

## மகரம்

மகரமென்னு மிராசியிற் பிறந்தவன் மச்சரேகையுடையவனும் கருத்த நிறமுடைய்வனும் தன்காரியங்களில் மெத்த சாமர்த்தியத்தோடிருப்பவனும் கோபமுடையவனும் பெரிய கண்களையுடையவனும் அப்மிருத்து தோஷங்களை யுடையவனும் ஆவான்.

## கும்பம்

கும்பமென்னுமிராசியில் பிறந்தவன் பித்தரோகமுடையவனும் சிறுத்ததேகமும் தான் யெடுத்த காரியத்தை எவ்விதத்திலும் முடிக்கும் சக்தி வாய்ந்தவனும் கிராம அதிகாரியும் சகல காரியவல்லவனும் பலமுடையவனும் சவுக்ய தேகமும் காகப்பார்வையையுடையவனும் ஆவான் என்று கூறுவர்

## மீனம்

மீனராசியிற்பிறந்தவன் சத்யமுடையனும் அழகுடையவனும் மோகத்திலாழ்த்தவனும் அழகுடைய நேத்ர

முடையவனும் தனவந்தனும் மாமிசப்பிரியனும் வித்தையில் வல்லவனும் அபமிருத்து தோஷங்களை யுடையவனும் இந்த லக்கினத்தோனுக்கு நூறுவயதென்றும் சோதிட வல்லோர்கள் கூறுவர்.

இதுவரையில் ஒவ்வோர் இராசிகளுக்கும் ஏற்றவாறு பலனைச்சொல்லி வந்தோம் ஆயினும் இவை பொதுப் பலனேயாம் ஓர் ஜாதகத்தைப்பற்றி பேசவேண்டுமாயின் மூக்கியமானது பாவம் வன்பனவாம்.

அவையாவன:-

ஜெனன லக்கினமுதல் 12 பாவம் எனப்படும்.

## 1-ஆம் இடம்

1 உதயம்
2 கீர்த்தி
3 மூர்த்தி
4 சீவனம்
5 கல்வி
6 தலை
7 சொரூபம்
8 சவுக்கியம்
9 புசித்தல்
10 ஆயுள்
11 செல்வம்
12 நெற்றி
13 நினைப்பு
14 கௌரனம்

## 2-ஆம் இடம்

வாக்கு
நேத்ரம்
குடும்பம்
மதம
வித்தை
பாத்ரம்
உத்தாரம்
உபகாரம்
சத்திரசாமரம்
சற்பாத்திரம்
குரு உபதேசம்
ஜாநி
சாஸ்திரம்
உத்தேசம்
நன்மை

## 3 ஆம் இடம்

| | |
|---|---|
| கேள்வி | பலம் |
| துணைவர் | குணம் |
| மார்பு | பேச்சு |
| கர்ணபூஷணம் | சகோதிரம் |
| காது | சத்துரு |
| உண்ணல் | புசிக்கும் பாத்திரம் |
| யுத்தம் | |

## 4-ஆம் இடம்

| | |
|---|---|
| மாதுரு | தன் சுகம் |
| க்ஷேத்திரம் | மேன்மையான வித்தை |
| வாகனம் | இராகம் |
| பந்து ஜெனம் | மூக்கு |
| உணவின் ருசி | |
| தடாகம் | |

## 5-ஆம் இடம்

| | |
|---|---|
| மந்திரம் | உந்தி |
| தெய்வம் | தன்மை |
| மனைவியின் ரோகம் | குருக்கள் |
| யுத்தி | தேந்திரரோகம் |
| சத்தியம் | ஒருகண் |
| போஜனம் | ஆதரிப்போர் |

## 6-ஆம் இடம்

| | |
|---|---|
| சத்ரு | மாதுலன் |
| ஜாதி | இடுப்பு |
| வியாதி | பற்கள் வீழ்தல் |

| | |
|---|---|
| கடன் | சுயதேசம், அந்நியதேசம் |
| ரணம், காயம் | போகுதல் |
| ஆக்கினைக்குள்ளாதல் | பீடை |
| கடைவாய் | பொருள் சிலவு |

## 7-ஆம் இடம்

| | |
|---|---|
| களத்திரம் | தேசாந்திர மேகுதல் |
| காமம் | தனம் சம்பாதித்தல் |
| சூது | போகம் |
| கழுத்து | அந்நிய ஸ்திரீ விரோதம் |
| வாய் | மனைவியின் காமம் |
| குய்யம் | |
| ஆசை | |

## 8-ஆம் இடம்

| | |
|---|---|
| மரணம் | விசனம் |
| பீடை | அனியாய சிலவு |
| தவறிவீழ்தல் | விஷத்துன்பம் |
| வியாதி | அபஜெயம் |

## 9-ஆம் இடம்

| | |
|---|---|
| பாக்கியம் | தன்னுடன் சேர்த்தோர் |
| வஸ்திரம் | பெருமை [உண்டோர் |
| தவம் | தருமம் |
| குரு | பிதுருபயம் |
| பிதுரு | மகிமை |
| இருதுடை | விரோதமல்லாதார் |
| | கால், முதல், வயிறு |

## 10-ஆம் இடம்

கருமம்
ஆக்கினை
முழங்கால்
பிழைத்தல்
அரசசேவை
ஜெயம்
கீர்த்தி
அபிமானம்
உண்ணல்
தேவதாபக்தி
செய்யும் தொழில்
ஞானம் தானம் பானம்

## 11-ஆம் இடம்

லாபம்
உபயதாரம்
திரவியம்
புகைக்கும் தனம்
புதையலெடுத்தல்
செவிடு
கனைக்கரல்
கன்னம்
மூத்த சகோதரும்
சந்தோஷம்
கோள் சொல்லாமை
மூத்தவன் நடக்கை
எவ்விதத்தால் லாபம் வரும்

## 12-ஆம் இடம்

சயனம்
சிலவு
உலோபம்
படுக்குமெத்தை
தனக்குவரும் ஆபத்து
தூங்கல்
பாத்திரஸ்தானம்
அபாயம்
நயனம்
அன்னிய தேசத்தில்
தானம் [பிழைத்தல்
புண்ணியம்
செய்தொழில் விருத்தி

இவை ஜெனனராசி எந்த ராசியாகினும் அந்த்ராசியே (1) இடம் என்றும் அது முதல், (2) தனம் (3) சகோதிரம் (4) அன்னை (5) மாதுலன் (6) சத்துரு, (7) களத்திரம் (8) ஆயுள். (9) பிதுர், (10) கருமம் (11) லாபம் (12) விரயம் என்பனவாம், இதனைக்கொண்டு அந்தந்த வீட்டிற்

காக்ஷி நாதனாக இருக்கும் கிரகங்கள் வன்மையாலுமே அவரவர்கள் பலனையுரைப்பது நலம். இதனை யறிந்து சொல்ல வேண்டுமாயின் முன் சொன்னபடி இலக்கின நிர்




சயம் செய்து பிறகு அன்றைய வருஷமாத தேதிப்படியும் பஞ்சாக சாரப்படியும் அந்தந்த கிரகங்களிருக்கும் நக்ஷத்திர பாதசாரங்களை அறிந்து பிறகு அந்தந்த நக்ஷத்திரங்களுக் கேற்றவாறு இராசிகளில் கிரகங்களை அமைக்கும் விபரம் பின் வருமாறு.

## நக்ஷித்திர தரிக்கால்

அஸ்வனி, பரணி, கார்த்திகை, வரையில் மேஷம்
கார்த்திகை பின் முக்காலும் ரோகணியும்
மிருகசீரிடத்து முன் அரையும் ரிஷபம்
மிருகசீரிடத்து பின்னரையும் திருவாதிரை
யும் புனர்பூசத்து முன் முக்காலும் மிதுனம்
புனர்பூசத்துப் பிற்காலும் பூசமும், ஆயில்யமும்
கர்க்கடகம்

மகமும் பூசமும் உத்திரத்து முதற்கால்
வரையில் சிங்கம்
உத்திரத்துப்பின் முக்காலும் அஸ்தம் சித்திரை
முன் அரையும் கன்னி
சித்திரை பின்னரையும் சுவாதியும் விசாகத்து
முன் முக்காலும் துலாம்
விசாகத்துப் பிற்காலும் அனுஷமும்
கேட்டையும் விருக்ஷிகம்
மூலமும் பூராடமும் உத்திராடத்தி முதற்
கால் வரையில் தனுசு
உத்திராடத்துப்பின் முக்காலும் திருவோண
மும் அவிட்டத்து முன்னரையும் மகரம்
அவிட்டத்துப் பின்னரையும் சதயம் பூரட்டாதி
முன் முக்காலும் கும்பம்
பூரட்டாதி பிர்க்காலும் உத்திரட்டாதியும்
இரேவதியும் மீனம்

இவ்வாறு நக்ஷத்திரத்துக்குத் தக்கபடி கிரகங்களை யமைத்தும் பின் அந்தந்த ராசிகளுக்குத் தக்க ஆக்ஷி உச்சம் நீச்சம் பகை முதலியவைகளை யறித்து அவரவர்களுக்கேற்றவாறு பலன் சொல்லவேண்டும்.

## நவக்கிரகங்களின் ஆக்ஷி, உச்சம், நீச்சம் பகை முதலியன

### மேஷம்

| | |
|---|---|
| சூரியன் | உச்சம் |
| சந்திரன் | பகை |
| குஜன் | ஆக்ஷி |
| புதன் | நட்பு |
| குரு | பகை |
| சுக்கிரன் | நட்பு |
| சனி | நீச்சம் |
| இராகு | பகை |
| கேது | பகை |

### ரிபஷம்

| | |
|---|---|
| சூரியன் | பகை |
| சந்திரன் | உச்சம் |
| குஜன் | நட்பு |
| புதன் | நட்பு |
| குரு | நட்பு |
| சுக்கிரன் | ஆக்ஷி |
| சனி | நட்பு |
| இராகு | நீச்சம் |
| கேது | நீச்சம் |

### மிதுனம்

| | |
|---|---|
| சூரியன் | பகை |
| சந்திரன் | நட்பு |
| குஜன் | நட்பு |
| புதன் | ஆக்ஷி |
| குரு | நட்பு |
| சுக்கிரன் | நட்பு |
| சனி. | நட்பு |
| இராகு | நட்பு |
| கேது | நட்பு |

### கடகம்

| | |
|---|---|
| சூரியன் | பகை |
| சந்திரன் | ஆக்ஷி |
| குஜன் | நீச்சம் |
| புதன் | நட்பு |
| குரு | உச்சம் |
| சுக்கிரன் | பகை |
| சனி | பகை |
| இராகு | பகை |
| கேது | பகை |

### சிங்கம்

| | |
|---|---|
| சூரியன் | ஆக்ஷி |
| சந்திரன் | பகை |
| குஜன் | பகை |
| புதன் | பகை |
| குரு | உறவு |
| சுக்கிரன் | பகை |
| சனி | பகை |
| இராகு | பகை |
| கேது | பகை |

### கன்னி

| | |
|---|---|
| சூரியன் | பகை |
| சந்திரன் | உறவு |
| குஜன் | உறவு |
| புதன் | ஆக்ஷி உச்சம் |
| குரு | உறவு |
| சுக்கிரன் | நீச்சம் |
| சனி | உறவு |
| இராகு | உறவு |
| கேது | உறவு |

### துலாம்

| | |
|---|---|
| சூரியன் | நீச்சம் |
| சந்திரன் | பகை |
| குஜன் | உறவு |
| புதன் | உறவு |
| குரு | உறவு |
| சுக்கிரன் | ஆக்ஷி |
| சனி | உச்சம் |
| இராகு | உறவு |
| கேது | உறவு |

### விருச்ஷிகம்

| | |
|---|---|
| சூரியன் | பகை |
| சந்திரன் | நீச்சம் |
| குஜன் | ஆக்ஷி |
| புதன் | நட்பு |
| குரு | பகை |
| சுக்கிரன் | நட்பு |
| சனி | பகை |
| இராகு | உச்சம் |
| கேது | உச்சம் |

### தனுசு

| | |
|---|---|
| சூரியன் | உறவு |
| சந்திரன் | உறவு |
| குஜன் | பகை |
| புதன் | உறவு |
| குரு | ஆக்ஷி |
| சுக்கிரன் | உறவு |
| சனி | உறவு |
| இராகு | உறவு |
| கேது | உறவு |

### மகரம்

| | |
|---|---|
| சூரியன் | பகை |
| சந்திரன் | பகை |
| குஜன் | உச்சம |
| புதன் | உறவு |
| குரு | நீச்ச |
| சுக்கிரன் | உறவு |
| சனி | ஆக்ஷி |
| இராகு | உறவு |
| கேது | உறவு |

### கும்பம்

| | |
|---|---|
| சூரியன் | உறவு |
| சந்திரன் | பகை |
| குஜன் | பகை |
| புதன் | உறவு |
| குரு | உறவு |
| சுக்கிரன் | உறவு |
| சனி | ஆக்ஷி |
| இராகு | பகை |
| கேது | பகை |

### மீனம்

| | |
|---|---|
| சூரியன் | உறவு |
| சந்திரன் | உறவு |
| குஜன் | பகை |
| புதன் | நீச்சம் |
| குரு | ஆக்ஷி |
| சுக்கிரன் | உச்சம் |
| சனி | உறவு |
| இராகு | உறவு |
| கேது | உறவு |

ஒவ்வோர் கிரகங்களுக்கும் ஆக்ஷி உச்ச நீச்சம் பகை முதலியவை யறிந்த பிறகே ஜாதகப்பலன் சொல்ல வேண்டும்.

## நவக்கிரக பார்வை

இரவிக்கும் சகிக்கும் புகர்புதர்க்கும்
ராகுகேதுக்கும் ஏழேயாம்
கருனே தீயர் நான்கு ஏழு
எட்டுமாம்
கவிக்கும் பொன்னன் ஐந்தேழொன்
பதாம்

சூரியன், சந்திரன், புதன், சுக்கிரன், இராகு, கேது இவர்கள் 7-ஆம் இராசியையே நோக்குவர்.

குஜன் நான்கு ஏழு எட்டு இம்மூன்று ராசியையும் நோக்குவான், குரு ஐந்து, ஏழு ஒன்பது இம்மூன்று ராசியையும் நோக்குவான். சனி, மூன்று, ஏழு பத்துஇம்மூன்று ராசியையும் நோக்குவான் என்பதாம்.

## நோக்கினளவுகள்

தோற்றுமதியும் பொன்னவனு மெதிராகநோக்கும்
சூரியனும் செய்வாயும் கடைக்கண்ணல் நோக்கும்
சாற்றியமால் வெள்ளி தலைக்கவிழ்ந்து நோக்கும்
சனி பாம்புமொரு கண்ணுற்றன் பார்க்குமென்பர்
போற்றியரவிபுகர் செவ்வாயிராகு சனி திங்கள்
புதன் பொன்னோன் கிழக்கு முதல் வரிசையாய்
[பார்க்கும்

என்ற சாதக சிந்தாமணியின் 22-ஆம் செய்யுளின்படி மேற் சொல்லியபடி பார்வையுண்டாயினும சந்திரன குரு இவர்கள் எதிராசகநோக்குவாரென்றும புதனும் சுக்கிரனும் கீழ்ப்பார்வை யுள்ளவரென்றும், சூரியன் குஜன் இவாகள் கடைக்கண்ணால் நோக்குவரென்றும் சனி. இராகு. கேது இவர்கள் ஒருகண்ணால் பார்ப்பாரென்றும் கூறுவர்.

இப்பால் சூரியன். சந்திரன், புதன், சுக்கிரன், இவர்கள் முழு நோக்கில் பலமுடையவராகவும் அங்காரகன் முக்கால் பார்வையில் பலமுடையவரெனவும். சனி அரைக்கால் பலத்தையுடையவனெனவும், ராகு குரு இவர்களும் அரைக்கால் நோக்கில் பலமுடையவர்களென்றே சாஸ்திரங்கள் கூறும்.

வெருவுறுசிங்கம் கன்னிகோற்சான் மீன்
விருக்ஷிக மிரவியின் கூறும்
மருண்மறிவிடையாழ் கடகமான் சிலையில்
வாறு நற்சந்திரன் கூறும்.

என்ற வாக்கியப்படி சிங்கம், கன்னி, துலாம், கும்மம் மீனம் விருக்ஷிகம் இவை சூரியன் கூறெனவும். மேடம், கடகம், தனுசு, ரிடபம் மிதுனம் மகரம் இவைச் சந்திரன் கூறெனவும் கண்டு கொள்ளுக.

## ஒவ்வொருவரும் பெற்ற மண்டலங்கள் அறிவது

இராசிகளில் முதன்மையான மேஷம் முதல் ஜெனன ராசி எதுவோ அந்தராசிவரையில் எண்ணிக்கூட்டி எத்தனை யாவது ராசியாக வருகிறதோ அதனை லக்கின முதல் கிரகங்களிருக்கும ராசிவரையில் எண்ணி அவ்விறண்டெண்களால் பெருக்கி 27-ஆல் வகுத்து நின்ற சேடமே மண்டல மெனப் படும்.

6

உதாரணமாக

| சுப | சூ | | |
|---|---|---|---|
| ரா சந் | இராசி | | |
| சனி | | | அங் கேகு |
| ல | | | |

| | |
|---|---|
| மேடம் முதல் ஜெனன ராசியாள தனுசு | |
| லக்கின முதல் சூரியனின்ற ராசி | 9 |
| இவ்விரண்டையும பெரும் | 45 |
| இதனை 27-ஆல் வகுத்த மிச்சம் | 13 |

இவை சூரியனுக்காம்

| | |
|---|---|
| மேஷ முதல் ஜெனனராசி | 9 |
| லக்கின முதல் சந்திரனின்ற ராசி | 3 |
| இவ்விரண்டையும் பெருக்க | 27 |
| இதனை 27-ஆல் வகுக்க நிச்சமில்லையாதலால் | |
| சந்திரனுக்கு | 27 |
| மேஷ முதல் ஜெனன ராசி | 9 |
| ஜெனனராசி முதல் குஜன் நின்ற ராசி | 9 |

இவ்விரண்டையும் பெருக்க 81-இதனை 27ஆல் வகுக்க மிச்சமில்லை யாதலால் குஜனுக்கும் 27 இவ்விதமே மற்றுமுள்ள புதன், குரு சுக்கிரன் சனி இராகு கேது இவர்களுக்கும் காண்க கண்ட பிறகு மிச்ச எண்கள்.

எத்தனை வருகின்றனதோ அதற்கு கீழ்கண்டவாறு மண்டல மறிக:—

| தேவர் மண்டலம் | நறமண்டலம் | அரக்கக் மண்டகம் |
|---|---|---|
| 1 அஸ்வனி | 2 பரணி | 3 கார்த்திகை |
| 5 மிருகசிரம் | 4 ரோகிணி | 9 ஆயில்யம் |
| 7 புனர்பூசம் | 6 திருவாதிரை | 11 மகம் |
| 8 பூசம் | 10 பூரம் | 14 சித்திரை |
| 13 அஸ்தம் | 12 உத்திரம் | 16 விசாகம் |
| 15 சுவாதி | 20 பூராடம் | 18 கேட்டை |
| 17 அனுஷம் | 21 உத்திராடம் | 19 மூலம் |
| 22 திருவோணம் | 25 பூரட்டாதி | 23 அவிட்டம் |
| 27 ரேவதி | 26 உத்திரட்டாதி | 24 சதயம் |

## தேவர் மண்டலத்தின் பலன்

உத்தம ஆசெசல் ஓங்குந் தேவர்கனம்
ஓதும் வித்தை பிறபல வசகனம்
வெற்றியசம் பொருள் வேந்தர் விருப்பிடும்
மோரைபூமியில் சேவும் வெகுதனம்
பத்தியசக நற்புதல் வரைந் தந்திடும்
பாரில்பக்கியம் பந்து விரும்பிடும்
சத்திபசகர் வீமேசுரரசகிய
சங்கரன் உரை செய்த பலன்கனே

## நறமண்டலப் பலன்

பலஞ்செசலில் நறமண்டலத்தான் பலன்
பணிகள் பூஷணம் பசக்கியம் சேர்ந்திடும்

தலங்கள் பெற்றிடும் தர்மபூஜா பலன்
தானங்கள் அன்ன தானமு மோங்கிடும்
தலங்கள் பெற்றிடும் பூமிபிரபலம
பூமகள் சேர்வளாயிசு விருத்தியாம்
நலங்களைச் செய்யும் நாற்றிசையின் பலன்
நாடுவீமேச நாதரமைத்ததே

## அரக்கர் மண்டலப்பலன்

அரக்கர் மண்டலமான திசைகளில்
அந்திர கால்சக்கிரம் வந்திடில்
பெருக்கும் புத்திரர் பெண்ணு நட்டமாம்
பித்தரோகமும் பேய் பிடித்தாட்டிடும்
மறிக்குடிமாதர்கள் மக்கள் பிதாவுடன்
மாறகப்பிணி சேரமதாகிவிடும்
உறக்கவீமேசர் தாளை வணங்கியே
ஓங்குமிப்படி யுற்றபலன் சொலே

இவை வெள்ளைச் சொற்களாய் இருப்பதால் உரை எழுதவில்லை.

## கிரகசமய விபரம்

முன் கிரக மண்டலங்களுக் கென்றேற்பட்ட எண்களை அவரவர்கள் திசைவருட மெவ்வள்வேர வெண்களால் பெருக்கி மறுபடியும் 27-ம் வகுத்த மிச்சமே சமயமெனப் படும். எப்படி யெனில் முன்பு சூரியனுக்கு மண்டல எண் 18-ஆகும் அதனை அவன் திசையாகிய வருடம் 6-ஆல் பெருக்கி 108-ஆகும்.

இதனை 27-ஆல் வகுக்க மிச்சமில்லை யாதலால் சூரிய னுக்கு 27-எனப்படும் சந்திரனுக்கு மண்டல எண் 27-அதனை அவன் திசை வருடமாகிய 10-ஆம் பெருக்க 270 இதனை 27 ஆல் வகுக்க மிச்சம் இல்லை யாதலால் சந்திர

னுக்கும் 27, இவ்வாறே கிரகங்களும் கணக்கிட்டு கீழ் கண்டவாறு சமயமரியவும்,

1 ஸ்நானம்
2 அலங்காரம்
3 விபூதி சந்தனம்
4 ஜெபம்
5 சிவபூஜை
6 ஔபாசனம்
7 விஷ்ணுபூஜை
8 பிராமண பூஜை
9 நமஸ்காரம்
10 பிரதக்ஷணம்
11 வைசுவதேயம்
12 அதிதிபூஜை
13 போஜனம்
14 புராண பிரசங்கம்
15 கோபம்
16 தாம்பூலம்
17 ராஜாங்கம்
18 கிரீடம்
19 ஜலயானம்
20 ஆலிங்கனம்
21 சயனம்
22 அமுதபானம்
23 மதனலங்காரம்
24 லீலை
25 மத்யபானம்
26 நித்திரை
27 ரத்னபரிக்ஷை

## ஹோரா லக்கினமெடுக்கும் விபரம்

திண்டிரற் கதிரோனுதயமே முதலாய்
ஜென்ம லக்கினமட்டு மெண்ணி
கண்டநாழி கையை இரண்ட ரையதினிற்
கழித்தே யோரை லக்கினமாம்
எண்டிசை யுதயமோசை யேயாகி
லக்கின முதலதா யெண்ணல்
அண்டிய உதயமுக்குமமாகி
லப்ரதித்தக்ஷணமாமே;

சூர்யோதய முதல் ஜெனன லக்கினம் அல்லது நாழிகை வரையின் எண்ணிக்கண்ட நாழிகையை இரண்டரை இரண்டரையாக கழித்து, உதயராசி முதல் எண்ணிக் கண்டதே ஒரே லக்கினமாகும்

## இராசிகள் விபரம்




## பாலாரிஷ்டம் விபரம்

ஓர் குழந்தை ஜெனமான உடன் லக்கின ஸ்புடம் செய்து கிரகங்களை அடைத்தவுடன் லக்கினாதிபதி யாரென் றும் அவன் சுபனா அல்லது அசுபனாவென்றும் ஷ இலக்கி னாதிபதி ஜெனன லக்கினத்திற்கு எத்தனையாவது ராசியிலி

ருக்கிருன் யாரால் பார்க்கப்பட்டான் எவருடன் கூடி இருக்கிருன் எவர் வீட்டிலிருக்கிருன், அவ்வீட்டில் ஆக்ஷியா, உச்சமா, பகையா, உறவாவென்று ஆலோசிக்க வேண்டும். பொதுவாக சூரியன், குஜன் இராகு கேது சனி இவர்கள் யாவர்கள் எனவும் சந்திரன் புதன் சுக்கிரன் குரு இவர்கள் சுபர்களெனவும் கூறுவர் மகரராசியில் ஜெனனமாகில் அவ்வீட்டோன் சனியாகையால் அந்த லக்கினத்திற்கு அவன் கொடியவனுகான், மேடலக்கினமாக ஜெனிக்க அவ்வீட்டிற்குடையவன் குஜனுகையால் அந்த லக்கினத்திற்கு அவன் கொடியவனுவான் ஆயினும் அவர்கள் சேர்க்கையில் பார்வை முதலியவைகளால் கொடியவனுயினும் ஆவார் எப்படியெனில் பிரிதீவு அப்பு, வாயு ஆகாயமென்னும் பஞ்ச பூதங்களுக்கு ஆதாரமாய் பிருதீவு வென்றும் அப்பு சுக்கிரனென்றும் தேயுகுஜனென்றும் வாயுபுதனென்றும் ஆகாயம் சனி எனவும் கொண்டு, உயிருக்குக்கர்த்தா சூரியனென்றும் உடலுக்குக் கர்த்தா சந்திரனென்று நிருத்தி மேற்சொன்ன பஞ்சபூதங்களின் சப்தமும் சனியினியிடம், அதாவது ஆகாயத்தினிடமாய்ச் செல்லவும் இரசம் சுக்கிரனிடம் (அதாவது) அப்புவினிடமாய்ச் செல்லவும், ரூபம குஜனிடமாய் (அதாவது) தேயுவினிடமாய்ச் செல்லவும், கந்தம் குருவினிடமாய் பிருதிவினிடமாய்ச் செல்லவும் இப்படித் தத்துவங்களை யமைத்து சூததிரக்கயிற்ருல் நவ கிரங்களைச் சரியாய் நிருத்தி நல்வினையும் சுவர்க்காதி மோக்ஷங்கள் சுபர்களாலும் தீவினை பிருமை வாதை நிற்க முதலியவைகள் பாவ கிரகங்களாலும் உண்டாகும் என்று கூறியபடி சுபர்கள் எனவும் அசுபர்களென்வுமறிந்தே மானிடர்களுக்கு வருங்கால் நல்வினை தீவினைப் பலனும்

ஆயுள் முதலியவைகளையும் கூறுவது அவசியமாகையால் ஓர் ஆண் குழந்தைப்பியந்தவுடன் சகடை பால அரிஷ்டம் முதலியவைகளை நன்கு சோதித்தே பின்வரும் பலனைச் சொல்வது நலமாகையால், இங்கு பாலரிஷ்ட விபரங்களைக் கூறுவோம் பாலஅரிஷ்டம் என்பது குழந்தையில் கெண்டாந்த காலம் என பொருள் படும்.

மந்தன்சேயிருவர் கூடியிருந்திட்டத்ததுவும் தீது

அந்தகெதிரிட்டும்மாகா தருதியாய் தீம்புண்டாகும் என்ற மணிகண்ட கேரள சோதிடத்தில் இரண்டாம் செய்யுளின் வாக்கியப்படி சனியும் குஜனும்கூடி ஓர் ராசியிலிருந்தாலும் தீது அல்லது ஒருவர்க்கெதிராக அதாவது 7-க்கு 7-ஆச இருந்தாலும் ஒருவர்க்கொருவர் பார்வை யுண்டாகையால் கட்டாயம் தீம்பு என்றனர்.

இவை பாலரிஷ்ட தோஷம் என்பதாம் இவையொரு புறமிருக்க சனியோடு குஜன் கூடினுல் தீம்பு என்பதால் சனிக்கும் குஜனுக்கும் பகையுண்டு என ஏற்படுகிறது (1) சனி ஆயுள் காரகன் (2) ஜென்ன ராசி மகரமாகில் லக்கினத்திற்குடையோனும் தனம் என்கிற இரண்டாம் ஸ்தானத்துக்குடையவனும் ஆவான் லக்கினதிபதியே சனியாய் எந்த ராசியில் அவன் மேற்சொன்னபடி குஜனுடன் கூடி இருந்தால் அவனுக்கு எவ்விதமாய் ஆயுள் சொல்வது என்பதை நான் சொல்லாமலே விளங்கும் நவகோட்களில் யார் பெரியவர் அல்லது பலமுடையவர் என்றும் அறிதல் வேண்டும் அதைச் சோதிக்குமிடத்து புதன் சனி இராகு இவர்களின் தோஷங்களை குஜனே தீர்ப்பவன் என சர்த்த சித்தாமணியில் கூறியுள்ளார் ஆயினும், கிரகங்கள் ஒருவர்க்கொருவர் பெரியவரேயாகும், இவை அவர்களிருக்கும் இராசியிடம் சேர்க்கைபார்வை இவைகளைப் பொருத்ததாகும்.

ஆறு பன்னிரண்டிற் செவ்வாயிருந்திடிற் சிசுவரிட்டம்
வீறுள்பத்திற் செவ்வாய் வெண்பதி கூறி நிற்கின்
மாறியவியத்திற் செவ்வாய் வருகால மகவுக்காதா
கூறியநற் கோளேக்கின் கொடியநோய் வந்து தீரும்

என்ற வாக்கியப்படி 6, 12-ல் குஜன் நிற்கில் பிறந்த குழவிக்கரிட்ட மெனவும். 10-ம் ராசியில் குஜனுடன் சந்திரன் கூடி இருந்து தினசரி கோசாரப்படி 12-ம் ராசியின் குஜன் 1-மாதப் பிரவேச காலம் அக்குழந்தைக்கு ஆகாது எனவும், நற்கோட்களென்னும் குரு புதன் சுக்கிரன், இவர்கள் பார்ப்பரேல் மேற்சொன்ன அரிட்டத்தைத் தவிர்த்து கொடிய வியாதி நேர்ந்து பரிகாரமாகும் என்பதனாலறிக, இவ்வாறு பாலாரிஷ்டம் நேர்ந்தாலும் அதனைத் தீர்க்கவல்லார் யார் அல்லது நீரும் தீராதெனக்கண்டு கூறுவதோ அதன் வயதையும் கூறவேண்டுவது அவசியம் மிதுனம் கன்னி துலாம் கும்பம் இவற்றில் சந்திரனிருந்து அங்காரகன்னி சூரியன் சனி இவர்கள் பார்ப்பார்களே யானாலும் சந்திரன் நின்ற ராசிக்குடையவன் மீனராசியி லிருந்தாலும் அந்தக்குழவிக்கரிட்டமாகும்.

சூரியனுடன் இராகுவும் சனியும் கூடில் பிதாவுக்கும் பிதுர் வங்கிசத்தாருக்கும் தோஷமுண்டு அவை இந்த ஜாதகன் ஜெனித்த9-ஆண்டுகளுக்குள் கொல்லுமெனவும் கூறுவர்.

சுக்கிரன் சனியோடு சூரியன் வந்துசேர அவர்கள் நின்ற இராசிக்கு 7-ம் ராசியில் புதனிருக்க தாவயப் பெற்ற மாமனும் மாதுரு வம்சத்தாரும் ஜெனிந்த 3-வருடங்களுக்குள் இறந்து போவார்,

குருவும் சூரியனும் கூடி நின்ற ராசிக்கு 7-ம் ராசியில் செவ்வாய் நிற்கில் தீம்புண்டு இல்லையேல் புத்திர தாசமுண்

7

டாக்கும் ஷை கிரகங்களுடன் சந்திரனும் கூடி இருக்கில் அவன் தாய்க்கும் 7-வருடங்களுக்குள் தீம்புண்டு.

புதனும் சுக்கிரனும் ஜெனன ராசிக்கு 3-ம் ராசியிலிருந்து நற்கோட்களாவது, சுபகோட்களாவது பாராம லிருப்பாராகில் அவன் குலமே நாசமாய் போகும் மனையும் பாழாய்ப்போகும்.

குஜனும் சனியும் கூடி ஓர் ராசியிலிருக்க அவர்கள் நின்ற ராசிக்கு 3-ம் ராசியில் சூரியனிருக்க அவன் பிறந்த 1-வருடத்தில் தீம்புண்டு.

ஜெனன ராசிக்கு 3-ம் ராசியில் குஜனிருக்க 9- ராசியில் சனி இருக்க அவனுடன் பிறந்த ஜேஷ்ட சகோதரனுக்குக் கட்டாயம் கெண்டத்தைக்காட்டும் நான்கு மாதத்தில் பிதாவுக்கு கண்டமும், பகை கிரகங்கள் பார்க்கில் 5-வருடத்தில் தீம்பு விளையும்.

இவ்வாறு பாலரிட்டங்களைச் சோதித்து பிறகு அவனவன் யோகங்களை ஆயுள் விபரங்களையும் கூறுவது நலம் ஜெனன ராசி எந்த ராசியானாலும் அந்த லக்கினமே 1-ம் இடமெனவும் கீர்த்தி மூர்த்தி எனவும் கூறுவதாவது முதல் கீழ்கண்டவாறு வர்க்க மடுத்து பலனைக் கூறுக.

## கிரகங்களின் குலம் அறியும் விபரம்

இரவியும் குஜனும் க்ஷத்திரியரெனவும், குருவும் மதியும் பிராமணனும் புதன் வைசியனும், இராகுவும் சுக்கிரனும் சூத்திரரெனவும் சனியும் கேதுவும் கீழ் சாதி எனவும் டிகாள்க.

இவை ஒவ்வொரு கிரகங்களுக்குறிய க்ஷேத்திர விபரங்களாகும்.




## காதம் அறியவேண்டுவது

தீவிரமே வினநாதரைத் தேறுமிற்
றினகர னெட்டனலேழ் பொன்னென்பதே
காரிநாலைந்து மாரிபன் னூரதாங்
காணுமுந்துவுக் கொன்ற தாங்கமே
தாரமாரெனு ராணி யேழுகால்
சாடியாடளி யெட்டதாந்தையலில்
கூறுமே பதினென்று தேனுன்கு மீன
கோலமா மிருபத்தேழு கொண்டதே

புதனுக்கும் இரவிக்கும் 8-காதமும் குஜனுக்கு 7-காதமும் குருவுக்கு 9-காதமும், சனிக்கு 10-காதமும், சுக்கிரனுக்கு 16-காதமும் சந்திரனுக்கு 1-காதமும், மிதுனம் ரிஷபத்துக்கு 6-காதமும் சிம்பத்துக்கு 7-காதமும், துலாம், கும்பம், மேஷம் கடகம் இவைகளுக்கு 8-காதமும், கன்னி தனுசுக்கு 1-காதமும் விருக்ஷிகத்திற்கு 4-காதமும், மீனத்திற்கு 77, காதமும் என்றறிவாயாக

## திதிகளின் பெயர்



அமாவாசை என்பது பூரண இருள் முடியகாலமாகும் சூரியன் மாதமொன்றுக்கு ஓர் ராசியிலிருந்து மறுராசிக்கு மாறவேண்டும் சந்திரனே 2-நாழிகை 15-க்கு ஒரு முறை ஒவ்வோர் இராசிக்குச் செல்லவேண்டும் இதனுலே பிரதமை துதியை திருதியைச் சதுர்த்தி பஞ்சமி, சஷ்டி சப்தமி, அஷ்டமி நவமி ஏகாதசி துவாதசி, திரியோதசி சதுர்தசி பூரணிமை எனவுய் கூறுவண்டு, அமாவாசை திதி பிறந்தது முதல் பிரதமை வரையிலும், அமாவாசைக்கு முன் திதியான சதுர்த்தசி 15-பாகை முடிந்த உடன் 16-ம்பாகையிலிருந்தே சூரியன் எந்த ராசியானுலும் அந்த ராசியில், சந்திரன் வந்து சேர்வான் சந்திரன் சேர்ந்து இரண்டேகால் நாள் கழிந்ததும். முறையே மற்றுமுள்ள 11 இராசிகளிலும் சஞ்சரிக்க வேண்டுமாகையால் ஒவ்வோர் ராசிகளிலும் சஞ்ரிக்க வேண்டுமாகையால் ஒவ்வோர் ராசியாய் மாரிவரும் காலமே திதிகள் என வழங்கப்படுகின்றன. இவ்வாறு 15 திதிகள் முடிவடைந்தால் ஓர் பக்ஷம் எனப் படும். சூரியனிருந்த ராசியைவிட்டு மறுராசியில் சந்திரன் பிரவேசித்தகாலம் இவ்விருவருக்கும் மத்தியில் 30 டிகிரி யளவிருக்கும் அக்கோளத்தை 360 பாகை (அல்லது) டிகிரி எனவும், இராசி ஒன்றுக்கு 31-பாகை கூறுவது சாஸ்திர சித்தம் சூரியனுடன் எந்த தேதியில் எந்த நாழிகையில் சந்திரன் சேர்ந்தானே அதையே அமாவாசை எனப்படும் இவ்வாறு ஒவ்வொரு ராசியாய் கடந்து சூரியனிருந்த ராசிக்கு 7-ம் ராசியில் சந்திரன பிரவேசித்த காலம் பூரணிமையாகும் அப்போது சூரியனுக்கும் சந்திரனுக்கும் 108 டிகிரி தூரமிருக்கும் சூரியனிடமிருந்து மறுராசியில் அதாவது 30-டிகிரியளவில் வந்த பிறகே நம்மோர்க்குச் சந்திரன் ஓர் வில் போன்று காணப்படும். அதனை 3-ம் பிறைச் சந்திரன் எனப்படும், 108-டிகிரியைக் கலந்து அதாவது 7-ம் ரபசியில் பிரவேசித்ததிலிருந்து டிகிரி அதிகப்பட தன்

கலைகளும் நாளுக்கு நாள் குறைந்து கொண்டே வரும் அதுமுதல் இரண்டாம் பக்ஷமும் கிருஷ்ண பக்ஷமுமென் கிற பிரதமை துதியை திருதியை சவுத்தி பஞ்சமி, சஷ்டி. சப்தமி அஷ்டமி நவமி தசமி ஏகாதசி, திரயோதசி சதுர்தசி அமாவாசை மறுபடியும் உண்டாகிறது. அமாவாசைமுதல் பூரணிமை வரைக்கும் பூர்வபக்ஷ மெனவும் பூரணிமைமுதல் அமாவாசையை அடைகிறவரையில் கிருஷ்ண பக்ஷமென வும் இவ்வாறு பக்ஷங்கள் இரண்டுகொண்டதே ஓர் மாத மென்றும் கூறுவர் உத்திராயண தக்ஷணுயன கால பேதத் தால் சில நாழிகைகள் முன்பின்னுகவும் மாறுவதுண்டு அமாவாசையில் ஓர் குழவிகள் ஜெனிக்குமாயின். அதற்கு சிலகுற்றங்கள் கூறுவதுண்டு அதே அமாவாசையில் பிறந்த குழவிகள் பூரண அயிஸ்வரியம் சம்பத்தும் உடை வர்களாகவும் இருப்பதுண்டு இதனைப் பின்வரும் யோகபட லத்தான் காணலாம்.

## நவாங்கிசம் அறியும்விபரம்

ஆய்ந்த நவாங்கிசந்தன்னை யறியும் வகை கூறில்
அச்சுவினி பரணி கார்த்திகை மூன்று நாளுக்
கேயகார் பன்னிரண்டு மேடமுதன் மீன
மீருகக்கா லொன்றுக்கோர நாசமாகும்
தூயவிருபத்தேழு நட்சத்திற்தன்னைத்
தொகுப்பாகமும் மூன்ருய்ப்பிரித் தடைவீற் பார்க்
வேயனைய தோண்மாதே சொன்னநவாங்கிசந்தான்[கில்
விளங்கிடுமென்றேயுரைத்தார் மேற்கணிதநூலோர்

பெருமையுடைய நவாங்கிசம் அறியும் வகையை கூற வேண்டுவதெனில் அஸ்வனி பரணி கிருத்திகை என்னும் 3-நக்ஷத்திரங்களுக்கும், 12 காற்களெனவும் மேற்சொன்ன பனிரண்டு காற்களேயும் 12-ராசிகளாக மேடமுதல் மீனம் வரையிலெனவும், மறுபடியும் உரோகணி, மிருகசீரிஷபம் திருவாதிரை புணர்பூசம் எனவரும 3-நக்ஷத்திரங்களுக்கும் 12-கால்களெனவும், அதையும் மேடமுதல் மீனவரை 12-இராசியாகவும் இவ்வாறே 27-நக்ஷத்திரங்களேயும் மும் மூன்று நக்ஷத்திரங்களாகக் கணக்கிட்டு மூன்று நக்ஷக்தி ரங்களுக்கும் 2 ராசி எனவும் கொண்டு பார்ப்போமாகில் நவாங்கிசமென்பதை யரியலாம்.

இவை சாதக சிந்தாமணியின் 10-ம் செய்யுள் மேலே சொன்ன நவாங்கிச ராசிக்குடைய கிரகமெதுவோ, அதை யே நவாங்கிசாதிபதி எனவும் கூறுவதுண்டு இராகு கேது கள் நவாங்கிசாதிபதியாக வருவதில்லே ஆதலால் அவர்க ளுக்கு பலாபலனும் கிடையாது இந்த அங்கிசமென்பதை ஜெனன காலமுதல் அந்தியரையிலும் திசைபு அந்திர சூக்ஷமபலாபலம் சொல்லவும். உபயோகமாகும் எப்படி யெனில்,

மிடற்றிடத்தாய் பதியாக மேவிலிது விவனு
மிதற்குள்காறகனும் வெகுபலமாய் மென்மேலும்
நடத்துவதுஞ் சுலபமாகி நல்லவர் பெற்றிலகி
நட்புளகேந்திர கோணினண்ணி மனே நாதற்
குடற்கதனுக் கெட்டிள்ஞ் சுத்தமுமாகியிதனுக்
கொளியாமற் றேவவாக்கத்தாங்கி சத்துமுயரிற்
றிடத்து டையாமாதுரு தீர்க்காயுவுமரோக
திடகாத்திரபுத்திர பவுத்திரமுடையவனே.

என்ற குமார சுவாமியம் நான்காம் பாவகப் பாவத்தில் மாதுருபலன் என்னும் 118-ல் செய்யுளின்படி மாதுரு ஸ்தானமென்று சொல்லும் வீட்டிற்குடைய கிரகமும் அன்னைக்காரகனென்னும் சந்திரனும் எவ்விதத்திலேனும் பலம் பெற்று சுபகிரகங்களென்று சொல்லும் குரு புதன், சுக்கிரன் இவர்களுடன் சகிதம் பெற்ற தன் உறவினர்கள் அல்லது தன் அனேகக் கிரகங்களுடன் கூடியும் மாதுரு ஸ்தானத்திற்கும் ஜெனன ராசிக்கும் 4, 8-ம் இடங்கள் பரிசுத்தமாயும், 9 8 2 இவ்விராசிகளில் குரு, தேவதாங்கிச மெனும் நற்கோட்களின் அங்கிசத்திலேனு மிருக்க அவன் மாதுரு என்னுகும் நோயின்றி திடசரீரமாம் புத்திரப்பேருடன் பூரண ஆயுள் உடையவளாகவும் இருப்பாள் எனவும் கூறுவர் ஆனதால் ஜோதிடர்கள் எந்தெந்த கிரகங்கள் யாருடைய அங்கிசம் பெற்றன அப்படி அங்கிசம் பெற்ற கிரகத்திற்கும் சத்துருவா (அ) மித்துருவா என அறிந்து பலாபலன் கூறுதல் நலம்,

சாதாரணமாக சூரியன், சுக்கிரன் அங்கிசம் பெற்றதாக வைத்துக்கொள்வோம் ஷெ சூரியனுக்கு சுக்கிரனும் சனியும் பகைவராவார்கள் ஆனதால் சூரியனுடைய பலன் குறைந்தன குரு அங்கிச பெற்ருல் சூரியன் தன் ஸ்தானத்திற்குத் தக்க பலனைக் கொடுப்பான் எனவும் கூறுவது நலம் இப்பால் ஜெனன ராசியை உயிர் எனவும் சந்திர நின்ற ராசியை உடலெனவும் சாஸ்திரங்கள் கூறுவதாலும் சூரியன் எலும்பிற்கும் சந்திரன் இரத்தத்திற்கும் குஜன் அவனவன் சக்திக்கும் புதன் தசைக்கும், குரு அறிவிற்கும் சுக்கிரன் இந்திரிய சேஷ்டைக்கும் சனி நரம்புகளுக்கும், கர்த்தாவெனவும் கூறுவதால் சூரியன் சந்திரன் இவர்களை ஜெனன காலப்போது அவர்களிருக்கும் பலவன்மையைப் நன்கு ஆராய்ந்தறிய வேண்டும்.

இப்பால் குரு அறிவிற்கும். சந்திரன் இரத்தத்திற்கும் கர்த்தா என்பதினாலேயும்.

சந்திரனை பராசத்தி எனவும் போஜனம் குதிரைமாதுரு நித்திரை வெண்கலம் குடை அரிசி பருத்து மீனைத்து மிருக்கும் சரீரம், இடக்கண் உழவன் முத்து ; புபவை இவை களின் வியாபாரங்களுக்கு சந்திரனே கர்த்தா எனவும்.

புத்திரர் சொர்ணம் ரிஷபவர்க்கம், அரசர் புருடராக ரத்னம் பட்டப்பேர் விப்பிரவர்க்கம் இவைகளுக்கெல்லாம், கர்த்தாகுருவே எனவும் அனேக சாஸ்திரங்கள் கூறுவத ஞலே சுபர்களில் முக்கிய கிரகம் குருவே எனவும், கூறு வதனுல்.

மேலேழு வியாழன் நின்ற விராகிக்
காறீரா ரெட்டில்
மாலேவெண் மதியஞ் சேரில்
வந்தநாட் சகடயோகம்
பாலகன் பிறக்கிற் சாவாம்
பழிபடு மணத்தைச் செய்யில்
ஞாலமேல் வழியைப் போகில்
நலமில்லை நறுமின் கொம்பே

என்றபடி கடக ராசிக்கு உச்சனும், தனுர், மீனத்திற்கு ஆக்ஷி நாதனுமான குரு எந்த ராசியிலிருந்தாலோ அந்த ராசிக்கு 6-ம் இடத்திலும், 12-இடத்திலும். 8-ம் இடத்தி லும் சந்திரன் நிற்கில் அவையே சகடயோக மெனவும், அக்காலம் குழந்தை ஜெனிக்கில் மரணமாகு மெனவும் மணம் செய்யினும், பிரயாணம் செய்யினும் நன்மையில்லை எனவும் கூறியுள்ளார்.

சிலர் சகடையோகத்தில் ஜெனித்த அனேகர் பூரண ஆயுளுடனிருக்கிருர்கள் என்று சந்தேகிக்கலாம் சகட யோகம் என்பதனுலேயே ஆயுளில்லை என்பது கூடாது சகடை இல்லாவிடில் பூரண ஆயுளென்று எண்ணுவது தவறு. ஆயுளை நிர்ணயிக்க பல்வேறு வழிகளுண்டு. சகடையில் ஜெனித்த ஜாதகங்களை ஜெனன ராசிக்கு குரு எந்த ஸ்தானத்துக்குடையவன் அவன் எந்த ஸ்தானத்திலிருக்கிருன் சந்திரன் ஜெனன ராசிக்கு எந்த ஸ்தானத்திற்குடையவன் அவனெந்த ஸ்தானத்திலிருக்கிருன் என்றும் இவ்விருவரையும் யார் பார்க்கப்படுகிருர் என்றும் கவனித்தல் வேண்டும். எப்படிப்பட்ட ஜாதகங்களாயினும் சூரியன் வலிபெற்றிருக்கில் அவனுக்கு வயது 5 சந்திரன் வலிபெற்றிருக்கில் வயது 70 குஜன் வலிபெற்றிருக்கில் வயது 16 புதனுக்கு வயது 20 குருவுக்கு வயது 30 சுக்கிரனுக்கு வயது 7, சனிக்கும் இராகுவுக்கு வயது 100 இப்படி வலி பெற்ற கோட்களாலும், அஷ்டகவர்களாலும், கால சக்கிர திசை யந்திரத்தாலுமே வயதை நிலை கூறவேண்டும்.

பொதுவாக சூரியன், சனி, குஜன் இம்மூவரும் பாவி எனவும் ,சந்திரனும் இராகுவும் கூடி தனுர் மீனமான குரு வீட்டிலிருக்க சுபரெனவும் சனி, அங்காரகன், இவர்கள் ஆக்ஷி வீடுகளில் சுபர்களிருந்தாலும் பாவர்களே இதனை உரவு தெரிந்துச் சொல்லுதல் வேண்டுமெனவும் 6, 8, 12 குடையகோட்கள் கோணம் என்னும் 1, 5, 9-ம் இடங்களிலிருக்கில் சமன் எனவும், சனியும் குஜனும் புதன் சூரியனுடன் கூடி 1, 5, 9-ம்- ராசிகளிருந்தாலும் சமன் என்று கூறியபடியும் கேந்திரம் என்று சொல்லும் 1, 4, 7, 10-ம் ராசியதிபர்களுக்கு 6, 8, 12-ம் ஸ்தானுதிபர்கள்

ஒருவர்பேரில் அவர்கள் பகைவராவார்கள் எனவும் ஒருவர்க் கொருவர் சமமின்றி நோக்குதலும் கூடாதெனவும் சாஸ்திரங் கள் முறையிடுகின்றன.

## ஆண் பெண் அறியும் விதமாவன

பொதுவாக மேஷம் மிதுனம், சிம்மம், துலாம், தனுசு கும்பம் இவ்வாறு ராசிகளும் ஆண்ராசி எனவும் ரிஷபம் கடகம், கன்னி, விருக்ஷிகம் மகரம் மீனம் என்னுமிவ்வாறு ராசிகளையும் பெண்ராசி எனவும் கூறுவதுண்டு கிரகங்களில்

| | | | |
|---|---|---|---|
| சூரியன் | | குரு | |
| குஜன் | ஆண் | சனி | |
| குரு | | புதன் | இரட்டை |
| மதி | | இராகு | |
| இராகு | பெண்கோள் | சுக்கிரன் | |
| வெள்ளி | | | |
| சனி | | சூரியன் | ஒற்றை |
| கேது | அலிகோள் | சந்திரன் | |
| புதன் | | குஜன் | |

இவ்வாறு கூறுவதாலும்

ஞாயிறு, திங்கள், செவ்வாய், புதன் எனவரும் வாரங் களில் ஞாயிறு ஆண் நாள் திங்கள் பெண் நாள், செவ்வாய் ஆண் நாள் புதன் பெண் நாள் குரு ஆண் நாள் சுக்கிரன் பெண் நாள் சனி ஆண் நாள் எனவும் ஞாயிற்றுக் கிழமை யில் சூரிய உதய முதல் தமிழ் நாழிகை 2½ கொண்ட இங்கி லீஷ் மணிநேரம் ஒன்று வரையிலும் சூரிய ஓரை என்

றும் பிறகு புகர்புந்தி. இந்துமைந்தன், அந்தணன், சேய் என சப்த கிரகமும் மாறிவருமெனவும் சோதிட சாஸ்திர வல்லவர்களில் பலர் கூறியுள்ளார்.

ஒரைஎன்பவை முதன் முதலாக ஆண் ஒரையாபெண் ஒரையா என்றும், ஒராநாதன் இருக்குமிராசி என்னவென்றும், ஓராநாதன் ஆண் பெண் என்னும் கோட்களுள் எந்த கிரகத்தால் பார்க்கப்பட்டான் என்றும் கவனித்து அந்தந்த ஒரைக்குக்கீழ் சொல்லியபடி பலனைக்காண்பது அவசியம் ஒரையரியும் விபரம் என்றனர். எப்படியெனில் தினமும் ஒரை மாரிவரும் விபர மெப்படியெனில் ஞாயிற்றுக் கிழமையான சூரிய வாரத்தன்று உதயமாகி 1-மணி நேரம் வரையில் சூரிய ஒரை பிறகு மேற்கொன்னபடி மணிக்கொருவராக புகர் புதன், சந்திரன், சனி குரு, குஜன என 24-மணி நேரமும் 24 ஒராதிபர்கள் மாரி வருவாரென திங்கட்கிழமை சோமவாரமாதலால் சந்திரன், சனி, குரு, அங்காரகன், அருக்கன் சுக்கிரன் புதன் எனவும் இவ்வாறு ஒவ்வோர் வாரத்ததிபரே அன்று சூர்யோதய ஒராநாதனுக வைத்து 1-மணி நேரத்திற் கொருவராக மாற்றி, மேலே சொல்லியபடி ஒரா நாதர்களையறிந்து சூரிய ஒரைக்குத் துன்பம் சந்திர ஒரைக்கு சந்தோஷம் அங்காரக ஒரைக்கு துயரம், புத ஒரைக்கு மக்கட்பேரு, குருவுக்கு தெள்ளிய நிலைப்பெறல், சுக்கிரனுக்கு இன்பம் சனிக்கு சிறைப்புகுதலெனவும் கண்டுகொள்க,

மேடம் முதல் மீனம் வரையிலுள்ள 12-ராசிகளுக்கும் சுபன், அசுபன், மாரகன், யோகன் அரியவும்,

| 12 ராசி விபரம் | யோகன் பெயர் | மாரகன் பெயர் | பாபன் பெயர். | சுபன் பெயர். |
|---|---|---|---|---|
| மேஷம் | சந்திரன் | சனி புதன் | சனி சுக் புதன் | குரு சூரியன் |
| ரிஷபம் | சனி | குரு சுக் சந்திரன் | குரு சு சந்திரன் | சனி சூரியன் |
| மிதுனம் | ,, | அங் குரு சூரி | அங் குரு சூரி | சுக்கிரன் |
| கடகம் | அங்காரகன் | சுக் சனி சந் | சுக் சனி சந் | அங் குரு |
| சிங்கம் | ,, | சுக் புதன் | சுக்கிரன் புதன் | அங்காரகன் |
| கன்னி | சுக்கிரன் புதன் | அங் குரு சந் | அங் குரு சந் | சுக்கிரன் |
| துலாம் | சந்திரன் புதன் | குரு சூரி அங் | குரு சூரி அங் | சனி புதன் |
| விருக்ஷிகம் | சூரியன் சந்திர | புதன் அங் சுக் | புதன் அங் சுக் | சந்திரன் |
| தனுசு | சூரியன் புதன் | சந் சுக் குரு சனி | சுக்கிரன் | அங் சூரியன் |
| மகரம் | சுக்கிரன் | குரு சந் அங் சூ | குரு சந் அங் | சுக புதன் |
| கும்பம் | சுக்கிரன் | சந் அ சூ பு ச | ,, | சுக்கிரன் |
| மீனம் | அங்காரகன்குரு | சந் சுக் பு சூரி | சனி சு பு சூரி | அங் சந்திரன் |

மேஷ லக்கினத்திற்கு சனியும் புதனும் மாரகாதிபர் என குறிக்கப்பட்டன மேஷ லக்கினத்திற்கு புதன் 3, 6, இவ்வீட்டிற்குடையவனுகும் சனி 9, 10 இவ்வீட்டிற்கு குடையவராவார் 10-ஆம் இடம் என்பது காரியம் உத்தி யோகம் ஜிவனம் கருமம் என்னும் ஸ்தானங்களென முன்ன மேயே கூறப்பட்டன. ஆதலால் சனி மாரகனுயினும் அவன் தன் சுயக்ஷேத்திரத்தில் ஆக்ஷி பெற்றும் 1, 4, 7, 10 என்னும் 'கேந்திரங்களிலேனும் இருப்பானுகில் 'சனி கொல்லான் ஆயினும் சுபகிரகங்கள் நோக்கிருக்க வேண்டும் ஷ பாவகிரங்கள் 9, 5, என்னும் திரிகோணத்திலிருந்து சுபகிரங்களால் பார்க்கப்படவில்லையென அவன் மிருகங் களினுலாவது கயிற்ருலாவது விஷஜெந்துக்களினுலாவது மரணம் அடைவான். மேஷத்திற்கு இரண்டு ஏழுக்குடை யோனுன சுக்கிரனே கொல்வான் எனவும் கட்டாயமாய்க் கூறலாம்.

## சத்திக்ள் நவகோள் குருவணக்கம்

காயத்திரி சாவித்திரியும் கலைவாணி கங்கை நாமம்
மேய நமலுலக மாதரெழுவகை விரும்பிப்போற்றி
ஆயநற்கதிர நவக்கோளவைகளை வணக்கஞ் செய்து
தூய நற்கணிதம் யாவும் சொல் குரு வணக்கஞ் செய்வோம்

அஷ்டகவர்க்கு என்பது, எட்டு வர்க்கம் என்பது பொரு ளாகும், அவையாவன சூரியன் சந்திரன் குஜன் புதன் குரு சுக்கிரன் சனி இலக்கிணம் என்பனவாம் சூரியன்

அஷ்டகவர்க்கத்தால் பிதாவின் ஆயுள் பலன் கெண்டாதி கெண்டங்களும் சந்திரனுல் மாதாவுக்கும், குஜனுல் சகோதர சகோதரிகளுக்கும் புதனுல் தாய் மாமனுக்கும் குருவால் அவன் புத்திர புத்திரிகளுக்கும் சுக்கிரனுல் மனையாளுக்கும் சனியால் அந்த ஜாதகனுக்கும் மேற்கண்ட விஷயங்களும் மாதந்தோரும் நடக்கும் பலாபலன்களும் நன்கு அறிய ஏதுவாகும் அஷ்டகவர்க்கின் மொத்த பரல் 337 ஆகும். அவைகளில் சூரியனுக்கு 48 சந்திரனுக்கு 49 குஜனுக்கு 39 புதனுக்கு 54 குருவுக்கு 56 சுக்கிரனுக்கு 52 சனிக்கு 39 ஆக மொத்தம் 337 ஆகும். அஷ்டகவர்க்கினுல் அரியும் முறையை ஆதிமுதலாகிய சிவனுக்கு உபதேச சற்குரு தேசிகனுகிய சிவசுப்ரமண்யக் கடவுள் அகத்தியமா முனிக்குக் கூறியபடி சூரியன் முதல் சனி 7-ம் லக்கினம் ஆக 8-ம் மேடாதி 12-ஆல் பெருக்க நேரும் 84 வீட்டிலும் நிருத்தி அதிக திட்பநுட்பமாய் பலனுரைத்தல் வேண்டும். அஷ்டவர்க்கினை யறிய விரும்புவோர் வடக்கு முகமாய் அமர்ந்து கிழக்கு மேற்காக ஓர் காகிதத்தில் 12 அரைகளைச் செய்து அதன் மேஷ முதல் மீனம் வரையிலுள்ள 2 அரைகளெனக் கொண்டு அவரவர்கள் ஜாதகப்படி எந்தெந்த ராசியில் எந்தெந்த கிரகங்களிருக்கிறதென வரிந்து அந்தந்த கிரகங்களுக்கு வரும் நெம்பர் வரிசைப்படி ஒவ்வொரு கிரகமிருக்கு மிடமே 1-ம் இடமெனக் கொண்டு நெம்பர் வருமிடத்தில் ஒவ்வொர் கோடுகளைக் கிழித்து மொத்தமாய்க் காண்பதேயாம் இவை பின் வரும் அஷ்டகவற்கு விபரத்தால் காணலாம்.

## காலச்சக்கிர திசை வருடம்

## விபரம்



அஷ்டகவர்க்குப் படலத்திலுள்ளபடி

சூரியன் அஷ்டவர்க்குப்பரல் 48–க்கு விபரம்

| | | |
|---|---|---|
| சூரியன் | 1 2 4 7 8 9 10 11 | 8 |
| சந்திரன் | 3 6 10 11 | 4 |
| குஜன் | 1 2 4 7 8 9 10 11 | 8 |
| புதன் | 3 5 6 9 10 11 12 | 7 |
| குரு | 5 6 9 11 | 4 |
| சுக்கிரன் | 5 7 12 | 3 |
| சனி | 1 2 4 7 8 9 10 11 | 8 |
| லக்கினம் | 3 4 6 10 11 12 | 6 |
| | | 48 |

சந்திரன் அஷ்டவர்க்குப் பரல்

49–க்கு விபரம்

| | | |
|---|---|---|
| சூரியன் | 3 6 7 8 10 11 | 6 |
| சந்திரன் | 1 3 7 10 11 12 | 6 |
| குஜன் | 2 3 5 9 10 11 | 6 |
| புதன் | 1 3 4 5 7 8 10 11 | 8 |
| குரு | 1 2 4 7 8 10 11 | 7 |
| சுக்கிரன் | 3 4 5 7 9 10 11 | 7 |
| சனி | 3 4 6 11 | 4 |
| லக்கினம் | 3 6 10 11 12 | 5 |
| | | 49 |

## அங்காரகன் அஷ்டகவர்க்குப் பரல் 39-க்கு விபரம்

| | | |
|---|---|---|
| சூரியன் | 3 5 6 10 11 | 5 |
| சந்திரன் | 3 9 11 | 3 |
| குஜன் | 1 2 4 7 8 10 11 | 7 |
| புதன் | 3 5 6 11 | 4 |
| குரு | 6 10 11 12 | 4 |
| சுக்கிரன் | 6 8 11 12 | 4 |
| சனி | 1 4 7 8 9 10 11 | 7 |
| லக்கினம் | 1 3 6 10 11 | 5 |
| | | 39 |

## புதன் அஷ்டகவர்க்குப் பரல் 54-க்கு விபரம்

| | | |
|---|---|---|
| சூரியன் | 5 6 9 11 12 | 5 |
| சந்திரன் | 2 4 8 9 10 11 | 6 |
| குஜன் | 1 2 4 7 8 9 10 11 | 8 |
| புதன் | 1 3 5 6 9 10 11 12 | 8 |
| குரு | 6 8 11 12 | 4 |
| சுக்கிரன் | 1 2 3 4 5 8 9 11 | 8 |
| சனி | 1 2 4 7 8 9 10 11 | 8 |
| லக்கினம் | 1 2 4 6 8 10 11 | 7 |
| | | 54 |

## குருவின் அஷ்டகவர்க்குப் பரல் 56-க்கு விபரம்

| | | |
|---|---|---|
| சூரியன் | 1 2 3 4 7 8 9 10 11 | 9 |
| சந்திரன் | 1 5 7 9 11 | 5 |
| குஜன் | 1 2 4 7 8 10 11 | 7 |
| புதன் | 1 2 4 5 6 8 10 11 | 8 |
| குரு | 1 2 3 4 7 8 10 11 | 8 |
| சுக்கிரன் | 2 5 6 9 10 11 | 6 |
| சனி | 3 5 6 12 | 4 |
| லக்கினம் | 1 2 4 5 6 7 9 10 11 | 9 |
| | | 56 |

## சுக்கிரன் அஷ்டகவர்க்குப் பரல் 52–க்கு விபரம்

| | | |
|---|---|---|
| சூரியன் | 8 11 12 | 8 |
| சந்திரன் | 1 2 3 4 5 8 9 11 12 | 9 |
| குஜன் | 3 5 6 9 11 12 | 6 |
| புதன் | 3 5 6 9 11 | 5 |
| குரு | 5 8 9 10 11 | 5 |
| சுக்கிரன் | 1 2 3 4 5 8 9 10 11 | 9 |
| சனி | 3 4 5 8 9 10 11 | 7 |
| லக்கினம் | 1 2 3 4 5 8 9 11 | 8 |
| | | 52 |

### சனிக்குரிய பரல் 29-க்கு விபரம்

| | |
|---|---|
| சூரியன் | 1 2 4 7 9 10 11 |
| சந்திரன் | 3 6 11 |
| குஜன் | 3 5 6 10 11 12 |
| புதன் | 6 8 9 10 11 12 |
| குரு | 5 6 11 12 |
| சுக்கிரன் | 6 11 12 |
| சனி | 3 5 6 11 |
| லக்கின்ம் | 1 5 4 6 10 11 |

சமுதாயங்காணும்விதமெப்படி எனில் கீழ்கண்டவாறு ஓர் காகிதத்தில் அறைகள் வரைந்துகொண்டு கிரகங்களிருக்கும் ராசிகளுக்கேற்றவாறு எண்களையமைத்துக்காண்க விபரம் கீழ்வருமாறு.

### சமுதாயம் காணும் வகை
### சூரியன் அஷ்டகவர்க்கு பரல் 48-க்கு

| கிரகங்கள் | மேஷம் | ரிடபம் | மிதுனம் | கடகம் | சிங்கம் | கன்னி | துலாம் | விருச்சிகம் | தனுசு | மகரம் | கும்பம் | மீனம் | கூடு |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | ச | | | | சு அ சு | பு வி | ம | | | | | ல | |
| சூரியன் | I | I | I | — | 1 | I | — | I | — | — | I | I | 8 |
| சந்திரன் | — | — | — | I | 1 | — | — | — | I | — | — | I | 4 |
| குஜன் | I | I | I | | 1 | I | — | I | — | — | I | I | 8 |
| புதன் | — | I | I | I | 1 | — | — | I | — | I | I | — | 7 |
| குரு | — | I | — | I | 1 | — | — | — | — | I | I | — | 4 |
| சுக்கிரன் | — | — | — | I | — — | — | — | — | I | I | I | — | 3 |
| சனி | I | I | — | I | — — | — | I | I | I | I | I | — | 8 |
| லக்கினம் | — | I | I | — | | — | — | — | — | I | I | — | |
| ஆக | 3 | 6 | 4 | 5 | 5 | 2 | 1 | 4 | 3 | 5 | 7 | 3 | 48 |

| ல | சனி | | |
|---|---|---|---|
| | இராசி | | |
| | | | அ ச சூ |
| | | சந் | பு குரு |

| 4 | 5 | 9 | 4 |
|---|---|---|---|
| 6 | சமுதாய விபரம் | | 5 |
| 5 | | | 5 |
| 3 | 4 | 1 | 2 |

ஒவ்வோர் வர்க்கத்தாருக்கும் அதாவது பிதா மாதா சகோதரன் அம்மான் புத்திரன் களந்திரம் ஜாதகன் என்னும் வர்க்கத்தாருக்குரிய கிரகங்களான சூரியன் சந்திரன் குஜன் புதன் குரு சுக்கிரன் சனி என்னும் சப்தகிரகங்களின் அஷ்டவர்க்க சமுதாயத்தைக் கொண்டு பலன் சொல்லுவதெப்படி யெனில் சூரியனஷ்டகவர்க்கத்தால் ஜெனன லக்கின முதல் 9 இடமான பிதுர்லக்கினம் வரையிலிருக்கும் பிந்துகள் 30-க்கு குறையாதிருந்தால் பிதாவுக்கு கெண்டம் சம்பவிக்கும் உடலுயிராகிய இரண்டு ராசியிலும் ஏதேனுமொரு ராசியில் நான்கு பிந்துக்குக் குறைந்த பாலுடன் சூரியன் நீச்சமடைந்து இருப்பரேல் பிதாவுக்கு அரிட்டம் காட்டும்.

சந்திரஷ்டகவர்க்கத்தால், சந்திரனின்ற ராசியிலேனும் ஜெனன ராசிக்கு 4-ம் இராசியிலேனும் நாலுபிந்துகட்குக் குறைந்த பிந்துக்கள் இருக்குமாயின் அவன் மாதாவுக்கு அற்ப ஆயுளேயாம் சந்திர நின்றராசிக்கு 4-ஆம் இராசியில் எத்தனைபிந்துக்களிருந்தனவோ அவையே அவன் தாயுடன் பிறந்த சகோதரமாம்.

குஜன் அஷ்டகவர்க்கினுல் குஜன் நின்ற ராசிக்கு 3-ம் ராசியாதிபதி எவனோ. அந்த கிரகமிருக்கும் ராசியில் எத்தனை பிந்துகளிருந்தனவென்று பார்த்து அந்தந்த ஜாதகனின் சகோதர பலன்களைச் சொல்ல வேண்டும். பலன் சொல்லும் விபரம் 60-ம் பக்கத்தில் காண்க குஜன் நின்ற ராசிக்கு 3 ராசியில் எத்தனைப் பிந்துகளிருந்தனவோ அத்தொகையே அந்தந்த ஜாதகனுக்குச் சகோதர சகோதரிகளெனப்படும். அதனை ஆண் பெண் என்னும் கிரகங்களால் ஆண் எனவும் பிரித்துச் சொல்ல வேண்டும்.

புதன் அஷ்டகவர்க்கத்தால் புதனிருக்கும் நன்மை தீமை யறிந்தும் புதனின்ற ராசியிலேனும் அவன் நின்ற ராசிக்கு 4,ம் ராசியிலேனும் பிந்துக்கள் 3-க்குக் குறைந்திருக்குமா யின் தாய் மாமனுக்குக் கஷ்டம் நிஷ்டூரம் விருத்தி குறைவு முதலிய கொடிய பலனைக் காட்டும் இவை க்ஷேத்திரத்திற் கேற்றவாறு பிந்துக்களால் மதிப்பிட்டுச் சொல்ல வேண்டும்.

இவ்வாறே குரு, சுக்ரன், சனி, இவர்களுக்கும் அந்தந்த கிரகங்களிருக்குமிடத்திலும் சூரியனிருந்த ராசிக்கு 9, சந்திர னிருந்த ராசிக்கு 4, குஜனிருந்த ராசிக்கு 3 புதனிருந்த ராசிக்கு 5, குருவிருந்த ராசிக்கு 5, சுக்ரனிருந்த ராசிக்கு 7 சனி இருந்த ராசிக்கு 8. இந்த ராசியிலிருக்கும் பிந்துக்க ளால் கீழ்க்கண்டவாறு பலன் சொல்லுதல் வேண்டும்.

1. திரவியநாசம்
2. அவமானம் பீடை துவேஷம்
3. சஞ்சலம் வித்தை நாசம்
4. லக்ஷிமீகரம் காரியசித்தி

5. தனப்பிராப்தி விவாக சவுக்கியம்
6. வித்தை லாபம் லக்ஷிமி விலாசம்
7. ஐசுவரியம் அதிகலாபம் என்க,

## இவை திரிகோண மறியும் விபரமாகும்

திரிகோணம் என்பது சமுதாய சக்கரத்தைக்கொண்டே காணவேண்டியதாகும். திரிகோணம் என்ருல் மூன்று கோணங்கள் எனப் பெயர் பெறும். இதனுலேயே நமது நூலாசிரியரொருவர்,

உறுவதாடரிவின் மாடு பெண்கலை
யுற்றவியாழதுலை சாலளிதேன் கயல
செரிவதே திரிகோண விந்திற்சரி
சேரிகுமீட்கக் குறையிற் சரிசெய என்றனர்.

மூன்று கோணங்கள் என்னும் மேஷம் சிங்கம் தனுசு ரிடப கன்னியா மகரம் மிதுனம் துலாம் கும்பம் கடக விருக்ஷிகம் மீனம் இவைகளுக்கு இராசிகள் மூன்றிலும் ஒன்றிற் கொன்று பிந்துக்கள் ஏற்றக்குறைச்சலாக இருந்தால் குறைந்த பிந்தின்படி அதிகமிருக்கும் பிந்தை சரிசெய்ய வேண்டும். மூன்று இராசிகளிலும் பிந்துக்கள் ஏற்றக்குறைச் சலின்றி சரியாக இருக்குமாயின் மூன்று ராசியிலிருக்கும் பிந்தை எடுத்துவிடவேண்டும். ராசிகள் மூன்றினுள் ஏதேனு மொரு ராசியில் பிந்தில்லாமலும் அல்லது இரண்டு ராசியில் பிந்தில்லாதிருந்து ஓர் ராசியில் பிந்தில்லாதிருந்து அந்த மூன்று ராசியுமே சோதனை செய்யாமல் விட்டுவிட வேண்டும் எப்படி எனில் முன் கண்ட சூரியனஷ்ட கவர்க்கில் மேஷத் தில் 3, சிங்கத்தில் 4, தனுசில் 2 ஆகையால் தனுசு ராசியிலே பிந்துக்கள் குறைந்திருக்கின்றன. ஆகையால் தனுசிலுள்ள இருபிந்தைப் போலவே மேஷத்தையும்

சிங்கத்தையும் சரிசெய்ய வேண்டுமாயின் மேஷத்தில் ஒன்றும் சிங்கத்தில் இரண்டும் எடுத்து விடுவோமாயின் மேஷம் சிங்கம் தனுசு இம்மூன்றிலும் இரண்டிறண்டு பிந்துகளாகும் பிறகு ரிஷபம் கன்னி மகரம் இம்மூன்றையும் பார்ப்பேமாகில் ரிஷபத்தில் 6 கன்னியில் 2 மகரத்தில் 5 உள்ளன. இம்மூன்று ராசிகளினுள் கன்னி என்னுமிராசியில் பிந்து குறைந்திருக்கின்றன ஆனதால் ரிஷபத்தில் 4 மகரத்தில் 3 எடுத்து விடுவோமாயின் கன்னியிலும் இரண்டைப் போலவே மற்றிரண்டு ராசியிலும் இரண்டிரண்டாகும், இவ்வாறே மற்றுமுள்ள மிதுனம் துலாம் கும்பம் கடகம் விருக்ஷிகம் மீனம் இவற்றிற்கும் காண்க.

பிறகு திரிகோண பரஸேக் கொண்டே ஏகாதிபத்திய சோதனைச் செய்ய வேண்டும். ஏக ஆதிபத்தியம் என்றால் ஒரே ஆதிபத்யம் என்பது பொருள் இதனை.

> மறிதறிக்கான் மகஞ்சால் கன்னியாழ்
> மசிடு கோற்றனுன்சரி சோதனை
> கிரகராசியில் விந்துவை வைத்திடு
> கிளைத்த காரரினவயிதிற் கிட்டிடா

என்றபடி எதிரெதிர் உள்ள ராசிகளை சரி செய்வயே முறை எப்படி எனில் (மேஷம் விருக்ஷிகம்) (ரிடபம் துலாம் மிதுனம் கன்னி) தனுசு மீனம் மகரம் கும்பம் என்பவையே கடகம் சிங்கம் இவ்விரண்டையும் சோதிப்பதில்லை முன் சொன்ன இரண்டு ராசியிலும் கிரகமில்லாதிருந்து பிந்துக்கள் ஏற்றக் குறைச்சலாயிருந்தால் முன் சொன்னபடி குறைந்ததைப்போல் சரிசெய்ய வேண்டும் கிரகமில்லா திருந்து பிந்துக்கள் சரியாயிருக்குமாயின் எடுத்துப் போடவும் இரண்டு ராசியிலும் கிரகமிருக்குமாகில் பிந்துக்கள் இருந்தபடியே விட்டுவிட வேண்டும். ஒரு ராசியில் கிரக

மிருந்து ஒரு ராசியில் கிரகமில்லாவிடில் கிரகமில்லாதிருக்கு மிராசியிலிருக்கும் பிந்துக்களெல்லாம் எடுத்துப் போடவும் கிரகமிருக்கும் வீட்டில் பிந்து குறைத்தும் கிரகமில்லாத வீட்டில் பிந்து அதிகமாயுமிருந்தால் குறைந்தபடி சரி செய்யவும்.

ஏகாதிபத்திய சோதனையின் கருத்தென்னவெனில் மேஷம் விருக்ஷிகம் குஜனுக்கும் ரிடபம் துலாம் சுக்கிர னுக்கும் மிதுனம் கன்னி புதனுக்கும் தனுர் மீனம் குருவுக்கும் மகர கும்பம் சனிக்கும் ஆக்ஷி வீடாகையால் ஒரே ஆதிபத்தியர் எனவும் ஒருவர் வீட்டிலேயே பிந்துக்கள் குறைத்தும் அதிமாயுமிருக்கக் கூடாது எனினும் கிரக சேர்க்கையாயிருக்கலாம் என்றும் அதை கொண்டே பலன் சொல்லுதல் வேண்டும் என்பதுவாம் அதனுலேயே ஏகாதி பத்திய சோதனை எனவும் பெயராகும்

## இராசி குணகாரம் காணும் விதம்

கிட்டுமோரை குணகாரமாடு கோல்
கிளைக்கு மேழிலெரு தரிபத்தில் யாழ்
துட்டனெட்டளி நூல்கலை கன்னியுஞ்
சொல்லுமைந்து வில்லொன்பது கும்பமே
இட்ட பன்னொன்று முந்நான்கு மீனமே
யிருத்த விந்திவ்வடைவே பெருக்கியே
திட்டமாய்த் தொகையொன்ருக்கி நெஞ்சமே
தேசிகன் வீம நாதனைச் சிந்தியே

என்ற வாக்கியப்படி மேஷத்திலும் துலாத்திலுமுள்ள எண்களை 7-ல் பெருக்கியும் ரிஷபத்திலும் கடகத்திலும் உள்ள பிந்தைப் பத்தால் பெருக்கியும் மிதுனத்திலும் விரு க்ஷிகத்தினும் உள்ள பிந்தை எட்டால் பெருக்கியும் கடக

ராசியிலுள்ள பிந்தை 4--ல் பெருக்கியும் கன்னியிலும் மகரத்திலுள்ள பிந்தை 5-ல் பெருக்கியும் தனுசுவிருக்கும் பிந்தை 6-ல் பெருக்கியும் கும்பராசியிலிருந்த பிந்தை 12-ல் பெருக்கியும் மீன ராசியிலுள்ள பிந்தை 12-ல் பெருக்கியும் காண்பதே இராசி குணகாரமாம்.

## கிரக குணகாரம்

சிந்தையே விமநாத ரிருகணுஞ்
  செய்யாமல் கன்னிருந்தோரை விந்துவை
யைந்தினுர் பெருக்கிக் குசனெட்டினு
  லந்தணனெருபத்து நீரேழுகா
லிந்தக்கோளின் குணகாரம் ராசியி
  லெய்து மத்தொகை ஏகமாய்க் கூட்டியே
இந்த முன்னூற்றிருபத்து நாலினி
  லேற்றிமுன் னூற்றருபத் தைந்துக்கியே

(இ-ள்) கிரககுணகாரம் செய்யும் விதமெப்படி எனில் மேற்சொன்னயேகாதிபத்தியச் சக்கரத்யன் சூரியன் சந்திரன் புதன் சனி இவர்களிருந்த பிந்தை 5-ல் பெருக்கி போட்டும் குஜனிருந்த ராசி பிந்தை 8-ல் பெருக்கிப் போட்டும் குரு இருந்த ராசி பிந்தை 10-ல் பெருக்கியும் சுக்ரனிருந்த ராசிப் பிந்தை 7-ல் பெருக்கிக் காண்பதே கிரக குணகாரமாம்.

இப்பால் அஷ்டகவர்க்கைக் கொண்டு ஆயுள் சொல்லுவதெப்படி எனின் இராசி குணகாரம் கிரக குணகாரம் இவ்விரண்டிலுமுள்ள எண்களை ஒன்று கூட்டி, ஆக குண சமூகமெனக் காணவேண்டும். அதன் விவரமெப்படி எனில் இராசி குண கார்ரத்தில் மேஷமும் கிரககுணகார்ரத்தில் மேஷத்திலுமுள்ள பிந்தைக் கூட்டி ஆக குணசமூகத்தில் போடுவதே

யாம். இவ்வாறே ரிடபம் மிதுனம் முதலிய 12 ராசிகளையும் கூட்டிக் காண்க, ஆகுண சமூக பிந்தைக் கொண்டே வயது சொல்ல வேண்டும். எப்படி எனில்உதாரணம் பின் வருமாறு இதனை சூரியன் அஷ்டகவர்க்காக வைத்துக் கொள்வோம்'

| | | | |
|---|---|---|---|
| 2 | 4 | 5 | 3 |
| 4 | சமுதாயம் 48 | | 6 |
| 3 | | | 3 |
| 2 | 7 | 4 | 5 |

| | | | |
|---|---|---|---|
| 2 | 2 | 3 | 3 |
| 3 | திரிகோணம்–30 | | 4 |
| 3 | | | 2 |
| 2 | 2 | 3 | 3 |

| | | | |
|---|---|---|---|
| | 2 | | 3 |
| | ஏகாதி 12 | | 2 |
| | | | 2 |
| | | | 3 |

| | | | |
|---|---|---|---|
| | 14 | | 2 |
| | இராசி குணகரம் | | 8 |
| | | | 20 |
| | | | 15 |

| | 10 | | 15 | | 24 | | 89 |
|---|---|---|---|---|---|---|---|
| | கிரக குணாகாரம் | | | | இவ்விரண்டையும் கூட்ட ஏக சமூகம் | | |
| | | | 40 | | | | 60 |
| | | | 45 | | | | 60 |

| | | | |
|---|---|---|---|
| | ல சனி | ரா | சந் |
| | இராசி | | |
| | | | சூ அ சு |
| | கே | | பு குரு |

6-வது சக்கரமாக (ஆககுண) சமூகத்திலிருக்கும் எண்களை ஒன்று கூட்டியே ஆயுள் சொல்ல வேண்டுமெனக் கூறியபடி ஆககுண சமூகத்திலுள்ள எண்களை ஒன்ருய்க் கூட்டி அதை, 324-ஆல் பெருக்கி 365 பேருக்குப் பங்கிட்டு மிகுந்துள்ளதை 27 பேருக்கும் பங்கிட்டு அதில் மிகுந்துள்ளதை 12-ல் பெருக்கி 27 பேருக்குப் பங்கிட வேண்டும் மேலே 365 பேருக்குப் பங்கிட்ட மீதியை 27 பேர்க்கு பங்கிட வரும் வட்டம் வருடமெனவும் 27 பேருக்குப் பங்கிட்ட

மீதியை 12-ல் பெருக்கி 27-ல் வகுத்த வட்டம் மாதமெனவும் மிகுந்த சேஷத்தை 30-ல் பெருக்கி 27-ல் வகுத்த வட்டம் நாளெனவும், 60-ல் பெருக்கி 27-ல் கழித்த வட்டம் நாழிகை எனப்படும் மிகுந்துள்ளதை 60-ல் பெருக்கி மறுபடியும் 27-ல் வகுத்தது வினுடி எனவும் இவ்வாறே வருஷம் மாதம் நாள் நாழிகை வினுடி எனவும் காணவேண்டும். இப்படியே சப்த கிரக அஷ்டகவர்க்கையும் சோதித்து வரிசையாய் வைத்து அவரவர்கள் ஜாதக இராசி கிரகப்படி இரண்டு கிரகங்கள் சேர்ந்து ஓர் ராசியிலிருப்பாராகில் அந்த கிரகங் களுக்கு சொல்லியபடி கண்ட வருடம் மாதம் தினத்தில் அரை பாகம் தள்ளிப் போடவும். நீச்சமடைந்த கிரகம் எந்த கிரகமாயினும் அவர்களுக்குக் கண்ட வருடம் மாதம் தினத் தில் அரைபாகம் தள்ளியும், ஒரு கிரகம் பலமடைந்திருந்து அவனுடன் சேர்ந்த கிரகம் பலஈனமடைந்திருந்தால் அவர் களுக்கு உரிய வருடம் மாதம் தினத்தில் கழிக்க வேண்டிய தில்லை. கடக ராசியில் இரண்டு தினங்களிலிருந்தால் அவர்க் குரிய வருடம் மாதத்தில் அரை பாகமும் ஒரு கிரகமிருந்தால் மூன்றிலொரு பாகமும் பாவகோட்கள் பகை நீச்சம் பெற் றிருந்தால் 8-ல் ஒரு பாகமும் இவ்வாறே 7-கிரகங்களுக்கு கருத்துபோக மிகுதியுள்ளதை ஒன்று சேர்த்து காண்பதே அவனுக்குரிய ஆயுளாகும். இவ்வாறே (ஒவ்வொர் கிரகங் களுக்கும்) ஜாதகங்களுக்குங் கூட்டி அவரவர்கள் ஆயுள் விபரங்களைச் சொல்லுக.

## கண்டாதி கண்டமறியும்படி

இரவிக்குத் திரிகோண சோதனையும் ஏகாதிபத்திய சோதனையுமான பின்பு ஏகாதிபத்திய பிந்து மொத்தமுமறிந்து அவ்வெண்களை இரவி நின்ற ராசிக்கு 9-இராசியில்

இருந்த பிந்துவால் பெருக்கி 27-ல் வகுத்தது போய் மிகுந்துள்ள எண்களை ஜாதகன் ஜெனித்தபோது சுக்லபக்ஷமாயின் அஸ்வனி முதலும் கிருஷ்ணபக்ஷமாகில் அவிட்ட முதலும் எண்ணிக்காண்பதே கெண்டாதி நக்ஷத்திரம் இவ்வாறே சந்திரனஷ்டகவர்க்கு ஏகாதி பிந்தை சந்திரனின்ற ராசிக்கு நான்காமிராசியிலிருக்கும் பிந்தாலும் குஜன் அஷ்டவர்க்கு ஏகாதிபத்தியத்தை குஜனின்ற ராசிக்கு 3-ம் இராசியிலிருக்கும் பிந்தாலும் புதனஷ்டகவர்க்கை புதனின்ற ராசிக்கு 10-ராசியிலிருக்கும் பித்தாலும் குரு அஷ்டகவர்க்கை குரு நின்ற ராசிக்கு 5-ம் ராசியிலிருக்கும் பிந்தாலும் சுக்கிரனஷ்டகவர்க்கைச் சுக்ரனின்ற ராசிக்கு 7-ம் இராசியிலிருக்கும் பிந்தாலும் சனி அஷ்டகவர்க்கை சனி நின்ற ராசிக்கு 8-ம் ராசியிலிருக்கும் பிந்தாலும் பெருக்கி 27-ல் வகுத்து நின்ற சேக்ஷத்தை முன்சொன்னபடி கிருஷ்ணபக்ஷமாயில் அவிட்ட முதலாயும் சுக்லபக்ஷமாகில் அஸ்வனி முதலாயும் எண்ணி அந்தந்த நக்ஷத்திரங்களுக்குரிய ராசியிலும் திரிகோண நக்ஷத்திரம் திரிகோண ராசியிலும் சனி வரும்போது அந்தந்த வகையராக்களுக்கு கிரகங்கள் சஞ்சரிக்கும் காலம் வரையில் கெண்டாதி பீடை காட்டும். சுபகிரகங்கள் வாசம் செய்யும் காலம் நற்பலன் விளையும்.

திரிகோண நக்ஷத்திரங்கள் என்பது 11-ம் பக்கத்தில் காட்டியபடி ஒவ்வோர் கிரகத்திற்கும் யேகாதிபத்திய பிந்தை மேற்சொல்லியபடி கிரகம் நின்ற ராசிக்கு ஸ்தானங்கள் சொல்லியபடி சமுதாய பிந்தினுல் பெருக்கி 27-ல் கழிக்க வேண்டும்.

## சர்வாஷ்ட கவர்க்க மறிக

ஒவ்வோர் கிரகத்திற்கும் அவையாவன சூரியன் முதல் சனி வரையிலுள்ள 7-கிர்கங்களுக்கும் மேஷ ராசியிலுள்ள சமுதாய பிந்தை எல்லாம் கூட்டி சர்வ அஷ்ட கவர்க மேஷ ராசியிலும் ரிடப ராசியிலுள்ள பிந்தை எல்லாம் கூட்டிச் சர்வா அஷ்டகவர்க்க ரிடப ராசியிலும் இவ்வாறே மிதுனம் சிங்கம் கன்னி துலாம் விருக்ஷிகம் தனுசு மீனம் ஆகிய 12 ராசியிலுள்ள பிந்தைக் கூட்டிக் காண்பதேயாம். அப்படிக் கூட்டிக் காணும்போது 10 ராசியிலுள்ள பிந்தை விட 11-ம் ராசியிலுள்ள பிந்து உயர்ந்ததும் 11-ம் ராசியிலுள்ள பிந்தைவிட 12-ம் ராசியில் பிந்துக்கள் குறைந்துமிருந்தால் நல்ல யோக முண்டு. 12-ம் ராசி முதல் 3-ம் ராசி வரையில் கூட்டிக் கண்ட பிந்து அதிகமாகில் ஆதியிலும் 4-ம் ராசி முதல் 7-ம் ராசிவரையில் கூட்டிய பிந்து அதிகமாகில் மத்தியிலும் 7-ம் ராசி முதல் 12-ராசி வரையில் கூட்டிக் கண்ட பிந்து அதிகமாகில் கடைசியிலும் யோகமுண்டு. இன்னும் மற்றுமுள்ள விஷயங்கள் 2, 3-ம் பாகத்திலின்னும் விரிவாய்க் காணலாம்-

| சந்திரன் | அகரமானம் | சூரியன் | அகரமானம் |
|---|---|---|---|
| சித்திரை | 1 13 4 | 11 13 15 | 2 |
| வைகாசி | 7 9 11 | 19 21 22 24 | 3 |
| ஆனி | 12 13 14 | 24 25 24 | 4 |
| ஆடி | 14 13 24 | 24 23 22 11 | 5 |
| ஆவணி | 10 11 98 | 19 17 15 13 | 6 |
| புரட்டாசி | 8 6 4 3 | 11 8 5 | 7 |
| ஐப்பசி | 1 2 3 | 2 1 3 5 | 8 |
| கார்த்திகை | 6 7 4 10 | 6 8 90 | 9 |
| மார்கழி | 12 13 14 11 | 10 11 11 | 10 |
| தை | 14 13 12 | 11 9 8 7 | 11 |
| மாசி | 12 9 8 | 6 4 12 | 12 |
| பங்குனி | 7 5 2 | 2 4 9 10 | 11 |

## 27-நக்ஷத்திர தேவதைகள்

1 அஸ்வனி—சரஸ்வதி
2 பரணி—துர்க்கை
3 கார்த்திகை—அக்கினி
4 உரோகிணி—பிரம்மன்
5 மிருகசிரம்—சந்திரன்
6 திருவாதிரை—ஈஸ்வரன்
7 புனர்பூசம்—பலதேவதை
8 பூசம்—வியாழன்
9 ஆயில்யம்—ஆதிசேடன்
10 மகம்—சுக்ரன்
11 பூரம்—பார்வதி
12 உத்திரம்—சாத்தான்
13 அஸ்தம்—சூரியன்
14 சித்திரை—விஸ்வகர்மா
15 சுவாதி—லக்ஷிமி
16 விசாகம்—சுப்ரமண்யர்
17 அனுஷம்—வாயுபகவா
18 கேட்டை—தேவேந்தன்
19 மூலம்—அசுரர்
20 பூராடம்—வருணம்
21 உத்திராடம் – விக்னேச
22 திருவோணம் —விஷ்ணு
23 அவிட்டம் —இந்திராணி
24 சதயம்—இமயம்
25 பூரட்டாதி—குபேரன்
26 உத்ராடம் — காமதேனு
27 ரேவதி—சனிபகவான்

## ஆகர்ச பாதாள சுக்கிரன்

1 பிரதமை-இந்திரன்
2 துதியை-அக்கினி
3 திருதியை-இமயன்
4 சவுத்தி-நிருதி
5 பஞ்சமி-வருணன்
6 சஷ்டி-வாயு
7 சப்தமி-குபேரன்
8 அஷ்டமி-ஈசானியம்
9 நவமி-அசாகம்
10 தசமி-பூமி
11 ஏகாதசி-இந்திரன்
12 துவாதசி-அக்கினி
13 திரியோதசி-எமன்
14 சதுர்தசி-நிருதி
15 பூரணிமை-வருணன்

1 பிரதமை-வாயு
2 துதியை-குபேரன்
3 திருதியை-ஈசானியம்
4 சவுத்தி-ஆகாசம்
5 பஞ்சமி-பூமி
6 சஷ்டி-இந்திரன்
7 சப்தமி-அக்கினி
8 அஷ்டமி-இமயன்
9 நவமி-நிருதி
10 தசமி-வருணன்
11 ஏகாதசி-வாயு
12 துவாதசி-குபேரன்
13 திரியோதசி - ஈசானியம்
14 சதுர்தசி-குபேரன்
15 அமாவாசை-பூமி

## அங்கிச பலனை யறிய

### சூரியனங்கிசம்

ஆதித்தனங்கிசத் தானஞ்சாது வழி நடப்பான்
போதித்த தொந்தியுள்ளோன் பொய் சொல்லான் நடக்க வஞ்சான்
வேதிக்கும் குணத்தோனுவன் உத்தமன் மோகி சீமான்
வாதித்த வியாதியில்லான் வல்லவன் சிவப்பனுமே

### சந்திரன் அங்கிசம்

சந்திரனங்கிசத்தில் பிறந்தவன் பச்சை நரம்புகளை யுடையவனும் யானையைப் போல சிறுத்த விழிகளையுடைய வனும் தன்னை யடுத்தோரை மோசம் செய்யாதவனும். அழகிய கருத்து நீண்ட உரோமத்தையுடையவனும் சந்தோஷ வார்த்தைகளைப் பேச வல்லவனும், பல வார்த்தைகளை யுடையவனும் ஆவான்.

### குஜனங்கிசம்

செவ்வாயங்கிசத்தில் பிறந்தவன் முன்கோபியும் கடுமையான வசனங்களையுடையவனும் பயிர் செய்து ஜீவிப்போனும் சிவந்த சரீரமும் அடிக்கடி உண்பவன். தனக்கு தெரியாவிடங்களில் மறு உடையவன் அக்கினியிடம் பிரியமுடையவன், கொடிய சொற்களைப் பேசுபவன், அதிக நித்திரையாளனுமாவான்.

### புதனங்கிசம்

புதனங்கிசத்தில் பிறந்தவன் தருமம் செய்ய ஆசைபடுவோன் சங்கீதம் பாடவல்ல துணிவான். அவன் தெள்ளிய

செந்தமிழால் பேசவல்வன் சண்டை முகத்தில் புறங்காட்டி ஓடும் தன்மையில்லாதவன் யாவரையும் சமமாகவேப் பாவிக்க வல்லவன் நன்மையே செய்பவன் தனது பந்துக்களின் மேல் ஆசையதிகமுடையவன்.

## குரு அங்கிசம்

ஞானமார்க்கங்களை யறிய வல்லவன் அதிக புத்திர பேருடையவன் என்னும் நீராடப் பிரியமுள்ளவன் தனது காரியத்தில் மிக்க ஜாக்கிரதையோடிருப்பவன் மந்திரி தொழில் செய்பவன் நூதன காரியங்களை கண்டு பிடிப்பவன் நல்லொழுக்கமும் அறிவையு முடையவன் நீண்ட முகத்தை யுடையவன் என்றும் கூறுக.

## சுக்கிரனங்கிசம்

மந்திர தந்திரங்களை கற்பவன் பின்வருங் காரியங்களை முன்னறிந்து சொல்லுபவன் ஏதேனுமொரு காரியத்தை உத்தேசித்து குறித்த காலத்தில் நிறைவேற்றுபவன் எந்த காலத்தும் கடவுள் பக்தியை மறவாதவன், நன்மையை செய்ய ஆசைப்படுபவன் தனது சொந்த ஜனப்பிரிய முடையவன்.

## சனியங்கிசத்தில் பிறந்தவன் பலன்

அடிக்கடி பொய் பேசும் குணத்தன் போஜன மருந்து வதிலாசை யுடையவன் வறுமையுடையவன் கொடுங்கோபி வெட்டி பேசவல்லவன் எவருக்கும் தீங்கையே செய்ய விரும்புவான். பலவித விசாரங்களையுடையவன் என்றும் கூறுக.

## ஸ்வயாங்க லக்கினம்

ஜெனித்த ராசியை இரண்டு கூறிவிட்டு ஜெனன ராசி மேடம் மிதுனம் சிங்கம் துலாம் தனுசு கும்பம் என்னும் ராசிகளின் முற்கூறில் ஜெனிக்கில் இரவி எனவும், பிற்கூறில் ஜெனிக்கில் சந்திரனெனவுங் கொள்க. ரிடபம் கடகம் மகரம் கன்னி விருக்ஷிகம் மீனம் என்னும் ராசியாகில் முற்கூறு சந்திரனென்றும் பிற்கூறு சூரியனென்றுங் கொள்க.

## நவாங்கிச லக்கினம்

மேஷ முதல் மீனம் ஈராக எந்த ராசியிலுதித்தாலும் உதித்த ராசி நாழிகையை 9-கூறு செய்து ஜெனன ராசியில் சென்ற நாழிகை எத்தனைக் கூறு கழித்தனவென்றும் மீத முன் கூறு எத்தனை எனவறிந்து கடந்த நாழிகை வினுடிகளைக் கீழ்க்கண்டவாறு அறிக.

எந்த ராசியில் ஜெனனமானாலும் அதனை 9 குறியிட்டுக் காட்டும் ஜர்பிதா கீழ்கண்டவாரென்றறிக.



## நவாங்கிச லக்கினமறிய வேண்டிய சூக்ஷ்ம சக்கரம்

| நெ. | இராசியின் பெயர் | இராசிக் குறிய நாழிகை | | | 9 பேருக்கு பாகிக்க | ஒவ்வோர் பாகம் நா விநாடி | | | | விஷயம் |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | மேஷம் | 4 | வி | 15 | ஒவ்வொன்றையும் ஒன்பது பேருக்கு பாகிக்கவும் | 0 | 28 | ¼ | 1-16 | மேட முதலாக |
| 2 | ரிடபம் | 4 | ,, | 45 | | 0 | 34 | ½ | 1-8 | மகர முதலாக |
| 3 | மிதுனம் | 5 | ,, | 15 | | 0 | 25 | | | துலா முதலாக |
| 4 | கடகம் | 5 | ,, | 30 | | 0 | 36 | | | கடக முதலாக |
| 5 | சிங்கம் | 5 | ,, | 15 | | 0 | 35 | ½ | 1-8 | மேட முதலாக |
| 6 | கன்னி | 5 | ,, | 0 | | 0 | 32 | | | மகர முதலாக |
| 7 | துலாம் | 5 | ,, | 0 | | 0 | 36 | ¼ | 1-16 | துலா முதலாக |
| 8 | விருக்ஷிகம் | 5 | ,, | 15 | | 0 | 35 | ¼ | 1-16 | கடக முதலாக |
| 9 | தனுசு | 5 | ,, | 30 | | 0 | 36 | ½ | | மேட முதலாக |
| 10 | மகரம் | 5 | ,, | 15 | | 0 | 35 | | | மகர முதலாக |
| 11 | கும்பம் | 4 | ,, | 45 | | 0 | 31 | ½ | 1-8 | துலா முதலாக |
| 12 | மீனம் | 5 | ,, | 15 | | 0 | 28 | ½ | 1-16 | கடக முதலாக |

உதய ராசியில், ஜெனன காலங்களில் சென்ற பாகம் பங்கிட்டுக் காட்டியபடி எத்தனை பாகம் உள்ளன வென்றறிந்து கொண்டு, மேல்கண்ட சக்கரத்தில் விஷயமென்னும் கலத்தில் கண்டபடி எண்ணி அம்சா லக்கினம் காணவும்.

அம்சா கிரகம் எடுக்கும் அடைவுமுன் அங்கிச விபரம் காட்டியபடியே அஸ்வனி முதல் கிருத்திகை நான்கு பாதம் வரையில் 12 மாதங்களுக்கும் மேஷ முதல் 12-இராசி எனக் கொண்டு எந்தக் கிரகம் எந்த நக்ஷத்திரம் எத்தனையாவது காலில் நின்றனவோ அதனை மேற்கண்டவாறு அறிந்து 22-ராசிகளிலும் அடைத்துக் காணவும்.

## சோதிட விளக்கம்

மூலாதாரம் சுவாதிஷ்டானம் மணிபூரகம், அனுகதம் விசுத்தி ஆஞ்ஞை என ஆறுவகை ஆதாரங்களுக்கும் விநாயகர் பிரம்மா விஷ்ணு உருத்திரன் மஹேஸ்வரன் சதாசிவன் ஆகிய இவர்கள் அதிதேவதை எனவும் இவ்வகைப்பட்ட தேவதைகளுக்கே ஐம்பத்தோரக்ஷர மென்றும் உலக தத்து வார்த்தங்களை யறிந்த உத்தம சீலர்களாகிய மரிசீ புருகுச் சர்புகர் ச்வுனவர் காசிபர் இனர் வசிஷ்டர் கற்கர் எவுனர் ரோமர் பராசர் மநுநாரதர் வியாசர் போதகர் அங்கிராமர் அத்திரி முதலானோர்களும் அவரவர்கள் தம் தம் அறிவிக் கேற்றவாறு ஒராசானம் காலப்பிரகாசி பாகிதம் சவுரிய பாராக்கிரமம் சாப்ரவளி கிஷ்டணியம் சித்தர்ந்த வாக்கியம் பகிதம் நவநீதம் வாரா நீமாரை நவநிதியம் லீலாவதி ஜாதகம் ப்ாரிசாதம் வியோகாருணவம் யோகதமஞ்சரி ஞானப் பிரிதி சந்திராபரணவோரை முதலிய நூல்களும் குமார சுவாமியம் வீமேஸ்வர உள்ளமுடையாள் சாதக சிந்தாமணி சாதக அலங்காரம் துய்யகேரளம் மணிமண்ட கேரளம் முதலிய நூற்களையும் ஏற்படுத்தி அதினின்றும் ஆயுள் விபரங்களை நன்கு அறிவதற்கு சனி நின்ற தராதரத்தாலும் சந்திரனிருக்கும் தன்மையாலும் உதய ராசியின் சுபாசுபத் தாலுமே ஆயுள் நிர்ணயிக்க வேண்டுமென்று கூறியதோடு

ஜெனன காலங்களென்று கூறியதோடு ஜெனன காலங்களில் ஜல உதயம் சிர உதயம் பிண்ட உதயம் இவைகளையும் நன்கு அறிதல் வேண்டுமென கூறுகின்றனர். இதனை கற்றோர் எல்லா சாஸ்திர நூற்களையும் ஆருய்வதோடு ஜெனன கால நிர்ணயம் முக்கியமாக கவனித்த பிறகே யோகத்தைப் பற்றியும் ஆயுள் முதலியவைகளைப் பற்றியும் ஆருய்ந்து சொல்லுதல் வேண்டும். சிலருடைய கொள்கை என்னவெனில் மேஷலக்கின முதல் பாகத்தில் ஜெனித்தால் அவன் ஜெனித்த அடையாளம் கிழக்கு மேற்கு வீதி வீட்டிற்கருகில் ஜலத்தடாகமாவது நீரோடையாவது இருக்கும். ஜெனித்த வீட்டிற்கு இரண்டு பக்கத்திலும் சந்துவுண்டு. மேற்கு திசையில் கோவில் உண்டு என்ற அடையாளங்களைச் சொல்லி விடுவார்களேயாளுல் அந்த லக்கினமே நிச்சயமென நம்பி விடுகின்றனர். ஓர் லக்கினத்திற்கு நாலே கால் நாழிகைக்கு மேல் ஐந்தரை நாழிகை வரையில் ஒரே ராசி நடக்கும் என்பதை இப்புத்தகத்தின் மேல் 5½-க்குள் ஒவ்வோர் ஜாதம் எனக்கொள்வோமாளுல் உலகிற் பிறந்த ஆத்துமாக்கள் பலரில் ஒருவருக்கொருவர் உருவம் குணம் செய்கை வயது முதலியவைகள் பல விதத்தில் மாறுபடக் காரணமில்லை யாதலால் அநேக சாஸ்திர நிபுணர்கள் ஓர் விநாடிக்கு ஓர் ஜாதகமென வைத்துக் கொள்வோமாயின் உதயகாலத்தை சரியாய் நிர்ணயித்து பார்க்காமலுரைக்கும் சாஸ்திரங்கள் எவ்வாறு உண்மையாகுமென்பதை வாசகர்களே அறிந்துக் கொள்ளலாம் இதைக் கொண்டே சங்கரனவர் உமா மகேஸ்வரியை நோக்கி.

சந்திரன்பானி லக்கணமுங் கோளுநாளுந்
தயங்கி பக்கங்கரண மியோகம் வாரம்
வந்து சொல்லும் சோதிடத்தை யறியாதார்கள்
மன நினைவாயறியும் வகையுளதோவென்ன

என கூறியுள்ளோர் ஆனதால் உதய காலத்தை நன்கு நிச்சயிப்போமாயின் சோதிடம் பொய்யாது உண்மையாகும் உதயகாலத்தை நன்ருய் நிச்சயிக்க வில்லையேல் கால பலன்கள் குறித்த காலத்தில் நடவாது சோதிடத்தில் நம்பிக்கை இல்லாத மக்களும் தற்போது சுல்ப நம்பிக்கை யோடிருப்போர்க்கும் நாளடைவில் சோதிடமே பொய் எனக் குறை கூறுவர் என்பதையமில்லை. ஆனதால் சோதிடங் களில் முக்கியமாய் கவனிக்க வேண்டியது உதய காலம் சோதிட ஆசிரியருள்ளொருவரான அகஸ்தியர் கூறிய தாவது:

இடைவிட வேரே இல்லை
யேதேது பார்த்திட்டாலும்
அதையவர் நின்ற தீம்பு
அனைத்துமே மதியா லாய்ந்து
உதயமுஞ் சனிநின் ருேருக்
கொருவரை யூடு தாக்கிச்
சிதைபதம் சொல்லலாகும்
செகத்தினி லுதித்த பேர்க்கே,

என்று கூறியதால் நன்கு அறியலாம். அநேகர் ஆயுள் பாகம் சொல்ல சூரியனையும் சனியும் சந்திரனுமே முக்கிய மானவரென்று கூறியதன் காரணமென்னவென்று சந்தே கிக்கலாம். சூரியனுனவன் இவ்வுலகத்தில் வியாபார முற்ற வன். சுத்தமான வெண்ணிறத்தையுடையவன். ராசியில் ஸ்திரபுத்தியையுடையவன் சுழிமுனை அக்கினி முதலிய சகல

கருமங்களையும் அழிக்கும் பொல்லாதவன் கண்கண்ட தெய்வம் சந்திரனுனவன் குளிர்ந்த பிரகாசத்தை யுடையவன். நம் மனத்திற்கு சந்தோஷத்தையும், அறிவையும் விளைவிப்பவன் 15-நாளையில் வளர்ந்து மறு பதினைந்து நாளில் தன் உருக்களை குறைந்து காட்டுபவன் பரமசிவன் சிரசில் இருப்பவன் சனியோ இயமன் பிரம்மாதி தேவர்களையும் விடாது வாட்டுபவன் வைராக்கியம் உடையவன் ஆனதினுல்தான் இம்மூவரைப் பற்றியே வெகு முயற்சியாயும் ஜீவர்களுக்கு ஆயுள் நிர்ணயிக்கும் முக்கிய ஆதார வஸ்துக்கள் எனவும் சாஸ்திரங்கள் கூறுகின்றன. இப்படிப்பட்ட கோட்களினுலேயே சர்வ ஜீவர்களுக்கும் ஓர் எருதுக்கு மூக்குக் கயிர் கோத்து ஆட்டுவிப்பதுபோல நம்மோர்க்கு நன்மையும் தீமையும் விளைகிறதென்பதற்குச் சிறிதேனும் ஐயமில்லை என்பதை கற்றறிந்தோர் நன்கு உணர்வாராதலால் சிற்றறிவுடையோன் கூறுவது கடினமென விடுத்தனம் ஆனதால் மறுபடியும் யான் சொல்வதாவது ஜெனனுதய காலத்தை நன்கு நிச்சயித்தே பிறகே மற்றுமுள்ளவைகளை கவனிக்குமாறு தூண்டுகிறேன். இங்கு கெண்டாதி கெண்ட விஷயங்களை சில எழுதியுள்ளேன். மற்றுமுள்ளவைகள் இனிவரும் 2, 3, 4-ம் பாகத்தில் காண்க.

## கெண்டாதி கெண்டங்கள்

(1) ஒவ்வோர் ஜாதகர்களின் கெண்டாதி கெண்டங்களையறிய வேண்டில் ஜெனன ராசிக்கு 6-ம் இடமான ரோகஸ்தானுதி ஸ்புடத்தையும் 8-ம் இடமான ஆயுள் ஸ்தானுதிபதி ஸ்புடத்தையும் 12-ம் இடமான விறய ஸ்தானுதிபதியினது ஸ்புடத்தையும் கூட்டிக் காணும் ராசினேடு சனி குளிகன் இவர்கள் ஸ்புடத்தையும் கூட்டி 9-ல் பெருக்கிக் காணும் நவ

அங்கிச ராசியில் தினசரிப்படி சனி வாசகாலம் கெண்டம் செய்யும்.

(2) சனி குரு குளிகன் இம்மூவர்களின் ஸ்புடத்தை யும் 9-ல் பெருக்க மறுபடியும் 9-ல் வகுக்க காணும் ராசியில் சனி வருங்காலமும் கெண்டம் செய்யும்.

உடலாதி என்னும் சந்திரன் ஸ்புடத்தை 9-ல் பெருக் கிக் குளிகன் ஸ்புடத்தைக் கூட்டிக் கண்டதுதேகம், லக்கின ஸ்புடத்தை 6-ல் பெருக்கி குளிகன் ஸ்புடத்தைக் கூட்டிக் காண்பது ஜீவன், குளிகன் ஸ்புடத்தை 7-ல் பெருக்கி சூரியன் ஸ்புடத்தைக் கூட்டிக் காண்பது மிருத்து தேகத் திற்கு பிராணன் அதிகமாகில் அற்ப ஆயுள்.

| | | | |
|---|---|---|---|
| ,, | ,, | சமமாகில் | மத்திய வயது |
| .. | ,, | குறைந்திருக்கில் | தீர்க்க வயது |

சூரியன் 10-லும் குஜன் 4-லும் நிற்க அவன் மலைமேலேரி வீழ்ந்திறப்பான். சனி 4-லும், 8-ல் சந்திரன், 10-ல் குஜன் நிற்கில் கிணற்றில் வீழ்ந்திறப்பான். சூரியனும், சந்திரனும் கன்னியா ராசியிலும் அவர்களோடு சனி, இராகு, கேது நிற்க அவர்கள் பந்துவினுல் மரணம்.

மிதுனம், கன்னி, தனுசு, மீனம் இவ்விராசிகளில் சூரிய னும் சந்திரனுமிருக்கில் ஜலத்தில் மரணமடைவான்.

கடகத்தில் சனி, மகரத்தில் மதி, மீனத்தில் புதன் நிற்க கொடிய நோயால் மரணம்.

மகரம் கும்பம் கடகம் இவ்விராசிகளுக்குள் ஷ ஆக்ஷி நாதர்களோடு பாவகோட்கள் சகிதம் பெற அக்கினியால் மரணம்.

குஜன் 4-லும், 7-ல் சூரியனும் நிற்கில் இராஜாக்களால் மரணமடைவானென்று சோதிட வல்லோர்கள் கூறுவர்.

## நவகோட்களாலுண்டாகும் வியாதி

சூரியனுக்கு வயிற்றுவலி, அரையாப்பு, சொரி, சிரங்கு உஷ்ண சம்மந்த ஜாட்டியம்.

சந்திரனுக்கு அஜீரணம், சீதம், வயிர்போக்கு, உதிர சம்மந்த வியாதியுண்டாகும்.

அங்காரகனுக்கு வாந்தி, கிருணி, தலைவலி, மண்டையிடி.

புதனுக்கு கை கால் முடக்கலென்னும் வாய்வு சம்மந்த வியாதி, கழுத்தில் புண் உண்டாதல், கரங்களில் வாசையும் காட்டும்.

குருவுக்கு ரோகம் மர்ம ஸ்தான வியாதி, உதிரப் போக்கு, அரசர்களால் காயமுண்டாதல்.

சுக்கிரனுக்கு கட்டிப் பிளவை, (ஸ்ரீமூல நோய்) பெண்களாகில் புருஷநோய், ஒரு கண் வலி, சூலை நோய்.

சனிக்கு வாத ரோகம், சூலை நோய், க்ஷயம், எலும்புருக்கி நோய் முதலியவைகளாகும்.

இராகு கேதுகளுக்கு விஷம் புசித்தல், மயக்கம், பிசாசு பீடை, துற்பிணி இவ்வகளும் உண்டு.

கெண்டாதி கெண்டங்களை பற்பல விதமாக கூற வேண்டியதவசியம். அமாவாசையில் ஓர் குழந்தை பிறக்கில் அமாவாசை பிறந்த 10-நாழிகைக்குள் பிள்ளைக்கும் 11-க்கு மேல் இருபதுக்குள் மாதாவுக்கும் 20-க்கு மேல் 30-க்குள் பிதாவுக்கும், 30-க்கு மேல் 40-க்குள் அம்மானுக்கும் 40-க்கு மேல் 50-க்குள் ஜெனித்த பிள்ளைக்கும் தோஷமென்வும் வீமேஸ்வர உள்ளமுடையான் அரிஷ்ட படலம் 12-ம் செய்யுளிலும் இன்னும் அநேக நூல்லிலும் காணலாம். ஆயினும் மேற்சொன்னது பொது விஷயமேயாகும். அமாவாசை நக்ஷத்திரம் இவைகளால் கெண்டாதி கெண்

டம் கூறலாமாயினும் கிரக அடவியைக் கொண்டே அதன் நிலை கூறுவது முக்கிய கடமையாகும். கேரள சோதிடம் பிரதி அரிஷ்ட காண்டம் 40-ம் செய்யுளில் பூரண பலத்தி னேடு புண்ணியர் சுபமேயாகிற் காரணமில்லை. சாதகம் கணிக்கவே வயது முண்டு என்பதனுலரியலாம்.

பின்னும்,

சீரணமதியேயானுல் செல்வருந் தாழ்ந்து நிற்பர்
கூரணிப் பாபர்மேலாய் சொல்லுவர் கொஞ்ச நாளில்

என்றனர்.

ஆனதால் கெண்டாதி கெண்டர்களை பலவிதமாய் யோசித்துச் சொல்ல வேண்டும். அமாவாசை கெண்டம் நக்ஷத்திர கெண்டம் இவைகளை முதன்மையாக வைத்து மற்றுமுள்ள பாவகபடலத்தாலும் கால சக்கரம் திசை புத்தி அஷ்டவர்க்கம் இவைகளால் அவை நீங்கும் நீங்காதென் வும் நீங்கிவிடுமாயின் இன்னும் எத்தனை வருஷம் பூமியிலிருப் பான் என்று அறிவது சிலாக்கியம் இதற்காகவே.

ஜெகத்தினி லுதித்த பேர்க்கு
செல்வமும் பகையும் காண
மிகுத்ததோர் துயரந்தன்னின்
மிகயோக மதிப்புங்கண்டு
யுகத்தினி னடக்குங்கர்மம்
வேதனுண்டாக்கிச் சொன்ன
விதத்தினி லுள்ளபேர்க்கு
விவரமே தெரியச் சொல்வாய்.

எனவும் முன்னூர் கூறி இருப்பதை யறிகிரேும். இரவில் ஜெனித்தோர்க்கு சாராசிகளென்னும் மேஷம், கடகம், துலாம் மகரம் இவை பலமெனவும் பகலாகில் ரிடபம் சிம்பம் விருக்ஷிகம், கும்பம் என்னும் ஸ்திர ராசிகளே பலமெனவும் மாலை வேளையில் மிதுனம் கன்னி தனுசு மீனம் என்னும் உபயராசிகளே மிக்க பலமெனவும் சாஸ்திரங்கள் கூறுகின்றன. 2, 7-ம் இடங்களே முழுமாரக ஸ்தானமெனவும் சாஸ்திரங்கள் கூறுவதோடு பலராலும் சம்மதிக்கப்பட்டு இருக்கின்றன. ஒவ்வோர் ராசிக்கும் மாரகாதிபர்கள் முன் கூறிய பக்கத்திலுள்ளபடி எந்த மாரகாதிபர்களை நிலை கூறுவது எனப் பார்ப்போராயின் கிரகங்களிருக்கும் தராதரத்தினுலே அதனை நிலை கூறுவது அவசியம் உதாரணமாக மேஷ ராசிக்கு சனியும் சுக்கிரனும் மாரகாதிபர் சுக்கிரனுக்கு நேத்திர தோஷமின்றி 5-ம் இடங்களிலிருந்து குஜன் அல்லது சந்திரனுல் பார்க்கப்பட்டு இருந்தால் சுக்கிரன் கொல்வானென்பதை எவரும் சம்மதிக்க முடியாது. மற்றும் யார் கொல்வான் அவனுடைய அங்கிசம் பெற்றவர் அல்லது அவன் வீட்டிலிருந்தவர்கள் மேஷராசி யதிபதியை சேர்க்கையாலே பார்வையாலே அவன் வலுவை பறித்தவரே கொல்வார்.

பூசம், சித்திரை, பூராடம் இந்நக்ஷத்திரத்தின் மூன்ருங் காலிற் பிறந்தவனுக்கு உடனே கெண்டாதி தோஷமுண்டென்றும் உதய ராசிக்கு ரோகம் சப்தமம் அஷ்டமம் விறயமென்றும் 6, 7, 8, 12-ம் ராசிகளில் கிருஷ்ணபக்ஷத்துச் சந்திரனிருந்து அவனேடு சனி இராகு கேது இவர்கள் சேர்க்கையுற்றும் குரு புதன் சுக்கிரன் இவர்கள் பார்வை இல்லாமலும் 4, 8 என்னும் ராசிகளில் கொடிய கோட்களி

ருக்கவும் ஜெனித்த ஜாதகன், ஜெனித்த 5-ம் ஆண்டுகளுக் குள்ளிறந்து போவான்.

ஜெனன ராசியில் சுபகிரகமிருக்கிலும் தனுர் மீனத்திற் காக்ஷிநாதனுன குருவோடு சனி இராகு கேது இவர்கள் சம்மந்த முற்றிருக்க சூரியனின்ற ராசிக்கேழாம் இராசியில் புதன் நின்ற சுக்கிரனுக்கு ஆரும் ராசியில் ராகு விருக்க அவன் ஜெனித்த 16-வருஷத்திலிறந்து போவான் சூரியன் நின்ற ராசிக்கு அஷ்டம ஸ்தானத்தில் சந்திரனிற்கவும் ஆயுள் காரகனென்னும் சனி நின்ற ராசிக்கு 8-ம் ராசியி லும் குரு நிற்க ஷெ சந்திரனின்ற ராசிக்கு 7-ம் ராசியில் உதயாதிபதி நிற்கினும் அவன் ஜெனித்த 10½ வருடத்தில் இறந்து போவான்.

இவ்வாறு அற்ப ஆயுளுடையவனு அல்லது தீர்க்க ஆயுளுடையவனு என்று ஆருய்ந்த பிறகு பின் வரும் யோக படலத்திலுள்ளபடி யோக பாவங்களை யாருய்ந்து கிரகங் களுக்கு கேற்றவாறு பலாபலன் சொல்ல வேண்டும். இது வரை சொல்லி வந்த கெண்டாதி கெண்டங்கள் நீங்கும் நீங்காதெனவும் ஆருய்ந்தறிய வேண்டுமாதலால் இனிவரும் தோஷ நிவர்த்திப் படத்திஞல் அறிந்து அஷ்டகவர்க்கம் காலசக்கரம் முதலியவைகளாலும் திசை புத்தியாலும் அளவறிந்து கூறுக.

## பிதுரு கெண்டம் அறியும்படி

ஒன்பதாம் ராசியைக் கொண்டே பிதாவின் அந்தஸ்தும் குரு பலம் முதலியவைகளையும் ஆராய்ந்து கூறுதல் வேண்டு மென முன் கூறிய ஆரும் பக்கத்தில் காட்டியுள்ளோம். பிதுர் லக்கினத்திற்கு 8-ம் ராசி எந்த ராசியோ அவையே பிதுருவுக்கு ஆயுள் சொல்லும் க்ஷேத்திரமாகும், பிதுருகாரக ஞகிய சூரியனுக்கு 8-ல் சனி குஜன் நிற்கில் பிதா மரணம்

அந்த காலமறிய வேண்டில் எட்டாமதிபன் திசையில் மேற் சொன்ன சனி குஜன் இவர்கள் புக்தி வருங்காலங்களிலும் சனி குஜன் இவர்கள் திசையில் பிதுரு ஸ்தானத்திற்கு அஷ்டமாதிபன் புத்தியிலும் கெண்டம் செய்யும் பிதுரு ஸ்தானத்திற்கு 12-ம் ராசியிலும் இராகு நிற்கினும் பிதா மரணமென்பது சாஸ்திர சித்தம் அவை ராகு திசையின் தென்பதாம்.

சர ராசிகளாகிய மேஷம், மிதுனம், கன்னி, தனுசு, மீனம் என்னும் ராசிகளில் கொடிய கொட்கஙோடு பிதுரு காரனுகிய சூரியன் சகிதம் பெற்றிருப்பானேயாமானுல் அவன் பிதா விஷத்தையுடையதாகிய அரவத்தினுலாவது நஞ்சை புசித்தாவது ஆயுதங்களினுலாவது தன்னுயிரை மாய்த்துக் கொள்வான். மேற்சொல்லியவர்களை குஜன், முழு நோக்குடன் நோக்குவானுகில் அவன் பிதா அன்னிய தேசங்களிலே மரணமடைவானென்றும் கூறுவர்.

(பிதுருகாரனே) அல்லது ஸ்தானுதிபதியோ ஜெனன ராசிக்கு எந்த ராசியிலிருந்தாலும், அவனை இருபுறமும் கொடிய கோட்களாவது நீச்சம் பகைப் பெற்ற கிரகங்களா வது சூழ்ந்திருப்பாரேயானுல், அவன் பிதா கொடிய நோயா லும் துன்பங்களாலும் அவஸ்தைப்படுவதோடு சிரைவாசம் செய்பவனுகவுமிருப்பான்.

பிதுரு ஸ்தானுதிபதி அஸ்தமயமடைந்தும் பிதுருகாரகன் பகை க்ஷேத்திரங்களிலிருந்து சுக்கிரன், சனி இவர்களால் பார்க்கப்படும் பிதுரு ஸ்தானத்தை அஷ்டமத்திலிருந்த ராகுவால் பார்த்துமிருந்தால் அவன் பிதா இக்குழவி ஜெனித்த 3-வருஷத்தில் மரணமடைவான் என்றும் கூறுவர்.

சாதி அபிஷேகம்

நித்திய கிரகவேதை

| | | |
|---|---|---|
| சந்திரனின்ற நாளுக்கு | 7-ல் | செவ்வாய் |
| செவ்வாய்க்கு | 4-ல் | புதன் |
| புதனுக்கு | 5-ல் | குரு |
| குருவுக்கு | 6-ல் | சுக்கிரன் |
| சுக்கிரனுக்கு | 8-ல் | சனி |
| சனிக்கு | 9-ல் | சூரியன் |
| சூரியனுக்கு | 9-ல் | ராகு கேது |
| இராகு கேதுக்கு | 9-ல் | சந்திரன் |

தற்காலி கிரகவேதை

| | | |
|---|---|---|
| ரவி நின்ற நாளுக்கு | 15-ல் | கேது நிற்பதும் |
| கேதுவுக்கு | 18-ல் | புதன் நிற்பதும் |
| புதனுக்கு | 17-ல் | சனி நிற்பதும் |
| சனிக்கு | 12-ல் | குரு நிற்பதும் |
| குருவுக்கு | 12-ல் | இராகு நிற்பதும் |
| இராகுவுக்கு | 12-ல் | குஜன் நிற்பதும் |
| குஜனுக்கு | 12-ல் | சந்திரன் நிற்பதும் |
| சந்திரனுக்கு | 12-ல் | சூரியன் நிற்பதும் |

## நக்ஷத்திரங்களுக்குள்ள சமூகவேதை தக்ஷணவேதை வாமவேதை விபரம்

| இன்ன நக்ஷத்திரத்திற்கு | சமூகவேதை |
|---|---|
| அசுவனி | பூரம் |
| பரணி | உத்திரம் |
| கிருத்திகை | அஸ்தம் |
| மிருகசிரம் | சித்திரை |
| திருவாதிரை | சுவாதி |
| புனர்பூசம் | விசாகம் |
| பூசம் | அனுஷம் |
| ஆயிலியம் | கேட்டை |
| மகம் | மூலம் |
| பூரம் | பூராடம் |
| உத்திரம் | உத்திராடம் |
| அஸ்தம் | திருவோனம் |
| சித்திரை | அவிட்டம் |
| சுவாதி | சதயம் |
| விசாகம் | பூரட்டாதி |
| அனுஷம் | உத்திரட்டாதி |
| கேட்டை | ரேவதி |
| மூலம் | அசுவனி |
| பூராடம் | பரணி |
| உத்திராடம் | கார்த்திகை |
| திருவோணம் | ரோகணி |
| அவிட்டம் | மிருகசிரம் |
| சதயம் | திருவாதிரை |
| பூரட்டாதி | புனர்பூசம் |
| உத்திரட்டாதி | ஆயில்யம் |
| ரேவதி | மகம் |

| தக்ஷணவேதை | வாமவேதை |
|---|---|
| கேட்டை | ரோகிணி |
| மூலம் | மிருகசிரம் |
| பூராடம் | திருவாதிரை |
| உத்திராடம் | புனர்பூசம் |
| திருவோணம் | பூசம் |
| அவிட்டம் | ஆயில்யம் |
| சதயம் | மகம் |
| பூரட்டாதி | பூரம் |
| உத்திரட்டாதி | உத்திரம் |
| ரேவதி | அஸ்தம் |
| அசுபதி | சித்திரை |
| பரணி | சுவாதி |
| கார்த்திகை | விசாகம் |
| ரோகிணி | அனுஷம் |
| மிருகசிரம் | கேட்டை |
| திருவாதிரை | மூலம் |
| புனர்பூசம் | பூராடம் |
| பூசம் | உத்திராடம் |
| ஆயிலியம் | திருவோணம் |
| மகம் | அவிட்டம் |
| பூசம் | சதயம் |
| உத்திரம் | பூரட்டாதி |
| அஸ்தம் | உத்திரட்டாதி |
| சித்திரை | ரேவதி |
| விசாகம் | அசுபதி |
| அனுஷம் | பரணி |

குறிப்பு:- எந்த நக்ஷத்திரமாயினும் அந்த நக்ஷத்திரம் திற்கு நான்காவது நக்ஷத்திரம் வாமவேதை என்றும் 11-த் நக்ஷத்திரம் சமூகவேதை என்றும், 18-ம் நக்ஷத்திரம் தக்ஷிண வேதை என்றும் கொள்க. உதாரணம் மேல் காட்டியபடியாம்.

# கிரககாரக விபரம்

---

சூரியனுக்குறிய காரகம்
பருத்தசிரம்
சிலும்பினமயிர்
பைத்தியசரீரம்
பால் மிளகு
ரசவாத வேலை
மருத்துவம்
கோதுமை
ஒற்றைத் தலைவலி
ஆனை, சாதசிவம்
பஞ்சலோகம்
வலது விழி
பிரயாணம் செல்லல்
பகல் காலம்
சந்திரனுக்குரிய காரகம்
ஈஸ்வரி
அன்ன முண்ணல்
அஸ்வன்
தாயார்
உறங்குதல்
வெண்கலம்
உப்பளவர், கண்ணு
வெண்ணை
குடை அரி
பனிப் பயிர்
உப்பு
பருத்து மினைத்துமிருக்கும் சரீரம்
இடது விழி
உழவுத் தொழில்
நீர்வாழும் மச்சம்
பெண்களின் ஆடை
முத்துவர்க்கம்
அங்காரகனுக்குரியகாரகம்
சுப்ரமணியர்
விக்னேஸ்வரர்
துவரை
பவளம்
கோபத்துடனிருத்தல்
குலாலன்
கருமாரத் தொழில்
சண்டை செய்தல்
உதிரம்
கடன் வாங்கல் கொடுத்தல்
நாற்கால்களையுடைய
ஆட்டு வர்க்கம்
ருசியான பதார்த்தம்
ரசவஸ்து
புஷ்பங்கள்
காயமடைதல்
தூற்தேவதை
புதனுக்குறிய காரகம்
விஷ்ணு
ரதமோட்டி
அம்மான்
வித்தை
பச்சை
இளங்கன்று பிராணி
வைசியன்

தனுதிபதி
தூது செல்லல்
கணித வேலை
ரதம்
நூதன கதைகளை ஜோடித்தல்
காவியம் செய்தல்
கூத்தாடல்
சோரம்
தாசி மோகம்
கண்டித வார்த்தை
எல்லாமறிதல்
தரா
வெந்தியம்
குருவுக்குறிய காரகம்
புத்திரர்
சொர்னம்
தேன் வர்க்கம்
பசு வர்க்கம்
கடலை
ராஜாக்களி
புருடர்
திரண்ட பட்டம்
சீரகம்
வைடூரியம்
பிரம்மா
பிராமணன்
பரதேசி
சுக்கிரனுக்குறிய காரகன்
கீர்த்திப் பிறதாபம்
வீடு
பகலில் மாதுருகாரகன்
காசி
பசு
களத்திரம்
சிநேகர்
வாகனுதிகள்
சப்த பேரிகை
சங்கீதம்
நாட்டியம்
சந்தோஷம்
துவசம்
வெளிச்சம்
நாவிதர்
வாசனை திரவியம்
கட்டில் மெத்தை
சயன கூடம்
வெண்சாமரை
போகம்
அழகிய சிறுபிராயம்
மொச்சை, புளி
ஈயம்
தயிர், பால், அன்னம்
விகட வார்த்தை
ஆதரித்தல்
தேவலோக மாதர்
இலக்குமி
வெள்ளி
சனிக்குறிய காரகம்
மரவேலை செய்தல்
திருடன்
பூரணஜீவ ஆயுள்
ஜீவ வதை
எருமை
சிறைவாசம்

| | |
|---|---|
| நிசிகால பிதாகாரகன் | எள்ளு எண்ணெ |
| வெட்கமில்லாமை | இராகுவுக்குறியகாரகம் |
| வியாதி | திருடன் |
| பிரயோகஜனமில்லாத | படபடப்பு |
| இம்சை [வார்த்தை | அதிக பேச்சு |
| இரும்பு | சகல வேலெ |
| தொழிலாளர் | வேடத் தொழில் |
| அபகறித்தல் | பயந்த வித்தை |
| கடுகு | கேதுக்குறியகாரகம் |
| வயல் சூழ்ந்த நிலம் | கபடம் |
| நீலரத்தினம் | மோக்ஷம் |
| தீயத் தொழில் | விஷவாக்கு |
| அடிமைத் தொழில் | தைரியம் |

## யோகினி நிற்கும் திசை

| | | | |
|---|---|---|---|
| பிரதமை<br>நவமி | கிழக்கு | சதுர்த்தி<br>சஷ்டி | மேற்கு |
| ஏகாதசி<br>திருதிகை | தென்-கிழ | பூரணி<br>சப்தமி | வட-மேற் |
| திரியோதசி<br>பஞ்சமி | தெற்கு | தசமி<br>துதியை | வடக்கு |
| துவாதசி<br>சதுர்தசி | தென்-மே | அஷ்டமி | வட-கிழ |

இப்படி நிற்கும் திசை தீதாகையால் சுபகாரியங்கள் விலக்கப்படும். பின் புறமும் வலமும் நன்றெனக் கொள்க.

## தாது மூல ஜீவக்கோள்

| | | | |
|---|---|---|---|
| சந்திரன் | தாதுக்கோள் | சூரியன் | மூலக்கோள் |
| குஜன் | ,, | சுக்கிரன் | ,, |
| இராகு | ,, | புதன் | ஜீவக்கோள் |
| கேது | ,, | குரு | ,, |
| சனி | ,, | | |

## தாது மூல ஜீவராசிகள்

| | | | |
|---|---|---|---|
| மேஷம் | தாது | துலாம் | தாது |
| ரிடபம் | மூலம் | விருக்ஷிகம் | மூலம் |
| மிதுனம் | ஜீவன் | தனுசு | ஜீவன் |
| கடகம் | தாது | மகரம் | தாது |
| சிங்கம் | மூலம் | கும்பம் | மூலம் |
| கன்னி | ஜீவன் | மீனம் | ஜீவன் |

## கருவி விபரம்

1. சூரியன்
2. சனி
3. குஜன் ஒருவாய்
4. சுக்கிரன் கருவி
5. மதி
6. புதன் இருவாய்கருவி
7. குரு

## இரத்தின வர்க்கம்

| | | | |
|---|---|---|---|
| சூரியன் | சூரியகாந்தம் மாணிக்கம் | குரு | பொன் |
| | | சுக்ரன் | முத்து வைடூரியம் |
| சந்திரன் | சந்திரகாந்தம் வஜ்ஜிரம் | சனி | நீலம் |
| குஜன் | பவழம் | இராகு | கோமேதகம் |
| புதன் | மரகதம் | கேது | கோமேதகம் |

## உலோக விபரம்

| | | | |
|---|---|---|---|
| சூரியன் | பஞ்சலோகம் | சுக்ரன் | பொன் |
| சந்திரன் | ஈயம் | சனி | வெள்ளி |
| குஜன் | வெண்கலம் | இராகு | இரும்பு |
| புதன் | செப்பு | கேது | இரும்பு |
| குரு | தரா | | |

இவை தாதுவாய் வந்த கிரகங்களின் உலோகம்

| | | | |
|---|---|---|---|
| சூரியன் | மாம்பூ | சுக்ரன் | கிழங்குக் கொடி |
| சந்திரன் | ,, | சனி | பனை மஞ்சள் |
| குஜன் | சிறுதூது | இராகு | வெற்றிலை |
| புதன் | படரப்படுவன | கேது | முள்ளுடையது |
| குரு | புன்னை, கரும்பு | | |

இவை மூலமாய் வந்த கிரகங்களுக்காகும்

# நக்ஷத்திர நிகண்டு

அஸ்வனியின் பெயர்

1 பரி
2 மா
3 வாசி
4 புறவி
5 துகரம்
6 சென்னி
7 குதிரை
8 முந்நாள்
9 இரலை

பரணியின் பெயர்

1 தாழி
2 பூதம்
2 அடுப்பு
4 தராசு
5 கங்குல்
6 கிழவன்
7 சோறு

கிருத்திகையின் பெயர்

1 ஆரல்
2 அழல்
3 அழகி
4 அளகு
5 இருல்
6 அறுமீன்
7 ஆவி

உரோகணியின் பெயர்

1 அயநாள்
2 வையம்
3 பண்டி
4 தேர்
5 உருளை
6 சகடு
7 பாரு

மிருகசீரிடத்தின் பெயர்

1 ஐந்தானம்
2 மார்கழி
3 மதி
4 கேராளன்
5 நரிப்புரம்
6 மும்மீன்
7 தேங்காய்

திருவாதிரையின் பெயர்

1 இறை
2 செங்கை
3 யாழ்
4 வில்
5 மார்கழி

புனர்பூசத்தின் பெயர்

1 பிண்டி
2 கார்
3 தி ன்
4 மூங்கில்

5 மாலை
6 கரும்பு
7 ஆவணம்
8 விண்டம்
9 புனர்தம்

10 பாலை

பூசத்தின் பெயர்

1 குடம்
2 தரா
3 கொடிறு
4 தைலம்
5 மதி

6 குரு நாள்
7 காற்குளம்

ஆயில்லியத்தின் பெயர்

1 ஆரவினுல்
2 கௌவை
3 பாம்பு
4 பணி

மகரத்தின் பெயர்

1 முயற்சனி
2 வாய்க்கால்
3 வேட்டுவன்
4 எழிலி

5 ஏமலி
6 மாசி
7 கொடுநுகம்

பூரத்தின் பெயர்

துர்க்கை
நாவிதன்
எலி
இடைச்சனி

உத்திரத்தின் பெயர்

1 பாற்குனி
2 பங்குனி
3 கடைச் சனி
4 பாற்குளம்

அஸ்தத்தின் பெயர்

1 அங்கை
2 ஐம்மீன்
3 உத்தமன்
4 களிரு
5 நவ்வி
6 கௌத்துதவும்

சித்திரையின் பெயர்

1 கன்னி

2 ஆடை
3 ஆம்பன்
4 பயிறு
5 நெய்
6 மீன்
7 செல்வி

சுவாதியின் பெயர்

1 மரக்கால்
2 பதுமம்
3 தீபம்

விசாகத்தின் பெயர்

1 வைகாசி
2 முற்றில்

3 சுளகு
4 முறம்

அனுஷத்தின் பெயர்
1 புல்
2 தாள்
3 தேன்
4 பெண்ணை
5 பனை

கேட்டையின் பெயர்
1 வல்லாரை
2 வாளி
3 துடங்கொளி
4 ஒளி
5 நாழி

மூலத்தின் பெயர்
1 கொக்கு
2 தேட்கடை
3 ஆனி
4 குருகு

பூராடத்தின் பெயர்
1 குளம்
2 பொய்கை
3 வாவி
4 உடை

உத்திராடத்தின் பெயர்
1 ஊர்தி
2 மணி
3 தானம்
4 முடி

திருவோணத்தின் பெயர்
1 கோணை
2 கிரவணம்
3 உலக்கை

அவிட்டத்தின் பெயர்
1 புல்
2 பறவை
3 காக்கை
4 ஆவணி

சதயத்தில் பெயர்
1. சுண்டன்
2 குன்று
3 செக்கி

பூரட்டாதின் பெயர்
1 கொழுங்கோல்
2 நாழி
3 புரட்டை
4 ஞாளி

உத்திரட்டாதின் பெயர்
1 முரசு
2 வேந்தன்
3 அறிவன்

ரேவதியின் பெயர்
1 நாவிதன்
2 கடைமீன்
3 தோணி
4 மரக்கலம்
5 சூலம்
6 நாவாய்
7 கிரகநிகண்டு

(சூரியன் பெயர்)
1 பக்கரை
2 பரியேமூர்த்தி
3 பகவான்
4 பகுதி
5 என்றூம்

6 புண்டரீகன்
7 திவாகரன்
8 அருக்கன்
9 பானு
10 மார்த்தாண்டன்
11 ரவி
12 ஆதித்தன்
18 ஞாயிறு
14 அலரி

(சந்திரன் பெயர்)

1 பிறை
2 இந்து
3 சந்திரன்
4 சசி
5 சோமன்
6 மசிநாள்
7 கேழ்வன்
8 அம்புலி
9 நிலா
10 திங்கள்

அங்காரகன் பெயர்

1 சேய்
2 நிலமகன்
3 அங்குசன்
4 தீ
5 ஆரல்
6 பூமன்
7 வக்கிரன்
8 குருதி
9 செவ்வாய்

புதன்பெயர்

1 கணக்கன்
2 புந்தி
3 மதிமகன்
4 அருணன்
5 மால்
6 புலவன்
7 தூதன்
8 மேதை
9 போறையன்
10 சாமன்

குருவின் பெயர்

1 பொன்
2 சீவன்
3 பீதகன்
4 இறைவன்
5 பார்ப்பான்
6 மந்திரி
7 வியாழம்
8 அந்தனன்

சுக்கிரன் பெயர்

1 புகர்
2 பிருகு
3 சுங்கள்
4 வெள்ளி
5 சிதன்
6 மழைக்கோன்
7 பாற்கவன்

சனியின் பெயர்

1 முதுமகன்
2 முடவன்
3 நீலன்
4 பங்குகாரி
5 கரியவன்

6 கதிர் சேய்
7 மந்தன்
8 சுள்

இராகுவின் பெயர்
1 கரும் பாம்பு
(கேதுவின் பெயர்)
1 செம் பாம்பு

## ஸ்தான வியல்பு

| | |
|---|---|
| கேந்திரம் | 1, 4, 7, 10 |
| பனபரம் | 2, 5, 8, 11 |
| ஆபோக்லிபம் | 3, 6, 9, 12 |
| திரிகோணம் | 5, 9 |
| உபஜெயம் | 2, 6, 10, 11 |
| மறைவு | 6, 9, 12 |

## அவயங்களின் பின்னம்

1. சந்திரன் உச்சம் பெற்றிருக்க இரண்டாம் ராசியில் எட்டாம் வீட்டோனிருக்க 2, 3, 5, 9, 12-ல் சனி, இராகு, கேது இவர்களிருக்க இம்மூவரும் நின்ற ராசிக்குடைய கோட்களும் பலவீனம் பெற லக்னுதிபதி நின்ற ராசிக்கு 5-ல் கேது நிற்க—ஊமையாய் ஜெனிப்பன்.

2. விருக்ஷிகம் நாலாங்கால் ஜெனனமாக அவ்விராசி யில் பாவகோளிருக்க சேய் சனி சந்திரன் இவர்கள் கூடி இருக்க—குறளுருவமாய் ஜெனிப்பன்.

3. லக்கினுதிபதிக்கு 5, 8-ல் சனி நிற்க, சனி நின்ற ராசிக்கு 12-ம் ராசி ஜெனன ராசியாக 12-ல் செவ்வாய் நிற்கிலும், மீன லக்கினமான ஜெனித்தோருக்கு சனி சந்திரன் கூடி இருக்கினும் ஜெனன நட்சத்திரம் ஆயிலியமாக லக்கி னத்தில் கேது நிற்க—முடமாய்ப் போவரன்.

4. குரு புதன் சந்திரன் இவர்கள்கூடி ஓர் ராசியிலிருக்க (அல்லது) ஜெனன ராசிக்கு 5-ம் ராசியிலிருக்க 5, 8-ம் ராசியில் இராகு நிற்க லக்கினத்தில் சந்திரன் நிற்கினும் 3, 11-ல் சனி ராகு நிற்கினும்—செவிடாகப் போவான்.

5. மகர ராசி ஜெனன ராசியாக அவ்விராசியில் சனி சந்திரன் செவ்வாய் இவர்கள் கூடி இருக்கப் பிறந்தவன்—கூனுடையவனுவான்.

6. கடக ராசியில் ஜெனனமாக சந்திரனை, குஜனும் சனியும் சேர்ந்து நோக்கினுலும் மேற்படி சந்திரனேடு சகிதம் பெற்று நிற்கினும்—கூனுடையவனுவான்.

7. மேட ராசியில் ஜெனிக்கில் மேட ராசியில் சனி நிற்க அல்லது 4-ம் ராசியில் புதனிருக்க—குறளுருவமாம்.

8. உத்திர நக்ஷத்திரத்தில் ஜெனிக்க ஜெனன ராசி எந்த ராசியானுலும் அவ்விராசியில் சுக்கிரனிருக்க—மூடவனுவான்.

9. சுக்கிரனேடு சந்திரன் கூடி இருக்க ஜெனன ராசிக்கு இரண்டாம் வீட்டுக்குடையவன் ஜெனன ராசிக்கு சேர குஜன் சனி இவர்கள் பார்த்தாலும் கார்த்திகை மூலம் இந் நாட்களில் கேதிருந்தாலும், ரேவதி, பரணி, ஆயிலியம், பூசம், சித்திரை, சுவாதி இந்நாட்களில் சனி நிற்கினும் மேற்சொல்லிய கோட்கள் 2, 6, 8, 12-இவ்விராசிகளிருக்கினும்—கண் குருடாவான்.

10 ஜெனன ராசிக்கு 1,2,7,8 முதலிய ஸ்தானங்கள் ரிடபம் சிங்கம் கும்பமாக அவ்விராசிகளில் ஒன்றில் சூரியன் கொடிய கோட்களுடன் கூடியிருக்க மேற்சொன்ன ஸ்தானுதிபதிகள் 8-ம் இடத்திலிருக்க—வலது விழியை இழப்பான்.

11. 1, 6, 7, 12 முதலிய ஸ்தானாதிபதிகள் மறைந்திருக்கின் அந்த ஜாதகன் —இடது விழியையும் இழப்பான்,

12, இரண்டாம் ராசிநாதன் ஜெனன ராசியிலிருக்க, சூரியன் சிங்கராசியில் ஆக்ஷிபெற அவனை பாவகோட்கள் பார்ப்பரேல் —மாலைக்கண்ணுலான்

13. லக்கினம் மேடராசியாக சூரியன் சந்திரனோடு பாவகோட்கள் கூடி இருக்க குஜனுல் பாக்கப்பட்டால்— சேய்படலக்கண்ணென்ப

சனி பார்க்கில்—கரும்படலைக் கண்
சுக்கிரன் பார்க்கில்—பூம்படலைக் கண்

இரவியுடன் சந்திரன் சேர்ந்து க்ஷீணம்பெற—காவருந்துப்போம்.

அமாவாசை தோஷம் பின் வரும் பக்கம் பார்க்கவும்.
மதியுடனே கேது நிற்கில்—தலையறுந்துப்போம்.

12-இராசியில் சூரியனும், சந்திரனுமிருந்து நீச்சம் பகைப்பெற்றுமிருந்தால் மத்தியவயதில் இரண்டு கண்களும் மத்திபமாம்.

இரவிக்கு வலது கண்ணென்றும் சந்திரனுக்கு இடது கண்ணென்றும் சரஸ்திரங்கள் கூறுகின்றன. விழிகளின் பின்னங்களை மேற்சொன்ன கிரகங்களையோ ஸ்தானங்களையே, குரு பார்க்காதிருக்கில் கட்டாயமாய் கண் குருடாவானென்றும் ஷ குரு நோக்கில் திசைக்கேற்றபடி சில நாட்களிலிருந்து நீக்குமென்றும் கூறவேண்டும்.

ஓர் ராசியை அறுபதாகப் பகிர்ந்து சஷ்டியாம் சமமென்றும் பெயர்ஒன்றைராசியாயின் ஜெனன ராசிக்கு நேராயும்

இரட்டைக்கு விகிர்த்தமாயும் நடத்துவது முறையாகும் சஷ்டியாம்சம் பெயர் கீழ் வருமாறு:-

| | | | |
|---|---|---|---|
| 1 | கோரம் | 31 | சனிசுதம் |
| 2 | இராக்கதம் | 32 | பவாத்தகம் |
| 3 | தேவம் | 33 | அக்கினிகோரம் |
| 4 | குபேரம் | 34 | எமகண்டம் |
| 5 | இராகதயோகம் | 35 | சுதம் |
| 6 | கின்னரம் | 36 | அமிர்த பூரணம் |
| 7 | இட்டகுலகோபம் | 37 | சத்திரம் |
| 8 | விஷம் | 38 | மதிமயக்கம் |
| 9 | அக்கினி | 39 | சௌபாக்கியம் |
| 10 | அகளங்கம் | 40 | குலநாசம் |
| 11 | மாயாந்தம் | 41 | முக்கியம் |
| 12 | பிரேத புரிபாவம் | 42 | வங்கிசநாசம் |
| 13 | அதிதேவன் | 43 | உத்பாதம் |
| 14 | கணேசம் | 44 | காலரூபம் |
| 15 | காலம் | 45 | சௌமியம் |
| 16 | சர்ப்பம் | 46 | மிருதம் |
| 17 | அமிர்தம் | 47 | சுசிதளம் |
| 18 | அபிரேமம் | 48 | மிரம்தி |
| 19 | கிருது | 49 | திவா |
| 20 | கோமடம் | 50 | சந்திரமுகம் |
| 21 | பிரபலம் | 51 | பிரதக்ஷணம் |
| 22 | சுவாசம் | 52 | காலாக்கினி |
| 23 | ஈசம் | 53 | தண்டம் |
| 24 | வாகீசம் | 54 | நிருமலம் |
| 25 | திகம்பரம் | 55 | சுபம் |
| 26 | தேவேந்திரம் | 56 | அசுபம் |
| 27 | கவிதை | 57 | அதீதம் |
| 28 | நாசம் | 58 | பயோதசி |
| 29 | பூபதி | 59 | சுழல் |
| 30 | கமலம் | 60 | சந்திரதேகமாம் |

மேற்சொன்னபடி ஜெனன ராசியை அறுபதாக பங்கிட்டு எந்த பாதத்திலுதித்தானோ அந்த எண்ணின்படி மேல் காட்டிய யோகப் பெயர்களைக் கண்டுக் கொள்க.

## கிரக அவஸ்தை

ஒவ்வொரு ஜாதகத்திற்கும் அமைந்துள்ள கிரகங்களுக்கு அவர்கள் ஏறிய நக்ஷத்திர பாத சாரப்படி வாலிபமென்றும் குமாரமென்றும் விருத்த பருவமென்று போஜன கெமன ராஜ்ஜிய நித்திர மிருதமென பிரிக்கப்பட்டுள்ளன. அவற்றுள் போஜன காலமாகில் நிற்சன போஜனம் அன்ன சுயம் பாகம் உறவினரோடுண்டு மகிழ்தல் இஷ்டமான அன்னங்களையுண்டு களித்திருத்தல் சவுக்கிய போஜனமென்றும் கூறுவர்.

(கேமனு) காலமாகில் சஞ்சாரம் வெகுவாகனம் தீர்த்த யாத்திரை இடம் விட்டுப்பேருதல் கலியாண விஷயமாய் அன்னிய கிராமங்களுக்குச் செல்லல் வாகனங்கள் பூட்டிய சாரதி மூலமாய் யாத்திரை வாசம் செய்தல் முதலியவைகளும்.

(இராஜாதி பத்தியமாகில்) ஓர் தேசத்திற்காவது கிராமத்திற்காவது, (அ) ஓர் வீட்டிற்காவது அதிபதியாகுதல் பற்பல பண்டு பண்டாரங்களைச் சேர்க்குதல் யானை குதிரை முதலிய வாகனங்களை யடைதல் மன சந்தோஷமாய் இருத்தல் முதலியவைகளும்.

(நித்திரை காலமாகில்) மனைவியால் வியாகூலமும்எந்த நேரமும் மயக்கம் சோம்பல் நித்திரையும் மனைவி மூலமான்

சந்தேகம் பயம் முதலியவைகளும் சயன மூலமான சந்தோஷங்களும் அன்னிய தாரங்களையோ (அல்லது) ஸ்ரீகளையோ சேர்தலும் உண்டாகும்.

(மிருதகாலமாகில்) திரேக நலி ஜாட்டியம் கவன பிழை ஆபத்துண்டாகுதல் இராஜாக்களால் தொந்தரவு தண்டனை யடைதல் விஷந்தீண்டல் விஷப்பிணி கருவிகளால் காயமும் போகமும் உண்டு.

குறிப்பு:- இதனுல் ஒவ்வொர் கிரகங்களுக்கும் 5 பருவம் உண்டென ஏற்படுகிறது. ஆகையால் அப்பருவங்களை நக்ஷத்திர பாதங்களாலும் கலைகளாலும் பகிர்ந்து எந்த பாதமெனத் தெரித்து பாதத்திற்கேற்றவாறு மேற்சொன்ன போஜனகெமனு இராஜாதி நித்திரைமிருகமெனக் கொண்டு பலன் சொல்லுக. இவை திசை புத்தி காலங்களிலும் ஏற்றவாறு பலன் சொல்லலாம்.

## யோக விவரம்

காடே வீடாகக் கொண்டு காமம் குரோதம் லோபம் மோஹம் மதம் மாச்சர்யம் முதலியவைகளையும் கள் காமம் பொய் கொலை களவு முதலிய பஞ்சமாபாதகங்களையும் அடியோடு அகற்றி மழை வெய்யில் பனி முதலியவைகளைப் பொருட்படுத்தாது எந்நேரமும் குருதேவ சகாயமென்னும் திருநாமத்தையே பாராயணம் செய்து வாசனைக் கமழா நின்ற செவ்வாம்பலைப்போல் அழகிய திருவாயையுடைய சிவசுப்ரமண்யக் கடவுளால் பூமியிலுதித்த் மானிடர்கள் யோகங்கள் என்னென்னவென்று கேட்க சிவசுப்ரமண்யர் திருவாய் மலர்ந்தருளியதாவது பரிசுத்தர்களே பூமியில் உதித்த மானிடர் புண்ணியாத்துமாக்கள் அருக்கன்மண்டல

மார்கமாய் மோக்ஷமடைவாரென்று பாபர் ஆத்துமாக்கள் சந்திரமண்டலமார்க்கமாய் சென்று மறுஜெனனமாகி பூமி யிலுதித்த போதும் அவரவர்கள் வினைக்கேற்றவரே நவ கோட்களால் பலனை யனுபவிப்பார் என்று கூறியதோடு யோகங்களில் பற்பல யோகமுள்ளன அவையாவன.

பிரம்மயோகம் விஷ்ணுயோகம் உருத்திரயோகம் அம் கிகாயோகம் லாவண்யயோகம் சற்பயோகம் கெந்துருவ யோகம் மிருகயோகம் தூமயோகம் சித்திரயோகம் தீபயோ கம் சண்டிதாயோகம் கார்முகயோகம் சடாமகுடயோகம் வீணையோகம் இராஜயோகம் அறுவகை இராஜயோகம் நக்ஷத்திரயோகம் பாசகயோகம் மீன்யோகம் ஜலயோகம் கேதராயோகம் பூதலயோகம் அன்குவியோகம் அசுரயோக கஜயோகம் மாரியோகம் தண்டயாகம் ரிஷபயோகம் சக்கர யோகம் கந்துகயோகம் சரயோகம் சந்திரகாயோகம் மேக யோகம் வாவியோகம் பூதரயோகம் தந்துயோகம் சாப யோகம் புடவுயோகம் நாபியோகம் விநண்டயோகம் புஷ்ப யோகம் சுபயோகம் அசுபயோகம் வேதாந்தயோகம் கிரீட யோகம் சுவாசயோகம் பத்திரயோகம் காமினியோகம் இந்திரயோகம் மிருகயோகம் கருடயோகம் பசுயோகம் நர்மதயோகம் சரஸ்வதி யோகம் சண்டயோகம் இரஸயோ கம் சேஷயோகம் சமுத்திரயோகம் கனயோகம் மாதாள யோகம் சாஸ்திரயோகம் வசனயோகம் அக்ஷயோகம் ராசி காயோகம் கர்ணயோகம் ருசகயோகம் பத்திரயோகம் அங்கிசயோகம் மாளவியோகம் சகசயோகம் கடகயோகம் மிருதங்கயோகம் லக்ஷிமியோகம் சங்கயோகம் கூர்மயோ கம் சாரதயோகம் ஏர்காளயோகம் இருவகைக்கானயோகம் பேரிகையோகம் சாமரையோம் கமலாயோகம் திரிமூர்த்தி

யோகம்பரமானந்தயோகம் பருப்பதமோகம், மச்சயோகம்' இகரமா லிகாயோகம், வாசியோகம், வேசியோகம், உபசரி யோகம் அபையோகம்' சுபயோகம், துருதுரையோகம். கெசகேசரியோகம், நீசபங்கராஜ யோகம், கோளகை யோகம் பூரையோகம் சூலயோகம் கேதாரயோகம் சாமன்னிய யோகம் கிரியோகம் உச்சயோகம், தடாகயோகம் பாரண யோகம், வச்சிரயோகம், சமுத்திரயோகம், ஞானயோகம் முயல்யோகம் சக்கரயோகம் எனவும் இன்னுங் பற்பல யோகங்களுமுண்டு எனவும், இவ்வாறு பலபெயர்களைக் கொண்ட யோகங்களையே முன் சொன்னபடி அவர்வர்கள் வினைக்கேற்றவாறு ஒவ்வாறுயோகத்தை அனுபவிப்பார்களென்றும், எவ்வித யோகங்கள் வரினும். 3,4,7,8,9,10, 11,12,13,14,15,16,17, வருஷம் வரையிலிருத்குமென்றும் எவ்விதயோகம் வரினும் 3வருஷங்களுக்கு குறையாதிருக்குமென்றும், பிருகபானி அருளிபடியே, எத்தயோகம் மானிடர்களுக்குச்சித்திக்குமென்று சாஸ்திரங்களில் கூறியபடி நாம் ஓர் ஜாதகத்தைப் பார்த்து குருவும் சந்திரன் ஓர் ராசியிலிருந்தால் குரு சந்திர யோகமென்றும் அதன் பலன் மேதாவி உற்சாகி பலராலும் போற்றப்பட்டவன், புஷ்பக் கட்டிலினுறங்குபவன் என்றும் அளவிட முடியாத யோகம் உண்டாய்விடுமென்று வர்ணித்துவிடுவது மித்க தவரேன்பதை அறிவிப்பதோடு ஜோதிடர்கள் முதன் முதலாக ஜாதகம் எழுத ஆரம்பிக்கும்போது.

ஜனனமே ஜென்ம சவுக்யானும் வர்த்தனிகுல

சம்பதாம் பதவிபூர்வ புண்யானும், எழுதிய பிறகே மற்றுமுள்ள விஷயங்களை எழுதுவது சகஜமாயிருப்பதால் மேற் சொன்ன செய்யுளின்கருத்தென்னவென்று ஆராய்ந்து பார்க்கும்போது எவ்விதமான யோகம் வரினும் அவனவன் புண்ணியம் அல்லது பாவத்திற்கேற்றவாரே பலனையனுப

விப்பார்களெனத் தோன்றுகிறது. ஓர் பரம ஏழையின் குடும்பத்தில் முன்சொன்ன யோகங்களில் ஒன்ருன லக்ஷிமி யோகத்தில் ஜெனித்ததாக வைத்துக்கொள்வோம். அப் போது, அவன் என்ன பலனையனுபவிப்பான் பரம ஏழை யாகிய உண்ணவும், உடுக்கவும் வழியில்லாதவன் சிவசுப்ர மண்யக் கடவுள் கிருபையால் உண்ணவும் உடுக்கவும் குறைவின்றி இருப்பானேயொழிய ஓர் தேசாதிபதியாய் வருவதுஆயிரத்திற்கொருவரேயாகும். ஆதலால்சோதிடர்கள் முன்சொன்ன யோகத்தின்படி கிரக வரிசையால் ஆராய்ந்து யோகத்திற்குத் தக்கவாறு பலன் சொல்லவேண்டும், இந்த யோகங்களைப்பற்றிய விவரம் பின்வரும் 99-ம் பக்கத்தில் சில யோக விவரங்களைப்பற்றியே கூறியுள்ளேன். ஆகை யால். மற்றுமுள்ள யோகங்களைப்பற்றி 2, 3 பாகம் பார்க்கவும்.

## யோகம் பாவம்

ஜெனன லக்கினுதிபதி நான்காம் வீடாகிய சுகஸ்தான மும், ஆக்ஷீயாகிய கோட்களும், ஜெனன ராசியில் சந்திர னும், 8-ம் வீட்டோன் உச்சம் பெற்று இருந்தால் அவனு தித்த 12 வருடத்திற்கு மேலும் 30 வருடத்திற்கு மேலும் சகலவிதமான செல்வமும் உடையவனுகி சவுக்கியத்தோடு இருப்பானென மூன்ரும் பிரைச்சந்திரனையொத்த புருவத் தையும் கருத்த புருவமுடைய கண்களென அனைவரும் புகழத்தக்கப் பெண்ணே கூறுவாயாக

ஒன்பதாமிடத்தோனுன பாக்ய ஸ்தானுதிபதி மரவிட மென்னும் மூன்ரும்ராசியிலிருக்க அதனை குருபார்க்கஅதனை சர்ப்பயோகமென்றும் கூறுவர் அவற்றின்பலனைச்சொல்லு மிடத்து இன்பத்தைத் தரத்தகும் அவனுதித்த வருடம்

6-க்கு மேல் மூன்று வருடம் வரையில் நல்ல யோகத்தோடி ருப்பானென அழகு பொருந்திய பெண்ணே கூறுவாயாக,

ஜெனன ராசிமுதல் 5 வீடு வரையில் 7 கிரகங்கள் வரிசை பெற அமர்ந்திருக்குமாகில் காட்டில் வாசம் செய் யும் கர்மயோகமென்று சொல்வர். அவற்றின்பலன் அவன் னுதித்த முதலிலும் கடைசியிலும் இந்நாட்டிலடையவேண் டிய செல்வம் யாவும் அனுபவித்தே தீருவான்.

ஜெனன ராசிக்கு 5-ம் வீடான பஞ்சம ஸ்தானுதிபதி 3 அல்லது 1-ம் வீட்டிலிக்க குருவோடு புதன்கூடியிருக்க சூரியன் மேடராகியில் உச்சம் பெற வெண்மைப் பிரசகாமு டைய சந்திரன் 9-ம் இடமென்னும்பாக்கியத்திலுமிருந்தால் காந்தர்வயோகமென்றும் பெயர் அவற்றின் பலன் அவனு தித்த 6 வருடத்திற்குமேல் எட்டு வருடம் வரையில் யோக முண்டு என்பதாம்.

ஜெனன லக்கினுதிபதி எவரங்கிசம் பெற்ருேனே அந்த அங்கிசாதிபதி 9-ம் இடமான பாக்கிய ஸ்தானத்தில் சுபகிர கங்களுடன் கூடிநிற்க 9-ம் வீட்டதிபதி உச்சம் பெற கிருக யோக மென்றும் கூறுவர் அவற்றின் அவனுதித்த 7-ம் வருடத்திற்குமேல் ஒன்பது வருட வரையில் யோகந்தோடி ருப்பான்.

பன்னிரண்டாம் வீட்டதிபதி பன்னிரண்டிலேயே ஆக்ஷி பெற அஷ்டமாதிபதியாகிய 8-ம் வீட்டோன் நற்பலனை தரும் நான்காம் வீட்டிலேனும் 2-ம் வீட்டிலாவதிருக்க அவனை 9-ம் வீட்டதிபதி பார்க்க அவனுக்கு மிருதயோ மென்றே கூறுவர் அதன்பலன் அவனுதித்த 40-முதல் 32- வருடம் வரையில் யோகமுடையோகனுவே இருப்பான்.

குஜன் நின்ற அங்கிசாதிபதி நின்ற வீட்டிற்கும் சந்கிரன் நின்றராசிக்குடையோன் நின்ற வீட்டிற்கும் 5, 9 என்னும் இடங்களில் நற்பலனைத் தருவோரான குரு சுக்கிரனிருக்க 10-ம் வீட்டில் சனி உச்சம் பெவ நிற்க பிறந்தவனுக்கு தூபயோகமென்றும் கூறுவர் அதன் பலன் தானுதித்த 5. வயதுக்குமேல் 8-வருடம் வரையில் யோகத்தோடிருப்பான்

சிலர் 9-வருடத்திற்குமேல் 9-வருடம் வரையில் யோக முடையோனாக இருப்பான்,

பெருமையும் அருமையுடைய அதன் எவரங்கிசம் பெற் ருனே அந்த அங்கிசாதிபதி பஞ்சம ஸ்தானமான 5-ம் வீட் டிலிருக்க அவனுடன் சூரியனிருந்தாலும் பார்த்தாலும் அந்த ஜாதகனுக்கு திருவாராதனை என்னும் அவனுதித்த 11-வருடத்திற்கு மேல் மூன்று வருடம் யோகமுடையோ னாக இருப்பான்.

உதயவர் கோத்தும ராசியில் குரு விருக்கவும், அவனை பலன் பெற்ற சுக்கிரன் பார்க்க 9-ம் வீட்டோனான பாக்ய யாதிபதி உச்சம்பெற அவனுக்கு தூபயோகமென்று அதன் பலன் அவனுதித்த 4-வருடத்திற்கு மேல் 47-வருடம் வரையில் யோகத்தோடிருப்பான்.

தனுதிபதியாகிய இரண்டாம் வீட்டதிபதி 9-ம் இடமான பாக்கிய ஸ்தானத்திலிருக்க 9-ம் வீட்டுக்குடையோன் 11-மிடமான லாபஸ்தானத்திலிருக்கபெருமையையுடைய 11-ம்

வீட்டோன் உச்சம் பெற்றிருக்க அவனுக்குச் சித்திரயோக மென்றும் பெயர் அதன் பலனைச் சொல்லுமிடத்து அவனு தித்த ஒன்பது வருடத்தின் மேல் 10-வருடம் வரையில் யோகத்தோடிருப்பானென வனங்களிலுள்ள புஷ்பங்களின் அழகைப் பார்க்கிலும் மிகுந்த அழகையுடைய பெண்ணே கணித வல்லோர் கூறுவார்.

ஆறும் வீட்டோனாகிய சத்ரு ஸ்தானாதிபதி 9-ம் வீட் டோனாகிய சத்ரு ஸ்தானாதிபதியின் அங்கிசம் பெற்று தெள் ளிய பிரகாசத்தையுடைய சூரியனுடன் கூட ஜெனனராசி திரராசி என்னும் ரிடபம், சிங்கம் விருக்ஷிகம் கும்பம் இவை ஜெனன லக்கினமாகி அவனை மேற்சொல்லிய கிரகங்களா" வது ஆறும் வீட்டோனாவது பார்க்க சண்காயோகமென் றும் கூறுவர் அதன் பலன் அவனுதித்த 11-வயதுக்குமேல் 11-வருடம் யோகத்தோடிருப்பான்.

நான்கு பத்து என்னுமிவ்விராசிக் குடையோர் வெவ் வேறு ராசிகளிலிருக்க புதன் உச்சம் பெற்றிருக்க அவனுக்கு சாலயோகம் மென்றும் பெயர் அதன் பலன் அவனுதித்த பன்னிரண்டு வருடத்திற்குமேல் 7-வருடம் வரையில் யோகத் தோடிருப்பான்.

ஜெனன லக்கினத்திலேயே உச்ச கிரகமிருக்க அவனை குஜன் பார்க்க பாக்கியாதிபதியான 9-ம் வீட்டோன் மூன்று மிடமான மறவிட ஸ்தானத்திலிருக்க அவனுக்குச் சகட யோக மென்றும் பெயர் அந்த யோகமுண்டாகும் காலத் தைச் சொல்லுமிடத்து அவனுதித்த 12-வருடங்களுக்கு மேல் 13.வருடம் வரையில் யோகத்தோடிருப்பான்,

ஆயுள்ஸ்தான மென்னும் எட்டாம் வீட்டோன் லக்கினத்திற்கு முன்ருமிராசியில் உச்சம் பெற நிற்க லாப ஸ்தாஞதிபதியான 11-ம் வீட்டோன் இரண்டாமிடமான தன ஸ்தானத்திலிருக்க அவனுக்கு வீணை யோகமென்றும் பெயர் அவையுண்டாகும் காலத்தைச் சொல்லுமிடத்து அவனுதித்த பன்னிரெண்டு வருடம் வரையில் யோகத்தோடிருப்பான்.

ஜெனன ராசி முதல் 7-கிரகங்களும் அடுக்காய் வரிசைப் பெற அமர்ந்திருக்குமாகில் அந்த ஜாதகனுக்குவீணை யோக மென்றும் பெயர் அதன் பலனைச் சோல்லுமிடத்து ஆடல் பாடல் முதலிய சந்தோஷகாரியங்களில் எந்தநாளும் நீங்காத பிரியமுள்ளவஞகி இருப்பதோடு அவற்றில் மிக்க சாமர்த்திய முடையோகஞகவு மிருப்பான்:

ஜெனன ராசிக்கு 10-த் வீட்டோஞன கரும ஸ்தாஞதிபதி 9-ம் வீட்டுக்குடையோ னங்கிசம் பெற்று பெருமையைப் படைத்த இரண்டாமிடமான தனஸ்தானத்திலிருக்க அவனுடன் மேற்சொன்ன 9-ம் வீட்டோஞன பாக்கிய ஸ்தாஞதிபதி கூடியிக்க அந்த ஜாதகனுக்கு பற்பல ஜக ஜாலங்களைச்செய்யும் மனவிஷ்ணு யோகமென்றும் பெயர் அவற்றின் பலன் அவனுதித்த பதிஞன்கு வருடத்தின்மேல் அளவிட முடியாத சமுத்திரத்தைப்போன்ற செல்வத்தைப் படைத்து லக்ஷாதி காரியாக வாழ்ந்திருப்பான்.

ஜெனன ராசிக்கு 10-ம் ராசியான கரும ஸ்தானத்தில் குஜனிருக்க சூரியன் உச்சம் பெற்று இரண்டாமிடமான ஸ்தானத் திருக்க சந்திரனும் குருவும் ஒன்பதாமிடமான பாக்கிய ஸ்தானத்திலிருக்க அவனுக்கு இரவியோகமென்றும்

பெயர் அவற்றின் பலன் அவனுதித்த பதினன்கு வருடங் களுக்கு மேல் எட்டு வருடம் வரையில் யோகத்தை யுடை யவனாக இருப்பான்.

ஜெனன ராசிக்கு இரண்டாம் வீட்டோனும் பத்தாம் வீட்டோனும் 11-ம் வீட்டோனான லாபாதிபதியும் ஆகிய இம்மூவர்களிலொருவர் சந்திர நின்ற நின்ற ராசிக்கு 1, 4, 7, 10 என்னும் கேந்திங்களிலொன்றிலிருக்க மேற்சொன்ன ஜெனன லக்கினத்திற்கு ஐந்து அல்லது 1 அல்லது 5, 9, இவ்விரண்டிற்கும் ஆக்ஷிநாதன் குருவாகவும் இருந்தால் அந்த ஜாதகனுக்குராஜயோகமென்றும் பெயர் அவற்றின் பலன் அவனுதித்த 15-வருடத்திற்கு மேல் அந்த ராஜ யோகத்தை அனுபவிப்பானென அழகு பொருந்திய பெண்ணே கூறுவாயாக.

ஒன்பதாம் வீட்டோனான பாக்கியதிபதி எவரங்கிசம் பெற்றுனே அங்கிசாதிபதி குருவுடன் சேர்ந்து ஜெனன ராசிக்கு இரண்டாமிடமான தனஸ்தானத்திலிருக்க இரண்டு ஒன்பதுக்குடையோனும் குருவாக இருக்கில் அந்த ஜாதக னுக்கு ராஜயோகமென்றும் பெயர் அதன் பலன் அவனுதித்த பதினைந்து வருடத்திற்குமேல் அவன் அந்திய வயதான 100 வயதுவரையில் நல்ல யோக முடையோனாகவே இருப்பான்

கரும்பாம்பாகிய இராகு நின்ற வீட்டுக்குடையோன் உச்சத்திலாவது திரிகோணங்களிலாவதிருக்க குஜன் ஆக்ஷி உச்ச முதலியவைகளால் பலம் பெற்றிருக்க ராஜயோக முண்டு அவை அவனுதித்த 15-வருடத்திற்கு மேல் 100 வயது வரையிலும் யோகத்தைத் தருமென கூர்மையான கண்களையுடையவளே கூறுவாயாக.

பலத்தையுடைய திரராசிகளிலொன்றில் ஜெனனமாக அவ்விராசியில் சுக்கிரனிருக்க சரலக்கினத்தில் குருவிருக்கி அந்த ஜாதகளுக்கு ராஜயோகமென்றும் கூறுவர் அவற்றின் பலனைச் சொல்லுமிடத்து அவனுதித்த 15 வருடத்திற்கு மேல் அவனுயுளுள்ள வரையிலும் அந்த ராஜயோகமுண்டென்று கணித வல்லோரான ஜோதிடர்கள் கூறுவர்

நான்காம் வீட்டோனை சுகஸ்தானுதிபதி நின்ற ராசிக்குடையோன் பத்தாமிடமான ஜீவன ஸ்நானத்திற் நிற்க அவனுடன் புதன் கூடி இருந்தாலும் அல்லது ஒருவர்க்கொருவர் பார்த்தாலும் அவனுக்கு ராஜயோகமென்றே கூறுவர் அப்பலனை அவனுக்கு வாலிப வயதாகிய வயது 16-க்குமேல் அவன் ஆயுள் உள்ள வரையில் அனுபவிப்பான்.

சூரியன் சந்திரன் குஜன் புதன் குரு சுக்கிரன் சனி ஆகிய 3-பேரும் சரராசிகளான மேஷம் கடகம் துலாம் மகரம் என்னும் இராசிகளில் இருப்பார்களேயானுல் ராஜயோகமாகும் அவற்றின் பலனை சொல்லுமிடத்து அன்னியரிடம் யாசகம் செய்வோனும் ஓயாது வழிப்பிரயாணமும் அலைச்சல் திரிச்சல் உடையனுடுமாவான்.

ஜெனன ராசிக்கு எட்டாமிடமான அஷ்டமஸ்தானத்தில் சுக்கிரனும் குருவுமிருக்க ஜெனன் லக்கினத்தில் புதனிருக்க ஜெனன லக்கினம் சரராசியாயும் ஜெனன ராசிக்கு 5 7 11-இவ்விடங்களில் சூரியன் சந்திரன் சனி இவர்களிருக்க அந்த ஜாதகனுக்கு மந்தாகினியோகமென்றும் பெயர் அந்தயவனை அவனுதித்த 2 7-ஆண்டுகளுக்கு மேல் 16-ஆண்டுகள் வரையில் அனுபவிப்பான்.

ஜெனன ராசிக்கு 5, 9, 7, 10 என்னுமிடங்களில் சுபா களாகிய சந்திரன், புதன், குரு, சுக்கிரன், இவர்களிருக்க அவர்களை தீயகிரகங்கள்நோக்காதிருக்குமாகில் அவனுக்கு மேதினி யோகமென்றும் பெயர் அப்பலனுண்டாகும் காலத்தைச்சொல்லுமிடத்து, அவனுதித்த 27-வருஷத்திற்கு மேல் 5-வருடம் வரையில் அந்த யோக முண்டாகுமென கூறுவர்

பத்தாம் வீட்டோனுன ஜீவனஸ்தானுதிபதி ஜெனன லக்கினுதிபதியின் அங்கிசம் பெற்று பலம் குறையாதிருக்க 10-ம் வீட்டோனங்கிசத்தில் ஜெனன லக்கினுதிபதி இருக்க இவ்விருவரையும் சுபகோட்கனுலொருவராகிய குருபார்க்க அந்த ஜாதகனுக்கு கார்முகயோக மென்று பெயர் அந்த யோகம் அவனுதித்த 30.வருடத்திற்கு மேல் 9-வருடம் வரைவில் அனுபவிப்பான்.

யாவரும் போற்றப்படும் பாக்கியாதி என்னும் 9-ம் வீட்டோன் நின்றது வாதசாங்கிசத்தில் 25-ம் வீட்டோனு டன் கூடிய சந்திரனும் நிற்க அவனுக்கு ராக்ஷஸ யோக பென்றும் கூறுவர் அவற்றின் பலன் அவனுதித்த 28-வரு டத்திற்கு மேல் 7-வருட வரையில் மேன்மையான யோகத் தோடிருப்பான்.

பஞ்சாமதி என்னும் 5-ம் வீட்டிற் குடையோன் மறைந் திருக்கவும் 2, 4, 11-ம் வீட்டிற்குடையவர்கள் வெண்ணிற முடைய சந்திரனைக்கூடி இருக்க அவனுக்கு தோணியோக மென்றுக் கூறுவர் அந்தப்பலன் அவனுதித்த 30-வருடங்க ளுக்குமேல் 3-வருடம் வரையில் இப்பூமியில் மேலான யோகத்தையுடையோனுக இருப்பானென கற்றறிந்த மேதாவிகள் கூறுவர்,

ஜெனன ராசிக்கு 11-ம் ராசியாக லாபஸ்தானத்தில் குருயும் குருநினற ராசிக்குடையோனுன 11-ம் வீட்டோன் குருநின்ற வீட்டிற்கு 11-ல் யூரண சந்திரனுடன் கூடிநிற்க அவனுக்கு நாபியோக மென்றும் பெயர் அவனுதித்த 32-வருடத்திற்கு மேல் 2-வருடத்திற்கு 15 ஆயிரம் பொன்னைப் படைத்து இனிமையாய் வாழ்ந்திருப்பான்:

ஜெனன ராசிக்கு 10-ம் வீட்டில் இராகு விருக்க 10-ம் வீட்டிற் காக்ஷிநாதன் உச்சப் பெற்றிருக்க அவர்களை சனியும் குஜனும் பார்க்க அந்த ஜாதகனுக்கு முதல்யோக மென்றும் பெயர் அந்தயோகத்தை அவனுதித்த 31-வருடத்திற் மேல் 3-வருடம் வரையில் நல்ல மேன்மையைப் படைத்த யோகத்தோடிருப்பானென அழகு பொருந்திய பெண்ணே கூறுவாயாக.

ஜெனன லககினத்திற்கு 5-ல் சந்திரணிருக்க அந்த ஐந்தாம் வீட்டிற்குடையோன் உச்சம் பெற்றிருக்க 9-ம் வீட்டோனுன பாக்யஸ்தானுதிபதி இரண்டாமிடமான தன ஸ்தானத்திலிருக்க அவனுக்கு பூபயோகமென்றும் பெயர் அந்த யோகத்தை அவனுதித்த 32 வயதுக்கு மேல் அவன் ஆயுளுள்ள வரையில் அனுபவிப்பான் என்றும் நல்ல சம்பத்துடையோனுக இருப்பான் என்றும் கூறுவர்.

ஜெனன லக்கினமுதல் 1, 2, 3, 4, ராசிகளுக்குன் 7,ம் கிரகங்கள் அமர்ந்திருக்குமாகில் அந்த ஜாதகனுக்கு பூப யோகமென்றும் பெயர் அவர் தருக் பலனைச் சொல்லுமிடத்து யாகம் செய்பவனும் பெண்களுக்கெல்லாம் மிக்க சிறப்பு பொருந்தியவனுகவுமிருப்பானென அழகு வாய்ந்த பெண்ணே கூறுவர்.

ஜெனன ராசிக்கு 9-ம் வீட்டதிபதியான பாக்கிய ஸ்தானுதிபதி ஜெனன லக்கினுதிபதியின் வர்க்கம் பெற லக்கினுதிபதி 9.ம் மிடத்திலிருக்கவும் வெண்ணிறமுடைய சந்திரனுக்கு 9 ம் ராசியில் மேன்மைப்படைத்த குருவிருக்கவும் ஜெனித்தவனுக்கு கேதாரயோகமென்றும் பெயர் அந்த யோகம் அவன் ஜெனித்த பதினறு வயதுக்குமேல் 8.வருடம் வரையில் அனுபவிப்பானென கற்றறிந்தோர் கூறுவர்

ஏழாமிடமான கர்மஸ்தானுதிபதி எவரங்கிசம் பெற்ருனே அந்த அங்கிசாதிபதி உச்சம் பெற்று 10.ம் வீட்டோனுடன் கூடியிருக்க, அதனை வாசயோகமென்றும் கூறுவர். அதன் பலனைச் சொல்லுமிடத்து அவனுதித்த பதினேழு வருடத்திற்கு மேல் எட்டு வருடம் வரையில் மிக்க செல்வத்தொடிருப்பானென மன்மதனைவிட மிகுந்த இன்ப சாகரமுடைய மாதே என்று கூறுவர்,

5 ம்மிடமான பஞ்சம ஸ்தானுதிப்தி சுக்கிரனுடன் கூடி ஜெனன லக்கினத்திலேயே நிற்க 11 மிடமான லாபஸ்தானுதிபதி நட்பு ஆக்ஷி உச்சம் முதலியவைகளிலிருந்தால் அந்த ஜாதகனுக்கு மதனயோக மென்றும் பெயர் அதன் பலன் அவனுதித்த 5.வருடத்திற்குமேல் ஏதொரு குறைவுமின்றி எட்டுவருடம் வரையில் மேற்சொன்ன யோகத்தையனுபவிப்பான்.எனக்கூறுவர்

(எவ்விதமேனும்) 5.ராசிக்குள் 7-கிரகங்களிருக்குமாகில் அவனுக்கு பாசகயோகமெனும் பெயர் அதன் பலன் தன் உள்ளத்தை மகிழச் செய்யும் செம்மை நிறமுடைய பொன் [illegible] அனேக அடிமையாட்களை யிண்டாக்குவ

தோடு பூரண சுகசவுக்கியத்தை யுடையோனுகவு மிருப் பான் என அழகு பொருந்திய பெண்ணே கூறுவாய்.

யாவரும் போற்றப்படும் சந்திரனுடன் சத்தமாதியான 7-ம் வீட்டோன் கூடி 11-ம் இடமான லாப ஸ்தானத்தி லிருக்க அவர்களை புதன் பார்க்க அவனுக்கு கஜயோக மென்றும் கூறுவர் அதன் பலன் அவனுதித்த இருபத் தைந்து வருடத்திற்கு மேல் ஒன்பது வருடம் வரையில் அந்த யோகத்தை அனுபவிப்பான்.

ஜெனன வக்கினத்திற்கு 11-வீட்டோனுன லாபஸ்தா ஞதிபதி சுக்கிரனுடன் கூடி உச்சம் பெற்றிருக்க புதன் ஜெனனராசிக்கு 1, 4, 7, 10-என்னும் கேந்திரங்கலிருக்க அவனுக்கு மீனயோக மென்றும் கூறுவர் அந்த அருமை யான பலனுண்டாகும் காலத்தைச்சொல்லுமிடத்து அவனு தித்த 15-வருடத்திற்கு மேல் 3.வருடம் வரையில் மேன் மையான சம்பத்தோடிருப்பான்.

வேதங்களுக்கு முதல்வனுகிய பிரகஸ்பதி என்னும் குரு மேன்மைப் பெற்ற பாக்கிய ஸ்தானத்திலிக்க ஜெனன ராசிக் கெட்டாம் ராசியில் சுக்கிரனிருக்க 6-ம்ராசியில் சுப கிரகங்களிருக்க அவனுக்கு பாசயோகமென்றும் பெயர் அதன் பலன் அவனுதித்த 15-வருடத்திற்குமேல் 6-வருடம் வரையில் மேன்மையான யோகத்தையுடையவனுக இருப் பான்.

கரும ஸ்தானுதிபதி என்னும் 10-ம் வீட்டோன் நீச்சம் பெற்று கலைகளையுடையசந்திரனுடன் கூடி லக்கினத்திற்கு ஏழாமிடமான சப்தமத்திலிருக்க அவன் ஜெனித்தது இரவாக வும் சரலக்கினமாவுமிருக்கில் அவனுக்கு விருட்டியோக மென்றும்பெயர் அதன்பலன் அவன் ஜெனித்த 52-வருடத்

திற்கு மேல் 5.வருடம் வரையில் நல்லயோகத்தை யுடைய வனாக இருப்பான்,

ஜெனனலக்கினத்திற்கு மூன்றும் வீட்டுக்குடையோன் உச்சம் பெற்றும் 10-ல் குருவிருக்கவும் அவனைச் சுக்கிரன் பார்க்க அவனுக்கு எழுதண்டயோகமென்றும் பெயர் அவன் அவனுதித்த 25.வருடத்திற்குமேல் 8-வருடம் வரை யில் நல்ல மேலான யோகத்துடனிருப்பான்.

அம்புலியான சந்திரன் ஜெனன ராசிக்கு 1, 4, 10 என் னுமிடங்களிருக்க ஜெனன ராசிக்கு 11-ஆம் இடமான லாபஸ்தானந்தில் குஜனும் சுக்கிரனுமிருக்க சந்திரனின்ற ராசிக்கொன்பதில் குருவிருக்க அவனுக்கு ரிஷபயோகமென் றுங்கூறுவர் அந்தயோகம் அவனுதித்த 25-வருடத்திற்கு மேல் 9-வருஷம் வரையுலுண்டாகும்.

ஜெனன லக்கினத்திற்கு 10-ம் ராசியில் இராகுவிருக்க 10.ம் வீட்டிற்குடையோன் ஜெனன லக்கினத்திலிருக்க புதன் மேன்மைபொருந்திய பாக்யேஸ்தான 9-ம் ராசியிலி ருக்க அந்த ஜாதகனுக்குச் சுக்கிரயோகமென்றும் பெயர். அந்த யோகம் அவனுதித்த 21 ஆண்டுக்குமேல் அவன் ஆயுளுள்ள வரையிலுமுண்டு,

ஜெனன லக்கினத்திலும் 3, 5, 7, 9, 10 இவ்விடங்க ளிலே கிரகங்கள் அமர்ந்திருக்குமாகில் அந்த ஜாதக னுக்கு மேன்மையைப்படைத்த சக்ரயோகமென்றும் பெயர் அந்த ஜாதகன் மேன்மையையுடைய ராஜாதிராஜனுகவும் இருப்பான்.

குற்றமில்லாத 10-ம் வீட்டதிபதி 9-ம் மிடமான பாக்கி யஸ்தானத்திலிருக்க மேன்மை பெற்ற ஜெனன லக்கினத் தில் இரண்டாம் வீட்டோனுன தனுதிபதி இருக்க நான்காம் வீட்டில் புதனிருக்க அவனுக்கு கந்துகயோக மென்றும் கூறுவர்.

அதன் பலன் அவனுதித்த 25-வயதுக்கு மேல் 5-வருடம் வரையில் யோகமுண்டு,

வாக்கு என்னும் இரண்டாமிடத்தில் சுக்கிரனும் செம்மை பொருந்திய குருவும் சந்சுரனும் சேர அவர்களை 9-ம் வீட்டோனை பாக்கியாதிபதி பார்க்க அவனுக்குக் கதாயோகமென்றும் சொல்லுவர். அந்தயோகம் அவனுதித்த 26 வருடத்திற்குமேல் 7-வருடம் வரையில் நீங்காது நல்லமேன்மையான யோகமுண்டென்று கணிதவல்லோர் கூறுவர்

பாக்கியாதிபதியான ஒன்பதாம் வீட்டோன் எந்த ராசியிலிருந்தானே அந்த ராசிக் குடையோன் சுக்கிரனுடன் கூடி இருக்க மேன்மை பெற்ற 5-ம் ராசியில் சுக்கிரனிருக்க சந்திரிகாயோகமென்றும் பெயர் அவற்றின் பலன் 26-வருடத்திற்கு மேல் 3-வருடம் வரையில் நல்ல மேலான யோகமாகவே இருக்கும்.

ஜெனன ராசிக்கு இரண்டாம் வீடு முதல் அஷ்டமஸ்தானம் வரையில் 7-கிரகங்களும் வரிசைப்பெற்றுநிற்குமாயின் அந்த ஜாதகனுக்கு மேன்மைப் பலனை தரும் சந்திரிகா யோகமென்றும் பெயர் அதன் பலன் மிக்க அழகு பொருந்தியவனும் பிரதானியாகவுமிருப்பான்.

ஜெனன லக்கினத்திற்கு 11-ம் வீட்டுக்குடையோனை லாபாதிபதியும் குரு சுக்கிரன் இம்முவரும் பாக்யஸ்தானமான 9-ம் ராசியிலிருக்க அவனை இரண்டாமிடத்தோனை தனுதிபதி பார்க்க அவனுக்குச் சற்பயோகமென்றும் பெயர் அந்த ஜாதகன் ஜெனித்த 54-வருடத்திற்கு மேல் 28.வருடம் வரையில் மேல் கண்ட யோகத்தை அனுபவிப்பான்.

குரு நின்ற ராசிக்கு 3-ம் வீட்டில் சுக்கிரனும் சுக்கிரன் நின்ற ராசிக்கு 9-ம் வீட்டில் சூரியனும் 10-வீட்டதிபதி நான்காம் ராசியிலிருக்க அந்தஜாதகனுக்கு மேகயோகமென்றும் பெயர் அனுதித்த 27ஆண்டுக்கு மேல் மூன்று வருடம் வரையில் மேற்சொன்ன யோகமுண்டேன மேலோர் கூறுவர்.

மேன்மையை தரும் லாபாதிபதி என்னும் 11-ம் வீட்டோன் நின்ற ராசிக்கு 3, 5, 9 என்னும் ராசியிலும் குஜன் ராகு சூரியன் இவர்கள் நின்ருலும் அல்லது நோக்கிலும் அந்த ஜாதகனுக்கு குரோதயோகமென்றும் பெயர் அந்த யோகம் அவனுதித்த 33-ஆண்டுகளுக்கு மேல் எட்டு வருடம் வரை நல்ல யோகத்துடன் எல்லாவித பாக்கியங்களும் பொருத்தியவனுக இருப்பான்.

ஜெனன ராசிக்கு 9-ம் ராசியான பாக்கிய ஸ்தானத்திலேனும் 1,4,7,10 என்றும் கேந்திரத்திலாவது குருவிருக்க 11 ம் மிடமான லாபகேந்திரத்தில் தேவேந்திரனுகிய சுக்கிரனிருந்தாலும் குருவும் சுக்கிரனும் மேற்சொன்னபடி ஒருவர்க்கொருவர் மாரியிருந்தாலும் அந்தஜாதகனுக்கு பிரம்மயோகமென்றும் பெயர் அவனுதித்த 36-ஆண்டுகளுக்கு மேல் 12 வருடம் மேற்சொன்ன யோகத்தால் எல்லாவிதமான பாக்கியமும் பொருந்திருப்பார்.

குரு லாபஸ்தானமான 11-ம் இராசியிலும் குடும்பாதி என்னும் இரண்டாம் வீட்டோன் 10-ம் இடத்திலும் பலம் பெற்றிருக்க பஞ்சம ஸ்தானுதிபதியான ஐந்தாம் வீட்டதிபதி இரண்டாமிடமான தன ஸ்தானத்திலிருக்க

ஒன்பதாம் வீட்டோனுன பாக்யாதிபதி ஜெனன லக்கினத்திலும் ஜெனன லக்கினம் திராசியாயும் இருக்க தேவேந்திர யோகமென்றுபெயர் அவனுதித்த 6 வருடத்திற்கு மேல் எட்டு வருஷம் வரையில் உண்டு.

ஜெனன லக்கினத்திற்கு 5 ம் ராசியில் குருவும் ஐந்கா வீட்டோன் ஒன்பதிலும் 10 சனியுமிருந்தால் மகுடயோக மெனவும் அவனுதித்த 36 ஆண்டுகளுக்கு மேல் 32 வருடம் வரையில் மேற்சொன்ன யோகத்தை அநுபவிப்பானென அழகு பொருந்திய பெண்ணே கூறுவாயாக

நன்மையைத்தரும் சனி ஜெனன லக்கினத்திற்கு 9-ம் ராசியிலிருக்க கேந்திரத்தில் பேர்பெற்ற 10-ல் சுபகிரகங்களிருக் வெண்ணிறகமுடைய சந்திரனுக்கு 5-ல் சூரியனிருக்க 11ம் மிடமான லாபஸ்தானத்திற்கு 1 4 7 10 என்னும் ராசிகளில் குருவுமிருந்தால் சரயோகமென்றும் பெயர் அவனுதித்த 36 வருடங்களுக்கு மேல் வருடம் வரையில் மேன்மையான யோகத்தோடிருப்பான்.

சந்திரனிருந்த ராசிக்கு 9-ம் ராசியில் குருவிருக்க குரு நின்ற ராசிக்கு 9-ம் ராசியில் வளமை பொருந்திய சுக்கிரனிருக்கவும் அந்த ஜாதக்கு மிக்க அழகைப் படைத்த புத்திர யோகமென்று பெயர் அதன் பலனுலவன் அவனுதித்த 40 வயதுக்குமேல் 9 வருடம் வரையில் பாக்கிய முடையே யோனுக யிருப்பான்.

பாக்யாதிபதியாகிய 9-ம் ராசிக்குடையோன் நின்ற அங்கிசாதிபதி மேன்மையுடைய உச்சம் பெற்று சூரியனுடன் கூடி இருக்கில் தனயோகமென்று பெயர் அவனுதித்த 42 வருடங்களுக்களுக்கு மேல் 32 வருடம் வரையில் யோகத்தையுடையோனுக இருப்பான்.

பாக்கியாதிபதியான 9-ம் வீட்டதிபதி இருக்கும் இராசிக்குக் திரிகோணங்களாகிய 3, 5, 9-என்னும் இடங்களில் ஜெனன லக்கினத்திற்கு 5-ம் வீட்டதிபனுகிய பஞ்சமாதிபதி யிருக்க 5-ம் குருவிருக்கவும் அந்த ஜாதகனுக்கு போகயோக முண்டாகும் அவை அவனுதித்த 42-வருடங்களுக்கு மேல் 5-வருடம் வரையில் யோகமுடையவனுக இருப்பான்.

ஜெனன ராசிக்கு நான்காம் ராசியில் சுக்கிரனிருக் சப்தமஸ்தானத்தில் சந்திரனும் 11-ல் புதனிருக்க இரண் டாம் இடமாகிய தனஸ்தானத்தில் குருவிருக்க சூரியன் சுபகிரகங்களுடன் கூடி இருக்க அந்த ஜாதகனுக்கு நன்மையை விளைவிக்கும் காமினியோகமென்றும் பெயர் அவற்றின் பலன் அவைஅவனுதித்த 42 வருடம் வரையில் யோகத்தைத்தரும்.

ஜெனன ராசிக்கு 5-ம் வீட்டோன் ஒன்பதிலும் 11-ம் வீட்டோன் ஐந்திலும் நான்காம் வீட்டதிபதியோடு சந்திரன் கூடி இருக்க அந்த ஜாதசுனுக்கு வருத்ததை தரப் படமாட்டாத இந்திரயோக மென்றும் பெயர் அவனுதித்த 43-க்கு மேல் 42 வருடம் யோகத்தோடிருப்பான்.

பூரண சுலைகளையுடைய சந்திரன் நின்ற அங்கிசாதிபதி உச்சம் பெற்று திவாவென்னும் லக்கினத்தில் ஜெனனமாகி யும் இருந்தால் அவனுக்கு கருமயோகமென்றும் பெயர் அவை அவனுதித்த 44-வருடங்களுக்குமேல் 28-வருடம் வரையில் நல்ல மேன்மையான யோகத்தையே அனுபவிப் பான்.

ஜெனன ராசிக்கு இரண்டாம் ராசியில் சந்திரனும் அவனோடு குருசேரஇரண்டாம் வீட்டோன் ஒன்பதிலும் 11-ராசியாதிபதி 9-ம் ராசியில் இருந்தால் அவனுக்குச் சுயயோகமென்றும் பெயர் அவனுதித்த 47-க்கு மேல் 32 வருடம் வரையில் யோகமுடையவனாக இருப்பான்.

ஜெனன ராசிக்கு ஏழாம் ராசியாதிபதி மூலத்திரிகோணத்திலும் நேத்திர ஸ்தானமான இரண்டில் இரண்டாம் வீட்டோன் ஆக்ஷிபெற சூரியன் உச்சம்பெற்று இருந்தால் அவனுக்கு 50-வருடங்களுக்கு மேல் 3-வருடம் வரையில் சுபயோக மென்னும் யோகத்தையுடைவனாக இருப்பான்.

பாக்கியாதிபதி எவரங்கிசம் பெற்றானோ, அந்த அங்கிசாதிபதி உச்சம்பெற்று லக்கினத்திற்கு இரண்டாம்ராசியில் இருக்க இரண்டாம் வீட்டோன் 9-ம் இடமென்னும் பாக்கிய ஸ்தானத்திலிருக்க அந்த ஜாதகனுக்குச்சுபயோகமென்றும் அவை அவனுதித்த 36-க்குமேல் 3-வருடம் வரையில் அனுபவிப்பான்

ஜெனன ராசியில் 11-ம் வீட்டோனிருக்க அந்த அங்கிசாதிபதி மேற்சொன்ன 11-ம் ராசியிலேயே உச்சம் பெற அவனுடன் 9-ம் வீட்டோன் கூடியிருக்க அவனுக்குச் சரஸ்வதி யோகமென்றும் பெயர் அவை அவனுதித்த 43-வருடத்திற்குமேல் 34-வருடம் வரையில் யோகமுடையவனாக இருப்பான்.

ஜெனன ராசிக்கு 11-ம் வீட்டோனென்று சொல்லும் கரும ஸ்தானத்தில் சனியும் 10-ம் வீட்டோன் இராகுவுடன் கூடி இருக்க சண்டயோக மென்றும் பெயர் அப்பலனுண்டாகும் காலமாவன அவனுதித்த 50-க்குமேல் எட்டு வருடம் வரையில் யோகமுள்ளவனாக இருப்பான்.

## லக்கினம் நோதயம்

### சந்திர லக்கினத்திஞல் ஆயுள் சொல்வது

இராசி ஒன்றுக்கு பாகை 30 என முன்புகூறியுள்ளேன் ஆகையால் ஒவ்வோர் ராசியிலும் சந்திரன் எத்தனை பாகை யின் அளவிலிருக்கிருனென அறிந்து கீழ்கண்ட அரிஷ்ட தோஷம் கூறவேண்டும் சந்திரன் இரண்டேகால் நாள் ஓர் ராசியிலிருப்பானென சாஸ்திரங்களில் கூறியபடி நாள் இரண்டே காலுக்கு நாழிகை 135 ஆகும் இதனை விநாடி யாக்கின் 8100 விநாடியாகும் இவ்விநாடிக்கே 30- பாகை என்பதால் மேற்கண்ட 8100 ஐ 30 தால் வகுக்க பாகை 30 க்கு 270 விஞடியாகும் இவ்வாறு ஒவ்வொரு ஜாதகர் களுக்கு சந்திரன் எந்த ராசியிலிக்கிருளுே அந்த ராசியில் சந்திரன் பிரவேசித்து எத்தனை பாகைகள் ஆயின வென்ற றிந்து கிழ் கண்டவாறு அதற்கு ஆயுள் சொல்லவேண்டும் இதனையே பாலாரிட்ட தோஷம் என்றும்கூறியுள்ளன.

### பாலாரிட்ட தோஷம்

[illegible]ணியாராசியில் பாகை 1-ல் சந்திரனிருக்க ஷ நோஷம் ஞூ 2
விருக்ஷிகராசியில் பாகை 2 ல் சந்திரனிருக்க ,, 2
[illegible]சில் பாகை 2 ல் சந்திரனிருக்க ,, 2
[illegible] ராசியில் பாகை 3 ல் சந்திரனிருக்க ,, 3
துலாராசியில் பாகை 4 ல் சந்திரனிருக்க ,, 4
சிங்கத்தில் பாகை 5-ல் மதியிருக்க ,, 5
மகரத்தில் பாகை 6-ல் சந்திரனிருக்க ,, 6
கும்பத்தில் பாகை 7 ல் சந்திரனிருக்க ,, 7

மேடத்தில் பாகை 8-ல் மதி இருக்க ஞு 8
இடபத்தில் பாகை 9-ல் மதி யிருக்க ,, 9
மீனத்தில் பாகை 10-ல் மதி யிருக்க ,, 10
மிதுனத்தில் பாகை 11-ல் மதி யிருக்க ,, 11
கடகத்தில் பாகை 12-ல் மதி யிருக்க ,, 12

## யோக அரிட்ட தோஷம்

யோக அரிட்டதோஷம் என்பது ஜெனித்த நாள் முதல் எத்தனை நாள் அல்லது மாதம் வருடங்கள் சுழிந்து யோக முண்டு என்பதை யறிவதேயாம் யோகபாவங்களை முன்னமே கூறியுள்ளோம் ஆயினும் எத்தனை வருடங்களுக்கு மேல் என்பதைக் குறிப்பிட வில்லையாதலால் அதன் விபரம் பின் வருமாறு கிரகங்களின் அடவியால் தெரிந்து சொல்வது நலம் இவை லக்கினத்திலுள்ள கிரகங்களை கொண்டு சொல்ல வேண்டும்.

லக்கினத்தில் சூரியன் நிற்கில் 17-வருஷங்களுக்கு மேலும்

| | | | | |
|---|---|---|---|---|
| ,, | சந்திரன் | ,, | 20 | ,, |
| ,, | குஜன் | ,, | 18 | ,, |
| ,, | புதன் | ,, | 13 | ,, |
| ,, | குரு | ,, | 15 | ,, |
| ,, | சுக்கிரன் | ,, | 15 | ,, |
| ,, | சனி | ,, | 19 | ,, |
| ,, | ராகு கேது | ,, | 14 | ,, |

யோக அதிஷ்டம் உண்டாகும்

மேலும் லக்கின பலங்களைப்பற்றி இரவில் சுரராசியாகிய மேஷம் கடகம் துலாம் மகரம் என்பவைகளே பலமென்றும்

பகலாகில் ரிடபம் சிங்கம் விருச்சிகம் கும்பமென்னும் ராசிகளே பலமெனவும், சந்தியாகில் மிதுனம் கன்னி தனுசு மீனம் என்னும் ராசிகளே பலமெனவும் கூறியுள்ளார் ஆகையால் லக்கினோதயத் தியல்பை ஆராய்ந்து பலன் சொல்லவேண்டும்.

## லக்கினத்தைப்பற்றி கவனிக்க வேண்டிய சில முக்கிய விஷயங்கள்

1. லக்கினமானது ஒற்றை ராசியா (அ) இரட்டை ராசியா.

2 லக்கினமானது ஜலோதய ராசியா சிரோதய ராசியா (அ) சிரபிருஷ்டோதய ராசியா?

3. லக்கினத்திற்குறிய நாழிகை விநாடியின் படி 1, 2 3, 4 முதலிய பாதங்களில் எத்தனையாவது பாதம்.

4. ஜெனன லக்கினமானது ஆண் ராசியா பெண் ராசியா (அ) பெண் கிரகராசியா ஆண் கிரகராசியா?

5. ஜெனன லக்கினத்தை சூரியன் அங்காரகன் ராகு கேது சனிமுதலிய தினசரிபாவக் கோட்கள் நோக்கின் றனரா (அ) சந்திரன், புதன் சுக்கிரன் குரு முதலிய சுப கோட்கள் நோக்குகின்றனரா?

6. நோக்கில் பக்க பார்வையா சுபபார்வையா, நேர் பார்வைய்யா?

7. லக்கினத்தோனிருக்கும் சுபா சுபம் எப்படி

8. லக்கினாதிபதிதன் வலிவை இழந்து விட்டானு இழக்க வில்லையா?

9 லக்கியத்தோன் முழுசுபன் கால்சுபன், அரைசுபன் முக்கால் சுபன் என்பவஞ அல்லது முழுபாபி கால்பாபி, அரைபாபி முக்கால் பாபியா?

10 லக்கிஞதிபதிக்குறிய தன்மை குணம் முதலியன இவைகளைப் பற்றி ஆருய்வது முக்கியம்.

## கிரகசேகர விபரமும் உச்ச விபரமும்

நவ கோட்களால் பலன் சொல்ல வேண்டிய விஷயம் ஒவ்வோர் ராசியிலும் நிற்கும் கிரகத்திற்கேற்றவாறு சொல்வதாயினும் நின்ற கிரகத்தோடு மற்றுமோர் கிரகம் சேர்வதாலும் மற்றும் வேறு ராசியிலிருக்கும் கிரகம் நோக்குவதாலும் அக்கிரகத்ததிற்குறிய பலன் குறைந்து மிக்கடலமும் பெரும்என்பதை சோதிடர்கள் மனதிலிருக்க வேண்டாம் எப்படி எனில் குரு கடகராசியில் உச்சம் பெறப்பிறந்த ஜாதகங்களைப்பற்றியோ வேறு கிரகங்கள் உச்சம் பெற்ற ஜாதகங்களைப்பற்றியோ சோதிடர்கள் அவர்களைப்பற்றி வர்னிப்பதை அளவிடமுடியாது உச்சகிரகத்தைப்பற்றியே அவ்வாறு புகழ்ந்து கூறுவது மிக்க தவரென்பதை கவனிக்கவேண்டும் உச்சம் பெற்ருலும் அவ்விராசியில் அந்த கிரகத்திற்குறிய முழு உச்ச கிரகணமிருக்கிறதா என்பதை ஆராய்ந்து உச்சபலத்தை கூறவேண்டுமென்பது சாஸ்திரப் பிரமாணம் முன் கூறிய குருவுக்கு கடகராசியில் எத்தனை பாகம் உச்சம் அத்தனை பாகத்திற்குள் பிறந்தவர்களே சற்றேரக்குறைம உச்ச பலனையனுபவிப்பார் அநிலும் ஷ குருவை கொடியவர்களும் சத்துருவும் நீச்சம் பகை அஸ்தமயம் பெற்ற கோட்களும் நோக்குவரேல் அவன் உச்ச பலம் குறையுமென்பதை யூகித்துணர வேண்டும் உச்சமில்லாத கிரகத்தையும் இவ்வாரே

ஆலோசித்து பலன் சொல்வது முக்கிய கடமையாகும் சாஸ்திரங்களில் கூறியதாவது கொடிய -கோட்கள் கேந் திரம் பெறலாதென்றும் கூறியிருப்பதையும் கைக்கொள்ள வேண்டியதேகடமையாகும் கேந்திரம் பெற்ருலும் எத்தனை யாவது கேந்திம் என்பதை சுவனித்து அதிற்கேற்றவாது சொல்ல வேண்டும், கேந்திரங்களில் மிக்க சிரேஷ்டமான கேந்திரம் 10-ம் இடமேயாகும் சூரியன் சந்திரனைத் தவிர மற்ற கோட்கள் வக்கிரத்திலிருந்தால் மிக்க பலம் எனவும் சாஸ்திரங்கள் முறையிடுகின்றன அன்றியும் ஒவ்வொரு-கோட்களுக்கும் அதியுச்ச பாகங்களை சூரியனுக்கு 10 பாகத்தையும் சந்திரனுக்கு 8-பாகத்தையும் அங்காரக னுக்கு 28 பாகத்தையும் புதனுக்கு 15 பாகத்தையும் குரு வுக்கு 5-பாகத்தையும் சுக்கிரனுக்கு 27 பாகத்தையும், சனிக்கு 2 பாகத்தையும் அதியுச்சமென கூறியுள்ளார். உச்சமிருந்தால் மேற்சொன்ன பாகத்திற்குள்ளாகவா பின் ருகவா என்பதை நன்கு கவனிக்க வேண்டும் இத்துடன் கிரகசேர்க்கையால் சுபகிரகங்கள் துற்பலனும் அசுபகிர கங்கள் நற்பலனையும் தருவது சகஜம் ஆனதால் சுப கோட்கள் நற்க்ஷேத்திரத்திலிருந்து விட்டாதாலே நற்பல னைத்தருவானென்பது நம்பத்தகுந்த தன்று சேர்க்கை தோஷத்தால் துற்பலனையே தருவான் இவ்வாறே கொடிய கிரகங்களுக்கு மேற்சொன்ன வாறு ஆராய்ந்து பலன் கூற வேண்டும் கிரகசேகரப்பலன்களை பற்பல நூலாசிரியர்கள் பற்பலவிதமாய் கூறியுள்ளாராயினும் இங்கு குமாரசாமி யம் வீமேஸ்வர உள்ளமுடையான் சாதக சிந்தாமணி என் னும் நூற்களை யாராய்ந்து சிலவிஷயங்களைச். சேர்த்தும் நீக்கியும் கீழ்கண்டவாறு எழுதியுள்ளோம் உச்சம் என் பதையே மேலே ஒவ்வோர் கிரகத்திற்கும் பாகத்தினளவை

கூறியதால் அநேகருக்கு சந்தேகத்திற்கிடமாகும் உதாரண மாக சூரியன் மேஷராசிக்கு உச்சமென்றும் அவ்விராசியில் 10 பாகங்களே அதியுச்சபலம் என்றும் கூறினேம் சூரியன் உஷ்ணபிரகாசத்தை யுடையவனென்று அனைவருக்கும் தெரிந்ததே மேஷராசிக்கு சூரியன் சித்திரை மாதம் முதல் பிரவேசிப்பான் சித்திரைமாதம் முதல்தேதியில் சூரியன் மேஷராசிக்கு உச்சனுய்ப் பிரவேசித்த காலம் தன் கிரகமா கிய உஷணத்தை வீச ஆரம்பிக்கிருன் ஆயினும் கொடுமை யான உஷ்ணம் 10 நாட்களே அதனை நாம் கத்திரி வெய்ய லென்கிருேன் அப்போது அம்மாத உஷ்ணம் அதிகமாகவே காணப்படுகிறது இதனையே அதிஉச்சம் என்று கூறவேண் டும் இப்போது அதியுச்சமென்ருல் மிக்கபலன் என்பது அர்த்தமாகிறது ஆதலால் உச்சம் பெற்ற கோட்களின் பலன் எவ்வளவு நாள் அல்லது பாகம் இருக்கிறதென ஆருய்ந்து பலன் கூற வேண்டுவது அவசியமாகும்.

கிரகசேரவர்கப்பலன்கீழ்கண்டவாறு சேகரவர்க்பல மறிவதோடு கூடும்பலமும் பாவக பலமும் கூட்டிச்சொல்ல வேண்டும் இங்கு சேரப்பலன் விபரம்.

| | | | |
|---|---|---|---|
| சூரியனுக்குச் | சேகர | வர்க்கம் | 62 |
| சந்திரனுக்கு | ,, | ,, | 31 |
| குஜனுக்கு | ,, | ,, | 14 |
| புதனுக்கு | ,, | ,, | 7 |
| குருவுக்கு | ,, | ,, | 9 |
| சுக்ரனுக்கு | ,, | ,, | 1 |
| சனிக்கு | ,, | ,, | 0 |
| | | | 113 |

ஆகமொத்த சேகரவர்க்கம்

## கிரகசேகரப்பலன்

(சூரியன்) சூரியனேடு வளர்பிறைச் சந்திரன் கூடி யிருக்கில்—பிரபல கீர்த்திப் பிரதாபசாலியாயும் தணிக்கை யான வார்த்தைகளும், எக்காரியங்களிலும் சமர்த்தனுகவு மிருப்பான். அன்றியும் தன் மனைவியை தன் கைவசப்படுத் தும் சக்தி வாய்ந்தவனுயு மிருப்பான்.

சூரியனேடு குஜன் கூடியிருக்கில்—வஞ்சமனத்தனும் மௌனம் சாதிப்பவனும் தைரிய வார்த்தைகளாடுபவனும் எக்காலமும் ஏதோ ஓர் விஷயத்தை ஆலோசிப்பது போலி ருப்பவனும் ஆவான்,

மேற்படி சூரியனேடு புதன் கூடியிருக்கில் அனைவரா றும் மெச்சத்தக்க வித்தைசாலியாயும் யாவரும் புகழந்தக்க அழகு வாய்ந்தவனும் ஸ்தூலசரீரமுடையவனும் கணித ஆராய்ச்சியுள்ளவனும் ஆவான்,

சூரியனேடு குரு கூடியிருக்கில்—மன்னர்களால் தன் ஜீவியத்தை நடத்துபவனும், பரிசுத்த மனதையுடையவ னும் தன் காரியத்தில் மிக்கஜாக்கிரதை யோடிருப்பவனும் பூரண செல்வத்தைப் படைத்தவனுமாம்,

சூரியனேடு சுக்கிரன் கூடியிருக்கில்—தன் மனைவி யைத் தன் வசமாய் செய்து செய்து கொள்பவனும் விரோதி களையுடையவனும் ஸ்ரீகள் மூலரோக முடையவனும் ஸ்ரீகள் மேல் விறக்த்தி இவைகளையுடையவனுமாம்.

சூரியனேடு சனி கூடியிருக்கில்—எக்காரியத்திலும் அபஜெயமுடையவனும் தைரியமில்லாதவனும் மந்தபுத்தி யுடைபவனும் சத்துருக்களிடம் அகப்பட்டு விழிக்கும் தன் மையையுடையவனும் ஆவானெனக் கூறுவர்

சூரியனோடு சந்திரனும் குஜனும் கூடிய பலன் பிரயோ ஜனமற்ற வார்த்தைகளைப் பேசுபவனும் சவுரிய வீரபராக் கிரமங்களை யுடையவனும். கோள் சொல்லுபவனும் ஆவான்.

சூரியன் சந்திரன் குரு இவர்கள் கூடியிருக்கில் ராஜாக் களால் மெச்சத்தகுந்தவனென்றும் ராஜாக்களுக்குச்சமான முடையவனெனவும் மேற்படி மன்னர்களால் பூஜிக்கப்படு வோனும் ஆவான்.

சூரியன் சந்திரன் சுக்கிரன் இவர்கள் கூடியிருக்கில்— விஷவார்த்தைகளைப் பேசுபவனும் தன் சுயஜெனங்களே தனக்குச் சத்துருவாக இருந்தலும் பொன் ஆபரணங்கள் நிறைந்தவனும் பாப ஈனத் தொழில்களைச் செய்பவனும் ஆவான்,

சூரியன் சந்திரன் சனி இவர்கள் கூடியிருக்கில் பலவித பேச்சு நினைப்புகுணம் இவைகளையுடையவனும் அன்னிய தேசங்களில் சஞ்சரிக்கப்பிரியமுடையவனும் ஆவானென சாஸ்திரங் கூறும்.

சூரியனோடு குஜனும் குருவும் கூடியிருக்கில், இனிய மொழியை யுடையவனும் சேனைத்தலைவனுகவும் அமைச்ச தொழில் செய்யத் தகுந்தவனும் பிரபல்ய மேன்பாடுடைய வனும் ஆவான்.

சூரியனோடு குஜன் சுக்கிரன் இவர்கள் கூடியிருக்கில் நயன வார்த்தைகளை யுடையவனும் ரணம் காயவியாதி முதலியவைகளை யுடையவனும் போக சுகங்களை அதிகம் இச்சிப்பவனும் செல்வத்தைச் சம்பாதித்து வீண் செலவு புரி வனும் நற்குலத்திலுதித்தவனும் ஆவான்.

சூரியனோடு குஜன் சனி கூடியிருக்கில்—தன் மாதா பிதாக்களிடத்தும் பந்துஜெனங்களிடத்தும்பரீதியுள்ளவன் எந்நாளும் நீங்காத வியாதி யுடையவனும் அநேக செல்வங்களைத்தேடுவதோடு மூர்க்க குணமுடையவனாகவு மிருப்பான்.

சூரியனோடு புதன் குரு கூடியிருக்கில் செல்வம் திரண்டவன் பொக்கிஷதாரி பிரதாபசவரியம் பராக்கிரமம் நல்வாக்கு ராஜாக்களுக்குச் சமமானவன் பூமி மூலமான செல்வத்தைத் தேடுபவன் தியாகி தீரம் கேட்போர்க்கு இல்லை என்னுமை தான தருமம் முதலியவைகளை யுடையவன்.

சூரியனோடு புதன் சுக்கிரன் கூடியிருக்கில்-பிரகாசத்தையுடைய தேசத்தையுடையவன் வித்தையாசாலி எக்காலத்து பலவித போக்கான பேச்சுடையவன் பிரசங்கம் செய்யும் வித்துவான் ராஜபூஜிதன்.

சூரியனோடு புதன் சனியும் கூடியிருக்கில் வஞ்சமனத்தையுடையவன் துர்வசனன் குணங்களில் மாருபட்டவன் பரிசுத்தமில்லாத தேகத்தின் வறுமை என்னும் நோயாளன் (ஊழியத்தொழிலாலும்) சில காலங்களில் அடிமைத்தொழிலாலும் ஜீவிக்கத்தக்கவன்.

சூரியனோடு குரு சுக்கிரன் கூடியிருக்கில் பூரணதனத்தைப்படைத்தவன் தனது விழிகளுக்கு ரோகமுடையவன் அறிவு நல்லொழுக்கம் முதலியவைகளை யுடையவன், சகலரையும் தன் வசமாக்கும் சக்திவாய்ந்தவனும் ஆவான்.

சூரியன், சுக்கிரன் சனி இவர்கள் கூடியிருக்கில்பலசாலி மனநெகிழ்வில், அவமான காரியங்களில் தலை இடாதவன் கொடிய காரியங்களில் தலையிட்டு செய்யத்தக்கவன் தனுதிடம் யாத்திரை செய்ய மனமுடையவன் ஆரோக்கியமுடையவன்.

இதுவரையில் சூரியனோடு ஒரு கிரகம் கூடிய பலனும் இரண்டு கிரகங்கள் கூடிய பலனையும் கூறியுள்ளோம். இப்பால் மூன்று கிரகங்கள் கூடிய பலனைக் கூறுவோம்.

## சூரியன் சந்திரன் குஜன் புதன்
## இவர்கள் கூடிய பலன்

பொய் சொல்லத் துணிந்தவன் மௌனமாய் பேசக்கூடியவன் பலத்தையும் பராக்ரமத்தைப் படைத்தவன் கல்வி கலைக்கியான முதலியவைகளில் தேர்ந்தவன் சந்தோஷமும் செல்வமும் உடையவன்.

## சூரியன் சந்திரன் குஜன் குரு
## இவர்கள் கூடிய பலன்

அளவிரந்த செல்வத்தைப் படைத்தவனும் நற்குணம் நல்லறிவு சன்மார்க்கம் முதலிய தரா தன்மையை யறிந்தவனும் புத்திரப் பேருடையவனும் உத்தம நற்குண பத்தினியை யுடையவனுமாவான்.

## சூரியன்சந்திரன் குஜன் சுக்கிரன்
## இவர்கள் கூடிய பலன்

தன் பந்து ஜெனங்களின் நன்கொடையில்லாதவனும் விகட வார்த்தைகளை யுடையவன் வியாதியையுடையவன் களத்திரத்தால் சில காலங்களில் வருத்தப்பட்டத்தக்கவன்.

## சூரியன் சந்திரன் குஜன் சனி இவர்கள் கூடிய பலன்

தன் பந்து ஜெனத்துவேஷங்களை யுடையவன் பொருளில்லாதவன் பசியாளன் திரேகத்திலடையாளமுடையவன் அடிக்கடி விசனப்படுபவன் கஷ்ட ஜீவனமுடையவன் சவுக்கியமில்லாதவன் என்றும் கூறுவர்.

## சூரியன் சந்திரன் புதன் குரு இவர்கள் கூடிய பலன்

பூரண அறிவுடையவன் செல்வம் திரண்டவன் அரசர்களுக்குச் சமானமான வாழ்க்கையையுடையவன் பல்லக்கு கஞ்சனை முதலியவைகளையுடையவன் சவுக்கிய தேகன் நலவாசமுடையோன்.

## சூரியன் சந்திரன் புதன் சுக்கிரன் இவர்கள் கூடிய பலன்

மனைவியின் மேல் நீண்ட பிரியமுடையவன் ஆடல் பாடல் முதலிய நாட்டிய வித்தைகளையுடையோன் பிரகாசத்தையுடைய சரீரமுடையோன் பூஷணங்களைச் சேர்க்க வல்லவன் பரிசுத்தமுடையவன்.

## சூரியன் மதி புதன் சனி இவர்கள் கூடிய பலன்

மதுபானங்களை இச்சிப்பான், உயர்ந்த சரீரத்தையுடையவன் வியாபாரம் செய்யத் துணிந்தவன் ஆடையாபரணங்களை அதிகமுடையவன் சீக்கிர சந்தோஷி நல்வரவுடையோன்.

## சூரியன் சந்திரன் குரு சுக்கிரன் இவர்கள் கூடிய பலன்

கனத்திரத்தால் சந்தோஷத்தை யுடையவன் புத்திரர் களால் திரண்டதனத்தைச் சேகரிப்பான் பூரண செல்வத் வத்யுடையவன் ஆரோக்கியம் சவுக்கியம் உடைமவன் தரணி சேர்க்கையும் வாகன சேர்க்கையும் உடையவன்.

## சூரியன் சந்திரன் புதன் சனி இவர்கள் கூடிய பலன்

தாய் தந்தையரிடம் சவுக்கியம் குவறந்தவன் மனைவியால் மனைவியாகூலத்தையுடையவன் ராஜத்துவேஷமுடையவன் எந்நாளும் பலவித துன்பங்களை யனுபவிப்போன் புராணங் களைக் கேட்க இச்சையுள்ளோன்.

## சூரியன் குஜன் பலன் குரு இவர்கள் கூடிய பலன்

சமர்த்துடையவன் பலவான் வைசயோகசீலன் அன்னியு ஜன ஆசையுடையவன் பயங்கரத்தையுடையன் ஆயுதம் பழககத்தையுடையவன் அழகும் அயிஸ்வரியமுடையவன் தீர்க்க சந்தோஷி.

## சூரியன் குஜன் புதன் சனி இவர்கள் கூடிய பலன்

திருட்டுத் தனத்தையுடையவன் இரணகாயங்களை யுடையவன் தீயமார்க்கங்களிலும் துற்கருமங்களை செய்ய ஆசைப்படுவன் காகத்தைப்போன்றபார்வையையுடையவன் ஆயுரா ரோக்கியங்களை யுடையவன் அன்னதுவேஷி.

## சூரியன் குஜன் குரு
## சுக்கிரன் இவர்கள் கூடிய பலன்

அநேக புத்திரகளத்திரங்களை யுடையவன் ஸ்ரீகளால் ஏற்படும் கோள் சொற்களால் விசனப்படுவோன் அடிமைத் தொழில்களையுடையோன் ஆயுதம் பழகும் வித்வான் சமயத்திற்கேற்ற வார்த்தைகளையுடையவன் சன்மானம் வாங்கி ஜீவிப்போன்.

## சூரியன் குஜன் குரு
## சனி இவர்கள் கூடிய பலன்

களத்திர சனமுடையவன் அல்ப சந்தோஷி பரமார்த்த காரியங்களில் ஈடுபடுவோன் தனத்தைச் சம்பாதிப்போன் நன்மார்க்கசித்தன் ஆபரணங்களையும் பூமிகளையும் பகையாளிக்குக்கொடுப்போன் சமய சந்தோஷி.

## சூரியன் குஜன் சுக்கிரன்
## சனி இவர்கள் கூடிய பலன்

மனைவியால் வியாகூலப் படுவோன் அன்னிய ஜெனன ஆசையுளன் பீச்சகன் தருமார்த்த காரியங்களை யழிக்குந் தன்மை வாய்ந்தவன் பூரண ஆயுளைப் படைத்தவன்.

## ரவி புதன் குரு
## சுக்கிரன் இவர்கள் கூடிய பலன்

ஸ்திரீகளின் லீலா விநோதங்களி லீடுபட்டவன் பரதார இச்சையுடையவன் மணப்பெண் ஒன்றுள்ளவன் தன் காரியங்களை மிக்க ஜாக்கிரதையோடு செய்பவன் எக்காரியத்தையும் தீர ஆலோசிப்பவன் மேதாவீ.

## சூரியன் புதன் குரு
## சனி இவர்கள் கூடிய பலன்

மனோதைரியசாலி கெருவி வித்தையாசாலி எக்காலத்தும் நீங்காத பக்திமார்க்கங்களை யுடையவன் வறுமை யுடையவன் தயவு தாக்ஷண்ணிய முடையவன் தான்ய சம்பத்தை யுடையவன் தேவாலயங்களுக்குச் செல்லமனமுடையவன்,

## சூரியன் புதன் சுக்கிரன்
## சனி இவர்கள் கூடிய பலன்

தாய் தந்தையர் மேல் அன்பில்லாதவன் சுய ஜென விரோதி தந்தையின் பிதுராஜிதசெல்வங்க சிலவழிப்போன் மன உற்சாகி என்னுளிலும் பலவிதமான பேச்சு வார்த்தைகளை யுடையவன்,

## ரவி குரு சுக்கிரன்
## சனி இவர்கள் கூடிய பலன்

அவமான காரியங்களில் பிரவேசிப்பவன் மனசுத்தமில்லாதவன் தீவாந்திர பொருள் சேர்க்கையுடையவன் அன்னிய ஜெனன சவகாசமுடையவன் சயன சவுக்கியத்தை யுடையவன் மன உற்சாகி.

## ரவி சேய் குரு
## சனி இவர்கள் கூடிய பலன்

சகோதரவர்க்க ஈனன் பத்துமித்திரப்பகைவன் தூரதேசங்களுக்குச் செல்ல ஆசையுடையுவன் மனோதுக்கி ஆபரணச்சேர்க்கை இல்லாதவன் மனோதைரியம் உடையவன்

களத்திர சுகங்குறைந்தவன் இரவுடன் மூன்று கிரகங்கள் கூடிய பலன் முற்றும் சூரியனோடு நான்கு கோட்கள் கூடும் பலன்.

ரவி மதி சேய் புதன் குரு
இவர்கள் கூடிய பலன்

சண்டை செய்ய வல்லவன், வீறங்காட்டி ஓட மனமில் லாதவன். கோல் சொல்லி கலகம் மூட்டுவிப்பவன் மன தைரியமும் திரேக திடகாத்திரமும் உடையவன் தன் காரி யங்களில் மிக்க ஜாக்கிரதையோடிருப்பவன், சமயத்திற் கேற்ப பாவனைபோல் நடக்க வல்லவன்.

ரவி மதி சேய் புதன் சுக்கிரன்
இவர்கள் கூடிய பலன்

தயவு தாக்ஷண்யம் தான தரும பரோபாகாரம் இவை களை யுடையவன். உதார சாக்குடையவன் எத்தன காரி யத்தை முடிக்க வல்லவன் ஸமபலன் வறுமையை யுடைய வன் தயாள ரக்ஷகன் பிறருடமைக்கு ஆசைப்படாதவன் யோகப் பிரியன்:

ரவி மதி சேய் புதன் சனி
இவர்கள் கூடிய பலன்

புத்திரப் பேரில்லாதவன் கெட்ட எண்ணம், பேருசை யுடையவன் சண்டை செய்ய சமர்த்துள்ளவன், அன்னிய ஜெனகோபமுடையவன் தயாளமில்லாதவன், அற்ப ஆயுளுடையவன் சயன போகங் குறைந்தவன். சமரச கொழ்க்கையும், தனமும் உடையவன்.

## ரவி மதி சேய் குரு சுக்கிரன் இவர்கள் கூடிய பலன்

தன் பந்துக்களால் இகழ்ச்சி செய்யப்படுபவன் எக்காரியத்திலும் அபஜெயத்தையே அடைபவன் கோள் சொல்லுவதால் பலவிதத் துன்பப்படுவான் மன தைரியமும் திரேக வலுவையுமுடையவன்.

## ரவி மதி சேய் குரு சனி இவர்கள் கூடிய பலன்

மாமிச பக்ஷணி, களத்திர ,சுகங் குறைந்தவன், சன சந்தோஷமில்லாதவன், ஓர் கண்ணில் ரோகமுடையவன் சீதனமும் ரோகமுடையவன் சில காலங்களில் நல்ல யோகத்தையும் பிற்காலங்களில் சொற்ப வறுமையையுடையவன் தான்ய சேர்க்கையை யுடையவன்.

## ரவி மதி சேய் சுக்கிரன் சனி இவர்கள் கூடிய பலன்

பேராசையும், கெட்ட எண்ணமும், துர் நடத்தையை யுமுடையவன். முன் கோபி உதார வாக்குடையவன் சீலமுடையவன் எந்நாளும் பூரண சவுக்கியத்தையே அனுபவிக்க வல்லவன். தராசுத் தொழில் சிலகாலம் செய்வான்.

## ரவி சேய் புதன் சுக்கிரன் சனி இவர்கள் கூடிய பலன்

உயர்ந்த சரீரமுடையவன் மனோ வியாகூலமுடையவன் வஞ்ச நெஞ்சமுடையவன் எந்த ஜீவர்களையும் கொலை செய்ய மனமுடையவன் மாமிசங்களை அருந்துவதில் மிக்க

ஆரையுடையவன், தீர ஆலோசிப்பவன் மனச்சலிப்பில்லா தீவன் ஆவான்.

## ரவி புதன் குரு சுக்கிரன் சனி இவர்கள் கூடிய பலன்

தேவதா பக்தியுள்ளவன் ஆலய தருமங்களில் முதன்மையானவன் மானுபிமானங்களில் ஈடுபட்டவன் எடுத்த காரியத்தை செய்யாதவன் கொடியோர்கள் சேர்க்கையில்லாதவன்.

இவை இரவியோடு நான்கு கோட்கள் கூடிய பலனும் ஓராசாரம் சந்திராவளி மணி கண்ட கேரளம் முதலிய சாஸ்திரங்களில் சூரியனுடன் 5 கிரகங்கள் கூடியதைப் பற்றி யோகவானென்றும் உலகோர் மதிக்கத்தக்க நிலமையில் இருப்பானென்றும் 6. கோட்கள் கூடில் ஏகசக்கிராதிபதி என்றும் ராஜாக்களுக்குச் சமமான யோகத்திலிருப்பானென்றும் இப்படி கிரகமகர்ந்திருக்கப் பிறந்தவர்கள் சோடிக்கொருவரே எனவும் பூர்வஜென்ம புண்ணியாத்துமாக்களே இவ்வாறு ஜெனிப்பாரென்றும் பிற்காலங்களில் ஞானயோகம் சாதிக்கத் தகுந்தவரென்றும் சாஸ்திரங்கள் கூறியபடியாகும்.

இவை அகத்தியருக்கு சிவசுப்பிரமண்யக் கடவுள் உபதேசித்ததாகும்,

இப்பால் மதிசேய் சேகரப்பலனைக் கூறுவோம்.

## ரவி மதி புதன் குரு சனி இவர்கள் கூடிய பலன்

பாவச் செயல்களையும் அனியாபக் காரியங்களையும் செய்யும் வல்லவன் ஜா[illegible]ரோகமுடையவன்

துற்காயங்களில் பிரவேசிக்குந் தன்மையை யுடையவன் மஞேதுக்கமில்லாதவன் செல்வத்தை அநேகம்சம்பாதித்து தீயமார்க்கங்களில் சிலவழிக்கவல்லவன்,

ரவி மதி புதன் சுக்கிரன்
சனி இவர்கள் கூடிய பலன்

திருட்டுத் தொழிலில் சமர்த்தன் தரித்திரமுடையவன் பிதுராஜித பூஸ்திதியில்லாதவன் குய்யரோகம் சில நாளு டையவன் ஸ்ரீகள் நோய் உடையவன் தெய்வபக்திகுறைந்த வன் மாதாவின் மேல் கோள்சொல்லுபுவன் சமரசதனத்தை யுடைவன் அன்னிய ஜெனபாசமுடையவன் ஆவான்.

ரவி மதி குரு சுக்கிரன்
சனி இவர்கள் கூடிய பலன்

அழகும்செல்வமும் கற்புமுதலியவைகளும் அடைந்த களத்திரத்தை யுடையவுன் பரிசுத்த மனமுடையவன் வித் தையில் தேர்ச்சியுடைந்தவன், சகல காரியங்களும் தெரிந் தவன் மஞேதிட மில்லாதவன் கொடியோர்களின் நேசமில் லாதவன் தான்ய சம்பத்து மிகுந்தவன்.

ரவி சேய் புதன் குரு
சனி இவர்கள் கூடிய பலன்

ராஜாக்களிடத்தில் சேனு சைன்னியத் தொழில் செய்ப வன் விகட வார்த்தைகளாட் வல்லவன் சமமான அழகும் உருவமுமுடையவன் வாணிபஞ் செய்ய ஆசைப்படுவன் தீர்க்க ஆலோசித்து ஓர் காரியத்தைச் செய்பவன் குடும்ப வாழ்க்கையையுடையுவன்.

## ரவி சேய் புதன் குரு சுக்கிரன் இவர்கள் கூடிய பலன்

பிச்சான் சரீரமும் ஆடையும் பரிசுத்த முடையவன் தயாள குணமுடையவன் கண்டித வார்த்தையில்லாதவன் தணிக்கையான பேச்சு வார்த்தைகளையுடையவன் தீன பந்து எக்காலமும் தரித்திரத்தை யனுப வியாதவன் மூர்க்க குணமில்லாதவன் மேலான பதவி வாய்ந்தவன் சயனங் குறைந்தவன் பக்தியுள்ளான்.

## சேய் குரு சுக்கிரன் சனி இவர்கள் கூடிய பலன்

சேவசத் தொழில் செய்பவன் கடுமையான வசனமும் கண்டித வார்த்தைகளையுமுடையவன் எவர்களும் தன்னை வந்து வணங்கும் படிச்செய்துக்கொள்ளுபவன் தன்வரையில் மெத்த ஜாக்கிரதையோடிருப்பவன் மனவியாகூலமும் சந்தோஷமும் நிறைந்தவன்,

## புதன் குரு சுக்கிரன் சேகரப்பலன் விபரம்

## புதன் குரு இவர்கள் கூடிய பலன்

பூரண செல்வமுடையவனும் அரசர் முதலிய யாரும் மெச்சத்தக்க கல்வி சாதுர்ய முடையவனும் ஸ்ரீகள் கண்டு மயக்கத்தக்க பேரழகு வாய்ந்தவனும் மனவிசார மில்லாதவனும் நற்காரியங்களில் தன் வாழ்க்கையைச் சில்விடுபவனுமாம்.

## புதன் சுக்கிரன் இவர்கள் கூடிய பலன்

வினோதமும் விகடமும் வாய்ந்த கட்டுரைகளைக் கூறுபவனும் எவர்களையும் தன்வசமாக்கும் சத்தி வாய்ந்தவனும் ஆடல் பாடல் முதலிய சங்கீதங்கள் தேர்ந்தவனும் தைரிய சித்தனும் [illegible] முள்ளவனுமாம்.

## புதன் சனி இவர்கள் கூடிய பலன்

கல்வியில் தேர்ச்சியடைந்தவனும் கணிதசரஸ்திரயாகிய சோதிடத்தில் ஆராய்ச்சி செய்பவனும் பிரசங்கம் செய்பவனும் பூரண செல்வங்களும் தான்னியமு முள்ளவனும் தன்னை எதிர்த்தவர்களை ஜெயிக்கும் சக்தி வாய்ந்தவனும் ஆவான்.

## புதன் குரு சுக்கிரன் இவர்கள் கூடிய பலன்

சௌபாக்கிய முடையவனும் கேட்போருக்கு இல்லை என்றாதவனும் மதுரவசனமும் நன்னடைக் கையுமுள்ள களத்திரத்திரத்தையுடையவனும் அரசரால் மெச்சத்தகுந் தவனும் நயாளகுணமுடையவனும் சீக்கிரத்தில் சந்தோஷமும் விசமை முடையவனும் ஸ்ரீகளை மயக்கும் சக்தி வாய்ந்தவனும் தேவாலங்களுக்குச் செல்ல ஆசையுடையவனும் தயாள முடையவனுமாவான்.

## சேய் புதன் இவர்கள் கூடிய பலன்

பந்துஜெனசேர்க்கை இல்லாதவனும், விருத்தி இல்லாதவனுமாம் அன்றியும் ராஜாக்களுக்குக் கட்டுபடுவதோடு தான் செய்யுந்தொழில் முகாந்தரங்களில் நஷ்டமும் வியாகூலமும் உண்டாகும் வைசிய ஜெனங்களால் தனது வறுமை நோயைத் தீர்த்துக்கொள்வான் என்பதாம்.

## சேய் குரு சுக்கிரன் இவர்கள் கூடிய பலன்

மன்னர்களால் தன் ஜீவியத்தை, நடத்திக்கொள்ளுபவனும் உறவுடையவனுமாவான்தன்சொந்த கிராமங்களிலும் அன்னிய க்ஷேத்திரங்களிலும் தலைமை வகிக்கும் கீர்த்தி பிராதாக்களிடம் அன்புடையவன் தீர ஆலோசிப்பவன்.

## சேய் சனி இவர்கள் கூடிய பலன்

தராதரமறிந்தவன் எக்காரியத்தையும் ஆலோசித்துச் செய்பவன் மன்னவர்களுக்குப் பிரியமானவன் தனத்தை அதிகம் சம்பாதித்து வாழ்பவன் ஆரோக்கியங் குறைந்த வன் தபசிகளிடம் சினேகமுள்ளவன் ஞான மார்க்கங்களைக் கற்பவன் எந்நாளும் சவுக்கியமுடையவன்.

## சேய் சுக்கிரன் சனி இவர்கள் கூடிய பலன்

கெட்ட நடத்தையும் பாஷைகளையுமுடையவன் புத்ரர் களையுடையவன் அவர்களால் தனக்கு அவமானமுண்டாவ தோடு அநேக பொருள்களையும் சிலவழிப்பவன் அன்னிய ஜெனங்களுக்குக் கட்டுப்பட்டவன் மன்மத பாணங்களைச் சகியாதவன் இந்திரிய ஸ்கலிதமுள்ளவன்.

## சேய் புதன் குரு சுக்கிரன் இவர்கள் கூடிய பலன்

சாந்தம் நிறைந்த புத்திவான் சாதுக்களிடத்தும் பெரி யோர்களிடத்தும் துவேஷமுடையவன் மனைவியாகூலம் வந்தபோது சகியாதவன் ஆதரவுள்ளவன் மன பயங்கரமும் வறுமையையுமுடையவன்.

செய் தொழில் விருத்தி இல்லாதவன் மனகோபி சாந்தமில்லாதவன் மதுரவாக்குடையவன் அடிமை செய்து ஜீவிக்க வல்லவன் புராணங்களைக் கேட்க ஆசையுடையவன் ஆத்ம திருப்தியுடையவன்.

## சேய் புதன் குரு சனி
## இவர்கள் கூடிய பலன்

அனேக செல்வங்களைச் சம்பாதிப்போன் புத்திசாலி கல்வியாளன் வைத்தியம் செய்ய ஆசைப்படுவோன் நற்குணவான் சயன சம்பன்னன் மாந்திரீகம் கற்போன் தெலுங்கு முதலிய பாஷைகளைக் கற்போன் சாந்தமுடையவனுமாவான்.

## சேய் சேகரப் பலன் விபரம்
## குஜன் புதன் இவர்கள் கூடிய பலன்

சாந்தமும் தயை தாக்ஷண்ணியங்களமைந்தவன் சத்கருமங்களிலே பிரவேசிப்பவன் தீர ஆலோசிப்பவன் கணித சாஸ்திரமாகிய சோதிடம் கற்க ஆசையுள்ளவன்: வஞ்சம் உலோபமில்லாதவன் கலகப் பிரியன்.

## குஜன் குரு இவர்கள் கூடிய பலன்

வாதம் செய்வதில் மகாவல்லவன் அசட்டுத்தனமான காரியங்களையே செய்ப்வன் இந்திரனைப் போன்ற செல்வமும் அழகும் வாய்ந்த சீலன் ஸ்ரீகளின் மாயவலையிலாழ்ந்தோன் எக்காரியத்தையும் பிறரை யுத்தேசித்தே செய்பத்திருந்தவன் மனைவி பிரியன்.

## குஜன் சுக்கிரன் இவர்கள் கூடிய பலன்

நீங்காதவிசனத்தையும் பலவித எண்ணங்களுமுடைய வன். சங்கீத சுரகியானங் கற்போன் திடீரென சந்தேகம் கொள்வோன் மனதைப் பலவழியில் செலவிடு புவன் அலைச்சலுடையவன்.

## குஜன் சனி இவர்கள் கூடிய பலன்

செவிகளுக்கு இன்பத்தரத்தக்க வாத்தியங்களிலாசை யுள்ளோன், நடனம் செய்வதில் பிரியமும் வல்லவனுமா வான் சிற்சில காலங்களில் வியாபாரம் செய்து மன்னர்க ளாலும் போற்றத்தகுந்த பதவியிலிருப்பான், தீனதயாபர னென்னும் பிரக்கியாதியு முண்டாகும்.

## சேய் புதன் குரு இவர்கள் கூடிய பலன்

அவயவங்களில் பழுதுடையான் தன் மட்டில் தக்க முயற்சியோடு காலங் கழிப்பவன் ஜனங்களை ஏமாற்றும் சக்தி வாய்ந்தவன் மாந்திரீகம் செய்வதில் சமர்த்துடைய வன் சயன சுகங் குறைந்தவன் அளவிலா சினேகிதர்களை யுடையவன்,

## உடுமகாதிசை

உடுமகாதிசை என்ருல் ஒவ்வொருவரும் பிறந்த போது என்னதிசை அத்திசை சென்றதுபோக நற்பலனே அல் லது துற்பலனே கொடுக்க வேண்டிய இருப்புதிசை எவ்வ ளவு என்பதைக் கண்டு கொள்வதேயாகும் இதைத்தெரிந்து கொள்வதற்கு உதையாதி நாழிகையை லக்கின ஸ்புடமூல மாய் நன்கு அறிந்துக்கொள்ள வேண்டும். இரண்டாவது

அன்றைய தினம் தினசரி பஞ்சாங்கப்படி அன்றைய நக்ஷத்திரம் எவ்வளவு நாழிகை யிருக்கின்றனவென்று தெரிந்துகொள்ளவேண்டும் அதற்கு முந்திய நக்ஷத்திரம் எத்தனை நாழிகை வரையிலிருந்தனவென்று அறிந்த பிறகு ஆதியந்த நாழிகை லேசில் காணலாம் ஸ்ரீமுகவருஷ வசந்த ருது மேஷமாதமாகிய சித்திரை மீ" 25-ம்தேதி ஆதிவாரம் பகல் 25-நாழிகை ஜெனிததோாகளுக்கு என்ன திசை அத்திசையில் சென்றது போக பலன் தரும் வருடம் எவ்வளவு என்பதை அறியவேண்டுமாயின்.

ஷை 25-ம் தேதியில் அஸ்த நக்ஷத்திரம் நாழிகை 42 விநாடி 9-வரையில் உள்ளன.

ஷை நக்ஷத்திரத்திற்கு முன் நக்ஷத்திரமாகிய உத்திர நக்ஷத்திரம் நாழிகை 49-விநாடி 40-வரையிலிருந்தன.

60 நாழிகை கொண்டது ஒருநாள் என்றபடி உத்திர நக்ஷத்திரம் நாழிகை 49-விநாடி 40-வரையிலிருந்தால் நாழிகை 60-க்கு 49-40-போக.

நாழிகை 10 — விநாடி 20 ஆனதால் உத்திரம் கடந்து அஸ்தம் தொடங்கியது

அன்றைய நக்ஷத்திரம் — 42,, 40 இவை ஜெனன தேதியின் அஸ்தம் இருக்கும் நேரம்

ஆகமொத்தம் — 53 ,, 0 இவையே ஆதியந்த நாழிகையாகும்.

இந்த நக்ஷத்திரத்திற்கு பாதம் காணுகிற விபரம்

மூன்று நக்ஷத்திரமாகிய உத்திரத்தில்

| | |
|---|---|
| இருப்பு | நாழிகை 10 விநாடி 20 |
| ஜெனனமாகிய | நாழிகை 25 ,, 0 |

இவ்விரண்டையும் கூட்ட ... 35 20

பேர்பெரு சுக்ரன் பெருஞ்சனி என்றே
பேர்பெரும் வாரப் பெயரிவை தாமே.

என்ற சாதக சிந்தாமணி வாக்கியப்படி ஞாயிறு, திங்கள் செவ்வாய், புதன், வியாழன், வெள்ளி, சனி என ஏழு நாட்கள் கொண்டதே ஒரு வாரமென்றும், மேற்சொன்ன 7-நாட்லளுக் கதிபதியே ஏழு கிரகங்களான சூரியன், சந்திரன், செவ்வாய், புதன், குரு சுக்கிரன், சனி எனவும் சொல்லப்படும். இவ்வாறு 7 கிரகங்களும், அவரவர்கள் பலத்தாலும் குணத்தாலும் சேர்க்கையாலுமே, இப்பூமியிலுள்ள ஜீவர்களுக்கு நன்மையும்தீமையும் கொடுப்பார்கள் என்பது சாஸ்திர சித்தம் இவை ஒருபுறமிருக்க இங்கிலிஷ் மணி 24 கொண்ட (அதாவது) தமிழ் நாழிகை 60 கொண்டதையே ஒருநாள் என்றும் கொள்க, ஓரையின் விபரங்களை 24-ம் பக்கத்தில் காணலாம்,

## ஆண், பெண் விபரம்

| | | |
|---|---|---|
| ஆண் | இராசி | துன்பம் |
| பெண் | புகர் | இன்பம் |
| ஆண் | புதன் | மகப்பேறு |
| பெண் | இந்து | சந்தோஷம் |
| ஆண் | சனி | சிறை |
| பெண் | குரு | நிலைப்பெறல் |
| ஆண் | குஜன் | பகை துயரம் |

முன் கூறியபடி இலக்கினங்களுக்கும் இரண்டாவது கிரகங்களுக்கும் மூன்றாவது ஓரா நாதர்களுக்கும் ஒத்திட்டு ஆண் பெண் சொல்வதேயாம் எப்படியெனில்,

சாதாரணஸூ ஆவணிமீ 25உ சுக்கிரவாரம்
இரவு 10-க்கு மேல் ஜெனனம்

| | ல ரா சனி | | |
|---|---|---|---|
| | இராசி | | |
| | | | ஞ அ சு |
| ல சந் | | கே சந் | கு பு |

(1) இதில் குறிப்பிட்டிருப்பது மேஷ லக்கினம் மேஷம் ஒற்றை இராசி என்றும் ஆண் இராசி என்றும் முன்னமே கூறியுள்ளேன்.

(2) மேஷ ராசி காக்ஷிநாதன், குஜனாகையால் ஆண் கோள் என்றும் கூறியுள்ளேன்.

(3) அன்று சுக்கிர ஓரையாகையாலும் இரவு 10-மணிக்கு ஜெனனமாகையாலும் சுக்கிரனிலிருந்து ஓராதிபர்களைக் கணக்கிட புத ஓரையாதலால் ஆண் எனவும் கூற வேண்டும். இவ்வாறே ஒவ்வொரு லக்கினங்களுக்கும் அறிந்து கூறுதல் வேண்டும்.

## அவரவர் பிரசவ அடையாள விபரம்.

உதயாதி முடவனுடன் சேர்ந்திருக்கி
லவனுடைய திரேகம் தன்னில்
விதமான மருவு மச்சமுடையவனாம்
குரு பார்க்கில்லை என்பார்
கிதயாம லிலக்கினத்தை குஜன் ராகு
கேதுவிவர் நோக்குற்றாக்கால்
சிதயாகு அவன் திரேகத்த டையாளத்
துடனே தான் ஜெனிப்பன்றானே.

(1) சாஸ்திரப்படி ஜெனன லக்கினத்தை குஜனாவது சனி, இராகு, கேது, இவர்கள் முழுநோக்காக நோக்கினாலும் அல்லது ஜெனன ராசியிலேயாவது இருந்தாலும் அக்குழந்தை மருவு மச்சத்துடனேயே ஜெனிக்கும் என்றும் கூறுவர்.

(2) இலக்கினாபதி சனியுடன் கூடி இருக்கினும் குரு முதலிய சுபகிரகங்கள் நோக்குவரேல் மேற்சொன்ன அடையாளங்களின்றி பரிசுத்தமாய் பிறக்கும்.

(3) ஜெனன ராசியை மேற்சொன்ன சனி, குஜன் இராகு கேது இவர்கள் நோக்கினும்லக்கினாதிபதியே ஆக்ஷி உச்சம் முதலியவைகளால் பலம் பெற்றுப் பார்ப்பார்களானாலும் பரிசுத்தமாகவே ஜெனக்கும்.

(4) சூரியன், குஜன், குரு, புதன் இவர்களுக்கு வலப்புறத்திலும் மருமச்சங்கள் காணும்

(5) சூரியனாகிய மார்பிலும் சந்திரனாகில் தோளிலும் குஜனாகில் தலையிலும் புதனாகிய கழுத்திலும், குருவாகில் வயிற்றிலும், சுக்கிரனாகில் முகத்திலும், சனியாகில் துடையிலும் இராகுவாகில் முழங்காலிலும், கேதுவாகில் உள்ளங்காலிலும் அடையாளமுண்டு.

## காறகர் விபரம்

| | |
|---|---|
| சூரியன் | பிதுருகாரகன் |
| சந்திரன் | மாதுரு காரகன் (மாதா) |
| குஜன் | சகோதரகாரகன் |
| புதன் | அம்மான் வித்தை காரகன் |
| குரு | புத்திரகாரகன் |
| சுக்கிரன் | களத்திரகாரகன் |
| சனி | ஆயுட்காரகன் |
| இராகு | வயிராக்கிய காரகன் |
| கேது | ஞானமோக்ஷகாரகன் |

இவ்வாறு காரகர்களையறிந்து கிரக அடவியால் அவரவர்கள் பலாபலனைக் கூறுக.

1 ஜெனன இராசியதிபதி 11-ஆம் இடமென்னும், ஜேஸ்ட ஸ்தானத்திலேனும் ஷ க்ஷேத்திராதிபர்களோடு இருந்து 11-ஆம் இராசியை நோக்குவரேல் அந்த ஜாதக னையே ஜேஸ்டன் என்றும் சொல்லலாம், ஜேஸ்ட ஸ்தா னாதிபதி பகை நீச்சம், முதலியவைகளால் க்ஷீணம் பெற் றும் அஸ்தமய மடைந்தும் 11-ஆம் தானத்தை கொடியவர் களால் நோக்குற்றுமிருப்பரேல் இவனுக்குமுன் பிறந்தோன் மறித்துப்போனான் என்றும் கூறுவர் 11-ஆம் இராசி அதி பதி ஆக்ஷி உச்சம் சமம் நட்பு பெற்றும் தனக்கு மித்ருக்கள் க்ஷேத்திரங்களிலேனும், மித்ரு வீடுகளிலேனு மிருந்து நற் கோட்களாலும் பார்க்கப்பட்டால் இவனுக்கு முன் பிறந்த ஜேஸ்டன் உயிரோடிருக்கிறான் என்று 11-ஆம் இடத்ததி பன் தன் வலிவை எவ்விதத்திலும் இழக்காது. சுத்தமாய் இருப்பானாகில் அந்த ஜாதகன் பொதுவாய் கனிஷ்ட னென்றே கூறவேண்டும்.

2 (பிதுருஸ்தானாதிபதி) 9-ஆம் இராசி முதல் 9-ஆம் வீட்டதிபதி எந்த ராசியிலிருந்தானோ அந்த ராசி வரை யிலும் எத்தனை கிரகங்களிலிருந்தனவோ அத்தனைபேர் அந்த ஜாதகனின் தந்தையுடன் பிறந்தவராவர் சிலர் 9ஆம் ராசி முதல் அதற்கொன்பதாம் இராசியான ஜெனன ராசிக்கு 5ஆம் ராசி வரையில் எத்தனை கிரகங்களிலிருந் தனவோ அத்தனை பேர் அவன் தகப்பனுடன் பிறந்தவ ரென்பர்.

3 ஜெனன ராசிக்கு 4-ஆம் இராசி முதல் அதற்கு நான் காம் ராசிவரையிலும் எத்தனை கிரகங்களிருந்தனவோ, அத்தனை பேர் அவன் தாயுடன் பிறந்தவர் என்பர் சிலர் 4-ஆம் ராசி முதல் மாதுருஸ்தானாதிபதி எந்த ராசியிலி ருந்தானோ அந்த இராசி வரையில் எண்ணிக் கண்ட தையே தாயுடன் பிறந்தவர் என்பர்.

4 மாதுருகாரகனோடும் ஸ்தானாதிபதியோடும் எத் தனை கிரகங்கள் கூடி இருந்தனவோ அத்தனையும் அவன் பிரசவமாகும் போது அவன் தாயுடனிருப்பார் எனவும் கூறு வர் மாதுரு லக்கினத்திற்கு 7-ஆம் இடம் என்பது ஜெனன இராசிக்குப் பத்தாம் இடமாகும் அந்தப்பத்தாம் ராசியில்,

கிரகங்கள் நிற்பலன் பின் வறுமாறு :-

விளங்கு சூரியன் பத்தினில் வேந்தரா
மிக்கவிந்து விராக சம்பன்னர் சேல்
களங்கில் பூமி சமைப்பன் பிரதானியாங்
கருணன் வாகன ரத்தினனாங்குருத்
துலங்கு செல்வன் சுகஜீவி சுக்கிரன்
சூரணமந்தன் றனவானிராகு வேற்
சளங்குகன் மனிசன் கேது ஞானவான்
கர்த்தன வீமேசுர ரடிகாட்டுமே
என வீமேஸ்வரர் வாக்கியப்படி

16-ல் சூரியனிற்கில் வேந்தன் தனவான் குருபக்தி ரேவதா [பக்தி
சந்திரன் நிற்கில் புத்திமான் சூரன்
குஜன் நிற்கில் பூமியாளுவன் பிரதானி சுகவான்
புதனிற்கில் சிற்பவித்தை வித்யா ஞானமுளன் காவிய கணி தாதி வல்லமையுளன்
குருநிற்கில் செல்வமுடையன் அபிமானி புத்திரருள்ளவன் தனவான்
சுக்கிரனிற்கில் சூரன் கீர்த்திமான் பூரண அயிஸ்வரிய முடையவன்.
சனி நிற்கில் பின்புத்தி முடிக்க வல்லவன் தனம் தேடுபவன்
இராகு நிற்கில் நீசகற்ற குசலவன்
கேது நிற்கில் உற்சாக வல்லவன் ஞானம் பெருஞ்செல்வன்

இங்கு 10-ம் ராசியைப்பற்றிப் பொதுவாய் கூறியுள்ளார் குரு லக்கினாதிபதியாகவோ அல்லது7-ம்வீட்டானாகவோ (அ) அந்த லக்கினத்திற்கு சுபனும் யோகனுமாகவோ, இருந்து 10 ஆம் கேந்திரம் பெற்றால் நற் லனையே தறான் ஏனெனில் கேந்திர தோஷத்தால் கெட்டவனாகிறான் 6 8, 12, என்னும் ராசிக்குடையோர் கேந்திரம் பெற்றால் அவன் தரும் பலனுக்களவில்லை, ஒவ்வோர் இலக்னத்திற்கும் சுபன் அசுபன் பின் வருமாறு காணவும் இவ்வாறே அவன வன் சகோதரம் ஜேஸ்டன் மாதுரு மாதுலன் தந்தை பாட்

டன் பாட்டி முதலியோரின் வகை விபரங்களை யாராய்ந்து இப்பால் அந்த ஜாதகனின் நிறம் குணம் முதலியவைகளை யும் அவன் பலாபலன்களையும் பேசுமிடந்து லக்கின நிறங் களைப் பற்றியும் கிரக நிறங்களைப் பற்றியும் ஆராய்ந்து சொல்லவேண்டும். லக்கினத்தைப் பற்றியும் நிறம் முன் கூறிய பாகத்தில் காட்டியுள்ளோம் இங்கு,

மாமன் சிறுவன்றாய் தந்தை
 மரமைந்து மீரைந்தும்
பூமன்காரி மதிவெய்யோ
 னிற்கிற்புரட்கோள் நோக்கிடவே
கோமற்கேள்சேய் சனி நிற்கி
 றாயஞ் சுடர்கேள் பித மரணந்
தீ வைக்கோட் கனடலுயிரைப்
 பற்றி நிற்கிற்கிறுகின் சாம்

உதயராசிக்கு 5-ம் இடம் 10-ஆம் இடத்தில் செவ் வாய் நிற்கில் மாமனுக்கும் சனிநிற்கில் பிள்ளைக்கும் சந்திர னிற்கில் மாதாவுக்கும் சூரியனிற்கில் பிதாவுக்கும் மரண முண்டென்க கபகிரகங்கள் நோக்கின்றி சந்திரனின்ற ராசிக்கு 7ம் இராசியில் சனியாவது, குஜனாவது நிற்கில் மாதா மரணம் அடைவாள் சூரியனுக்கு 7ம் இராசியில் சனி செவ்வாய் நிற்கில் பிதாமரணம் பாபகிரகங்கள் உடலை யும் உயிரையும் பற்றி நிற்கில் பிள்ளை மரணம்.

இச்செய்யுளால் சூரியனுக்கு 7, சந்திரர்க்கு 7, இவ்வி டங்களில் சனி செவ்வாய் நிற்கில் பிதா மாதா மரணம் என் றனர் சூரியன் பிதுர்காரகனென்றும் சந்திரன் மாதுரு கார கனென்றும் முன்னமேயே சொல்லியுள்ளேன் ஆனதால் சந்திரன் தான் நின்ற க்ஷேத்திரத்திலேயே வலிபெற்று கொடிய கிரகங்கள் பாரமாலும் இருந்தால் அவள் தாய் 100 வயதோடிருப்பாள் என்பது பலராலும் ஆமோதிக்கத் தகுந்ததாகும் பாவங்கள் 12ல் 1, 4, 7, 10 என்பது கேந்ர மெனவும் 1, 5, 9 திரிகோணமெனவும் சாஸ்திரங்கள் கூறு வதோடு 10ம் இடமே மேலான கேந்திரமென்றும் திரி கோணங்களில் 9ஆம் இடமே மேலான இடமென்றும் கூறு கின்றன இன்னும் திடகிரகங்கள் கேந்திரம்பெரின் அவர்கள்

பூரண சுபர்களேயாயிலும் கொடியவரே யாவர்கள் கேந்திரம் பெரின் அவர்கள் சுபர்களே யாவார் எனவும் கூறுவர்.

## கிரக வடிவம்

| | |
|---|---|
| சூரியன் | நான்குமூலை |
| சந்திரன் | வட்டம் |
| குஜன் | துடி வடிவு |
| புதன் | முக்கோணம் |
| வியாழன் | நீளவட்டம் |
| சுக்கிரன் | அஷ்டகோணம் |
| சனி | வில்போன்றது |
| இராகு கேது | நெடியது |

## சுபர்களும் அசுபர்களறிவது

சூரியன் அரைப்பாவி பூர்வ பக்ஷத்து சந்திரன் முழு சுபன்
கிருஷ்ண பக்ஷத்துச்சந்ரன் கால் சுபன்
குஜன் முக்கால் பாவி
புதன் அரைச்சுபன்

குருமுழுச்சுபன்
சுக்கிரன் முக்காற் சுபன்
சனி இராகு முழுப்பாவன்
இராகு கேதுக்களுடன்சந்திரனும் புதனும் கூடில் கால் பாவி எனவும் கூறுவர்.

சூரியன் 10ஆம் ராசியி லிருக்கில் பூரண வலியுண்டு
நான்கா மிராசியில் சந்திரனும் சுக்கிரனும் சேரில் வலியுண்டு
புதன் குரு இவ்விருவரும் லக்கின கேந்திரம் பெரில் நல்ல வலிவுண்டு.

சனி இராகு இவ்விருவரும் சப்த மாராசியில் சேரில் நல்ல வலியுண்டு
குஜன் ஜன்மகேந்திரம் பெரில் வலியுண்டென்றும் கொள்க,

## பொதுப்பலன்

சோதிமயமாயுதய நாயகனும் கேந்திரம்
நீதியுள மன்னவனும் நிற்கதிரிகோணம்
கியாதியுடன் தேடிடுவன் கோடி செம்பொன்னும்
ஆதியினில் வேதகுரு ஓதியதுதானே

சோதிமயமாய் விளங்கும் ஜெனன இராசியாதிபதி கேந்திரம் பெறவும் 6 9 என்னும் இடங்களில் குரு நிற்கவும் அந்த ஜாதகன் பிரக்கியாதியோடு கோடி செம்பொன்னைத் தேடி வாய்ந்திருப்பான் எனவே தங்களை யறிந்த மேதாவிகள் கூறுவார்.

இசைந்தோர் ஜென்மந்தன்னில்
இன்புறு குருவே சேர
உசந்திடு கதிரோன் திங்கள்
ளோங்கு பாக்கியத்தில் சேர
கசந்திடு கோபமில்லான்
கருத்துடன் நோக்கவல்லான்
அசந்திடும் அலவைக் கூட்டம்
அறிதறிதாகும் பாறே

## பொது பாவக பலன்

ஜெனன இராசியைக்கொண்டு 'நிறம் சொரூபம் மத்தகம் கீர்த்தி மூர்த்தி என்பதைப்பற்றியும் இன்னும் அனேக விஷயங்களைப்பற்றியும் பேசவேண்டுமென முதல் பாகம் 16-ஆம் பக்கத்தில் சொல்லியுள்ளோம்.

செம்மை நிறக்கதிரவனும் சேர்ந்திட உதயந்தன்னில்
தம்மையும் வெல்வாருண்டோ தாரனிதனிலுள் ளோர்க்கு
உண்மையாய் தருமம்தானம் ஓங்கவே செய்வான் பின்னும்
பின்மையாய் இருப்பானேன்றே நவிலுவர் நூல்வல்லோரே

செம்மை பிரகாசத்தையுடைய சூரியன் ஜெனன ராசியில் இருப்பானாகில் அவனை ஜெயிக்க இப்பூமியிலுள்ளோரால் முடியாது மேலும் தானதரும பரோபகாரங்களைச் செய்வதோடு சவுக்கியத் தோடிருப்பா னென்றும் சாஸ்திர வல்லவர் கூறுவார்.

கலைமதி இருந்த வீட்டோன் கதிரவன் கூடச்சேர
அலைகுவர் அம்மான் வர்க்கம் ஐயிருமாதந் தன்னில்
மலைகுவர் சுபகோள் நோக்க மடியவுமாட்ட கோட்கள்
நிலையதைப் பார்த்து இன்னும் நிகழ்த்துவாய் பலனைத்
(தானே

சந்திரன் நின்ற வீட்டுக்குடையவன் சூரியனுடன் சேர அவன் ஜெனித்த 10 மாதம் வரையில் அம்மான் வர்க்கத்தாருக்கு அலைச்சலும் புத்தி குறைவும் ஏற்படும் சுபகோட்கள் நோக்கில் கெண்டம் செய்யாது இவை கிரக அடவியைக் கொண்டே உறை செய்ய வேண்டும்.

அரசனார் பலத்து தயந்தன்னில் சேர
 வதற்குடையோன் திரிகோணந்தன்னில் சேர
சரச முளசுக்கிரனும் பாக்கியம் சேர
 சாற்றிடுவார் இவனுக்கு திர்க்கவாயுள்
அரசுசெய்யும் வேந்தருக்குச்
 சமானமாவான்
அழகுடையோன் புகழுடையோன்
 அரசனாமே

ஜெனன ராசியில் குருபலம் பெற்று நிற்க லக்கினாதிபதியும் சுக்கிரனும் திரிகோண ஸ்தானத்தில் அமர்ந்திருக்க அந்த ஜாதகன் அரசாக்ஷி செய்யும் வேந்தர்களுக்குச்சமானமுடையவனும், அழகுடையவனும் தீர்காயுளுடையவனும் அரசனென்றும் சொல்லலாம்.

குறித்த லக்கினத்தில் பாம்பு குளிர்மதி விறயமோ
பறித்தபங் கமத்திற்சேயும் பகைப்பற்று நிற்பானாகில்
பறித்தோர் அம்மான் வர்க்கம் பகையுண்டு வாழ்வு நில்லா
நெறித்திடுமொரு பத்தாண்டில் நிஷ்டூரம் பலவுண்டாமே

ஜெனன ராசியில் இராகுவும் 19-ல் சந்திரனும் 5-ல் அங்காரகனும் நிற்கில் அம்மான் வர்க்கத்தாற்கு பகையும் வாழ்வு குறைவும் இவன் ஜெனித்த 10 வருடத்திற்குள் பல இடையூருண்டாகும்.

ஒன்பதுக்குடையோன் றன்னோடொளிர்மதி இருக்கப்
இன்புரு குருவும் கூட இவர்க்குநால் பூமன் சேர் (பார்க்க
அன்புள இவன்பிதா வோடறுவர் என்றுரைக்கலாகும்
தம்பதி வலுத்தாராகின் றன்யமாய் வாழ்வார்தானே

ஒன்பதாம் விட்டதிபதியோடு சந்திரன் சேரினும் பார்க்கிலும் குருவும் மேற்சொன்னவர்களோடு சேர்ந்திருக்க அவர் நின்ற ராசிக்கு நான்காம் ராசியில் பூமன் சேர்ந்தி ருக்க அவன் தந்தையோடு பிறந்தவர் ஆறுபேர் என்றும் 9-ம் வீட்டிற் குடையோன் வலுபெற்று இருப்பானாகில் அவர்கள் யாவரும் சவுக்கியத்தோடு வாழ்வார்கள் என்றும் சொல்வாயாக.

உதயாதி விறயமோ ஒரு நான்கிற் பாவாசோ
சிதயாபலிரண்டிற் காரிசீற்ற மூற்றிருகக் எட்டில்
மதியோடு பாம்புசேர மானிலத் துதித்தநாளை
விதியற்று மாய்வனென்று மேலவர் சொன்னவாக்கே

ஜெனன இராசியாதிபதி விரயஸ்தானத்திலிருக்க நான் காம் ராசியில் பாவகோட்களும் இரண்டில் சனியும் 8-ஆம் ராசியில் சந்திரனும் ராகவும் சேர, அந்த ஜாதகனுக்கு ஆயுள் மத்திபமென்று சோதிடத்தோர் கூறுவார்.

மந்தனு மிராகுகூடி மகிழ்ச்சியாய் குடும்பமோடு [னில்
தொந்தமாய் மதிசேய் பார்க்க துயர்தரும் குடும்பந்தன்
அந்தமாய் செல்வநாசம் அலைகுவான் தேசமெல்லாம்
வெந்திடும் அவனில்லந்தான் விரயமே மிகவுண்டாமே

சனியும் இராகுவும் இரண்டாம் இராசியிலிருக்க அவனை சந்திரனும் அங்காரகனும் பார்க்க அவன் குடும் பத்தில் துயர முண்டாவதோடு செல்வமும் நாசமாக்கும் அந்த ஜாதகனும் ஊருராய்திரிவான் அவனில்லம் தீயால் வெந்து போம் விரயமே அதிகம் காட்டும்.

ஆறுமீராறு தன்னில் அம்புலி கதிரோன்சேர
கூறுவர் ஈனமென்று கொடும்பிணி விரோதமென்று
சீறுள அன்னை தந்தை செல்வமும் குறைவதோடு
வேறுவே ராவரென்றார் வேதியருறைத்த வாக்கே

ஜெனன ராசியில் அல்லது 6, 12 இவ்விடங்களில் சூரியனும் சந்திரனுமிருக்க அவன் பிதுர்மா துருகளுக்கு விரோதம் பிணி திரவியநாசம் இவைகளுண்டாவதோடு தாய் தந்தையரும் வேராவர்.

சுங்கனோ டரசன் சேர சூல்மனைக் குடையோன்றானும்
அங்கவர் கேந்திரிக்க அரசாளும் யோகமாகும்
பொங்கமாய் மன்னராலே புகழ்ச்சியும் வாழ்வுமுண்டு
இங்கித மனையாளாலே எங்கினும் புகழ்ச்சியாமே

சுக்கிரனோடு குரு சேர அவர்கள் நின்ற ராசிக்குடைய வர்களும் கேந்திரங்களிருக்க அந்த ஜாதகனுக்கு அரசாளத்தக்க ராஜயோகமென்றும் அரசர்களால் புகழும் செல்வமும் உண்டாவதோடுதன் மனைவியாலும் கௌரவம் உண்டு.

வெண்மதியால் நிந்த வியாதியும் வயிர்போக்காகும்
உண்மையாய் திரேகந்தன்னில் ஓங்கிய வடுவுகாட்டும்
புண்ணிய விறயமோ பாலுடன் விதியுமற்பம்
புண்ணியகுரு வேகண்டால் போய்விடும் தோஷமெல்லாம்

சந்திரன் 6.ல் நிற்க வயிர் கழிதலும், திரேகத்தில் வடு உண்டாதலும் வியாதியும் உண்டு மேற்படி சந்திரன் 12-ல் நிற்கில் அவனுண்னும் பால் அர்ப்பமென்றும் ஆயுளும் அர்ப்பமாம் குருநோக்குவரேல் எல்லாதோஷமும் பரிகாரமாகும்,

## * 7-பக்கத்தின் தொடர்ச்சி

## மனுஷ கணம் காட்டும் ஜாபிதா

| | |
|---|---|
| உரோகணி | திருவாதிரை |
| பரணி | பூரம் |
| உத்திரம் | பூராடம் |
| உத்திராடம் | பூரட்டாதி |
| உத்திரட்டாதி | |

இவை 9-ம் மனுஷ கணம்

| | |
|---|---|
| மிருகசிரம் | திருவோணம் |
| புனர்பூசம் | இரேவதி |
| பூசம் | அஸ்வனி |
| அனுஷம் | அஸ்தம் |
| சுவாதி | |

இவை 9.ம் தேவகணம்

| | |
|---|---|
| விசாகம் | ஆயில்யம் |
| கேட்டை | அவிட்டம் |
| சித்திரை | சதயம் |
| மூலம் | மகம் |
| கார்த்திகை | |

இவை 9-ம் இராக்ஷஸகணம்

## கணப் பொருத்தம்

ஸ்திரீ புருஷர்கள் ராக்ஷதகணமும் தேவகணமும் யிருக்கின் சண்டை சச்சரவு, மனஸ்தாபம், கவலை, துன்பம் முதலியவைகளைக் காட்டும்.

ஸ்திரீ புருஷர்கள் இராக்ஷத கணமும், மனித கணமு மாகிய அற்ப ஆயுள் துக்கம் மனோபீதி முதலியவைகளுண் டாகும்.

ஸ்திரீ, புருஷர்கள் ஏக கணமணமாயிருக்கின் உத்த மாகும்.

சிலர் தேவகணமும் மனித கணமுமாகில் உத்தமமெனக் கூறுவதுண்டு மேலேசொன்ன கணப் பொருத்தங்களில் ஸ்திரீ என்ன கணம் எனவும் புருஷன் என்ன கணமெனவும் ஆராய்ந்து கூறுவது மிக்க சிலாக்யம் அன்றியும் புருஷ னுக்கு மனைவி சத்துருவா அல்லது மனைவிக்குப் புருஷன் சத்துருவா வெனக்கண்டு நிர்ணயிப்பது உத்தமம்.

## ராசி கிரகப் பொருத்தம்

ஸ்திரீ புருஷர்களுடைய ஜாதக லக்கின மறிந்து அவ் விருவர் லக்கினத்திற்கும் ஸ்திரீ லக்கினாதிபதிக்குப் புருஷ லக்கினாதிபதிக்கும் சத்ரு மித்ரு அறியவேண்டும். சத்துரு வாகில் மத்திபமென்றும் மித்துருவாகில் உத்தமமென்றும் கூறுவர்.

## சத்ரு மித்ரு அறியும் விதமாவன

| | | |
|---|---|---|
| சூரியனுக்கு | பகைவர் | சுக்கிரன், சனி |
| குஜனுக்கு | ,, | புதன் |
| புதனுக்கு | ,, | சந்திரன் |
| குருவுக்கு | ,, | புதன், சுக்கிரன் |

சுக்கிரனுக்கு பகைவர் சூரியன், சந்திரன்
சனிக்கு ,, சூரியன், சந்திரன், குஜன்
(சந்திரனுக்கு பகைவரில்லை)

பெண்ராசி முதல் புருஷலக்கின வரையில் எண்ணிவர 7, 8, 9, 10, 11, 12-வரின் உத்தமம்.

அதனுள் 6 புருஷனிருக்கும் நக்ஷத்திரமும் ஸ்ரீ நக்ஷத்திரமும் அறிந்து புருஷ நக்ஷத்திரமிருக்கு மிடத்திற்கு ஸ்ரீ நக்ஷத்திரமானது கீழே இருக்கவேண்டும் அல்லது மேலே சரியாக இருந்தாலும் ஆகாதாம். சரியாக இருக்கின்றன நாதமும் காலிலிருந்தாலும் தனநாசம் சிரசிலிருந்தால் தன் புருஷன் பேச்சை மீறி நடப்பாள். கழுத்திலிருந்தால் தன் கணவனிறந்து போவான், வயிற்றிலிருந்தால் புத்திர நாசமாகும். துடையிலிருந்தால் புத்திர சந்தானமிராது புருஷனுக்கு கீழ் வரிசையிலெங்கிருந்தாலும் உத்தமம் என்பார்.

## சாதகத்தைக் கொண்டு பார்க்கும் விபரம்

ஸ்திரீ லக்கினமெதுவோ அந்த ராசிக்கு 1, 7, ௨, 8 இவ்விடங்களில் சனி ராகு கேது செவ்வாய் இவர்கள் அவள் புருஷன் ஜாதகத்திலிருக்க கூடாது சுபர்களிருக்கலாம் இவ்விதமே புருஷலக்கினத்துக்கு 1, 2, 7, 8-ம் ராசிகளில் ஸ்திரீ ஜாதகப்படி ஷ பாவங்களிருக்கலாகா மேல் சொன்ன இடங்களில் பாவகோடிகள் 1ல் இருந்தால் பல துன்பமுண்டாகும் இரண்டிலிருந்தால் தரித்திரம், 7-ல் இருந்தால் கணவனிறந்து போவான் அல்லது ஸ்திரியாவது இறந்து போவாள் 8ல் புருஷனுக்கு இருந்தால் ஸ்திரீக்கு ஆகாதெனவும் ஸ்திரீகளுக்கிருந்தால் புருஷனுக்கு ஆகாது மேற்சொன்ன இடங்களிலேயே பாவங்கள் உச்சம் பெற்றிருந்தால் தற்கா வரிசையாகாதெனவும் ஆக்ஷி பெற்றிருந்தால் அரைபாகமாகா தெனவும் நட்புபெற்றிருந்தால் கால் வரிசையாகா தெனவும் பகைநீச்சம் அஸ்தமயம் முதலியவைகளாகில் முன்கொடிய தெனவும் கூறுக மேற்சொன்ன பலன் குஜனோடு சேராத பாவிகளுக்கேயாம் குஜனோடு சேர்ந்தால் கொடியதிலும் கொடிதாம். மற்றும் கணம் விருக்ஷம், பக்ஷி யோனி ரஜுவசியம் தீர்க்கம் இவைகளை தினசரி வருட பஞ்சாங்கத்திலும் மற்றும் அநேக நூல்களி

லும் கூறப்பட்டிருப்பதால் இதில் சுருக்கமாய் விளக்கப்பட்டன இத்துடன் ஸ்திரீபுருஷர்கள் ஜாதகங்களைக் கொண்டு அஷ்டவர்க்கு முதலிய கணித ஆராய்ச்சியால் ஏற்படும் கெண்டாகால நக்ஷத்திரமறிந்து கோசார ரீதியாய் கிரக சஞ்சார காலங்களில் ஏற்படும் பலனும் திசைபுத்தியால் இவ்விருவர் ஜாதகத்தையும் ஒத்திட்டு கிரக வலிவால் பலனை தருவானெனவும் அப்பலனை தடுப்பாரெனவும் ஆராய்ந்து கூறுதல் வேண்டும்.

## மகேந்திரப் பொருத்தம்

ஸ்திரீ நக்ஷத்திரம் முதல் புருஷன் நக்ஷத்திரம் வரையில் வரிசையாய் எண்ணிவர 1, 4, 7, 10. 13, 16, 19, 22, 25, வரில் உத்தமமென்றும் 2, 3, 5, 6, 8, 9, 11, 12, 14, 15, 1‹, 18, 20, 2, 2, 24, 26, 27 இவை மத்திபமெனக் கொள்க.

ஸ்திரீ நக்ஷத்திரம் முதல் புருஷ நக்ஷத்திரம் வரையில் எண்ண 13 நக்ஷத்திரத்திற்குமேல் ஏற்பட்டால் உத்தமமாகும்.

## யோனி பொருத்தம்

இவை இன்ன மிருகத்திற்கு பகை எனல்.

| மிருகம் | பகை | மிருகம் |
|---|---|---|
| யானைக்கு | ,, | மனிதர் |
| குதிரைக்கு | ,, | பசு |
| மானுக்கு | ,, | புலி |
| பாம்புக்கு | ,, | ஆடு |
| குரங்குக்கு | ,, | நாய் |
| எலிக்கு | ,, | பூனை |

யோனிகளில் இரண்டும் ஆண் யோனியாயில் மத்திபம் பெண், பெண் யோனியாயும் ஆண், ஆண். யோனியாயுமிருக்கின் உத்தமம்.

## இராசி வசிய பொருத்தம்

இவை ஒன்றுக்கொன்று வசியமாகையால் ஸ்திரீ புருஷர்களுடைய ராசிகள் கீழ்கண்டவாறு யெது உத்தமம் அல்லாதவை மத்திபமெனக் கொள்க

| | | |
|---|---|---|
| மேஷம் | சிங்கம் விருக்ஷிகம் | வசியம் |
| இடபத்துக்கு | கடகம் துலாம் | ,, |
| மிதுனத்துக்கு | கன்னி | ,, |
| கடகத்துக்கு | விருக்ஷிகம் தனுசு | ,, |
| சிங்கத்துக்கு | மகரம் | ,, |
| கன்னிக்கு | ரிடபம் மீனம் | ,, |
| துலாத்திற்கு | மகரம் | ,, |
| விருக்ஷிகத்துக்கு | கடகம் கன்னி, | ,, |
| தனுசுக்கு | மீனம் | ,, |
| மகரத்துக்கு | கும்பம் | ,, |
| கும்பத்துக்கு | மீனம் | ,, |
| மீனத்துக்கு | மகரம் | ,, |

## மரப் பொருத்தம்

பலாமரம் புன்னைமரம், நாவல்மரம் மகிழமரம் மாமரம் இலுப்பமரம் ஆலமரம் அத்திமரம் மாதுளை மரம் பிராயமரம் இவைகளெல்லாம் பாலுள்ள மரமெனப்படும்.

## மற்றவை வயிரமாகும்

புருஷன்:-வயிர மரமும் பெண்பால் மரமாகில் புத்திரருண்டு.

பெண்:-வயிரமும் புருஷன் பால் மரமுமாகில் மலடு எனப்படும்.

இருவரும் வயிரமாகில் புத்திரதேசம்

இருவரும் பால் மரமாகில் உத்தமம்.

## பக்ஷி பொருத்தம்

| | |
|---|---|
| மயிலுக்கும் கோழிக்கும் பகை | வல்லூறு |
| வலியனுக்குப் பகை | ஆந்தை |
| ஆந்தைக்குப் பகை | வலியன் |
| வல்லூருக்கு வலியனொழிய | மற்றவைகள் |

## கோக்ஷாரம்

இஃது ஜெனன நக்ஷத்திரத்திற்கு ஏற்படும் இராசி யறிந்து சொல்லவேண்டிய பலனாகும் இவை ஸ்திரீகளுக்கும் புருஷருக்கும் பொதுவாக சொல்லியதாகும். சூரியன் ராசி 1-க்கு ஒருமாத வாசம் செய்வான் அதில் வைபோக காலம் நாள் 5 ஆகும்.

## சூரியன்

சூரியன் 1-ல் இருந்தால் தேகபீடை உஷ்ணம் பயங்கரம் இவைகளுண்டு 4-ல் நின்றால் சுகக் குறைவு தன்கைப் பொருள் விறயம் மாதாவுக்கும் தனக்கும் துவேஷம் 5-ல் இருந்தால் சாமான்கள் விற்குதலும் புத்திமலரச்சல் சயன குறைவு இவைகளுண்டு 7-ல் இருந்தால் நித்திரை பங்கம் வெளியிடம் போக்குவரத்து, மனஸ்தாபம், களத்திரவிரோதம் 8ல் இருந்தால் பிணி சண்டை சச்சரவு தன வர்க்கத்தால் பகை இவைகளுண்டு 12ல் இருந்தால் வருமான குறைவு அதிகச்சிலவு அன்னியகிராமம் செல்ல எத்தனம் இவைகளுண்டு 7மிடத்தில் களத்திர விரோதமென்று சொல்லியதை புருஷராகில் களத்திரத்திற்கும் பெண்களாகில் தன் கணவனுக்குமுண்டு இவையாவும் வயது விபர மறிந் துரைக்கவேண்டும்.

## சந்திரன்

சந்திரன் இராசி ஒன்றுக்கு இரண்டேகால் நாள் வாசம் செய்வான் அவ்வரிசைப்படி இரண்டிலிருந்தால் குடும்ப துவேஷம் பூஷண விறயம் துக்கம் இவைகளுண்டு நாலிலிருந்தால் திரேக ஜாட்டியம் சீதள சம்மந்த வியாதி பெண்களால் மனஸ்தாபம் 5-ல் இருந்தால் அலைச்சல் திரிச்சல், இருந்தால் பயம் 8-இல் இருந்தால் தன் இல்லத்திலேயே

மனஸ்தாபமும் ஓர் காரியத்தை நாடி செல்லுதலும் அவை அபஜயமாம் 12-ல் இருந்தால் விறயம் போகக் குறைவு கல்லடி இவைகளுண்டாகும்.

## குஜன்

குஜன் ராசி ஒன்றுக்கு மாதம் 1 நாள் 15 மாசம் செய்வான் அவனுக்கு பார்வை நாள் 8-ஆதலால் அவன் தரும் பலன் விபரம் 1-ல் இருந்தால் மனஸ்தாபம் இடபேதகம் பல விதமான தொந்தரவு கடன் மூல வியாகூலம் இரண்டிலிருந்தால் தனநஷ்டம் இஷ்ட ஜனப்பகை குடும்ப விவகாரம் நாலிலிருந்தால் தன் சுகத்திற்கு ஓர் விதமான தொந்திரவு பூஷண விறயம் நாற்கால் ஜீவநாசம் 8-ல் இருந்தால் பெண்கள் மூலமான சண்டை அதனால் விஷேசப்பகை பத்திலிருந்தால் செய்தொழில் பின்னம் நினைத்த காரியம் அப்ஜெயம் நூதன இடசேவகம் 12 லிருந்தால் அன்னிய தேசங்களுக்கு செல்லுதலும் தான் சென்ற இடத்தில் காரிய விக்கினமும் சிவாலய தரிசனமுமாம்.

## புதன்

புதன் இராசி ஒன்றுக்கு 1 மாதம் வாசம் செய்வான் அவனுக்கு பார்வை 7-நாள் ஆகும் புதன் ஜென்மத்திலிருந்தால் வித்யாய பின்னம் கலகம் சயன சுககுறைவு தனது வர்க மூலபகையுண்டாகும் மூன்றிருந்தால் சகோதிரரால் பல கஷ்டமும் சிநேகித விரோதமும் கவனபிழை இவைகளுண்டு ஐந்திலிருந்தால் மாதுர் ஜெனங்களினால் வருத்தமும் தசையைப்பற்றிய நோயும் உண்டாகும் 7 லிருந்தால் அலைச்சலும் நித்திரை குறைவு வாகன விறயம் தொடுத்த காரிய அபஜெயம் 9லிருந்தால் வியாபார அர்ப்பம் வைஷ்ணவ ஜெனதுவேஷம் இவைகளுண்டாகும் 12ல் ! இருந்தால் செய்தொழில் நஷ்டம் லாவாதேவிகளால் விக்னம் இவைகளுண்டு.

## குரு

குரு இராசி ஒன்றுக்கு ஓர் வருடம் வாசம் செய்வான் அவனுக்கு பார்வை காலம் மாதம் 2 குரு ஜன்மத்திலிருந்தால் அடிமைசெய்தல் மனநோய் புத்திரவருத்தம் கூட்டாளிகளால் வருத்தம், மூன்றிலிருந்தால் வியாதி தன் பிதுர்

வகை கர்மம் எத்தேச சாலமும் வியாகூலத்தோடிருத்தல் அன்னிய ஜனப்பகை பொருள் விறையம், நான்கிலிந்தால் அலைச்சல் சுககுறவு பூஷண விறயம் மனபயங்கரம் அரசர் களால் தான் தொடுத்தகாரிய விக்கினம் அன்னிய கிராம சஞ்சாரம், பத்திலிருந்தால் ஜீவன மூலமான வியாகூலம் கஷ்டம் ராஜாக்கள் மூலமான வழக்கு தொடுத்தல் அவை விக்கினமாகுதல் முதலிய பலன் நடக்கும்.

## சுக்கரன்

சுக்கிரன் இராசி ஒன்றுக்கு ஒரு வாசம் செய்வான் அவன் பார்வை காலம் நாள் 7 சுக்கிரன் 3-ல் இருந்தால் பெண்கள் அல்லது களத்ர மூலமான வியாகூலமும் பொன் பூஷண நஷ்டம் முதலிய வைகளுண்டாகும். 6-ல் இருந் தால் தெற்கு திக்கிலுள்ள ஜனங்களால் பகையும் அவர் களால் பலப்பொருள் விறயமும் உண்டாகும், பன்னிரண்டி லிருந்தால் அபவாத நிந்தையும் வாகனத்தால் பொருள் நஷ்டமும் பயிர்மூலம்பலதகுறவும்உண்டாகும்1—2-ல்இருந் தால் தன் களத்தில் தன்னைவிட்டு நீங்குதல் ஆபத்தால் திரேகபிணியும் மேல் அதிகாரிகளால் பகை முதலியவைகள் உண்டாகும்,

## சனி

சனி இரண்டரை வருடத்திற்கோர் முறை ஒவ்வொரு ராசிக்கு வருவான் இவனுக்கு பார்வையாத 6 சனி குஜன் மத்திலிந்தாலும் இரண்டு பன்னிரண்டு இவ்விடங்களிலி ருந்தால் ஏழரை நாட்டு சனியன் என்று சொல்லுவார்கள் இதனை மிகக் கொடியதென்றே நினைக்க வேண்டும் அனேக சோதிடநூலறிந்தோரும் அதனைப்பற்றி அளவிட முடியாத கொடிய துன்பமென் றுரைத்திருக்கிறார். எப்படி யெனில்

தொழுகை விலங்கு தூண்டில்
  தூக்குமே வருவதோடு
இழுமறியவ மானபங்கம்
  இல்லரத்துடன் வழக்கு
அழுகையின் மென்மேல் துக்கம்
  ஆங்கார மிகவுண்டாமே

எனவும்.

பாரப்பா பனிரெண்டு ஜென்மம் ரெண்டில்
பாங்கான முடவன் சஞ்சார நாளில்
சீரப்பா சிரநோயும் அம்மை பேதி
சிவாசிவா ஜலபயமும் பொருளும் தேசம்
கூரப்பா குடியோடிப் போகச் செய்வான்
கொற்றவனே குடும்பத்தில் களவுபோகும்.
வீரப்பா வெகுபேர்க்கு கொடி யோனாகி
விளங்குவான் புவிதனிலே விளம்பக்கேளே

எனவும் புலிப்பாணி முனிவர் கூறியிருக்கிறார். இவை வெள்ளை சொற்களாகையால் உரை எழுதவில்லை

முன்சொல்லிய சனி 4-ல் இருந்தால் சவுக்கிய குறைவு அகால போஜனம் கிருஷிதான்ய பலித குறைவு இஷ்ட ஜென விரோதம் ஆளடியார் பின்னம் இடபேதகம் இவைகளுண்டு 5-ல் இருந்தால் ஸ்திரீ மூலமான நோய் அகால மிருந்து போஜன வெறுப்பு இவைகளுண்டு 8-ல் சனி இருந்தால் கெண்டாதி பிணி பீடைகளும் வழக்குவாது 10-ல் இருந்தால் தன்பதி விட்டேகுதல் வியாதி தொடுத்த கரரியம் சுபஜெயம் வசனம் பொருள் விரயம் மனைவி தன் வீட்டை விட்டேகுதல் இவைகளுண்டு.

## இராகு; கேது

இராகு கேதுக்கள் இராசி ஒன்றுக்கு ஒண்ணரை வருடம் வாசம் செய்வான் அவர்கள் பார்வைகாலம் மாதம் 3-ஆகும். இராகு கேதுக்கள் ஜென்மத்தி லிருந்தால் விஷப் பிணியும் அபவாதமான நிந்தையும் வஸ்திர ஆபரண விறயமும் தான்னிய நாசமுண்டு, இரண்டிலிருந்தால் நம் பூஸ்திக்கு பல கஷ்டங்களும் குடும்பம் வேராகுதலும், 4-ல் இருந்தால் தன் சவுக்கியத்திற்கு ஓர் விதமான பின்னமும் திராப் பிணியும் உண்டு, 5-ல் இருந்தால் அலைச்சல் திரிச்சல் வழக்குவா துண்டாயினும் பிற்காலங்களில் ஜெயமுண்டு 8-ல் இருந்தால் சண்டையால் காயமுண்டாகுதலும் கொடிய துன்பங்களுண்டாகும். 10-ல் இருந்தால் காரிய விக்கினம் உத்தியோக பின்னம் 12-ல் இருந்தால் விறயம். பெண்கள் கலகம், கண்ணோய் விஷந்தீண்டல் முதலிய பலனுண்டாகும்.

நவக்கிரகங்கள் நற்பலன் தரும் க்ஷேத்திரங்கள் :—

| | |
|---|---|
| சூரியன் | 3 6 10 11 10 11 |
| சந்திரன் | 1 3 6 7 |
| குஜன் | 3 6 11 |
| புதன் | 2 6 8 10 11 |
| குரு | 2 5 7 9 11 6 9 11 12 |
| சுக்கிரன் | 1 2 3 4 5 |
| சனி | 3 6 11 |
| இராகு கேது | 3 6 11 |

இங்கு நெம்பர்கள் எழுதிய ராசிகளில் அந்தந்த கிரகங்கள் வறின் நல்ல உத்தம பலனே உண்டாகும்.

## காலச் சக்கரம்

கால சக்கரங்களில் முக்கிய கிரகங்களாகிய சூரியன் சந்திரன் குஜன் புதன் குரு சுக்கிரன் சனி என ஏழு கோட்களுக்கும் முறையால் தோன்றிய காலக்கரம் என்பன வற்றைக் கூறுமிடத்து வலஓட்டெடன்வும் இடஓட்டெனவும் இரண்டு வகைப்படும். அவற்றுள் விவரங்கள் பின் வருமாறு.

## வலவோ இடவோட்டு நாட்கள்

அஸ்வனி பரணி கார்த்திகை புனர்பூசம் ஆயில்யம் அஸ்தம் சித்திரை சோதிமூலம் பூராடம் உத்திராடம் பூரட்டாதி உத்திரட்டாதி ரேவதி என 15-நக்ஷத்திரங்களும் வல ஓட்டெனவும் உரோகணி மிருகசிரம் திருவாதிரை மகம் பூரம் உத்திரம் விசாகம் அனுஷம் கேட்டை திருவோணம் அவிட்டம் சதயம் இவை 12 இடவொட்டெனவும் கூறுவர்.

## (செய்யுள்)

வலவோட்டு மேடமுதன் மீனவரை நடக்கும்
மறுபடியும் மேடமுதற் கற்றும்
சொல்லவேண்டு மிடவோட்டு விருக்ஷிகமே முதலாய்
தூயத னுசுவரை நடக்கும் தொடர்ந்து தான்பின்னும்

குலவு விருக்ஷிக முதலாய் வழி முறையிற் செல்லும்
கூறும்வல வோட்டெல்லாம் வலபாகத் தியயும்
இலகுமிட வோட்டெல்லா மிடமாகப் பற்றும்
இவ்வண்ணம் சிவனுமை யாட்சியம் பியசூத்ரமே

சிவன் உமையவளுக் குறிய கால சக்கர விபரத்தை சொல்லுமிடத்து வலவோட்டென்பது மேடம் முதல் மீனம் வரையில் நடக்கும் மறுபடியும்வலமாக மேடராசி முதலாகச் சுற்றும் இடவொட்டுடென்பது விருக்ஷிக முதல் தனுசு ராசி வரையில் அடர்ந்து செல்லும் மறுபடியும் விருக்ஷிகம் வரையில் செல்லும் வலவோட்டெல்லாம் வலமாகச்சுற்றுமெனவும் இடவொண்டெல்லாம் இடமாகச் சுற்றுமெனவும் கூறினார்.

வீமேஸ்வர உள்ளமுடையான் என்னும் நூலுடையார் வலவோட்டெல்லாம் விருக்ஷிகம் முதல் தனுசில் நின்று மேஷத்தில் பாயும் எனவும் பொதுவாய் கூறியுள்ளார்.

(செய்யுள்)

சக்கரத்தின் திசை வருடந்தான்டுத்துக்கூறிற்
றகுமேடம் விருக்ஷிகத்துக் கேழாண்டதாகும்
மிக்கவிடபக் கோளுக் கெண்ணிரண்டதாகும்
மிதுன கன்னிக் கொம்பதாம் ரெண்டிருபத் தொன்றாம்
தொக்கசிங் கந்தவக்கைந்தாஞ் சிலைமீனம் பத்தாம்
சொலுமகர கும்பத்துக்கொரு நாலாண்டென்பர்
வைக்குமொரு திசைதன்னிற் பொசிக்கின்ற கோட்கள்
வருடத்தை இன்னதென வகுத்துரைப் பார்மாலோ

கால்சக்கிர வருடத்தைச் சொல்லுமிடத்து மேஷம் விருக்ஷிகத்துக்கு (குஜனுக்கு) 7 வருடமும் ரிடபம் துலாத்துக்கு (சுக்கிரனுக்கு பதினாறு வருடமும் மிதுனத்திற்கும் கன்னிக்கும் (புதனுக்கு) 9 வருடமும் கருகத்திற்கு (சந்திரனும்) 21 வருடமும் சிங்கத்திற்கு (சூரியனுக்கு) 5 வருடமும் தனசு மீனத்திற்கு (குருவுக்கு) 10 வருடமும் மகர கும்பத்திற்கு சனிக்கு நான்கு வருடமும் என்று கூறுவர். இவ்வருடங்களில் அவரவர்கள் பொசிக்கும் விபரம் பின்வருமாறு இதனை முதல் பாகம் 48ம் பக்கத்தில் சக்கர ரூபாயுங் காணலாம்.

## பரமாயிசு விபரம்

இலங்கியதோர் மேடசிங்கந் தனுசுக்கு நூறாம்
இடப கன்னி மகத்துக் கெண் பத்தைந்தாம்
துலங்குகின்ற மிதுன துலாம் கும்பத்துக்கே தான்
தொகை வருடமெண்பத்து மூன்றாகச் சொல்வர்
நலங்கிளரும் கர்கடக விருட்சிக மீனுக்கே
நண்ணுமெண் பத்தாராண்டு நயத்துண்பதாகும்
புனல் கொள் வலவோட்டு மிடவோட்டென்னுமிரண்டாற
பொருந்து திசை வருகித்தின் புத்தியிவையென்பர்.

முன் சொல்லிய காலசக்கர வருடத்திற்கு பரமாயிசு சொல்லுமிடத்து மேடம் சிங்கம் தனுசு இவற்றிற்கு 100 வருடமும் ரிடபம் கன்னி மகரம் என்னும் மூன்றிற்கும். 85-வருடமும், மிதுனம் துலாம் கும்பம் இம்மூன்றிற்கும் 83-ம் வருடமும் கர்கடகம் விருஷிகம் மீனம் இவை மூன்றிற்கும் 86-வருடமும் அவரவர்கள் புசிக்கும் வருடங்களாகும் இதனை முன் சொல்லிய வலவோட்டு இடவோட்டென்னும் நாட்களால் கண்டறிந்து சொல்லவும் இதனை காலசக்கர திசை வருட புத்திகளின் காலம் என்றமைந்திருக்கும் மிடத்தில் விபரம் காண்க.

## காலச்சக்கரப் பாச்சல்

அரிதான காலசக்கர திசை நடக்கும் போதில்
அநேககதியாய் நடக்குமதிற் சிறிது சொல்வோம்
துரிதமாய் ஜாலகதியுடன் றுறககதியும்
சொல்லறிய மிருககேந்திர கதியுமிதல்லாது
பரிவாங்குக் குடகமதியூர கதியன்றிப்
பாயத்திடுமண்டு ககதி சர்பகதி எனவும்
விறிவுரு மிவ்வேழுகதி தன்னில் வருபலனும்
விளங்கிய சக்கர திசையின் மெய்ப்பலனுஞ் சொல்வாம்

கால சக்கர திசை நடக்கும் காலங்களில் பற்பல விதங்களாக மாறுபட்டு நடப்பதால் அதன் கதி விபரங்களைச் சற்று இங்கு கூறுவோம் அது என்னவெனில் ஜலகதி என்றும் துரககதி என்றும் மிருககேந்திரகதி என்றும்

குக்குடகதி என்றும் மயூரகதி என்றும் மண்டுககதி என்றும் சர்பகதி என்றும் சொல்லப்படும் இப்படி 7 கதிகளால் உண்டாகும் சக்கர திசையின் உண்மை பலனும் சொல்வேன்.

இக்கதிகளை ஓர் ராசியிலிருந்து மற்றோர் ராசிக்கு பாய்வதனால் ஏற்படும் பெயராகும் மேடத்தில் நின்று தனுசில் பாய்வதும் விருக்ஷிகத்தில் நின்று மீனத்தில் பாய்ந்தாலும் துரக்கதி மீனத்தில் நின்று வருக்ஷிகத்தில் பாய்வதும் தனுசில் நின்று மேடத்தில் பாய்வது சிங்கவிலேககதி கடகத்தலிருந்து சிங்கத்தில் பாய்வது சர்பகதி சிங்கத்தில் நின்று கடகத்தில் பாய்வது மயூரகதி மிதுனத்திலிருந்து சிங்கத்தில் பாய்வதும் சிங்கத்தில் நின்று மிதுனத்தில் பாய்வது குக்குடகதி கன்னிலிருந்து கடகத்தில் பாய்வது மண்டுககதி, வலமாவது இடமாவது அடுத்து நடப்பது ஜலகதி என்று கூறியபடி கதிகளின் விபரமறிந்துக் கொண்டு அதன் பிறகு அவரவர்களுடைய நக்ஷத்திர பாதங்களை பிரித்துச் சொல்லுக.

## விபரம்

| | | | |
|---|---|---|---|
| அஸ்வனி | 1-ம் பாதத்திற்கு | ராசி 9-க்கு வருடம் | 100 |
| ,, | 2 | ,, | 85 |
| ,, | 3 | ,, | 83 |
| ,, | 4 | ,, | 86 |
| பரணி | 1-ம் பாதத்திற்கு | ராசி 9-க்கு வருடம் | 100 |
| ,, | 2 | ,, | 85 |
| ,, | 3 | ,, | 83 |
| ,, | 4 | ,, | 86 |
| கிருத்திகை ராசி | 1-ம் பாதத்திற்கு | ராசி 6-க்கு வருடம் | 100 |
| ,, | 2 | ,, | 85 |
| ,, | 3 | ,, | 83 |
| ,, | 4 | ,, | 86 |
| ரோகிணி | 1-ம் பாதத்திற்கு | ராசி 6-க்கு வருடம் | 86 |
| ,, | 2 | ,, | 83 |
| ,, | 3 | ,, | 85 |
| ,, | 4 | ,, | 100 |

| | | | | |
|---|---|---|---|---|
| மிருகசிரம் | 1-ம் பாதத்திற்கு | ராசி 9-க்கு | வருடம் | 86 |
| ,, | 2 | ,, | | 83 |
| ,, | 3 | ,, | | 85 |
| ,, | 4 | ,, | | 100 |
| திருவாதிரை | 1-ம் பாதத்திற்கு | ராசி 9-க்கு | வருடம் | 86 |
| ,, | 2 | ,, | | 83 |
| ,, | 3 | ,, | | 85 |
| ,, | 4 | ,, | | 100 |
| புனர்பூசம் | 1-ம் பரதத்திற்கு | ராசி 9-க்கு | வருடம் | 100 |
| ,, | 2 | ,, | | 85 |
| ,, | 3 | ,, | | 83 |
| ,, | 4 | ,, | | 86 |
| பூசம் | 1-ம் பாதத்திற்கு | ராசி 9-க்கு | வருடம் | 100 |
| ,, | 2 | ,, | | 85 |
| ,, | 3 | ,, | | 84 |
| ,, | 4 | ,, | | 86 |
| ஆயில்யம் | 1-ம் பாதத்திற்கு | ராசி 9-க்கு | வருடம் | 100 |
| ,, | 2 | ,, | | 85 |
| ,, | 3 | ,, | | 84 |
| ,, | 4 | ,, | | 86 |
| மகம் | 1-ம் பாதத்திற்கு | ராசி 9-க்கு | வருடம் | 86 |
| ,, | 2 | ,, | | 85 |
| ,, | 3 | ,, | | 83 |
| ,, | 4 | ,, | | 100 |
| பூரம் | 1-ம் பாதத்திற்கு | ராசி 9-க்கு | வருடம் | 83 |
| ,, | 2 | ,, | | 83 |
| ,, | 3 | ,, | | 85 |
| ,, | 4 | ,, | | 100 |
| உத்திரம் | 1-ம் பாதத்திற்கு | ராசி 9-க்கு | வருடம் | 86 |
| ,, | 2 | ,, | | 83 |
| ,, | 3 | ,, | | 85 |
| ,, | 4 | ,, | | 100 |

| | | | |
|---|---|---|---|
| அஸ்தம் | 1-ம் பாதத்திற்கு ராசி 9-க்கு | வருடம் | 100 |
| ,, | 2 | ,, | 85 |
| ,, | 3 | ,, | 83 |
| ,, | 4 | ,, | 86 |
| சித்திரை | 1-ம் பாதத்திற்சி ராசி 9-க்கு | வருடம் | 100 |
| ,, | 2 | ,, | 85 |
| ,, | 3 | ,, | 83 |
| ,, | 4 | ,, | 86 |
| சுவாதி | 1-ம் பாதத்திற்கு ராசி 9-க்கு | வருடம் | 100 |
| ,, | 2 | ,, | 85 |
| ,, | 3 | ,, | 83 |
| ,, | 4 | ,, | 86 |
| விசாகம் | 1-ம் பாதத்திற்கு ராசி 9-க்கு | வருடம் | 86 |
| ,, | 2 | ,, | 83 |
| ,, | 3 | ,, | 85 |
| ,, | 4 | ,, | 100 |
| அனுஷம் | 1-ம் பாதத்திற்கு ராசி 9-க்கு | வருடம் | 80 |
| ,, | 2 | ,, | 83 |
| ,, | 3 | ,, | 85 |
| ,, | 4 | ,, | 100 |
| கேட்டை | 1-ம் பாதத்திற்கு ராசி 9-க்கு | வருடம் | 86 |
| ,, | 2 | ,, | 83 |
| ,, | 3 | ,, | 85 |
| ,, | 4 | ,, | 100 |
| மூலம் | 1-ம் பாதத்திற்கு ராசி 9-க்கு | வருடம் | 86 |
| ,, | 2 | ,, | 83 |
| ,, | 3 | ,, | 85 |
| ,, | 4 | ,, | 100 |
| பூராடம் | 1-ம் பாதத்திற்கு ராசி 9-க்கு | வருடம் | 86 |
| ,, | 2 | ,, | 83 |
| ,, | 3 | ,, | 85 |
| ,, | 4 | ,, | 100 |

| | | | |
|---|---|---|---|
| உத்திராடம் | 1 ம் பாதத்திற்கு | ராசி 9-க்கு வருடம் | 86 |
| ,, | 2 | ,, | 83 |
| ,, | 3 | ,, | 85 |
| ,, | 4 | ,, | 100 |
| திருவோணம் | 1-ம் பாதத்திற்கு | ராசி 9-க்கு வருடம் | 100 |
| ,, | 2 | ,, | 83 |
| ,, | 3 | ,, | 85 |
| ,, | 4 | ,, | 100 |
| அவிட்டம் | 1-ம் பாதத்திற்கு | ராசி 9-க்கு வருடம் | 86 |
| ,, | 2 | ,, | 83 |
| ,, | 3 | ,, | 85 |
| ,, | 4 | ,, | 100 |
| சதயம் | 1-ம் பாதத்திற்கு | ராசி 9-க்கு வருடம் | 86 |
| ,, | 2 | ,, | 83 |
| ,, | 3 | ,, | 85 |
| ,, | 4 | ,, | 100 |
| பூரட்டாதி | 1 ம் பாதத்திற்கு | ராசி 9-க்கு வருடம் | 86 |
| ,, | 2 | ,, | 83 |
| ,, | 3 | ,, | 85 |
| ,, | 4 | ,, | 100 |
| உத்திரட்டாதி | 1-ம் பாதத்திற்கு | ராசி 9-க்கு வருடம் | 86 |
| ,, | 2 | ,, | 83 |
| ,, | 3 | ,, | 85 |
| ,, | 4 | ,, | 100 |
| ரேவதி | 1-ம் பாதத்திற்கு | ராசி 9-க்கு வருடம் | 86 |
| ,, | 2 | ,, | 83 |
| ,, | 3 | ,, | 85 |
| ,, | 4 | ,, | 100 |

இவ்வாறே நக்ஷத்திர பாதங்களுக்கேற்படும் மொத்த வருடங்களை யறிந்து அவ்வருடத்தில் கழியும் புத்திகால மான ஈவுநாள் நாழிகை வினாடிகளை அவரவர்களுகேற் படும் ராசி நாதனுக்குக் கழிப்பதுடன் வலவோட்டாக வரு கிறதா இடவோட்டாக வருகிறதா சிங்கதியாகிறதா குடகதி யாகிறதா குக்குட கதியாகிறதா மயூரகதியாகிறதா சர்ப் பகதியாகிறதா வென அறிந்து அப்போதுண்டாகும் ஈவு நாள் நாழிகை வினாடிகளுக்கு ஒவ்வொரு இராசி கோட் களுக்குத் தக்கபடி பலனறிந்து சொல்வதுடன் மேற் சொன்ன கதிகளால் ஏற்படும் தீமை நன்மை யறிந்தே ஆயுள் சொல்லுதல் வேண்டும்.

இத்துடன் மகாதிசை உற்பன்னதிசை மிருகத்தியுதிசை பிராணதிசை ஆதானதிசைவாமதிசை உடுதிசை நிரியாண திசைமகாபிராணதிசை குளிகநிரியாண திசை இவை களையுமறிந்து நிச்சயமான ஆயுள் விபரத்தையும் மற்றும் பலனையும் கூறுவது நலமாகும்,

இன்னும் சிலர் வயது கூட்டுவிபரம் வேறு விதமாகவும் கூறுவர் அதனை சாதக சிந்தாமனியின் 1135ம் செய்யுள் முதல் காணலாம் அவரவர்களுக்குரிய திசை 1 வருடத்தை 360பங்காய்ப்பிரித்து மிச்சபாகையை விட்டு அடுத்த பாகை யில் சொல்லும் போது மேற்சொன்ன 360 பங்கில் ஒருபங்கு குறையுமென்றும் நீசம் வரையிலாகில் அரைபாகம் போகு மெனவும் பரமஉச்சமாகில் அவர்களுக்குறியதிசை வருடம் குறையாதென்றும் கூறுவர்.

இவ்வண்ணமே சூரியன் முதல் 7 கிரகங்களுக்கும் தன் திசையில் மேற்சொன்னபடி நீக்கியது போகமற்றும் மிகுந் துள்ளதைக்கொண்டு இராசியில் சத்துருஸ்தானத்திலிருந்த கிரகங்கள் தான் கொடுத்த வருடத்தில் குஜன் தவிர மற்ற கிரகங்களுக்கு மூன்றிலொருபாகத்தைத் தள்ளிக் கூட்டுவ தென்று மூடம் பெற்ற கிரகங்கள் சுக்கிரன் சனி இவர்கள் தவிர மற்ற கிரகங்களுக்கு அரைபாகம் தள்ளிக்கூட்ட வேண்டுவதென்றும் வியமுதல் பாவ்வியம் வரையிலுள்ள ராசிகளில் கொடிய பாவகிரங்கள் இருப்பார்களாகில் (அவர்கள் கொடுத்த வயதில்) 12-ல் பாவர்களிருப்பார்களே யானாலும் அவர்கள் கொடுத்த வயது யாவும் கொண்டு

போய்விடுவரென்றும் சுபகிரகங்களிலிருந்தால் அரைபாகம் கொண்டு போவாரென்றும் 10-ல் பாவர்களிருந்தாலும் அரைபாகம் கொண்டு போவார் என்றும் சுபர்களிலிருந்தால் நாலிலொரு பாகம் நீங்குமென்றும் 11-ல் பாவர்களிலிருந் தால் மூன்றிலொன்றே வீணாகுமெனவும் சுபர்களிருக்கில் ஆறில் ஒன்று கழிந்து போகுமென்றும் கொள்வர் 9-ல் பாவர் களிருந்தால் நாலில் ஒன்று நீங்குமென்றும் சுபரிருந்தால் 8-ல் ஒன்று நீங்குமென்றும் 8-ல் பாவர்களிருந்தால் 5-ல் ஒரு பாகம் நீங்குமென்றும் சுபர்களிருந்தால் 10-ல் ஒன்றும் 7-ல் பாவரிருந்தால் 6-ல் ஒன்றும் சுபர்களிருந்தால் அரைபாக மும் நீங்குமென்று கூறுவர்.

லக்கினாதியைக் கொண்டு ஆயுள் கூட்டுவது எவ்வித மெனில் உதயராகியின் ஆயுளை அந்த லக்கினத்தில் சென்ற கலையை 200-க்கு ஈத்ததுபோக மிச்சத்தை 12-ல் பெருக்கி முன்போல் வகுக்க மிச்சமாதத்தை 30-ல் பெருக்கி 200-க்கு கொடுத்தது போக நின்ற நாளை 60-ல் பெருக்கி 200-பேருக்ருக் கொடுத்த மிச்சம் தர்பாரை என்றும் வினாடி என்றும் கொள்வர்.

இப்படிக் கண்டதை லக்கினத்தில் சுபர்சளிருந்து பாவர் கள் பார்த்தாலும் பாவர்களிருந்து சுபர்கள் பார்த்தாலும் சுபரும் பாரும் கூடி இருந்தாலும் பார்த்தாலும் மேற் சொன்னபடி கண்ட துகையில் பாதி கழித்து மிச்சத்தை ஆயுள் கணக்குடன் கூட்டவேண்டுமென்றும் சுபகோட்க ளிருந்து சுபர்கள் பார்த்தால் உள்ளபடியே கூட்டவேண்டு மென்றும் கூறுவர் இப்படிக் கணக்கிட்டு ஒவ்வொரு கிர கங்களாகக் கூட்டிக்கொண்டே மொத்தமே ஆயுள் என்று கூறுவர்.

## தோஷமும் அவை நீங்கும் விபரம்

நாம் ஒரு ஜாதகத்தை கவனிப்போமாயின் அதிலுள்ள கிரகங்களின் பார்வை சேர்க்கை முதலிய பற்பலவிதங் களால் அநேக தோஷங்கள் உண்டாவதுண்டு அந்த தோஷம் நீங்கும் நீங்காதென பகுத்தரிந்து கூறுவதே

ஜோதிடர்களின் முக்கிய கடமையாகையால் இங்கு சிலவற்றைப் பேசுவோம் எந்த ஜாதகத்திலும் கிரகங்களால் தோஷமுண்டெனக் கண்டவுடன்.

காணும் லக்கினம் கண்டமேழ் பத்தினில்
பூணும் சுக்கிரன் புந்தி இருந்திடிற்
றோணும் மற்ற கிரகங்கள் தோஷங்கள்
பானுகண்டப் பனிப்போல நீங்குமே

பூதலத்தில் பிறந்தஜாதகர்களுக்கு லக்கினம் கண்டமாகிய நாலு ஏழு பத்து இத்தானங்களில் சந்திரனாகிய சுக்கிரனாவது சித்திரனாகிய புதனாவது இருப்பார்களாகில் பக்ஷிதோஷம் பறவை தோஷம் எட்சிதோஷம் தேரைதோஷம் குளிதோஷம் புருஷதோஷம் பெண்தோஷம் முட்டுதோஷம் கழிவழிந்த தோஷம் பாலாரிஷ்ட தோஷம் முதலியன சூரியனைக்கண்ட பனியைப்போல் விலகிவிடுமெனவும்.

வீமகவி நூலுடையார் தன் 58-ம் செய்யுளில் எளக்கிக் காட்டியிருக்கிறார் இதனை ஒவ்வொரு ஜாதகங்களுக்கும் நாம் விசேஷமாய் பொதுமுறையாய் கைக்கொள்ள வேண்டுவது அவசியமே ஜாதகனோடு அவன் மாதுர் பிதுர் சகோதிரன் மாதுலன் புத்திரன் களத்திரம் முதலியோர்க் குண்டாகும் தோஷங்களையும் ஆராந்தே தீரவேண்டும்.

நாம் பாலாரிஷ்ட படலத்தை ஆராய்வோமானாலும் மேற் சொன்னபடியே பற்பல தோஷங்கள் உண்டாகும்.

## மணிகண்ட கேரளத்தில் சில

ராகுவுடன் சனி சூரியன் கூடியிருந்தால் பிதாவுக்கும் பிதுர் வங்கிசத்தாருக்கும் தோஷம்

சூரியனுடன் சுக்கிரன் சனி சேர அவர் நின்ற ராசிக்கு 7 ம் புதனும் நிற்க அவனுக்கு விவாகமான 1 வருஷத்தில் தீம்புண்டு.

குருவோடு சூரியன் சேர அவர்களுக்கேழில் குஜனும் சனியும் சேர அவனுக்கு புத்திர வம்சம் நிற்காது மேல் சொன்னவர்களுடன் சந்திரன் கூடி இருக்கில் தாய்க்கு ஆகாது.

சுக்கிரனும் புதனும் 3-ல் இருக்க அவர்களை வேறு கிர கங்கள் பாராது இருந்தால் அவன் குலவே கரு விருத்தி யின்றி நாசமாய்ப் போகும் அதை விளக்க எவராலும் முடியாது.

3 ல் குஜனும் 9-ல் சனியுமிருக்க அனுக்கு உடன் பிறந்த சகோதரகெண்டம் உண்டு 4 மாதத்திற்கும் பிதா வுக்கும் கெண்டம் காட்டும் அவனை பகை கிரகங்கள் பார்க்கில் 3-ம் வருடம் தீம்புண்டு

10-ல் சனியும் சந்திரன் ஈனம்பெற்றும் 4-ல் சூரியனும் 7-ல் புதனும் மற்ற கிரகங்கள் 6, 8, இவ்விடங்களிருந்தால் அவன் தாய்க்கு தோஷம்.

5-வீடுகளுக்கப்பால் சனி சந்திரனும், புதன், சூரியன் இவர்களிருந்தால் அவன் பாட்டன் பாட்டி சுற்றத்தார் குழவி அவன் தாய் இவர்கள் 3-மாதத்திற்குள் மடிவார் எனவும்.

பாலாரிஷ்ட காண்டத்தில் கூறியுள்ளார் நாம் முக்கிய மாய் கவனிக்க வேண்டியது நீங்குமா நீங்காதா என்பதே நாம் அதனை கவனிக்குமிடத்து சோதிட ஆசிரியருள் ளொருவரானவர் கூறியதாவது.

(செய்யுள்)

பெரியரவின் றோடமதைப் புதன் தீர்ப்பவன் பாம்பு
புதன்றோடந்தனை சனியன் தீர்ப்பனிவர் மூவர்
பறிபடுதோடந் தனையங்காரனே தீர்ப்பன்
பாரிலிவர் நால்வர்களின் றோடமும் வெள்ளி தீர்ப்பன்
செரியுமிவ ரைவர்களின் றோடமதைப் பொன்னோன்
தீர்ப்பனிவ்வாறுவர்களின் றோடமதை மதிதான்
அறிவினோதி தீர்ப்பரிவ ரெழுவர்களின் றொடம்
அருக்கனே தீர்ப்பனென வருளினர் விண்ணவரே.

அரவாகிய பாம்பினாலேற்படும் தோஷத்தை புதன் தீர்ப்பன் பாம்பு புதன் இம்மூவர்களினாலுண்டாகும் தோஷத்தை சனி தீர்ப்பான் இம்மூவர்களின் தோஷத்தை குஜன் தீர்ப்பான் மேற்சொன்ன ஐவர்களின் தோஷத்தை யும் சந்திரன் தீர்ப்பான், இவர்களெழுவர் தோஷத்தையும்

சூரியனே தீர்ப்பானென முன்னோர் கூறியபடியாய் முன் சொல்லிய படி கிரகங்களின் தோஷமுன்டெனினும் அத் தோஷத்தைத் தீர்க்கும் கோட்களிருக்கும் வண்மையால் நீங்குமெனவும் நீங்காதெனவும் கூறுக.

## கெர்ப்ப பலன்

சாதாரணமாக மக்களில் விசேஷமாய் கெற்போர்பத்தியே முக்கியமான விஷயமென யாவரும் அரிவார் நம் தேசத்தில் அநேகமாய் ஆங்கிலமக்கள் வாசம் செய்வதனால் சாஸ்திரம் என்றால் அதை விசேஷமாய் நம்புவதே இல்லை ஆனால் ஆங்கிலம் சாஸ்திரவிதிக்கும் யான்கூறும் பின்வரும் விஷயங்களுக்கும் ஏதொரு வித்தியாசமுமில்லை நாம் காணும் ஒவ்வொரு மானிடர்களும் திட சரீரம் உடையவர் சிலர் சிறுத்த சரீரம் உடையவர் சிலர் திட சரீரமுடையவர்களில் சிலரோ பலமுள்ளவராக இருக்கலாம் சிலரோ ஓர் சிறிய பொருளைத் தூக்கவும் சக்தியற்றிருக்கிறார், மெலிந்த சரீரம் உடையவர் சிலர் பலசாலிகளாகவும் சிலர் சக்தியற்றவர்களாகவும் இருப்பதை நாம் அறிகிறோம் இதற்கு முக்கிய காரணம் முன் முதல் தாய் தநதையரும் இரண்டாவது உணவின் குற்றம் யான் சொல்லுவதாவது மேற்சொன்ன இரண்டு விஷயங்களுக்கும் காரணம் நவகிரகங்களே நாமிருக்கும் இடத்திற்கு எவ்வளவோ உயரத்தில் சூரியனையும் சந்திரனையும் பல நக்ஷத்திரங்களையும் காண்கிறோம் அவ்வாறிருக்க நம் வேதவிதிப்படி ஜோதிடத்திலும் வைத்திய முறையிலும் பேர்பெற்ற புலிப்பாணி முனிவர் கூறியதாவது.

பாரப்பா இன்னமொரு விவரம் கேளு
  பகர்புதனும் குரு சனியும் வாத நாடி
சீரப்பா துர்கிகம் காரிசேயும்
  சிறப்பான பாம்புகளும் பித்தநாடி
நேரப்பா பால்மதியும் சுங்கன் தானும்
  நேர்மையுள்ள சிலேத்துமத்தின் கிரகமென்று
வீரப்மா போகருட கடாக்ஷத்தாலே
  விபரமெல்லாம் புலிப்பாணி விளம்பக்கேளு

என்றனர். புதன் குரு சனி இம்மூவரும் வாதநாடி சூரியன் குஜன் துற்கிரகம் சந்திரனும் சுக்கிரனும் சிலேந்தும நாடி ராகு கேது இவ்விருவரும் பித்த நாடி என்றனர்.

ஆகாயத்திலிருக்கும் கிரகங்களால் இடம் திசைகாலம் சேஷ்டை நிகர்க்கம் பார்வை என்னும் ஆறுவிதங்களால் ஒவ்வொருவருக்கும் பலவன்மை யுண்டாகிறதென சாஸ்திரங்கள் கூறுகின்றன இதன் விபரமெப்படி எனில் சூரியன் தந்தங்களுக்கும் சந்திரன் உதித்திற்கும் குஜன் தங்தங்களிலுள்ள மூளைக்கும் புதன் தசைக்கும் குரு மூளையாகிய அறிவிற்கும் சுக்கிரன் ரேதசவுக்கும் சனி நரம்புகளுக்கு கர்த்தாவாவார்கள் இவர்கள் சேஷ்டையினாலே சிலர் பித்தசரீரமும் சிலர் வாதசரீரமும் சிலர் சிலேத்மசரீரமும் உடையவர்களாக இருக்கிறார்கள் எப்படி எனில் பித்த சரீரமும் உடைய ஒருவனுக்கு அதிகாரிகள் இராகு கேதுவென கூறியுள்ளோம். அவன் வாததேகமுடைய ஒருவனை விவாகம் செய்துக் கொண்டால் அவ்விருவர் திரேகத்திற்கும் ஒற்றுமைப்படாது அடிக்கடி நோயினிலும் புத்திரரில்லாமலும் மற்றும் பல கஷ்டங்களுக்கும் உள்ளாகிறார்கள். இதையறிந்தே அனேக ஆங்கிலேய வேதத்தை கைக்கொண்டவர் இருவர் இரத்தத்தையும் பரிசோதித்து விவாகம் செய்ய வேண்டுமென்ற கொள்கை நாம் ஆராய்ந்து பார்க்குமளவில் ஓர் ஸ்திரீயின் ருதுகாலத்தை நன்றாய் ஆராய்ந்து பார்ப்போமானால் அவள் திரேகக்கூறு அவள் அனுபவிக்கும் இன்பம் துன்பம் புத்திர விருத்தி புத்திரருண்டாகும் காலம் யாவும் செவ்வனே அறியலாம் ஜோதிடர்களில் சிலர் ஓர் ஜாதகத்தில் உச்சம் பெற்ற கிரகமொன்றை பார்ப்பார்களாகில் அதைப்பற்றி புகழ்ந்து பேசுவது அளவு கிடையாது. அவ்வுச்சகிரக விஷயமாய் ஆராய்ந்து பார்க்குமளவில் அதன் பலம் குறைந்திருக்குமாகில் அக்கிரகத்திற்கு எவ்வித சக்தியும் கிடையாதென ஏற்படுகிறது எப்படி எனில் உச்சகிரகத்தைப் போலவே பருத்த சரீரமுடைய மனிதனாயிலும், அதன் பலங்குறைந்திருப்பதே அப்பருத்த மனிதனோ அல்லது ஸ்திரீகளினுடைய பலமோ குறைந்திருப்பதற்குக் காரணமாகிறது.

ஒவ்வொரு ஜாதகத்திலும் நாம் கவனிக்க வேண்டிய பலம் என்பது முதலாவது கிரக பலமும் இரண்டாவது அவை நின்ற ஸ்தான பலமுமாம் கிரக பலமாவது கிரக பலத்தை எவ்வித மரிவதென்னில் தினசரிப் பஞ்சாங்கப் படியோ அல்லது அவர்கள் ஸ்புடம் செய்யும் விதிப்படியே அக்கிரகம் இருக்கும் பருவமும் சாரம் பார்வை சேர்க்கை சமயம் மண்டலம் இவைகளாலறியலாம். ஸ்தான பல

மென்பது புருஷர்களாயின் ஜெனன ராசிக்கும் ஸ்திரீகளாயின் ருது லக்கினத்திற்கு எத்தனையாவது ராசி அது யாருடைய வீடு அவ்வீராசியில் அவர்களுக்கேற்பட்ட பலம் எவ்வளவு அவ்வீராசியானது பிதுரு ஸ்தானத்திற்கு எத்தனையாவது ராசி மாதுரு சகோதிரம் புத்திரன் முதலியோருக்கு எத்தனையாவது ராசி என பற்பல விதங்களாக ஆராய்ந்து அறிய வேண்டுமென்பது திண்ணம் ஓர் ஸ்திரீயின் ருது ஜெனன ஜாதகத்தை கவனிக்கும்போது விசேஷமாய் சூரியன் சந்திரன் குஜன் இம்மூவரே மிக முக்கியமானவரெனவும் மற்றமுள்ளவர் அறிவு அழகு அவயத்திலுள்ள நரம்பு இவைகளுக்கு அதிகாரிகளாவார்கள் ஒவ்வொருவருக்கும் ஸ்ரீகளின் ஜாதகப்படி சந்திரன் அப்புவும் குஜன் தேயுவென்றும் அப்புவென்றும் உதிரமும் தேயுமென்பது பித்தமென்றும் அனேகர் கூறுவர் இவ்விதிப்படி பித்த ஓட்டத்தால் இரத்தம் அதிகரித்தபோது ஒவ்வொருவருக்கும் காம பாதையுண்டாகும் இவை யுண்டாகும் காலத்தைக் கவனிக்குமிடத்து ஜெனன நக்ஷத்திரப்படி சந்திரன் தினசரி கோசார ரீதியாய் 1, 2, 4, 5, 7, 9, 12, இவ்விடங்களில் சந்திர வாசகாலம் செவ்வாய் பார்வை பெருங்காலமே மாதாந்தர பெருக்குண்டாவதென்றும் அநேக சாஸ்திரங்களில் கூறுகின்றனர்.

முன்சொன்னபடி காமவேதனை யுண்டாகி ஸ்திரீ புருஷர்கள் கூடிய இரவு அச்சுக்கிலம் ஒன்று சேர்ந்திருக்குமாயினும் முன் சொன்ன மாதாந்தர பெருக்குண்டாகும் ஒரு வாரம் முன் பின்னாகவே அக்காமவாதையுண்டாகி அச்சுக்கிலம் கருக்குழியில் சேர சுமார் 1 வாரம் செல்லும் இவ்வாறே சூரியனால் 9 மாதமும் சந்திரனால் 10 மாதமுங் கர்போர்த்தி காலம் எனப்படும்.

இவ்வண்ணமே ஸ்ரீ முகா வருடம் அற்பசி மாதம் 14-ம் தேதியன்று குழந்தை உதித்ததாயின் அவை கருவிலுதித்த காலம் அரியும் விபரமும் ஸ்ரீமுக அற்பசி 1-ல் உத்திரட்டாதி 59 18ல் ஜெனித்ததாயின் முன்சொல்லியமாதம் ஆங்கீரஸ ஹு மார்கழி மீ 14-ல் பூராடம் 28,28, ஆனதால் 20-ந் தேதி உத்திரட்டாதி 3053 அன்று கெர்ப்ப உற்பத்தி இதற்கு,

(1) ஜெனன கால ஸ்புடம்

(2) சந்திர ஸ்புடம்}

(3) 7-ம் பாவக ஸ்புடம்

(4) 8, 9-ம் பாவகஸ்புடம் என்னுமிவைகளை யறிந்து இலக்கிணஸ்புடத்திற்கு சாஸ்திரபுடம் சரியாக இருந்தால் 280 நாளும் 8, 9-ம் பாவக ஸ்புடத்திற்குச் சரியாகில் 290 நாளும்7-ம் பாவக ஸ்புடத்திச்குச் சரியாகில் 261 நாளும், பிரசவகாலம் எனப்படும். சிலர் 9 10 11 12 இம்மாதங்கள் யாவும் பிரசவகாலமென்று கூறுவர். இதையே தாம் புசிக்கும் ஆகாரத்தை தன் கருவிலிருக்கும் சிசு அடைவதால் கற்ப உற்பவம் கூறுவர்.

## லக்கின பாவகபலன்

## 1—ம் இடம்

## குணம்

குணம்: ஜெனன லக்கினாதிபதி எவனோ அவனுக்குரிய குணத்தையே அந்த ஜாதகனுக்கு கூறவேண்டும்.

ஜெனன லக்கினாபதி சூரியனாகில் யாவரையும் ஒன்றாய் பாவிப்பான் தீக்ஷண்யகுணமுடையனாவன்.

ஜெனன லக்கினாதிபதி சந்திரனாகில் குளிர்ந்தவார்த்தையும் கோபக்குறியைக்காட்டாதவனும் எல்லா விஷயங்களையும் மறிந்தவன் ஆயினும் ஷ சந்திரன் கிருஷ்ண பக்ஷமாக மாறுங்காலங்களில் அவன் குணம் மாறுபடும்.

ஜெனன லக்கினாதிபதி குஜனாகில், மனதில் ஓர்வித மான கெட்ட எண்ணமும் தன்னை எதிர்த்தவர்களை எதிர்த்து வாதம் செய்யுங்குணமும் வைராக்கியமு முடைய வனாவான்.

ஜெனன லக்கினாதிபதி புதனாகில் லகுவாய் பேசி தன் சுபகாரியத்தை நிறைவேற்றிக் கொள்ளுங் குணமும் பிறர் குணத்திற்கு தகுந்தாற்போல் நடந்துகொள்ளுபவனும் எக்காரியத்தையும் ஆலோசித்தே பிறகு செய்பவனும் ஆவான்.

ஜெனன லக்கினாதிபதி குருவாகில் ஒரே விதமாக கண்டிப்பான குணமும் சாந்தம் நிறைந்தவனும் தன்னை அடுத்தவரை காக்கும் நல்ல எண்ணமுடையவனும்.

ஜெனன லக்கினாதிபதி சுக்கிரனாகில் எக்காரியத்தைச் செய்யினும் தன் சுயகாரியத்தில் மிக ஜாக்கிரதையோடிருப்பவனும், பிறர் மனைவிகளை இச்சிப்பவனும் கண்டித வார்த்தையும் நற்குணமுடையவனாவான்.

ஜெனன லக்கினாதிபதி சனியாகில் மோசக் கருத்துடையவனும் அனாவசியமான காரியங்களில் தலையிட எண்ணமுடையவனும் குருரசித்த முடையவனுமாவான்.

இவ்வாறே நாம் குறித்துள்ள ஒவ்வொரு லக்கினங்களுக்கும் முறையே காண்பதுவே சாஸ்திரமாகும். பிறகு ஜென்ன லக்கினாதிபதி சேர்க்கை பார்வை இடம் முதலியவைகளால் அந்த ஜாதகனின் குணம் மாறுபடுமாகையால், அவரவர்களுக்குத் தக்கபடி ஆராய்ந்து சொல்லவேண்டும் பொதுவாக சூரியன் குஜன் சனி இராகு கேது முதலியோர்க்கு துர்க்குண மென்னும் சந்திரன் புதன் குரு சுக்கிரன் இவர்களுக்கு நற்செய்கை எனவும் கூறவேண்டுவது அவசியம்.

ஜெனன லக்கினாதிபதி குருவாகில் சாஸ்திரம் புராணம் பக்திமார்க்கம் முதலியவைகளாலும் பெரியோர் நேசத்தாலும் பெண்கள் கல்வியாலும் சினேகிதத்தாலும் பெருமையடைவான்.

ஜெனன லக்கினாதிபதி சனியாகில் சமயத்திற்கேற்ற தொழில் முதலியவைகளாலும் வீரபராக்கிரமத்தாலும் குருராசிதனத்தாலும் பெருமையடைவானெனவும் கூறுவார்.

## கல்யாணம்

ஜெனன லக்கினாதிபதியாலேயே கல்யாணம் முதலிய வைகளைச் சொல்ல வேண்டுவதால் ஜெனன லக்கினாதி பதி இருக்குந் தன்மையாலும் 7-ம் வீட்டோன் களத்திர ஸ்தானாதிபதி இருக்கும் உண்மையாலும் கல்யாணம் உண் டென்றும் இல்லை என்றும் கூறவேண்டும்.

ஜெனனாதிபதி சுபனா அசுபனா என்றும் அவன்களத் திர ஸ்தானமான ஏழாம் ராசிக்கு 1, 4, 7, 10 முதலிய கேந் திரம் பெற்றானா (அ) திரிகோணமாக 5, 9. என்னும் க்ஷேத்திரம் பெற்றானா 2, 11 என்னும் க்ஷேத்திரமா என் னும் 3, 6, 8, 12 முதலிய க்ஷேத்திரமா என்றும் கவனித்து சொல்ல வேண்டும்.

ஜனன லக்கினாதிபதி மேற்படி களத்திர ஸ்தாத்திற் கோ (அ) ஜெனன லக்கினத்திற்கோ கேந்திரம் பெற்றிருப் பானேயாமானால் களத்திரம் உண்டு எனவும்.

5, 8 என்னும் திரிகோண ஸ்தானங்கள் பெற்றிருப்பா னேயானால் களத்திர ஜெனத்தாலேயே மேற்படி விவாகம் நடக்கும் எனவும் 2. 11 முதலிய க்ஷேத்திரங்களிலிருப்பா னேயாமானால் களத்திர கனத்தைக் கொண்டே விவாகம் நடக்குமெனவும், 3, 6, 8, 12 முதலிய க்ஷேத்திரங்களிலிருக் கில் களத்திரம் நீண்டநாள் கழிந்து உண்டாகுமென்றும் அவனிருந்துந் தன்மையால் களத்திரத்தின் அந்தஸ்து முதலியவைகளைக் கூறுக.

## மறு ஜென்மம்

ஜெனன லக்கினாதிபதி சூரியனாகில் மறுஜென்ம மில்லை எனவும் சந்திரனாகில் மறுஜென்மம் மானிடப் பிறப்பே எனவும் குஜனாகில் சைவமதத்தனாயும் சுக்கிரனா கில் வைஷ்ணவன் (அ) வைசியனாயும் குருவாகில் பிராமண னாயும் சுக்கிரனாகில் அரசனாயும் சனியாகில் நீச்சத் தொழிலோன் அடிமை செய்பவனாயும் பிறப்பானெனகூறுக

## ஆயுள்

ஜெனன லக்கினாதிபயாலும் ஜெனன லக்கினத்தா லுமே ஆயுள் சொல்ல வேண்டுவது அவசியம்.

1. ஜெனன லக்கினம் எந்தலக்கினமாயினும்ஜெனன லக்கினத்தை அந்த லக்கினத்தாதிக்கு பகைவர் நோக்காதி ருக்கில் பூரண ஆயுளுண்டு.

2. ஜெனன லக்கினத்தில் ஜெனன லக்கினமானது 2, 7, 6, 12, 8 முதலிய சேக்ஷத்திரத்திபர்கள் சந்திருந்தும் மேற்சொன்ன பார்வைப்படி அந்தந்த ராசிக்கு மாரகாதிப கள் பாராதுமிருந்தால் பூரண ஆயுளென்றே கூறவேண்டும்.

ஜெனன லக்கினம் பௌவியம் அபசல்வியமென்ற இருவகைக்குள் சொவ்விரித்தில் பலம் பெற்றனவா அப சவ்வியத்தில் பலம் பெற்றனவாவென்று ஆராய்ந்து அதற் குத்தக்கபடி ஆயுள் சொல்லவேண்டும்.

3 ஜெனன ராசிக்குடையோன் தன் ஆக்ஷிஸ்தானத் திற்கு எந்த ராசியிலிருக்கிறான் அப்படி அவனிருந்த ராசி யில் எத்தனை பாகங் கழிந்தனவென்றும் மிகுந்துள்ளபாகங் கள் எவ்வளவு உள்ளனவென்றும் கண்டு ஜெனன லக்கி னாதிபதியில் கூறிய ஆயுளைக் கணக்கிட்டு கடந்த பாகங் களுக்குறிய பாகங்களைக் கழித்துவிட்டு மிகுந்துள்ள ப'கங் களை ஒன்று சோதிடச் சொல்லுக ஆயுள் விபரங்களை இன்னும் அஷ்டகவாக்கு கால சக்கிரம் ஆயுள் கணிதம் முதலியவைகளால் நிலைகூறுவது முக்கிய கடமையாகும்

## பிரக்கியாதி

உதித்த லக்கினத்தோனுக்குறிய பிரக்யாதியையே அந்த ஜாதகனுக்கும் சொல்லவேண்டுவது முக்கிய கடமை யாகும், பின்பு ஜெனன லக்கினத்தோனிருக்குந் தன்மை யால் அவன் பிரக்யாதி அதிகமாகுமென்றுங் குறையுமென் றுஞ் சொல்லவேண்டும்.

ஜெனன லக்கினாதிபதி சூரியனாகில் அனைவராலும் மெச்சத் தகுந்தவன் அதாவது சாமார்த்திய காரியங்களா லென்க ஜெனன லக்கினாதிபதி சந்திரனாகில் அழகு முத லிய தேஜஸ் இவைகளால் புகழ்ச்சி பெறுவான்.

லக்கினாதிபதியுடன் கூடிய சூரியன் பிதுர்காரகனாயி னும் ஜெனன ராசிக்கு ரோகாதி பத்தியம் பெற்றான்.

களத்திர காரகனாகிய சுக்கிரன் ஜெனன்ராசிக்கு3,8ம் ஆதிபத்தியமும் தனஸ்தானத்திற்கு 2 7 ம் ஆதிபத்தியமும் பெற்றான் ஆனதால் பிதுர் செல்வம் உண்டு ஆயினும்நாள் டைவில் அவை நசிந்து போம் களத்திரகாரனாகிய சுக்

கிரன் சம்மந்தப்பட்டால் களத்திர மூலமான பொருளுண்டு எனினும் அவையும் அந்திய காலங்களில் விறையமாகும் எப்படியெனில்,

தனபாக்கியத்தோன் கஷ்டம் மேலிட
மனமார்த்தமாக மாரிடும் தனங்கள்
இனஜனத்தாரால் ஏகிடும் கொஞ்சம்
வனக்குயி லொத்தவாரி மையானே

என்ற படியாம் இவ்வாறே மற்றுமுள்ள ஜாதகங்களுக்கும் கிரக ஆராய்ச்சியின் படி விஷயங்களைக் கூறுக.

## கல்வி

இரண்டாமிடத்தோன் சூரியன் குரு சுக்கிரனாகில் அந்த ஜாதகன் சமஸ்கிருதம் தெலுங்கு முதலிய பாஷை களைக் கற்பான் சந்திரனாகில் தமிழ் வித்தை வாசிப்பான்.

குஜனாகில் தெலுங்கு மாந்திரீகம் முதலிய வித்தை களைக் கற்பான் புதனாகில் ஜோதிடம் கணக்கு வகைகள் பிரசங்கம் செய்யும் வித்து வத்தன்மை முதலியவைகளுடை யவனாவான் சனி இராகு கேதுவாகில் இந்துஸ்தான் இங்கி லீஷ் உருது மராட்டா முதலிய பாஷைகள் கற்பான்.

இவை கிரகங்களுக்குறிய பாஷையாகும் இதனைப் பொதுவாய் வைத்து மற்றும் பாவபலன்களால் நிலை கூறுக.

சந்திரனும் இராகுவுமிருக்கில் இருவித சிவப்பனாவும் சந்திரனும் சூரியனும் சேரில் கருப்பாயும் கேதுவும் புத னும் சேரில் சிவலையாகவும் இன்னும் பலவிதமாய் கிரகங் கள் கூறியபடி நிறங்களைக் கூறுவது முக்கியமாகும்.

ஜெனன ராசிக்குடையோர் குரு புதன், இராகு, கேது வாகில் நெடிய உருவினராயும் சந்திரன் குஜன் சனியாகில் குறுகிய உருவினராயும் சூரியன் சுக்கிரனாகில் சம உருவு முடையவனாகவும் மிருப்பாரெனக் கூறுக.

## திடம்

சூரியனாகிலும் சந்திரனாகிலும் ஜெனன லக்கினாதி பதியாகவரில் சமதேகமுடையராயும் சுக்கிரன் குரு புதனா

கில் திடதேகமுடையவராயும் சனி இராகு கேது அங்காரக னாகில் நலிந்த தேகமுடையவராயுமிருப்பார்.

இதனை அந்தந்த லக்கினாதிபதி இருக்கும் வன்மை யால் நிலை கூறுவது முக்கிய கடமையாகும் என்பதாம்.

## இரண்டாமிடம்

### குடும்பம்

ஜெனன லக்கினத்திற்கு இரண்டாம் வீட்டதிபதி சுப னாகவும் மேன்மை பெற்றவனாகவும் வரில் அந்த ஜாதக னின் குடும்ப மிக்க பலமுடையதென்றே கூறவேண்டும்.

சுபனாயினும் அக்குடும்ப ஸ்தானத்திற்கு 6, 8, 1,2முத லிய க்ஷேத்திரங்களில் பலயீனம் பெற்று இருப்பானாகில் எவ்வளவு பலமுள்ள குடும்பமாயினும் நாளுக்கு நாள் க்ஷீண திசையடையும்.

இரண்டாம் வீட்டதிபதி ஏற்கெனவே நற்க்ஷேத்திரத் தில் பலம் பெற்றிருப்பானால் நெடுநாளாய் அவன் குடும்பம் மிக்க பலமுடையதாகவே இருக்கும்.

இரண்டாம் ராசிநாதன் எந்த க்ஷேத்திரத்திலிருக்கினும் கொடிய க்ஷேத்திரவிருக்கும் பகை நீச்சம் அஸ்தமயம் வக்கிரம் பெற்ற கோட்கள் நோக்குவாராகில் நாளடைவில் அவன் குடும்பம் நாஸ்தியாய் போகும்.

குடும்பாதிபதி குடும்பஸ்தானத்திற்கு 1. 4, 7, 10 முத லிய க்ஷேத்திரங்களில் ஆக்ஷி உச்சம் நட்பு முதலியவைக ளால் பலம் பெற்று தானிருந்த க்ஷேத்திராபதி ஜெனன லக்கினாதிபதிக்கு உறவுடையோனாகவிருக்கில் இந்த ஜாதகன் ஜெனித்த பிறகே அக்குடும்பம் நாளடைவில் விருத்தியடையும்.

இரண்டாம் வீட்டதிபதி தினசரி பாபக்கோளாயினும் அவன் தன் உறவினராலாவது தனக்குச் சமமுடையவர்க ளாவது பார்க்கப்பட்டிருந்தாலும் சகிதம் பெற்றிருந்தாலும் அவனுடைய குடும்பமானது எக்காலமும் க்ஷீணமடையாது விருத்தி யடையும் எனவும்.

ஷ இரண்டாம் ராசிக்குடைய கிரகம் தன் சுயக்ஷேத்திரத்தில் ஆக்ஷி பெற்றிருக்கில் எக்காலமும் தனக்கென்று தேடிய சொந்த க்ஷேத்திரத்திலேயே வாசம் செய்வான்

ஷ இரண்டாம் ராசிநாதன் ஜெனன லக்கினத்திற்கு 5, 9, 10, என்னும் இடங்களில் உச்சம் பெற்றிருக்கில் மெத்தை மேடை முதலிய கட்டடங்களில் வாசம் செய்பவனும் இரண்டாம் இடத்தோன் மேற்படி இரண்டாம் ராசிக்கு 6, 8, 1உ முதலிய க்ஷேத்திரங்களில் சூரியன் குஜனுடன் கூடி இருக்கில் அவன் இல்லமானது அக்கினியால் பாழாய் போகும்

## மற்றவை பார்வை முதலியவைகளால் நிலை

## இரண்டாமிடம்

## பொருள்

இரண்டாமிடத்தோன் சூரியன் சந்திரனாகில் மாதுரு பிதுரு செல்வமு குஜனாகில் சகோதிரவர்க்க செல்வமும் புதனாகில் அம்மான் வகையரா செல்வமும் குருவாகில் புத்திரராலும் மூதாதையராலும், சுக்கிரனாகில் களத்திரத்தாலும் சனியாகில் தான் கஷ்டப்பட்டு தேடிய பொருளும் அந்த ஜாதகனுக் குண்டென்று பொதுவாய் கூறவேண்டும்.

தனத்ததிபதி சூரியனோ அல்லது சந்திரனோ ஜெனன லக்கினத்திருந்து 8, 6, 12-ம் க்ஷேத்திராதிபர்கள் நோக்குவாரேல் அந்த ஜாதகனின் பிதுர் செல்வம் நாளடைவில் நலிந்து போமெனவும் நோக்காவிடில் நிலைத்திருக்குமெனவுங் கூறவேண்டும்.

இரண்டாம் வீட்டதிபதி சுபர்களினுடைய அங்கிசம் பெற்றும் அங்கிசாதிபர்கள் ஆக்ஷி உச்சம் முதலியவைகளால் பலமடைந்தும் இருப்பார்கலேயாமானால் அந்த ஜாதகனின் இளையபருவத்திலேயே தனம் சித்திக்கும்.

இரண்டாம் விட்டத்தின் நற்கோட்களி லொருவனால் ஜென்ம லக்கினத்திற்கு 12-ம் க்ஷேத்திரம் பெற்றும் நீச்சம் பகைப்பெற்ற கோட்களால் பார்க்கப்பட்டு மிருப்பாராகில் அந்த ஜாதகனுக்கு எவ்வளவு பொருள் வந்து சேரினும் உடனே சிலவழிந்துபோம் 1, 4, 7, 10 முதலிய க்ஷோத்தி ரங்களில் சுபகிரகங்கள் உச்சம் பெற்றும் மேஷம் அல்லது விருக்ஷிகம் ஜெனன லக்கினமாயும் குஜன் 9 ம் வீட்டிலி மிருந்தால் அந்த ஜாதகன் எந்நாளும் நீங்காத செல்வ முடையவனாகவே இருப்பான்.

தனம் யாரால் கிடைக்கும் என்பதைக் கூறவேண்டுவ தாயின் இரண்டாம் வீட்டதிபதி எந்த காரணம் பெற்றான் என்றும் எந்தவர்க்கம் பெற்றான் என்றும் எந்த வர்க்கத் தாருடைய க்ஷேத்திரதி லிருக்கிறானெனவும் எந்த காரகன் அல்லது வர்க்கத்தாருடைய பார்வை பெற்றானெனவுங் கண்டு கொள்வோமாகில் தனம் கிடைக்கும் மார்க்கம் எளிதிலறியலாம்.

## உதாரணம்

| | | | |
|---|---|---|---|
| ல | ராகு சனி | | |
| | | | |
| | | | சூ அ |
| | | சந் கே | கு பு |

இரண்டாம் இடத்தோனான குஜன் 9 ஆதிபத்திய மென்றும் பிதுர் ஸ்தானாதிபத்தியம் பெற்று ஷ தனஸ்தா னத்திற்கு 5-லும் பிதுரு ஸ்தானத்திற்கு 10-லும் சூரியன் சுக்கிரனுடன் கூடியிருக்கிறான்.

ஜெனன லக்கினாதிபதி குஜனாகில் தனக்கிருக்குத் தார தன்மையால் பிரக்கியாதி பெருபவனாவான்.

ஜெனன லக்கினாதிபதி புதனாகில் கல்வியாலும் வியாபாரம் முதலியவைகளாலும் பிரக்கியாதி பெறுபவனாவான்.

## சுபாவம் எண்ணம்

ஜெனன லக்கினாதிபதி சுபனாகில் நற்காரியங்களிலேயே தன் மனதைச் செலுத்துவோனும் நற்காரிய மூலமாகவே தன் வாழ்நாட்களைக் கழிப்போனும் தன் மனபூர்வமாய் பிறருக்கு ஓர் தீமையைச் செய்ய மனமில்லாதவனும் நன்மார்க்க காரியங்களைச் செய்ய சந்தோஷப் படுவோனுமாவான்.

இப்பால் ஜெனன லக்கினாதிபதி நற்க்ஷேத்திரத்தில் நற்கோட்களுடன் தன் சத்துரு வல்லாதாருடனும் கூடி இருப்பானாகில் ஷெ அந்தஸ்துக்கள் யாவும் நிலைத்திருக்குமெனவும்.

கொடிய கோட்களுடனும் கொடிய கிரகங்களோடும் கொடிய கோட்களின் பார்வையாலும் பிடித்திருக்கின் அவனவன் திசைபுத்தி வருங்காலங்களில் மேலே சொல்லியுள்ள நற்செய்கைகள் மாறுபட்டு துற்செய்கைளுக் கிடமாகுமெனவும் விக்கினாமாகு னெவுங் கூறுக.

## உருவம் நிறம்

ஜெனன லக்கினாதிபதி சூரியன் செவ்வாய் கேதுவாகில் சிவப்பு நிறமுடையவரும் புதன் குருவாகில் மஞ்சள் நிற சரீர முடையவரர்யும் சந்திரன் சுக்கிரனாகில் வெள்ளை நிற சரீர முடையவனாகவும் மிருப்பான்.

இரண்டாம் வீட்டோன் சூரியனாகில் அன்னிய பாஷையென்னும் தேவநாகாரம் சமஸ்கிருதம் தெலுங்கு முதலிய பாஷையைக் கற்பான் என்றாலும் இரண்டாமிடத்தோனான் சூரியன் தன் சத்ருவான சுக்கிரன் சனி இவர்களுடன் கூடி ஷெ இரண்டாம் ராசிக்கு 8,12 முதலிய க்ஷேத்திரங்களில் பகை நீச்சம் அஸ்தமயம் முதலியவைகள் பெற்றிருக்கில் மேற்சொன்ன பாஷையை கற்பான் என்றே சொல்ல வேண்டும்.

இரண்டாம் வீட்டோன் எந்த கிரகமாயினும் தனக்கு மேற்பட்ட பல முடையவருடன் ஷ வாக்கு ஸ்தானத்திற்கு கேந்திரம் பெற்றும் நட்பு ஆக்ஷி உச்சம் பெற்றுமுருப்பானாகில் இரண்டாமிடத்தோ னெவனோ அவனுக்குறிய பாஷையைக் கட்டாயம் கற்பான்.

1. இரண்டாம் வீட்டோன் புதனுடன் கூடி 1-ம் ராசியிலேனும் 10 முதலிய க்ஷேத்திரங்களிலேனும் இருந்து ஜெனன ராசியையாவது இரண்டாம் ராசியையாவது நோக்குவரேல் அந்த ஜாதகன் சோதிடம் கற்பவனாவான்.

2. இரண்டாம் ராசியதிபதி புதனாகவே இருந்து ஜெனன ராசிகேனும் இரண்டாம் ராசிக்கேனும் கேந்திரம் பெற்று குரு சூரியன், சுக்கிரன் முதலியவர்களுடன் கூடி இருக்கில் ராஜாக்கள் மெச்சத்தக்க சோதிடன் கற்பான்.

3. இரண்டாம் ராசிநாதன் குஜனாயும் குஜன் மிதுனம் கன்னி முதலிய க்ஷேத்திரங்களிலிருந்தும் குஜன் நின்ற ராசிக்கு இரண்டில் புதன் உச்சம் பெற்றாலும் சோதிடம் கற்பான்.

4 இரண்டாம் ராசிநாதன் குருவாகவும் குரு உச்ச கிரகத்தோடு சம்மந்தமுற்று ஜெனன லக்கினம் அல்லது இரண்டாம் இடம் இந்த ராசிகளுக்கு கேந்திரமாயும் இருக்கின் மேலான மன்னராலும் வித்வான்களாலும் புகழத்தக்கதற்கு சாஸ்திரம் முதலியவைகளும் பிரசங்கங்களும் செய்வான்.

5. இரண்டாம் வீட்டோன் குஜனாக விருந்து சுக்கிரனுடன் கூடி இரண்டாம் ராசிக்கு 6,9-லிருக்கில் சங்கீத வல்லவனாய் நடனத்தை செய்வான்.

6 இரண்டாம் இடத்தோன் சுக்கிரனாக விருந்து சுக்கிரன் தன் க்ஷேத்திரங்களுக்கு நான்கில் தன் சத்ருவல்லாதாருடன் கூடியும் தானிருக்கும் ராசி இரட்டை ராசியாயுமிருக்கில் அந்த ஜாதகன் பெண்களை நடன முதலியவைகளால் பழக்க ஆட்டுவிப்ப வனாவான்.

7 இரண்டாம் ராசிநாதன் சூரியனாகவும் ஷ சூரியன் குருவுடன் சகிதம் பெற்று உச்சகிரகங்களால் பார்வை பெற்றிருக்க அந்த ஜாதகன் தேவபாஷையில் வல்லவனாவான்.

8. இரண்டாம் ராசிநாதன் சந்திரனாயும் சந்திரன் தன் க்ஷேத்திரத்திற்கு கேத்திரங்களில் உச்சம் நட்பு சமம் முதலியவைகள் பெற்று சுபகிரகங்களால் பார்வை பெற்றிருந்து ஜெனன லக்னத்திற்கு திரிகோணமாக இருக்கில் அந்த ஜாதகன் தமிழ் வித்தையில் மகா வல்லவனாவான்.

நேத்திர விஷமாய் கவனிக்க வேண்டிய விஷயம்.

1. கருங்கண் }
2. செங்கண் } இவ்விரண்டிலெவ்விதமுள்ளவன்
3. நேர்பார்வையுள்ளவனா
4. அல்லது கீழ்ப்பார்வை பக்கபார்வை சமபார்வை யுடையவனா
5. நேத்திரரோக முடையவனா
6. பிரவிக்குருடனா
7. மத்திப வயதில் குருடனா
8. அந்தி வயதில் குருடனா
9. வாலிபக்குருடனா என்பதை கவனிப்பது அவசியம்

குறிப்பு: இரண்டாம் ராசியால் வலக்கண்ணைப் பற்றியும், 12-ம் ராசியால் இடக்கண்ணைப் பற்றியும். கவனிக்க வேண்டுமென சாஸ்திர பிரமாணங்களுண்டு.

இரண்டாம் வீட்டோன் சூரியனாகில் செங்கண்ணன்
,, சந்திரனாகில் சமவிழி
,, குஜனாகில் நல்லவழி]
,, புதனாகில் ,,
,, குருவாகில் ,,
,, சுக்கிரனாகில் ஒருகண் பார்வை
,, சனியாகில் காகபார்வை

நேத்திரரோகம் முதலியவைகளை இரண்டாம் வீட்டோனிருக்கும் க்ஷேத்திராதி பத்தியத்தாலும் பார்வை முதலியவைகளாலும் நிர்ணயிக்க வேண்டும்.

1. இரண்டாம் வீட்டோன் பாவியுமாய் 6.12. இவ்விடங்கலிலிருந்தால் நேந்திர ரோகமுடையவனாவான்.

2. இரண்டாம் வீட்டோன் மூன்றாமிடத்தி லிருக்கில் நாளடைவில் அந்தகனாவான்.

3. கடகராசி ஜெனித்து சூரியன் சுக்கிரன் சந்திரன் இம்மூவரும் ஏகராசியிலிருப்பாராகில் பிரவிக்குருடனாவான்.

4. ஜெனன லக்கினாதிபதி சுக்கிரன் இம்மூவரும் 6,8, 12, முதலிய க்ஷேத்திரங்களில் பகை நீச்சம் அஸ்தமயம் பெற்றிருப்பார்களேயானால் மாலைக் கண்ணுடையவனாவான்.

5. இரண்டாம் வீட்டோனுடன் சுக்கிரன் கூடிய 8ம் இராசியிலிருக்கவும் ஏழாம் ராசியாதிபதி ஆக்ஷி உச்சம் பெற்றிருக்கவுமானால் அவன் அந்நிய வயது வரையில் நேந்திர ரோகமில்லை.

6. இரண்டாம் ராசியாதிபதி சந்திரனுடன் கூடி ஜல ராசிகளிலிருந்து 8-ல் நீச்சம் பகைப்பெற்றும் சுக்கிரனால் பார்க்கப்பட்டால் கண்ணில் ஜலம் வடிந்து கொண்டே இருக்கும்.

7. இரண்டாம் ராசிநாதனும் பலம் பெற்றிருந்து மற்ற கிரகங்கள் எவ்விதமிருப்பினும் நேந்திர ரோகமில்லை.

சூரியன் சனி குஜன் இவர்களோடு இரண்டாம் இடத்தோனுங்கூடி 2, 6 இவ்விடங்களிலிருக்கில் அடிக்கடி நேத்திர ரோகம் சம்பவிக்கும்.

இரண்டாம் ராசியில் குஜன் பலம் பெற்றிருக்க மேல் நேர்க்குடையவனாவான் மேற்படி இரண்டாம் ராசியில் குரு சந்திரன் இவ்விருவரிலொருவர் பலம் பெற்றிருக்க சம பார்வையுடையவனாவான்.

இரண்டாம் இராசியில் புதன் சுக்கிரன் இவர்கள் பலம் பெற்றிருக்க பக்க பார்வையுடையவனாவான்.

இரண்டாம் ராசியில் சனி இராகு கேது இவர்கள் பலம் பெற்றிருக்க கீழ்பார்வை யுடையவனாவான்.

குறிப்பு இரண்டாம் இராசியால் நேத்திர ரோகம் உண்டென்று ஏற்படுபாயின் அவையுண்டாகும் காலங் களை திசை புத்தியாலறிந்து கூறுவது கடமையாகும்.

## கல்வி விபரம்

### கல்வியைப் பற்றிய விஷயங்கள்

1 கல்வியுள்ளவனா கல்வியில்லாதவனா

2 தமிழ் தெலுங்கு இந்துஸ்தான், சமஸ்கிருதம், முதலிய பற்பல பாஷையையடைவான்.

3 மேற்சொன்ன கல்விகளிலேயோ ஒன்றையுடையவனாயினும் சம கல்வியா குறைந்த கல்வியா அதிக கல்வியா.

4 எவரால் அந்த கல்வியையடைவான் அல்லது எவர்களாலும் கல்வியை விடுவான்.

(1 இரண்டாம் வீட்டோன் பலம் பெற்று நற்கிரகங்களுடன் சேர்ந்தும் நற்கிரகங்களால் பார்க்கப்பட்டு மிருந்தால் கல்வியுள்ளவனெனவும் இரண்டாம் வீட்டோன் பகை நீச்சம் அஸ்தமயம் பெற்று சத்துரு கிரகங்களால் பார்க்கப் பட்டு மிருந்தால் கல்வியில்லாதவனென்றும் சாஸ்திரங்கள் கூறும்.

(2 இரண்டாம் வீட்டதிபதி சூரியன் குரு சுக்கிரனாக சமஸ்கிருதம் தெலுங்கு முதலிய பாஷைகளும் சந்திரனாகில் தமிழ் வித்தையும் குஜனாகில் மந்திரத்தால் ஆக்ருஷண சக்தியை தரத்தக்க வித்தையும் புதனாகில் தெலுங்கு கணக்கு முதலியவைகளால் கௌரவம் படத்தக்க வித்தையும் சனி இராகு கேதுவாகில் இந்துஸ்தான் இங்கிலீஷ் முதலிய வித்தையுண்டாகும்.

(பின்பு) அவரவர்கள் பலனைக்கொண்டு நிலை கூற வேண்டும்.

(3 புதன் 1,4,7,10-ம் ராசிகளிருக்கில் தமிழ்வித்தை அதிகமாகும் செவ்வாய் 1,4,7,10-லிருக்கில் தெலுங்கு வித்தையில் வல்லவனாவான் சனி 1,4,7,10 உச்சம் பெற ஆரிய பாஷை இந்துஸ்தான் இங்கிலீஸ் முதலிய

வைகளில் வல்லவனும், சுக்கிரன் குரு இவர்கள் பலம் பெற்றிருக்க வேதம் முதலியவைகள் யறிந்தவனும் மன்னாதி மன்னர் போற்றத்தகுந்த வித்தையுமுடையவனாவான்.

1,4,7,10-ல் புதனிருக்கில் சோதிடமும் கற்பானென சாஸ்திரங்கள் கூறும்.

மேஷ ராசியில் உச்சம் பெற்ற சூரியனை புதன் காணில் தத்துவசாஸ்திரங்களையறியும் ஞானியாவாள்.

மிதுனத்திலிருக்கும் சந்திரனை குருமார்க்கில் தமிழ் வித்துவான் சிம்மராசியிலுள்ள சந்திரனை புதன் காணில் கணித வித்துவான் மகரத்திலிருக்கும் சந்திரனை குருபார்க்கில் தற்க சாஸ்திரியாகும். மீனராசியிலுள்ள சந்திரனை சுக்கிரன் பார்க்கில் ஏமாற்றத்தகுந்த கல்வியை யடைவான்.

## மூன்றாம் இடம்

### சகோதர விபரம்

சகோதர விஷயமாய் கவனிக்கவேண்டிய விஷயம்

1 சகோதரம் உண்டா இல்லையா

2 சகோதரம் உண்டென ஏற்படுமாயின் அவை ஆணா அல்லது பெண்ணா

3 சகோதர சகோதரி மொத்த மெவ்வளவு

4 சகோதர அந்தஸ்து முதலியவைகளைப் பற்றிய விபரம்.

5 சகோதர ஒற்றுமையுடையவனா அல்லது இல்லாதவனா

6 சகோதரருக்கு யோக முதலியவைகளுண்டாகும் காலம்

7 சகோதரருக்கு கெண்டாதி கெண்ட காலங்கள் இவைகனளப்பற்றி முக்கியமாய் கவனிக்க வேண்டும்.

## விபரம்

சகோதரம் உண்டு இல்லை என்று நிர்ணயப்படுத்த மூன்றாம் க்ஷேத்திரமே முக்கியமாகும் (மூன்றாம் வீட்டதி பதியிருக்கும் தன்மையாலும் மூன்றாம் வீட்டோனைப் பார்த்தோர் சேர்ந்தோர் முதலியோர்களை கவனிப் போயின் உண்மை விளங்கும்.

மூன்றாம் இளைய சகோதரர் அற்பம் என்று சாஸ்திரங் கள் கூறுவதால் சகோதரா அற்பம் என்று சாஸ்திரங்கள் கூறுவதால் சகோதரம் உண்டாகி மறிக்குமா அல்லது கெற் பந்தரிக்காமலே போகுமா என்று கவனிக்க வேண்டும்.

முன்சொன்னபடி மூன்றாம் ராசிக்குறிய கிரகம் வலுப் பெற்றிருக்கில் சகோதரம் அற்பம் என்றெண்ணுவது கூடாது.

மூன்றாம் ராசியில் பகை நீச்சம் அஸ்தமயம் பெற்ற கொடிய கோட்களிருப்பதோடு மூன்றாம் ராசியாதிபதியும் கொடிய ஸ்தானங்களில் பகை நீச்சம் பெற்று தன் பகைவர் களால் நோக்குற்றும் சகிதம் பெற்று மிருப்பார்களாகில் சகோதர அற்பமென்றும் கூறலாம்.

ஜெனன ராசிக்குப் பதினொன்றில் குஜனிருக்கில் மூத்த சகோதரம் அதிகமென்றும் இரண்டில் குஜனிருக்கில் இளைய சகோதரம் அதிகமென்றும் கூறவேண்டும்.

சகோதரனின் குணங்களையறிய வேண்டுவதாயின் மூன்றாம் ராசிக்குரிய கிரகத்தின் குணத்தையே உரைக்க வேண்டும்.

## சகோதரன் ஆணா, பெண்ணா

மூன்றாம் ராசிக்குடைய கிரகம் ஆண் கிரகமாயின் ஆண் எனவும் பெண் கிரகமாயின் பெண் எனவுங் கூற வேண்டும்.

## உதாரண சக்கரம்

| | | | |
|---|---|---|---|
| ல | சனி ராகு | | |
| | இராசி | | |
| | | | சூ சு |
| | சந் கே | | கு பு |

மேலே காட்டியுள்ள ஜாதகத்திற்கு 3-ம் வீட்டிற்குடைய கிரகம் சுக்கிரனாகையால் இவனுக்கிளைய சகோதரம் பெண்ணால் பிறக்குமென்று ஏற்படுகிறது.

இவ்வாறே சனி புதன் சூரியன் குரு முதலியோர் மூன்றாம் வீட்டோனாகவரில் ஆண் சகோதரமேற்படுமென்றும் சுக்கிரன் சந்திரன் குஜன் முதலியோர்வரில் பெண் சகோதரமேற்படுமென்றுங் கூறவேண்டும்.

சகோதர மொத்த தொகையை காணவேண்டுவதாயின் சகோதர ஸ்தானாதிபதி நின்ற க்ஷேத்திர முதல் சகோதர காரகன் நின்றவரையில் எத்தனை கிரகமுள்ளனவோ அத்தனை சகோதரிகளுண்டு.

3-ம் ராசி முதல் மூன்றாம் ராசிநாதன் நின்ற க்ஷேத்திரம் வரையில் எண்ணிய தொகை எத்தனை கிரகமுள்ளனவோ அத்தனை சகோதரி களளுடென்றுங் கூறுவர் பின்பு பலயீனம் பெற்ற கோட்களிருக்கில் அவை இறந்து போமெனவும் வலுபெற்ற கோட்களிருக்கில் அவை பூரண ஆயுளுடனிருக்கு மென்றுங் கூறவேண்டும்.

## மொத்த சகோதர மடிந்தவுடன் ஆண் பெண் சொல்லும் உதாரண சக்கரம்

| | | | |
|---|---|---|---|
| | சனி ராகு | | சந் |
| | இராசி | | |
| | | | |
| | குரு கே | | |

மிதுன லக்கினத்திற்கு மூன்றாம் ராசிநாதன் சூரியன் ஆக்ஷி பெற்றிருப்பதால் இவனுக்கு பிறகு ஆண் சந்ததியே உண்டாகும்.

சிங்கத்திற்கு மூன்றாம் ராசி சுக்கிரன் வீடு அதிற் சேர்ந்த கிரகம் குரு கேது, குரு ஆண் கேது பெண் என்று சாஸ்திர ஒப்பந்தம் சுக்கிரன் கேது இவ்விருவரைவிட குரு பெரியவனா கையால் இரண்டாவது ஆணே பிறக்கும் என இவ்வாறே மும்மூன்று ராசிகளாய் தள்ளி தள்ளிப்பார்த்தே ஆண் பெண் விவரங்களைக் கூறவேண்டும்.

## சகோதர அந்தஸ்து

மூன்றாம் வீட்டோனிருக்கும் க்ஷேத்திரம் நற்க்ஷேத்திர மாயும் நற்கோட்களின் ஆக்ஷி வீடாயும் அவ்வாக்ஷி நாதன் தனக்கு உறவாயும் சகோதர ஸ்தானாதிபன் பலம் பெற்ற கோட்களுடன் கூடுவதோடு நோக்குற்று மிருப்பானாகில் அந்த ஜாதகனின் சகோதரன் நல்ல மேன்மையுடையவ னாகவும் யோகசாலியாயுமிருப்பானெனவுங் கூறவேண்டும்.

மூன்றாம் ராசிநாதன் ஆக்ஷி உச்சம் பெறாது பகை நீச்சம் அஸ்தமயமடைந்தும் சத்ரு க்ஷேத்திரங்களிலும் சத்ருக்களோடு கூடியும் சத்ருக்களால் பார்க்கப்பட்டு மிருந்தால் பலயீனம் வறுமை முதலியவைகளால் பீடிக்கப் பட்டிருப்பானெனவுங் கூறவேண்டும்.

சகோதர ஸ்தானாதிபதி எவனோ அக்கிரகமும் காரகனாகிய குஜனும் ஜனன ராசிக்குரிய கிரகமும் நட்பு ஆக்ஷி உச்சங்களாலும் சுபகிரகங்களின் பார்வையாலும் பலமடைந்திருக்கும் ஜாதகங்களுக்கு அந்த ஜாதகனின் கனிஷ்ட சாகோர சகோதரிகள் பலம்பெற்றிருப்பாரெனவும் மேற்சொன்னதை போலவே ஜேஷ்ட சகோதரனேவலுவுள்ளவனெனக் கொள்க பகை நீச்சம் முதலியவைகளால் பலமிழந்திருக்க சந்தேகமாகும் இரண்டாம் வீட்டிற் குடையோன் மேல் சொன்ன விதங்களால் பலம் பெற்றும் 3-ம் ராசியாதிபன் மகேந்திரம் பெற்றிருக்க ஏகசகோதரன் உண்டென்க.

சகோதர ஸ்தானாதிபதியின் ஜெனன ராசியிலேயே நின்று பலம் பெற்றிருக்க இரண்டு சகோதர முண்டென்க.

## சகோதர ஒற்றுமையுடையவனா இல்லாதவனா வென்பதை யறிவது

சகோதர ஸ்தானாதிபதியும் ஜெனன ராசியாதிபதியும் நட்பினராகில் பிரியா திருப்பாரெனவும் சத்ருவாகில் மாச்சரியமுண்டென்றும் இவ்வாறே பதினோறாம் வீட்டோனையும் நட்புபகை சமமென அறிந்து சொல்வதே முறையாகும் எப்படியெனில் விபரம் கீழ்வருமாறு.

ஜெனன லக்கினாதி சகோதிர ஸ்தானாதி விபரம்

பதியாயும் பதியாயும்

1. சூரியன் சுக்கிரன் சனியாகில் விரோதங் காட்டும்
2. சந்திரன் 3-ல் ராகு கேது நிற்கில் ,,
3. குஜனாயும் புதனாகவிருக்கில் ,,
4. குருவாயும் புதன் சுக்கிரனாகவரில் ,,
5. சுக்கிரனாயும் புதன் சந்திரன் குரு இவர்கள் வரில் ,,

சமமுமாக இருப்ப

2. சந்திரனாயும் குஜன் குரு சுக்ரனாகில்

6. சனியாயும் சூரியன் சந்திரனாகவரில் ,, ,,
7. புதனாயும் சந்திரனாகவரில் ,,

1. சூரியனாயும் புதனாகவரில் சத்துருத்துவமும் சமமுமாக இருப்ப
2. சந்திரனாயும் குஜன் குரு சுக்ரனாகில் ,,

| | | |
|---|---|---|
| 3. குஜனாயும் | சனி சுக்கிரனாகில் | ,, |
| 4. புதனாயும் | சனி குருவரில் | ,, |
| 5. குருவாயும் | சனி வரில் | ,, |
| 1. சூரியனாயும் | சந்திரன் குஜன் குருவரில் என்னாளும் பிரியார் | |
| 2. சந்திரனும் | புதன் சூரியனாகில் | ,, |
| 3. குஜனும் | குரு சந்திரன் சூரியனாகில் | ,, |
| 4. புதனும் | சுக்கிரன் சூரியனாகில் | ,, |
| 5. குருவும் | சனி புதனாகில் | ,, |

இவ்வாறே ஒவ்வொரு ஜாதகங்களுக்கும் பிரித்துச் சொல்வதே முக்கிய கடமையாகும் உதாரணம் கீழ்கண்ட ௳க்கரங்களுக்கு,

| | | | |
|---|---|---|---|
| ல | ராசி சனி | | |
| | | | |
| | | | சூ அ |
| | | சந் கே | கு பு |

இந்த ஜாதகனுக்கு மேற் சொல்லியபடி சகோதர விரோதங் காட்டும்.

## சகோதர கெண்டாதி கெண்டங்கள்

ஜெனன லக்கினத்திற்கு மூன்றாம் ராசி எதுவோ அந்த ராசியதிபன் மேற்சொன்ன சகோதரஸ்தானத்திற்கு இரண்டிலிருக்க அவன் திசையிலும் மூன்று நான்கு அவ்வீட்டதிபர்கள் கூடி ஜெனன ராசிக்கு எழிலும் சகோதர ஸ்தானத்தில் நான்கிலுமிருக்க அவன் திசையிலும் குஜன் அஷ்டவர்க்குபடி கெண்டாந்தராசிகனில் சனி இரண்டரை வருடவாச காலங்களிலும் இளைய சகோதர சகோதரி மரணமுண்டென்றும் 11-ம் ராசியாதிபதி தன் க்ஷேத்திரங்களிலும் 3, 6, 8, 12, லிருக்குமாயின் அவன் திசை காலங்களிலும் ஜேஷ்ட சகோர மரணமுண்டென்க ஜெனன ராசிக்கு 6-ம்

ராசியில் சனிராகுக்கது இவர்களிருக்க அவர்கள் திசை காலங்களில் சகோதர மரணமுண்டென்பதும் சாஸ்திரம் மதமாகும்.

## நான்காம் இடம்

நான்காம் இடம் என்பது ஓர் கேந்திரம் அவ்விராசியே மாதுருஸ்தானம் என்றும் சுகஸ்தானம் ஒன்றுங் கூறுவது சாஸ்திர சம்மதம் நான்காம் வீட்டிற்குடையன் எந்தகிரக மாயினும் சுபனா (அ) அசுபனா என்பதை முதலில் கவனிக்க வேண்டும் பின்பு அவன் நின்ற இடம் பார்வை சேர்க்கை முதலியவைகளை யூகிப்பது கடமையாகும் முதன் முதலாக மாதாவின் பொது விஷயம்.

பொது விஷயமென்பது பலவிதமாய்க் கொள்ள வேண்டும்.

(1) மாதவின் குணம் (2) மாதாவின் கற்பு (2) மாதாவின் சுகம் (4) சுகதுக்கம் (5) மாதாவின் ஆயுள் (6) மாதாவுடன் பிறந்தோர் அந்தஸ்து (7) மாதாவின் அவயவபின்னம் பின்னமில்லாமை முதலியவைகளை் கவனிப்பதேயாம்.

## மாதாவின் குணம்

நான்காம் ராசிக்குடைய கிரகத்தில் குணவெவ்விதமோ அதையே இவனவன் மாதாவின் குணங்களென்று கூற சாஸ்திரங்களில் இடமுண்டு பின்பு மாதுரு ஸ்தானாதிபதி சேர்ந்த இடம் பார்வை முதலிய வைகளால் குணம் மாறுபட்டு நற்குணம் துற்குணமாயும் துற்குணம் நற்குணமாயும் தோன்றலாம்.

## மாதாவின் கற்பு

ஜெனன காலங்களில் பூர்வபக்ஷத்து சந்திரனாயும் அவனோடு சுக்கிரனும் மாதுரு ஸ்தானாதி என்று சொல்லும் நான்காம் வீட்டதிபதியும் இம்மூவரிலொருவர் ஜெனன ராசிக்கு ஒன்பதாம். ராசியதிபன் அங்கிசம் பெற்றிருந்தாலும் வற்கம் பெற்றிருந்தாலும் சாரம் பெற்றிருந்தாலும் அந்த ஜாதகனின் மாதா கற்புள்ளவளாவாள் அன்றியும் தன் கணவன் கொல்லைக் கடவாதவளும் நல்லெண்ணம் நல்லொழுக்கம் முதலியவைகளை யுடையவளாம்.

மேற்சொன்ன கிரகம் குருவற்கம் (அ) சூரியவற்கம் பெற்றிருந்தாலும் மேற்சொன்ன பலனே உண்டாவதோடு கற்புதவ ராதவனென்று நிருபிக்க சாஸ்திரங்கள் சம்மதிக்கும்.

மேற்சொன்ன சந்திரன் நீக்கம் பெற்றும் (அ) நான்காம் விட்டோன் சுக்கிரம் இவர்கள் நீச்சம் பெற்றும் நான்காம் இராசியில் குஜன் சனி இராகு கேது இவர்களிருக்கவும் நான்காம் ராசிநாதன் மேற்சொன்ன கொடிய கோட்களுடன் சகிதம் பெற்றும் பார்க்கப்பட்டு இருந்தால் அவன் மாதா விஷயம் பரவிஷயமென்றுங் கூறுக. இவ் விஷயத்தை இன்னும் ஆராய்ந்து கூறுவது சோதிட சிகாமணிகளின் முக்கிய கடமையாகும்.

## மாதாவின் சுகம், சுகமில்லாமை

மாதாவின் சுகம் என்பது ஒவ்வொருவரின் மாதாவும் அவர்களால் சுகப்பறிவாள் அல்லது துன்பப்படுவாள் என்பதை கவனிப்பதேயாகும். சிலர் தன் கணவனாலும் சிலர் புத்திரர்களாலும் சிலர் புத்திரியாலும் இன்னும் சிலர் தன் தாய்வர்க்கத்தாலும் இன்னும் சிலர் தன் கணவன் வர்க்கத்தாறாலும் இன்னும் தன் சோழராலும் இன்னும் தன் விபசார புருஷனாலும் இன்னும் சிலர் தான் கஷ்டப்பட்டு தேடிய பொருளாலும் சுகமடைவதும் இலக்கியல்பாகும்.

நான்காம் ராசியாதிபதிக்கு எந்த கிரகம் சத்துரு எவர்கள் மித்துரு என அறிவோமாயின் மேற்சொன்ன விஷயங்கள் நன்கு விளங்கும் இத்துடன் முன் சொன்னபடி நான்காம் விட்டதிபதி பார்வை சேர்க்கை இடம் முதலியவைகளையும் கவனிக்க வேண்டும்.

உதாரணமாக நான்காம் ராசியாதிபதியைப் பற்றி கீழ் கண்டவாறு கவனிக்க வேண்டும்.

நான்காம் ராசியாதிபதி தன் க்ஷேத்திரத்திற்கு 1 முதல் 12 வரையில் ஏதோ ஒரு க்ஷேத்திரத்திலிருப்பதாய் வைத்துக் கொள்வோம். நான்காம் வீட்டதிபதிக்கும் அவன் நின்ற க்ஷேத்திராதிபதிக்கு உறவு பகைசமம் என்பவர்களையறிந்த பிறகு எவரால் பார்க்கப்பட்டாள் என்பதைக்

கவனித்து அப்படிப் பார்க்கும் கிரகம் கொடுக்கும் தன்மையுள்ளதா அல்லது கெடுக்கும் சக்தியுள்ளதா என்றறிய வேண்டும், அதையறிவதர்யின் முன் சொன்னபடி பார்க்கும் கிரகத்தின் சக்தி எவ்விதமுள்ளதென அறியவேண்டும்.

### உதாரணம்

| | சனி ராகு | | சந் |
|---|---|---|---|
| | இராசி | | |
| | | | |
| | குரு கே | | பு |

இங்கு காட்டியுள்ள சக்கரத்தில் மாதுரு ஸ்தானாதிபதி குருவாகவும் குருவுக்கு ஜென்ம லக்னாதிபதியாயு முள்ளன. மேற்சொன்ன குரு தன் க்ஷேத்திரத்திற்கு 7-ம் இடமும் ஜென்மராசிக்கு 10-இடமுமாகும் மாதுரு ஸ்தானாதிபதி யாகிய குரு அம்மான் காரகனாகிய புதன் க்ஷேத்திரத்திலும் புதன் மேற்படி குரு க்ஷேத்திரமான நான்காம் ராசியிலேயே நின்று குருவைப் பார்க்கிறான்.

மாதுரு ஸ்தானத்தாதி மகிழ்வோடு கேத்திரமேர
மாதுல மன்னனோடும் மால்பார்வை யாகி நின்றால் (றும்
தீதிலா தவளின் வாழ்நாள் திங்கள்போல வாழ்வாளென்
வாதிலை யவளின் தாய்பொன் வருமெனக் கூறுவாயே

என்றபடி மேற்சொன்ன ஜாதகனின் தாய் வர்க்கத்தார் பொருளைக் கொண்டு சுகமடைவதோடு தாய் வீட்டிலும் வாழ்வாள் என்று கூறவேண்டுவதால் மாதாவின் சுகம் முதலியவைகளை அவனிருக்கும் க்ஷேத்திர விபரங்களைக் கூறுக. அன்றியும் குரு புதனால் பார்க்கப்பட்டதாலும் குரு வீட்டிலிருப்பதாலும் குருவுக்கும் புதனுக்கும் சத்ருத்துவ முண்டாகையால் சில காலங்களில் தாய் வர்க்கத்தாரால் பகை ஏற்படுமென்றுங் கூறுக.

மேற்சொன்ன மாதுரு ஸ்தானாதிபதி ஜெனன ராசியில் பலம் பெற்று ஜென்ம லக்கினாதிபதியால் பார்க்கப்பட்டால் இந்த ஜாதகனாலேயே சுகமடைவாரெனவும் சூரியனால் அல்லது 9-ம் வீட்டதிபனால் பார்க்கப் பட்டால் தன் கணவனால் சுகமடைவாள் என்றும் மற்றும் முறையே அவரவர்கள் க்ஷேத்திர விபரங்களால் சுகம் துக்கம் முதலியவைகளைப் பிரித்துச் சொல்லுக.

ஓரா கிரகப்படி சூரியன் குஜன் ஓரையி லிருக்கவும் சப்தம் ஸ்தானமாகிய 7-ம் ராசியில் குஜன் நிற்கவும் ஜெனன லக்கினத்திலேனும் 7-ம் இராசியிலேனும் குஜனும் சந்திரனும் கூடி க்ஷீணப் பெற்றிருக்க அவர்கள் நின்ற ராசிக்கு 7, 8, இவ்விடங்களில் கொடிய கோட்கள் நின்று பார்க்க அந்த ஜாதகன் தன் மாதாவினால் அற்ப ஆயுளுடன் இறந்து போவான் எனவும் கூறுக இவை அவன் நின்ற க்ஷேத்திரத்திற்கு தக்கபடி பகுத்துரைக்க வேண்டும்.

## சௌக்கியம்

நான்காம் வீட்டால் ஒவ்வொரு ஜாதகனின் சுகங்களையும் குறித்து பேசத்தகுந்த இடமாகும் சுகமென்பது சுகாதிபதி எந்த கிரகமோ அந்த கிரகம் சுகத்தைக் தரத்தக்கவனா அல்லது சுகத்தை மருப்பவனோ என்றும் சுகங் கிடைக்குமாயின் எவ்விதமான சுகமென்றும் ஆராய்வது முக்கியகடமை நான்காம் வீட்டிற்குடையோன் எந்த கிரகமாயின் அவனிருக்குந் தராதரத்தால் சுகத்தை செடுக்கவும், சுகத்தை வளர்க்கவும் சக்திவாய்ந்த வனாகிறான் நான்காம் வீட்டதிபதி தன் க்ஷேத்திரத்திற்கு ஜெனன லக்கினத்திற்கும் நற்க்ஷேத்திரமாகிய கபஸ்தானம் பெற்றும் ஜெனன லக்கினாதிகும் நான்காம் விட்டதிபதிக்கும் உறவு கிரகங்களால் பார்க்கப்பட்டும், சுகிதம் பெற்றிருப்பானாகில் அந்த [illegible] முத

லியவைகளிலேயே கடத்துவான், ஏனெனில் நான்காம்

நான்காம் வீட்டோன் ஜெனன ராசிக்கு ஆறாம் வீட்டோனுடன் கூடி 8, 12 முதலிய இடங்களிலிருப்பானாகில் அந்த ஜாதகனின் வாழ் நாட்களை வியாதிபகை முதலியவைகளிலேயே கடத்துவான், ஏனெனில் நான்காம்

வீடடோன் சுகத்தைப்பற்றி யறிவானாயினும் தன் க்ஷேத்திரத்திற்கு திருதிகாதியோடும் வியாதியை கொடுப்பவனாகிய ஆறாம் விட்டதிபனேடுங் கூடியதால் அவனுக்குரிய பலங் குறைகிறது.

நான்காம் வீட்டதிபதி இரண்டாமிடத்தோடனும் கூடி ஜெனன ராசிக்கு மோந்திரம் திரிகோணம் முதலிய இடங்களில் ஆக்ஷி உச்சம் சமம் பெற்றிருக்கில் அந்த ஜாதகன் பொன் பொருள் முதலியவைகளில் சுகமடைவான்.

நான்காம் வீட்டோன் 7-ம் வீட்டோனுடன் கூடி முன் சொன்னபடி பலம் பெற்றிருக்க தன் களத்திர மூலசுகத்தை யனுபவித்து மகிழ்வுற் றிருப்பான்.

நான்காம் வீட்டோன் அஷ்மடாதியுடன் கூடி மேற் சொன்னபடி பலம் பெற்றிருந்தால் சுகத்தோன்றிய நேரம் துக்கமும் துக்கந்தோன்றிய நேரம் சுகமுமாக பொருந்தி இருக்கும்.

நான்காம் வீட்டோன் பாக்கியாதிபதியுடன் கூடி மேற் சொன்னபடி பலம் பெற்றிருக்க பூரண செல்வமும் பிதுர் பாக்கியமுமுடையவனாய் வாழ்ந்திருப்பான்.

நான்காம் வீட்டோன் 10ம் வீட்டோனுடம் கூடி மேற் சொன்னபடி பலம் பெற்றிறுக்க சுறுசுறுப்புள்ளவனாயும் தொடுத்த காரியம் ஜெயமடைவதாலும் சந்தோஷமும் சவுக்கியத்தோடுமிருப்பான்.

நான்காம் வீட்டோன் லாபாதியுடன் கூடி மேற்சொன்னபடி பலம் பெற்றிருந்தால் தன் வாழ்நாட்களிலே ஏற்படும் அதிக வருமானத்தாலும் சயன போகத்தாலும் சுகத்தோடிருப்பான்.

நான்காம் வீட்டோன் 12-ம் வீட்டோனுடன் கூடி மேற் சொன்னபடி பலம் பெற்றிருக்க அந்த ஜாதகனுக்கு நல்ல சுகம் ஏற்படும் அடிக்கடி தன் சுகத்தை இழந்து போவான்.

## விபரம்

நான்காம் இடமென்பது ஒவ்வொருவரின் சவுக்கியங்களை குறித்த க்ஷேத்திரமே என முன்பே கூறியுள்ளோமாயினும் நான்காம் அதிபதி திசை (அ) புத்தி அவைகள் வருங் காலங்களில் விசேஷ சவுக்கியமுண்டாகும் என்று எண்ணுவது கூடாது ஏனெனில் நான்காம் ராசிக்குடையோன் சனியாயும் அவன் திசை நடக்குமாகில் அவை மாரக திசையாகும் இதற் போதுமான காரணங்கள் கூற சாஸ்திரங்களின் போதுமான இடமுண்டு.

வாகனம் என்பது ஒவ்வொரு ஜாதகர்களுக்கும் நாற்கால் பிராணிகள் சேர்க்கையுண்டா யென்பதை யறிவதே யாகும்,

வாகனம் என்பது குதிரை, யானை கழுதை, நாய் முதலிய மிருக ஜெந்துக்களே யாகும். ஆனால் ஒவ்வொரு நாற்கால் பிராணிகளுக்கு காரகன் சுக்கிரனே இப்பால் நான்காமிடமென்பது வாகன ஸ்தானமாகும்,

நான்காம் வீட்டோனைக் கண்டு வாகனமரியும் விபரம்

| | | |
|---|---|---|
| நான்காம் வீட்டோன் | சூரியனாகில் | குதிரை |
| ,, | சந்திரனாகில் | பசு |
| ,, | குஜனாகில் | எருது |
| ,, | புதனாகில் | மதயானை |
| ,, | குருவாகில் | பசு |
| ,, | சனியாகில் | துஷ்ட மிருகம் |
| ,, | இராகுவாகில் | துஷ்ட மிருகம் |
| ,, | கேதுவாகில் | துஷ்ட மிருகம் |

இவை பொதுவாகக் கூறிவதாகும்.

நான்காம் வீட்டோன் சூரியன் சந்திரன் இவர்களிருவருடன் கூடி சுபக்ஷேத்திரம் பெரின் பூமியை உழத்தக்க வாகன முண்டாகும்,

நான்காம் வீட்டோன் சூரிய சந்திரனிவர்களுடன் கூடி ரிடபம் துலாம் முதலிய ராசிகளிலிருக்கில் குதிரை வந்தடையும்.

நாட்காம் வீட்டோன் புதனுடன் கூடினாலும் சுக்கிரனுடன் கூடினாலும் எருமை வந்தடையும்.

நான்காம் வீட்டோன் குருவுடன் கூடி பலம் பெற்றிருக்க பசு வாகனம் சித்திக்கும்.

நான்காம் வீட்டோன் சனி இராகு கேதுக்களுடன் கூடி பலம் பெற்றிருக்க புலி, சிங்கம், கரடி முதலிய ஜெந்துக்கள் வந்தடையும்.

மற்றுமுள்ள வாகன சுகதுக்காதிகளை கிரக அடவியால் கண்டு கொள்க,

## 5-ம் இடம்

ஐந்தாமிடமென்பது தாயுடன் பிறந்த அம்மானையும் ஜாதகனின் புத்திரனையும் முக்கியமாய் குறித்த இடமாகும்.

ஐந்தாமிடத்தால் அம்மான் விஷயமும் பலன் முதலியவைகளை யறியலாமென சாஸ்திரங்கள் கூறுவதால் அம்மான் விஷயங்களை யறியும் விபரம் இங்ஙனம் கூறுவோம்.

ஐந்தாம் இராசியாதிபதி எந்த கிரகமாயினும் அந்த கிரகமே அம்மானுக்கு நன்மை தீமை முதலியவைகளை யுண்டாக்குங் கர்த்தாவாகும்.

ஐந்தாமிட ராசிநாதன் 5-ம் க்ஷேத்திரத்திற்கு 6,8,12 என்னும் கொடிய க்ஷேத்திரங்களில் நீச்சம் பகை மூடம் அஸ்தமயம் பெற்றும் பகைவருடன் கூடியும் பகைவர்களால் பார்க்கப்பட்டு மிருந்தால் அம்மான் கங்கிசம் ஜாதகன் ஜெனித்த காலத்திலேயே நாஸ்தியாய் அம்மானென்றழைக்கவும் கிடையாதென கூறலாம்.

5 ம் வீட்டோன் தன் க்ஷேத்திரத்திற்கு கேந்திர திரிகோணங்களின் க்ஷி உச்சம் நட்பு சமம் முதலியவைகளால் பலமடைந்தும் தனக்கு உறவு கிரகங்களோடாவது சமகிர ங்களோடாவது சகிதம் பெற்று நற்கோட்களால் பார்வையுற்றிருப்பானாகில் ஜாதகன் ஜெனன காலையில்

அம்மானுண்டென பொதுவாய்க கூறவேண்டும் இத்துடன் அம்மான் காரகனாகிய புதனிருக்கும் தராதரத்தையுமா லோசிப்பதுசாஸ்திர சித்தம்,

## அம்மான் எத்தனை பேரென்றறியும் விபரம்

1. ஐந்தாமிராசி முதல் ஐந்தாம் வீட்டதிபதி எந்த ராசியிலிருந்தானோ அந்த ராசி வரையில் எத்தனை கிரக மிருந்தனவோ அத்தனை அம்மான் உண்டு என்பதாகும் இப்பால் மொத்த கிரகங்களைக் கண்டவுடன் நீச்சம் பகை அஸ்தமயம் முதலியவைகளாலும் பார்வை சேர்க்கையாலும் பலமிழந்த கிரகங்களை மறித்துப்போனாரெனவும் பலம் பெற்ற கிரகங்களை விருத்தியோடிப்பாரெனவும் கூறுவதே யாகும்.

பின்பு புதன் அஷ்டக வர்க்கில் புதன் நின்ற ராசிக்கு 5-ம் ராசியிலெத்தனை பிந்துக ருந்தனவோ அவையே அம்மானின் சகோதரமெனக் கூறுவதேயாகும்.

2. அம்மான் ஸ்தானாதிபதிக்கும் ஜெனன லக்கினாதி பதிக்கும் சத்ருத்துவமாயின் அம்மானுக்கும் ஜாதகனுக்கும் சத்ருத்துவமுண்டென்றும் உறவாயின் ஒற்றுமை சமமாயின் ஒருவர்க்கொருவர் சமத்துவமாயிருப்பாரென்றுங் கூற வேண்டும்.

3. அம்மான் ஸ்தானத்தை கொடிய கிரகங்கள் நோக்குற்றிருப்பாராயின் அவர்களின் திசை புக்தி காலங் களில் மேற்படியாருக்கு கொடிய துன்பமும் கெண்டங் களும் சம்பவிக்கும் சுபகிரகங்கள் நோக்குற்றிருக்குமாயின் அவர்கள் திசைபுத்தி காலங்களில் நற்பலன் விளையும்.

மற்றும் அம்மான் குடும்ப விஷயத்தை ஐந்துக்கு இரண் டாமிடத்தாலும் சகோதர விஷயத்தை மூன்றாமிராசியாலும் சுகங்களைப்பற்றி நான்காம் ராசியாலும் புத்திரரைப்பற்றி 5-ம் ராசியாலும் தைரியம் வியாதி கறாண முதலியவை களை 6-ம் ராசியாலும் களத்திர விஷயங்களை ஏழாம் ராசி யாலும் ஆயுள் விஷயங்களை 8-ம் ராசியாலும் பாக்கியங் களை பத்தாம் ராசியாலும், லாபங்களைக் குறித்து 12-ம் ராசியாலும் தெரிந்துக்கொள்ளுக.

இவ்வாறே ஒவ்வொரு வர்க்கத்தார்க்கும் அவரவர்கள் ஸ்தானத்திற்கு 1-முதல் 12 வரையிலும் உள்ள க்ஷேத்திரங்களால் பாவபலனறியலாம்.

மற்றும் திசை புத்தியாலும் ஒவ்வொரு வர்க்கத்தார்க்கும் திசாபுத்திநாதர் பெற்ற பாவக விபரத்தால் பலனுரைப்பது கடமையாகும்.

## புத்திரன்

ஒவ்வொரு ஜாதகத்திலும் புத்திரபலமே விசேஷம் புத்திரரென்பதை முதன் முதல் புத்திர புத்திரிகளுள்ளவனாவென்றும் அதில் ஆண் பெண் எவ்வளவென்றும் புத்திரர்கள் குருடு செவிடு பேடி முதலிய அங்கயீனர்களா இல்லையாவென்றும் (புத்திரர்கள் பிறப்பது) தன் மனைவி கற்புடையவளாய் தனக்கே ஜெனிக்குமா அன்னியா பிதாவின் புத்திரர்களாவென்றும் இன்னும் பற்பலவிதமாயும் அராய்ந்துச் சொல்ல வேண்டும்.

பொது ஐந்தில் இராகு கேதுக்களிருக்கின் புத்திரரில்லை என்பது சாஸ்திரங்களின் முறை இவை அனுபவத்திலும் சம்மதிக்கப்பட்டு வருகிறது ஆயினும் நூற்றுக்கு 50-புத்திரரில்லாமலும் மற்றும் 50-புத்திரருள்ளவருமாகிறார். இதற்கு காரணம் 5-ம் ராசியதிபனே ஐந்தாம் ராசியில் இராகு விருக்கினும் ஐந்தாம் வீட்டதிபன் பலம் பெற்றிருக்க புத்திர ருண்டாகுமென்பதில் சந்தேகமில்லை புத்திர ஸ்தானாதிபதியான ஐந்தாம் ராசியதிபதி கன்னி மிதுன முதலிய ராசிகளில் தனித்திருப்பானாயினும் புத்திரர் அற்பமே யாகும்.

ஐந்தாம் வீட்டோன் பாபியாய் ஏழாம் வீட்டோன் அங்கிசம் பெற்றும் குரு ஜெனன ராசிக்காவது புத்திர ஸ்தானத்திற்காவது மூன்றாம் ராசியிலிருக்க சூரியன் நின்ற ராசிக்கு 12-ல் சுக்கிரன் புதனிருக்கினும் புத்திரர் அற்பமேயாகும்.

ஐந்தாம் ராசியை சனி இராகு கேதுக்கள் ஜெனன ராசிக்கு கேந்திரங்களிலிருந்து பார்ப்பாராகின் பிறந்திறந்து போவார்கள் ஜெனன ராசியில் சூரியனும் ஜெனன ராசி மேஷம் விருச்சிகமாயும் குரு பலயீனம் பெற்றுமிருக்கில் புத்திரர் பிறந்திறந்து போவார்.

எந்த லக்கினமாயினும் 8-ல் குரு 10-ல் குஜனும், புத்திரஸ்தானாதிபதி திரிகோண ராசியிலுமிருக்க அந்த ஜாதகனுக்கு காலாந்திர புத்திரருடெண்க.

குறிப்பு:—புத்திரஸ்தானம் ஐந்தாம் ராசியாயினும் அதற் கைந்காம் ராசியையும் கவனிக்க வேண்டுமென்பது சாஸ்திர கொள்கை யாகையால் புத்திரஸ்தானாதிபதியும் அதற்கைந்தாம் ராசிநாதனும் ஜெனன ராசியதிபதி குரு இவர்கள் நின்ற ராசிக்கு 8-ம் ராசியில் குஜன் நிற்க அந்த ஜாதகனுக்கும் புத்திரன் நயண ஈனனெனக.

மேற்சொன்ன 5-ம் வீட்டோன் அவனுக்கைந்தாம் வீட்டோன் குரு இவர்கள் நின்ற ராசிக்கு 8-ம் ராசியில் சனி நிற்க மூடமாய் பிறக்கும் புத்திரர்களை யுடையவனாவான். மேற்சொன்னவர்களுக்கு எட்டாம் ராசியில் குளிகனிருக்கில் அவன் புத்திரன் சன்னியாசியாய்ப் போவான் இராகு கேது விருக்கில் ஊமை என்றுங் கூறுவர்.

ஐந்தாம் வீட்டோன் பாபியாயினும் அவன் தன் பகைவருடன் சேராது சுபகிரகங்களுடன் கூடியும் சுபர்களால் பார்க்கப்பட்டு மிருப்பானாகில் அந்த ஜாதகனுக்கு அனேக புத்திரருண்டு ஐந்தாம் ராசிநாதனும் குருவும் ஒன்று கூடி புத்திர ஸ்தானத்திற்கு கேந்தர திரிகோணங்களிலிருந்து புத்திர ஸ்தானத்தையே பார்த்தாலும் புத்திரருண்டாகும்.

ஐந்தாம் ராசியில் சனி குஜன் இவ்விருவருங் கூடியிருக்கவும் அவர்களை சுபகிரகங்களோ பாவகிரகங்களோ பாராதிருக்க அவன் மனைவிக்கு அவன் கலியாணம் செய்துக் கொள்ளாமுன்னமே தரித்த கெர்ப்பத்தால் புத்திரன் உண்டாவார்.

சூரியன் சந்திரனிவர்களின் ஆக்ஷி வீடுகளான கடகம் சிங்கம் இந்த ராசியில் ஜெனிந்தவர்க்கு ஜெனன ராசிக்கு 12-ல் சூரியனும் சந்திரனுமிருக்க அவர்களோடு சுக்கிரன் சகிதம் பெறவும் குஜன் பார்வையின்றி வேறு கிரகங்களின் பார்வையிருக்கினும் அவன் மனைவிக்கு தான் ருதுவாகா முன்னம் தரித்த கர்பத்தால் புத்திரருண்டாவார்.

ஜெனன ராசிக்கு ஏழாம் ராசியும் ஐந்தாம் ராசியும் சுக்கிர மந்தியமாயும் 5-ராசிநாதன் புதன் நீவீடேறவும் அவன் மனைவி மலடாகையால் புத்திரரில்லை என்க.

5-ம் ராசியில் அவ்விராசி நாதனுக்கு சத்துரு கிரகம் சகிதம் பெறவும் 7-ம் ராசியில் வெள்ளியும் 10-ம் ராசியில் சந்திரண் பலம் பெற்றுமிருக்கில் அந்த ஜாதகனே மலடாகையால் புத்திரர் அற்பமென்க.

6-ம் ராசிக்குடையவனும் குருவும் மகரம் கும்பமென்னும் ராசியிலிருக்க (1) சனியோடு சகிதம் பெற (அ) சனியோடு சகிதம் பெற (அ) சனிவற்கமோ சனி ரிடபம் கடகம் கன்னி வருக்ஷிகம் மகரம் மீனம் என்னும் இரட்டை ராசியிலிருக்க அந்த ஜாதகனுக்கு தத்து புத்திரனே கிடைப்பார் என்றுங் கூறுக.

## 6- ம்இடம்

ஆறாம்ராசி என்பது வியாதி கடன் தைரியம் முதலியவைகளை முக்கியமாய் குறித்தாகும் இவற்றுள் முக்கியமாய் வியாதி என்பதைப்பற்றி ஆறாயும் விபரமாவன.

பொதுவாக ஆறாம் ராசியானது கொடிய கிரகாதிபத்மிருந்தாலும் அல்லது கொடிய கிரகங்களிருந்தாலும் வியாதி வீக்ஷணமிராது இவ்வாறே கடன் பகைவர் முதலியவர்களுக்கும் ஆறாம் ராசியில் கொடிய கோட்களிருப்பாராயின் தன் பகைவர் பலயீனமடைவானென்றும் சல்லிய மிருக்கிலும் சல்லிய மூலமான தொந்தரவடைவானென்றுங் கூறுவது சிலாக்கியமாகும் ஆறாமிடத்தைப்பற்றி வியாதியின் பொது விஷயங்களை முன் யாகத்திலேயே குறிப்பிட்டுள்ளோமாகையால் இங்கு சுருக்கி எழுதப்பட்டன.

## வியாதி விபரம்

கிரகங்களுக்குறிய வியாதி எவ்விதமாயினும் அவனிருந்த க்ஷேத்திராதிபன் பலததாலும் பார்வை சேர்க்கை முதலியவைகளாலும் ஒவ்வொரு கிரகத்திற்குறிய வியாதி குறைந்தும் அதிகப்பட்டுங்காணும் ஆயினும் 6-ம் ராசியில்

இராகு கேதுக்களிலிருந்தால் விஷயங்களும் தீண்டா தென்பது சாஸ்ரக் கொள்கை.

ஆறாம் ராசிநாதன் சந்திரனாக அவன் சனி வர்க்க மேரியிருக்கில் ஜன்னி காமாலை பைத்தியம் கருங்குட்டம் முதலிய வியாதிகளால் துன்பப்படுவான் புதன் வர்க்கும் பெற்றிருக்கில் ஜுரம் தலைநோய் முதலியவைகளாலும் குஜன் வர்க்கம் பெற்றிருக்கில் கல்லடி காயம் முதலிய ஆயுதங்களால் றெணம் பிளவை சிரங்கு முதலியவை களால் துன்பமும் இராகு கேதுவாகில் விஷப்பினி விஷத் தீண்டல் நரம்பு சிலந்தி பூச்சிக்கடி முதலியவைகளாலும் துன்பப்படுவானென்றுங் கூறுக.

## கடன்

ஆறாம் ராசி பாவகிரகங்களின் க்ஷேத்திரமாயும் அவ் வீட்டிற்குடையோன் பகை நீக்கம் பெற்ற கோட்களின் வர் கம் பெற்றும் ஆறாம் வீட்டோன் உத்தமம் பெற்றிருக்கினும் இரண்டாமிடத்தோனாகிய தனாதிபதி வன் வலிவிழந்து மிருப்பானாகில் அந்த ஜாதகன் கடன் முதலியவைகளால் கஷ்டப்படுவான்.

இரண்டாம் வீட்டோனும் ஆறாம் வீட்டோனும் சனி இராகு கேது இவர்களில் வர்கம் பெற்றும் ஆறாம் ராசிக்கு ஆறாம் ராசிக்குடையவன் 8-ம் ராசியில் தன் படைவன் வீட்டிலிருக்கவும் அந்த ஜாதகன் பசி பட்டினி முதலியவை களால் அன்ன மருந்து அவாவுடையவனாயும் காலங் கழிப்பானென்றுங் கூறுக.

6-ம் ராசிநாதன் இரண்டு நான்குக் குடையவர்களுடன் கூடி சனி வர்க்கம் பெற்றுமிருக்கில் அந்த ஜாதகன் தன் இன ஜனங்களின் விரோதமுடையவனும் சோரம் கள்ளுண் ணல் முதலிய காரியங்களில் மிக்க சிறப்புடையவனாய் என் னாலும் கிலேசமுடையவனாகவே இருப்பான்.

## சத்துரு விபரம்

ஆறாம் ராசியில் சூரியன் சனி இராகு கேது இவர்கள் பலம் பெற்றும் ஜெனன லக்கினத்தில் குரு புதன் முதலி

யோர்களிருக்கினும் அல்லது பார்க்கினும் ஆறாம் இராசிக்குடையோன் 3, 11 முதலிய க்ஷேத்திரங்களிலும் பாவசொருபசெயத்திலிருக்கினும் அந்த ஜாதகன் தனக்கு சத்துருவில்லாதவரென்றே சொல்லவேண்டும் ஜெனன லக்கினாதிபதியும் செயத்திலிருக்கினும் அந்த ஜாதகன் தனக்கு சத்துருவில்லாதவரென்றே சொல்லவேண்டும் ஜெனன லக்கினாதிபதியும் ஆறாம் வீட்டதிபதியும் துற்பலம் பெற்று பாவகோட்களின் மத்தியிலிருக்க சத்துருவுடையவனென்றும் கூறுக மற்றும் விபரம் கீழ் குறிப்பிட்ட படியேயாம்.

பேறாகிய வாரமிடப் பெலனும் பலன் கூறில்
வீராகிய வாறாதிபன் குஜனாய் பலம் பெறிலோ
சீறாகிய ராகுமதில் சேர்ந்து பலம் பெறவே
நீராகுவர் எதிர்த்தோ மென நிகழ்த்தும் பலனென்னே

பெருமை பெற்ற ஆறாம் வீட்டதிபன் பலமும் பலனும் சொல்லுகிறேன் கேட்பாயாக ஆறாம் வீட்டோன் குஜனாகவும் அந்த குஜன் பலம் பெறவும் ஆறாம் ராசியில் இராகு இருந்தாலும் அல்லது குஜனுடன் சேர்ந்திருந்தாலும் அந்த ஜாதகனை எதிர்த்த பகைவர்கள் நீராய்ப்போவாரென்றுங் கூறுவாயாக.

கூறுவா காரில் கொடியோ ரிருந்திட
பேருடன் நற் பிரபல மாகிடும்
சீருவாரை ஜெயஞ் செய்யும் வல்லவன்
தேருவான் ஜெகமெங்கும் நிகழ்ச்சியே

ஆறாம் இராசியில் கொடிய பாவகிரகங்களிருக்க அந்த ஜாதகன் நற்கீர்த்தியும் பிரபல மேன்மையுடையவனும், தன்னை எதிர்த்தோரை ஜெயஞ்செய்ய வல்லவனும் இப் பூமியெங்கும் பிரக்யாதி வாய்ந்ததனாப் புகழ்ச்சி பெற்றிருப்பானென்றுங் கூறுக,

## ஏழாம் இடம்

ஏழாமிடத்தால் களத்திரம் காமம் விரோதம் என்னும் விஷயங்களையரியும் க்ஷேத்திரமாகையால் முதன் முதலாக இந்த ஜாதகன் கிராமத்தில் விருப்பமுடையவனா (அ) வெருப்புடையவனா யென்பது முக்கியமாகையால் ஏழாம்

வீட்டுடையோன் 10-ல் இருக்க ஜெனன ராசிக்குடையவன் அவனோடு சேர்ந்திருக்க அல்லது பார்க்க ஒருவருக்கொரு வர் நோக்குற்றிருந்தாலும் 1,3 இவ்விடங்களில் புதன் சுக்கி ரன் இவ்விருவர்களில் ஒருவரிருக்க அந்த ஜாதகன் காமாந்த காரத்தில் மூழ்கியவனாவான் ஜெனன லக்கினாதி பதியும் தனாதிபதி களத்திராதிபதி இம்மூவரும் 6,8,12ல் நீச்ச மடைந்திருப்பார்களாகில் அப்படிப்பட்ட ஜாதகன் காமத்தை வெறுத்தவனாவான்.

### பொதுவாய் ஏழாம் வீட்டோனைக்கொண்டு

ஜாதகனின் மோக விபரங்களையறியும் விபரமாவன 7-ம் வீட்டோன் சூரியனாகில் அளவோடு கர்மத்தை இச் சிப்பான்.

சந்திரனாகில் அளவோடு காமத்தை இச் சிப்பான்

குஜனாகில் காமத்திலும் வைராக்கியமு டையவன்,

புதனாகில் காமத்தி லாழ்ந்துக் கிடப்பான்

குருவாகில் சமமாகிய காமமு டையவன்,

சுக்கிரனாகில் மோகமதிக முடையவன்,

சனியாகில் துஷ்டத்தன மோகமுடைய வன்.

ஏழாம் வீட்டோனால் மேற்சொல்லியபடி யாயினும் கிரகசேர்க்கை பார்வை முதலியவைகளால் குறைந்து மதிக்கப்பட்டு இருப்பான்.

## களத்திர விபரம்

(1) களத்திர ஸ்தானாதிபதியோடு எத்தனைக் கோட் களிருந்தனவோ அத்தனை மனைவிகளை யுடையவனென் பது சாஸ்திரக் கொள்கை.

(2) களத்திர ஸ்தானாதிபதி எத்தனை கிரகத்துடன் சகிதம் பெற்றிருந்தாலும் மேற்சொன்ன களத்திர ஸ்தானா திபன் தன் சுய க்ஷேத்திரத்தி லிருப்பானாகில் விவாகம் ஒன்றேயாகும்.

(3) களத்திர ஸ்தானாதிபதி கேந்திரத்திலிருந்தாலும் சுக்கிரன் கேந்திரத்திலிருந்தாலும் இருசாரமென்பர், ஆயினும் களத்திர ஸ்தானத்தை திரிகோணங்களில் ஆக்ஷி பெற்ற சுபகிரகங்கள் பார்பரேல் ஒரு தாரமென்றே சொல்ல வேண்டும்.

(4) களத்திர ஸ்தானாதிபதியும் களத்திர காரகனும் ஜெனன லக்கினத்திற்கு 6, 8, 12-ல் இருந்த நீச்சம் பகைப் பெற்ற சனி இராகு கேதுக்களால் பார்க்கப்பட்டால் அவன் களத்திரன் உடனுக்குடன் இறந்து போம்.

ஏழாம் வீட்டோனுடன் சனி குஜன் இராகு கேது முதலியவர்களில் எவரேனும் சேர்ந்தருப்பாரே யாமானால் ஏழாம் வீட்டோனை விவாகம் செய்த ஸ்திரீ என்னும் மற்றும் கொடியவர்கள் சேர்ந்ததை சேர்க்கை ஸ்திரீ அல்லது காந்தர்வ விவாக ஸ்திரீ என்று கூறவேண்டும்.

## அனேக களத்திரமுடையவர்கள்

சுக்கிரன் 1,5,7,9,12 இவ்வி ராசிக்குடையவர்கள் குருவுடன் சேர்ந்து பலம்பெற்றிருக்கவும் அல்லது ஆக்ஷி உச்சம் கேந்திரம் இவற்றிலிருக்கவும் அவை ஜெனன லக்கினத்திற்கும் சந்திரனிருந்த ராசிக்கும் கேந்திர திரகோணங்களாயிருக்க அந்த ஜாதகன் அனேக பெண்களுடன் சுகித்திருப்பவனாவான்.

## 5 களத்திர முடையவன்

களத்திராதிபதியோடு சந்திரன் குஜன், புதன் குரு இவர்கள் கூடி ஜெனன லக்கினத்திற்கு 10-ம் ராசியிலிருக்க அவர்களை நட்பு ஆக்ஷி பெற்ற கிரகங்கள் பார்க்க அவன் 5-கலியாணம் செய்துக் கொள்வான்.

## நான்கு விவாக முடையவன்

மேற் சொன்னபடி களத்திராதிபதியோடு மூன்று கிரகங்கள் கூடி பலம் பெற்றிருந்தால் நான்கு களத்தர முடையவன்.

## மூன்றும் விவாக முடைவன்

மேலே சொன்னபடி களத்திராதியுடன் இரண்டு சுபகிர கங்கள் சேர்ந்து பலம் பெற்று நிற்கில் அவன் மூன்று விவாகம் செய்துக்கொள்வான்

## இரண்டு விவாக முடையவன்

களத்திராதியுடன் சுக்கிரன் கூடி ஜெனன லக்கினத் திற்கு கேந்திரங்களில் பலம் பெற்றிருந்தால் இரண்டு விவாகம் செய்துகொள்ளுவா னென்றுங் கூறுக'

இப்பால் அவரவர்கள் சேர்கை பார்வையால் இன்னும் பலவிதமாய் பிரித்து சொல்லவேண்டும், மேற் சொன்னபடி 5, 4, 3, 2 விவாகமாயினும் அவை மறிந்து போகுமா அல்லது சந்தான விருத்தி குறைவா அல்லது 5-க்கும் எல்லா பாக்கியமும் பொருந்தி இருக்குமா என்பதை மற்றும் கிரக அடைவாலும் களத்திராதியுடன் கிரகங்கள் கூடி இருந்த பகை உறவு முதலிபவைகளாலும் பார்வை சேர்க் கை முதலியவைகளாலும் விரதங்களைக் கூறுக விவாகம் ஒன்று ஏற்படுவதற்கு கிரக அடவியாலும் அஷ்டகவர்க் காலும் போதுமான காரணம் கூறுக.

## களத்திர விஷயம்

களத்திராதிபதியோடு பார்வை சேர்க்கை முதலிய விபரம்.

சூரியனாக இருந்து சூரியன் குருவர்கமேறி யிருக்கில் பதி விரதையான களத்திர முடையவன், சுக்கிரன் வர்கம் பெற அழகு வாய்ந்தவன்.

சனிவற்கம் பெற சோரம் செய்பவள்
சந்திரன் வற்கம்பெற சந்தோஷ வார்த்தையுடையவன்
குஜன் வற்கம்பெரில் மோகமதிக முடையவன்

## களத்திராதிபதி சந்திரனாகவரில் அதற்குறிய விபரம்

சந்திரன், சூரியன் வற்கம் பெறில் ஆசையுடையவள்
,, குஜன் வற்கம் பெரில் திருட்டுதன முடையவள்
,, புதன் வற்கம் பெற்றிருக்கில் அழகுங் காமமுடையவள்
,, குரு வற்கம் பெற்றிருக்கில் நன்னடத்தையுடையவள்.
,, சுக்கிரன் வற்கம் பெற்றிருக்க காமத்தாலலைகுவள்
,, சனி வற்கம் பெற்றிருக்கில் பிறரறிய சோரம் போவாள்

## களத்திராதி குஜனாகவரில் அதற்குரிய விபரம்

குஜன், சூரியன் வற்கம் பெற்றிருக்க சண்டைக்காரி
,, சந்திரன் வற்கம் பெற்றிருக்க சமயம்போல் நடப்பவள்.
,, புதன் வற்கம் பெற்றிருக்கில் பக்தியும் விகாரமுடையவள்.
,, குரு வற்கம் பெரில் சன்மார்க்க மறிந்தவள்
,, சுக்கிரன் வற்கம் பெறில் அன்னியபுருஷ ஆசையுடையவள்
,, சனி வற்கம் பெற்றிருக்கில் தூஷண வார்த்தை புருஷனுக் கடங்காதவள்.

## களத்திராதிபதி புதனாகவும் அவர்கள் பெற்ற வர்கபலன்

புதன், சூரியன் வற்கம் பெற்றிருக்கில் பிறருதவியால் சோரம் போவாள்
புதன் சந்திர வற்கம் பெற்றிருக்கில் கணவனுக்கு பயந்தவள்
புதன் குஜன் வற்கம் பெற்றிருக்கில் குடும்பத்தில் மீறிப் பேசுவாள்
புதன் குரு வற்கம் பெற்றிருக்கில் கற்புடையவள்
புதன், சுக்கிர வற்கம் பெற்றிருக்கில் கணவனை விட்டு பிரியாதவள்
புதன், சனி வற்கம் பெற்றிருக்கில் கணவனறிய சோரம் போவாள்.

## களத்திராதிபதி குருவாயும் குருவற்கம் பெற்ற பலன்

குரு, சூரியன் வற்கம் பெற்றிருக்க உத்தம பதிவிரதை
,, சந்திரன் வற்கம் பெற்றிருக்க ரூபலாவண்ய முடையவள்
,, குஜன் வற்கம் பெற்றிருக்க மீறிப்பேசுவாள்.
,, புதன் வற்கம் பெற்றிருக்க பணம் பரிக்கும் நெஞ்முடையவள்
,, சுக்கிரன் வற்கம் பெற்றிருக்க எல்லோரையும் சமமாய் பாவிப்பான்.
,, சனி வற்கம் பெற்றிருக்க ஒருவருமறியாமல் சோரம் செய்வாள்

## களத்திராதிபதி சுக்கிரனாகவும் சுக்கிரன் பெற்ற வற்க பலன்

சுக்கிரன் சூரியவற்கம் பெற்றிருக்கில் பூரண அழகு வாய்ந்தவள்
,, சந்திரன் வற்கம் பெற்றிருக்கில் பூரண செல்வமுடையவள்
,, குஜன் வற்கம் பெற்றிருக்கில் தீய வார்த்தைகளைப் பேசுவாள்
,, புதன்வற்கம் பெற்றிருக்கில் மோகமதிகமுடையவள்
,, குரு வற்கம் பெற்றிருக்கில் ஒருவருக்கும் பின் வாங்காதவள்
,, சனி வற்கம் பெற்றிருக்கில் தீமை செய்தோர்க்கு தீமையே செய்பவள்

## களத்திராதிபதி சனியாகவும் சனிபெற்ற வற்கபலன்

சனி சூரியன் வற்கம் பெற்றிருக்கில் கொடிய துரைப்பாள்
,, சந்திரன் வற்கம் பெற்றிருக்கில் சம்பத்து அதிகமுடையவள்

,, புதன் வற்கம் பெற்றிருக்கில் புருஷன் மீது பழி சொல்வாள்

,, குருவற்கம் பெற்றிருக்கில் தன் மனம் போல் நடந்து கொள்வாள்

,, சுக்கிரன் வற்கம் பெற்றிருக்கில் எல்லா காரியமு மறிந்தவள்

## களத்திராதிபதிதன் சுயவற்கம் பெற்று நிற்பது மெத்த விஷேம் ஆனதால்

சூரியன்:—தன் சுயவற்கம் பெற்றிருக்கில் எல்லோரையும் ஒரே விதமாய் பாவிப்பவள் வஞ்சமில்லாதவள்

சந்திரன்:—தன் சுயவற்கம் பெற்றிருக்கில் நல்லவார்த்தையும் லக்ஷிமியைப் போன்ற அழகும் செல்வமுடையவள்.

குஜன்:—தன்சுயவற்கம் பெற்றிருக்கில் சண்டைக்காரி கடின வார்த்தை பேசுவாள் லீலைக்காரி

புதன்:—தன் சுயவற்கம் பெற்றிருக்க மோகமதிக முடையவள் சினேகமுடையவள் தயாள முடையவள்

குரு:—தன் சுயவற்கம் பெற்றிருக்கில் பக்திமார்க்கமும் நன் நடக்கை நன் நெஞ்சமுடையவள்.

சுக்கிரன்:—தன் சுயவற்கம் பெற்றிருக்க அழகும் பதி பக்தி மார்க்கமறிந்தவள் லீலைக்காரி பத்தாவைக் கைவிடாதவள்.

சனி:—தன் சுயவற்கம் பெற்றிருக்கில் கெட்ட எண்ணமும் சோரம் செய்பவளும் சாமியுமாவாள்.

## களத்திர பலன்
## களத்திர ஸ்தானமான 7-ம் ராசியில் கிரகங்கள் நின்ற பலன்

(1) 7-ல் சூரியன் நிற்கில் அன்னிய புருஷன் ஆசை இல்லாதவள் கொடிய வார்த்தைகளைப் பேசுபவளும் ருபலாவண்யமும் பலவிதமான குணங்களுமுடையள்.

(2) 7-ல் சந்திரன் நிற்கில் புத்திரப்பேரதிகமுடையவள் லக்ஷ்மி விசுவாசமுடையவள் புருஷனை விட்டு நீங்க மன மிலலாதவள் சௌபாக்கிய முடையவள்.

(3) 7-ல் குஜன் நிற்கில் சினமுடையவள் சண்டைக் காரி மோசகருத்தோடு ஓர் காரியத்தை ஆசையோடு செய் பவள்,

(4) 7-ல் புதன் நிற்கில் ரூபலாவண்யமும் தேஜஸ் முதலியவைகளமைந்தவளும் தன் எண்ணம் போல் கொள் பவளும் புருஷனை என்னாளும் விட்டு நீங்காதவளும் ஆவாள்

(5) 7-ல் குரு நிற்கில் பக்திமார்க்க மறிந்தவளும் விஸ் வாச முடையவளும் ஞாயமார்கங்களை யறிந்தவளும் ஆலய தருமமறிந்தவளும் சயன சுகமுடையவளுமாம்.

(6) 7 சனி நிற்கில் பர்த்தாவின் சுகத்தை அதிகம் இச்சியாதவளும் கலக வார்த்தையும் கோள் சொல்லுங் குணமுடையவள்.

(7) 7-ல் இராகு கேதுகள் நிற்கில் வாழ்க்கைக்கு நிலைப்படாதவள் வற்க முதலியவைகளுடையவளாம்.

## 7-ம் வீட்டோனுடன் கிரகங்கள் கூடிய பலன்

7-ம் வீட்டோன் சூரியனாய் அவனோடு சந்திரன் சகி தம் பெற்றிருக்கில் அவன் மனைவி சில காலங்களில் கொஞ் சம் வறுமை தந்திரம் உண்டாயினும் ஒற்றுமையும் உற்சா கத் தோடிருப்பாள்.

2. குஜன் சகிதம் பெற விவாத வார்த்தை சில காலங் களில் பிரித்திருத்தல் சில வியாகூலமுண்டாதல்.

3. புதன் சகிதம் பெற்றிருக்க ஒற்றுமை மனைவியால் நல்ல பொருளுதவியாகுதல் அன்னியர் பேச்சைக்கேட்காத வன்.

4. குரு சகிதம் பெற்றிருக்க எந்த காரியமும் இருவரும் உத்தேசித்து செய்தல் மனைவியால் பலவித நன்மை.

5. சுக்கிரன் சகிதம் பெற்றிருக்க சண்டை சச்சரவும் விவாதம் வீண்வழக்கு முதலியவைகளுண்டு.

6. சனி சகிதம் பெற்றிருக்க ஒருவர்க்கொருவர் மனப் பொருத்தமில்லாமை தன் இஷ்டம் நிறைவேராமை இவை களுண்டு.

7-ம் வீட்டிற் குடையோனுடன் கிரகம் சம்மந்தப்பட்ட பலன் மேலே செல்லியபடியாகும் இவ்வாறே 7-ம் விட்டோன் எந்த கிரகமாயினும் அவனுடன் கூடிய கிரக பலனை மாற்றித் தெரிந்து கொள்ளலாம் எப்படி எனில்7 ம் வீட்டோன் குருவாகி அவனுடன் சூரியன் சகிதம் பெற்றால் மேலே சொல்லிய நான்காம் காலத்தில் காட்டிய பலனே யாகும்.

## 7-வது வீட்டிற் குடையவனைக் கொண்டே களத்திரம் கிடைக்கும் திசையைச் சொல்ல வேண்டு மாகையால் விபரம் கீழ்வருமாறு

7-வது வீட்டோன் சூரியனாகில் கிழக்கிலும்
,, சந்திரனாகில் வாய்வு திக்கிலும்
,, குஜனாகில் தெற்கிலும்
,, புதனாகில் வடக்கிலும்
,, குருவாகில ஈசான்யத்திக்கிலும்
,, சுக்கிரனாகில் அக்னியிலும்
,, சனியாகில் மேற்கு திக்கிலுமாம்

## களத்திர பொது விஷயம்

7-ம் ராசியில் சுக்கிரனும் குஜனும் கூடி இருககை வித்வை ஸ்திரியை மணம் செய்வான்.

7 ல் இராகு கேதுக்களிருந்தால் களத்திரத்தால் வியாதியும் விரோதமும்.

ஏழாம் வீட்டோன் மேஷம், கடகம் துலாம், மகரம் இந்த ராசியிலிருந்தால் இரண்டு களத்திரமும் மிதுனம் கன்னி தனுசு மீனம் என்னும் ராசியிலிருந்தால் அநேக களத்திரமும் உண்டாகுமென்பது சாஸ்திர பிரமாணம்.

7 ம் ராசியாதிபதி திரிகோணங்களிலிருந்தால் ஒரே களத்திரமும் 7-ம் ராசியாதிபதியும் குடும்பாதிபதியும் ஆஷி பெற்று வேறு கிரகங்கள் சேராமலும் பாராமலுமிருந்தால் ஏகபத்தினி விரதனாகவுமிருப்பான்.

7-ம் ராசியில் சுக்கிரன் சந்திரன் இவர்கள் கூடியிருந்து சனி குஜன் இவர்கள் பார்த்தால் விவாகமில்லை யென்பது சாஸ்திர பிரமாணம்.

ஜென்ம லக்கினத்திற்கு 8-ம் ராசியையும் சந்திரன் நின்ற ராசிக்கு 7-ம் ராசியையும் கொடிய கிரகங்கள் பார்த்தால் விவாகமில்லை என்பது சாஸ்திரக்கொள்கை யாததால் மற்றுங் கிரகங்களைக் கொண்டு உண்டென்றும் இல்லை என்றும் நிலை கூறுக.

களத்திரஸ்தானாதி என்னும் 7-ம் வீட்டோனுடனாவது சுக்கிரனுடனாவது சேய் சனி இராகு கேது இவர்கள் கூடி இருக்க அவனுக்கு கிடையில் மனைவி கொடிய செய்கையும் மருத்திடும் குணமும் உடையவளாவாள்.

ஏனெனில் இராகு கேதுடன் சம்பந்தப்பட்ட தென்க.

களத்திர விஷயமான விஷய சாஸ்திரங்களில் பலவிதமாய் பிரிக்கப்பட்டுள்ளன எப்படியெனில், மலடி சமவயதுள்ளவள் விதவை விபசாரி அழகுடையவள் எவ்வாணமுடையவள் வாலைப்பருவமுடையவள் கருப்பமுடையவள் பலவிதமான அவமான காரியங்களைச் செய்பவள். வயதிகமுடையவள், சுராபாணி அனாசாரமுடையவள் ருதுகாலத்திற்கும் ருதுவான பின்பு அருபி என்னும் விபரங்களையறிய வேண்டிய விதமெப்படியெனில் மலடி என்பதையறிய வேண்டுமாயின் கிரகங்களில் மலட்டு கிரகம் யார்.

எந்த கிரகத்திற்கும் மலட்டுதன மில்லாவிடினும் சேர்க்கை பார்வை இடம் முதலியவைகளால் மலட்டுத்தன முண்டாவதுண்டு.

எப்படியெனில் தேய்ப்பிறைச் சந்திரன் சனி அங்குசம் பெற்ற கிரகத்துடன் கூடி களத்திர ஸ்தானத்திற்கு 6,8,12 முதலிய க்ஷேத்திரங்களிலிருக்கில் மேற்சொன்ன சந்திரனே மலடு கிரகமாகும்.

1. உதாரணமாக சந்திரன் 7-ம் ராசியாதிபனாகவும் க்ஷீண சந்திரனாகவுமிருந்து தன் க்ஷேத்திரத்திற்கு 12 முத

லிய இடங்கள் பகைப்பெற்ற குருவுடன்கூடி நீச்சம் பெற்ற சனியால் பார்க்கப்பட்டால் அவனுக்கு கிடைக்கும் மனைவி மலடாகவே இருப்பாள்.

நம் போன்றோர்க்கு குமாரம் எவ்வர்ணம் கௌமாரங் வாலிபம் என்னும் பருவங்களுக்குள்ளன. ஆதலால் நவகிர கங்களுக்கும் இவ்வாறே ஐந்து பருவங்களுள்ளன. (இதன்) பருவ விபரங்களை முதல் பாகத்திலேயே கூறியுள்ளோம் ஒவ்வொரு ஜாதகர்களுக்கும் கிடைக்கும் மனைவி விபரங் களைக் கூற வேண்டுவதாயின் களத்திர ஸ்தானாதிபதி தன் முழு வலிவோடிருப்பானாயின் அந்த கிரகத்திற்குரிய பருவபக்குவமுடைய பெண்ணே அந்த ஜாதகனுக்குக் கிடைப்பாள் 7-ம் வீட்டோன் தன் வலிவிழந்தவனாயின் தன் வலிவைப் பற்றிந்த கிரகமெதுவோ அந்த கிரகமிருக் கும் பருவமுடையவளே இதை யறியவேண்டின் 7-ம் வீட் டோனுடன் சேர்ந்த 7-ம் வீட்டோனை விட அதிக பல முடையவனா அல்லது தாழ்ந்தவனா என்றும் அவனைப் பார்க்குங்கிரகம் அவனிருந்த ராசிக்குடையவன் இவர்கள ஒருவர்க்கொருவர் சமவலிவுடையவரா அல்லது தாழ்ந்தவ ராவென்று ஆராய்ந்து ஒருவர் ஜாதகரின் மனைவியின் பருவமான குமார எவ்வன வாலிப முதலியவைக் கூறுக.

விபசாரி அல்லது பதிவிரதை என்னும் விஷயங்கள் 7-ம் வீட்டோனுக்குரிய குணத்தையும் நடத்தையுமே சொல்ல வேண்டும்.

அழகு முதலியவைகளைப் பற்றி விஷயங்களை முதன் முதலாக 7-ம் ராசிக்குடைய கிரகத்தின் அழகையே கூற வேண்டும். 7-ம் வீட்டோன் சூரியனாகில் பிரகாச தேக முடையவனும் சந்திரனால் குளிர்ந்த முகத்தையுடைய வளும் குஜனாகில் சிவந்தரூப அழகியும் நிலவர்ண தேஜஸ் உடையவளும் குருவாகில் பொன்னிற தேகமுடையவளும் சுக்கிரனாகிய நிறைந்த அழகு பொருந்தியவளும் சனியா கில் பரிகாரளாவாள் என்பதுவேயாம்.

இலஷண விபரங்களைக் கூறவேண்டுவதெனில் கீழ் வருமாறு ஆலோசிக்க வேண்டும்.

| ல | சனி ராகு | | |
|---|---|---|---|
| | இராசி | | |
| | | | சூ அ சு |
| | சந் கே | | பு குரு |

1 ஏழாம் வீட்டோன் புதனாகையால் புதன் மகா விஷ்ணு என்னும் தேவதையாகையால் புதன் பலவிதமான காரியங்களிலும் கை சேர்ந்தவர். ஆகையால் ந்த ஜாதக னின் மனைவி எந்த காலங்களில் எவ்வித இலக்ஷத்தோடி ருக்க வேண்டுமென்ற பக்குவ மறிந்தவளாயிருப்பாள்.

ஜெனன லக்கினாதிபதி களத்திரத்துயுடன் கூறியப் படியால் கணவன் மனம் போல் நடந்துக் கொள்பளாவாள். புதனும், குருவும் ஓர்வித சுபகிரகமாகையால் சுத்தமும் அனாசாரமில்லாத மனைவியுமே இந்த ஜாதகனுக்கு கிடைப்பதால் வாசகர்கள் இவ்வாறே 7-ம் வீட்டோனுடன் சேர்ந்த கிரகம் பார்த்த கிரகம் இவைகளைக் கொண்டு களத்திர இலக்ஷண விபரம் கூறுக.

களத்திர ஸ்தானாதிபதி ஜெனன லக்கினாதிபதி நின்ற ராசிக்கு 6, 8, 12 என்னும் கொடிய க்ஷேத்திரங்களிலிருப்பா னாயின் அந்த ஜாதகனுக்கு தன் மனைவியால் பலவிதத் துன்பம் கஷ்டம் விரயம் முதலியவைகளுண்டாகு மெனவும் களத்திர ஸ்தானாதிபதிக்கு ஜெனன லக்கினாதிபதி மேற் சொன்ன கொடிய க்ஷேத்திரங்களிலிருந்தால் அவன் களத் திற்கு தன் கணவனால் பலவிதத் துன்பம் இடையூறு விறய முண்டாக மென்றுங் கூறுக மற்றும் விபரங்களை மூன்றாம் பாகம் பார்க்கவும்.

## 8-ம் இடம்

8-ம் இடமென்பது ஆயுள் என்பதை முக்கியமாய் குறித்த க்ஷேத்திரமாகும்.

8-ம் வீட்டோன் தினசரிப்படி சுபகிரகமே அல்லது அசுப கிரகமே அந்த கிரகத்திற்கு பூரண ஆயுளுண்டு.

அவர்களிருக்கும் க்ஷேத்திர பலத்தால் குறைந்த ஆயுளுள்ளவர் பூர்ண ஆயுளுடைவராகவும் மாறுவதுண்டு.

ஆயுள் விஷயங்களையறிய முதலாவது ஜெனன ராசிக்கெட்டாம் வீட்டோனும் இரண்டாவது சந்திரனின்ற ராசிக்கு 8-ம் வீட்டோனும் மூன்றாவது ஆயுள் காரனான சனியும் முக்கிய கர்த்தாவாகும்.

1. அஷ்டமஸ்தானம் (சுத்தமாயும்) அல்லது வக்ர கிரகமுமுல்லாமலும் கொடிய கோட்கள் பார்வையிராமலும் இருப்பது விசேஷமாகும்.

2. அஷ்டம் ஸ்தானாதிபதி அஷ்டம் ஸ்தனத்திற்கும் ஜனன லக்கினத்திற்கும் சந்திர நின்ற ராசிக்கும் சனி நின்ற ராசிக்கும் 1, 4, 7, 10 முதலிய கேந்திரங்களில் பலம் பெற்றிருப்பது விசேஷம் அப்படி பலம் பெற்றிருக்கின் பூரண ஆயுளாகும்.

3 அஷ்டமாதிபதி தன் சுயக்ஷேத்திரத்திற்கு சுயக்ஷேத்திராதியருடன் கூடி அஷ்டம ஸ்தானத்திற்குறிய நக்ஷத்திரங்களிலும் ஆக்ஷி உச்சம் பெற்றிருக்கிலும் பூரண ஆயுளாகும்.

4. அஷ்டமாதிபதிக்கு தன் சத்துரு கிரகமெதுவோ அந்த கிரகங்களின் சாரம் அங்கிசம் வற்கம் முதலியவைகள் பெறாமல் தனக்கு சமமானவர் அல்லது உறவு கிரகங்களின் சாரம் வற்கம் அங்கிசம் பெரில் பூர்ண ஆயுளுண்டு

5. அஷ்டமாதிபதி எந்த க்ஷேத்திரத்தி லிருக்கினும் கொடிய கரகங்களின் பார்வைப்பெறாமல் சுபகிரகங்களின் பார்வை பெறுவது விசேஷம்.

6 அஷ்டமாதிபதி தன் வீட்டிற்கு 2-ம் வீட்டோனுடனும் 8-க்கு 8-ம் வீட்டோனென்றும் சப்தமாதியுடனும் கூடாமல் வேறு கிரகங்களுடன் கூடி யிருப்பது பூரண ஆயுளென்றுரைக்கலாம்

## ஆயுள் ஸ்தானத்தைப்பற்றி கவனிக்க வேண்டிய முக்கிய விஷயம்

அஷ்டமாதிபதிபன் எவ்விதத்தில் பலம் பெற்றான் அல்லது எவ்விதத்தில் பலமிழந்தான் என்பதுவேயாகும், ஆயினும் சூரிய சந்திரன் 8-ம் வீட்டிற் குடைவராயினும் அஷ்டமாதிபதியம் பெற்றானும் தோஷமில்லை என்று முன்பே கூறியுள்ளேனாகையால் அஷ்டமத்திலிருந்த சூரியன் அல்லது சந்திரனை தன் பகைவரரின் இராகு கேதுக்களேனும் சுக்கிரன் சனியேனும் ஜென்ம லக்கினத்திற்கு 7.ல் இவ்விடங்களிலிருந்து முழுபார்வையோடு பார்பாராகில் லக்கின முன் சொன்ன சூரியன் சந்திரன் இவர்கள். அஷ்டமத்தில் ஆக்ஷி உச்சம் பெற்றிருந்தாலும் தன் பல மிழந்தவர்களாய் விடுவார்.

8-ம் வீட்டதிபதி எந்த க்ஷேத்திரத்திலிருந்தாலும் அஷ்மடஸ்தானத்தை ஆக்ஷி உச்சம் பெற்ற சுபகோட்கள் கபார் வையிருக்குமாகில் பூரண ஆயுளென்றும் கூறுவர் 8,ம் வீட்டிற்குடையவன் நற்கேந்திரங்களில் ஆக்ஷி உச்சம் பெற்றும் ஆயுள் ஸ்தானாதிபதி ஜெனன லக்கினத்தைப் பார்த்துமிருந்தால் அந்த ஜாதகனுக்கு எவ்வித கெண்டாதி கெண்டங்கள் வரினும் பூரண ஆயுளென்றே கூற வேண்டும்,

பொதுவாக 8-ம் ராசியை சந்திரன். புதன் குரு சுக்கிரன் முதலியோர் பார்ப்பாராகில் எவ்விதமும் தீர்க ஆயுளே உண்டு வயது எவ்வளவென்பதை மற்றக்கிரக அடவியால் கூட்டிச் சொல்லுக.

அஷ்டமாதி நீச்சம் பகைப்பெற்று நிற்பானாகில் அற்ப ஆயுளென்றெண்ணுவது முறையல்ல அவன் நீச்சம் பெற்ற க்ஷேத்திரமே ஜெனன ராசிக்கு சுபஸ்தானமாயிருந்தால் பூரண ஆயுளேயாகும்,

## திற்காயுளும், அற்ப ஆயுளும்

1. கடக முதலாறு ராசிக்குள் குரு நிற்கில் தீர்கவயது
2. மகர முதலாறு ராசிக்குள் சனி நிற்கில் தீர்க்கவயது
3. மிதுனராசி முதல் விருக்ஷிக ராசிக்குள் குருவம் ஜென்ம லக்கினத்திற்கு 1, 4, 7, 10, 5, 9, இவ்விடங்களில் புதன் சுக்கிரன் நிற்கிலும் தீர்கவயது,

4 ஜென்ம லக்கினம் எந்த லக்கினமாயினும் நான்காம் ராசியில் குரு சுக்கிரனும் ஜென்ம லக்கின முதல் நான்கு ராசிக்குள் சனியும் நிற்க 80-வயது.

5. ஜென்ம லக்கினாதியுடன் அஷ்டமாதிபதி கூடி 1, 4, 7, 10, லிருந்தால் வயது-72.

6, 6, 7, 8, இவ்விடங்களில் நற்கோட்களும் 3, 11 இவ்விராசிகளில் கொடியவர்களுமிருந்தால் 80-வயது

7, ஜெனன லக்கினாதியுடன் 7-ம் வீட்டோன் கூடி 1, 4, 7, 10 லும் ஜெனன லக்கினாதிபதி குருவாகவுமிருக்கில் வயது-80,

8. ஜெனன லக்கினாதிபதி சனியாகவும் சனி விறயம் பெற்றும் மேற்படி சனியை புதன் சுக்கிரன் பார்கினும் வயது-76.

9. ஜெனன ராசிக்குடையோன் குஜனாகவும் குஜன் அஷ்டம ஸ்தானத்தில் ஆக்ஷி பெற்றும் சனி சுபர்களுடன் கூடி 2, 5, 11-என்னுமிடங்களிலிருக்கில் வயது-70

10 ஜெனன ராசிக்குடையோன் சுக்கிரனாகவும் சுக்கிரன் கேந்திரங்களிலிருந்து ஜெனன லக்கினத்தைப் பார்க்கவும் குரு சனியுடன் கூடியிருக்கினும் வயது-65

11. ஜெனன ராசியாதிபதி புதனாகவும் புதன் 10-ம் ராசியிலும் சந்திரனின்ற அஷ்டமாதிபதி பலம் பெற்ற குருவாலும் பார்கப்பட்டால் வயது-60

12. ஜெனன ராசியாதிபதி சந்திரனாகவும் சந்திரன் வளர் பிறையுடையவனாய் தன் பூரண வலியோடு உச்சம் பெற்றும் சனி பலம் பெற்றும் ஜெனன ராசியை பார்க்கவும் குரு கேத்திரங்களிலிருக்கவும் வயது·60.

13. ஜெனன லக்கினாதிபதி சனியாகவும் சனி ஆக்ஷி உச்சம் கேந்திரம் பெற்று ஜெனன லக்கினத்தை பலம் பெற்ற குருவால் பார்க்கப்பட்டாலும் வயது-60.

## அற்ப ஆயுள்

1 ஜென்ம லக்கினாதிபதி கொடிய கிரகங்களிலொருவனாய் தன்வலி விழந்து சந்திரன் புதன் குரு சுக்கிரன் முதலியோர் பார்வையின்றி நிற்கில் அவனுக்கு வயது மீ 6

2. கொடிய க்ஷேத்திரங்களென்னும் 6, 8, 12-நின்ற பாவிகள் ஜென்ம லக்கினாதிபதியை நோக்குற்றிருப்பாரேல் வயது மீ 8

3. சூரியன் சனி இராகு கேதுடன் தேய்பிறைச் சந்திரன் கூடி ஜென்ம ராசிக்கு 8, 12, 6, என்னுமிடத்திலிருந்தில் வயது மீ 12

4. ஜ்ஜனன காலங்களிலேயே 6, 8, 12-ம் வீட்டதிபன் திசை நடக்கவும் மேற்சொன்னவர்கள் துர்ஸ்தானங்களிலிருந்து ஜென்ம லக்கினாதிபதியையாவது சந்திரனையாவது நோக்குற்றிருக்க வயதுஞு 2

5. ஜென்ம லக்கினத்திற் கெட்டாமிராசியையும் அதற் கெட்டாமி ராசியையும் திரிகோணங்களிலிருக்குங்குரு புதன் இவர்கள் பார்க்க வயது ஞ 5

6. ஆயுள் காரகன் சனி வக்கிரம் பெற்றும் ஷ சனி ஆயுள் ஸ்தானத்திற்கு 6,8,12,11 முதலிய க்ஷேத்திரங்களிலிருப்பானே யாமானால் அவனுக்கு வயது 10

7. ஜெனன ராசி எந்த ராசியிலும் ஜெனன லக்கினாதிபதி பலமிழந்தவனாயிலும் அஷ்டமாதிபதி பலம் இழந்தும் குறைந்தும் ஜெனன ராசியைப் பார்ப்பானாகில் வயது-15,

8. பின்பு ஜெனன கால பாதாரிஷ்ட தோஷ முண்டாவென்றும், சகடை தோஷ முண்டாவென்றும் ஆராந்து கூறுக.

சரலக்கினத் தோர்க்கும்:

அஷ்டமஸ்தானம் சரமாவரில் பூரண வயது
,, ஸ்திரமாவரில் மத்திப வயது
,, உபயமாசவரில் அற்ப வயது

ஸ்திரீ லக்கினத்தோர்க்கு:—

ஆயுள் ஸ்தானமும் ஸ்திரமாகவரில் அற்ப வயது
,, சரமாகவரில் மத்திப வயது
,, உபயமாக்வரில் தீற்க வயது

உபய லக்கினத்தோர்க்கு:—

,, சரமாகவரில் அற்ப வயது
,, ஸ்திரமாகவரில் தீர்க வயது

## மரணகால வியாதி

மரணகால வியாதி விபரங்களை அஷ்டமாதிபதியாலும் அஷ்டமாதிபதி இருக்கும் தராதரத்தாலும் கூறுவது கடமையாகும்.

ஜெனன ராசிக்குடையவனாது 8-ம் ராசிக்குடையவனாவது துர்ஸ்தான மென்கிற 6,8,12-ல் இருப்பார்களேயாமானால் அவன் திரேகத்தைப் பிறர் சின்னாபின்னப் படுத்துவதா யிருப்பானென்பது சாஸ்திரக் கொள்கை முன் சொன்ன அவயவ பின்னத்தால் மரணமென்பதற்கு போதுமான காரணங்கள் வேண்டும் அவ்விதமான அத்தாக்ஷி கொடுப்பதே சாஸ்திர பிரமான அழகாகும்.

ஆயுள் ஸ்தானதிபதியோ அல்லது ஜென்ம லக்கினாதிபதியோ 6, 8, 12-ல் இருப்பதாக வைத்துக்கொள்வோம்.

இவை அஷ்டம ஸ்தானத்திற்கு 6, 8, 12, என கொள்வது நலம்.

6, 8, 12, என்பது பொதுவாக இரணம், விறயம் மோக்ஷம் என்னும் க்ஷேத்திரமென முன்சொல்லிய முதற்பாகத்திலேயே கூறியுள்ளேன்.

### கீழ்கண்ட சக்கரத்தை கவனிக்கவும்

| | கே குரு | சு | அ பு |
|---|---|---|---|
| | இராகு | | லகு சந் |
| | | | த பு |
| | ராகு | | |

1. அஷ்டமாதி என்னும் சனி ஆயுள் ஸ்தானத்திற்கு அஷ்டமத்திலிருப்பது பெரும்பாவம்.

2 அஷ்டமாதியை சத்துரு ஸ்தானாதிபதியாகிய குரு, கேதுடன் சம்பந்தப்பட்டு பார்த்தாலும் அஷ்டமாதிபநி நின்ற ஷேத்திராதிபதி அஷ்டமாதி நின்றராசிக்கு மோஷம் பெற்றதாலும், அவன் தன் சத்துருவால் பலவித சின்னா பின்னங்களாய் மரிப்பாளென்பதற்கு வேறு காரணம் வேண்டியதில்லை.

| | | | |
|---|---|---|---|
| | | ல | |
| சனி | இராசி | | கே |
| சுகு ராபு | | | |
| | | குரு சந் | அ |

மேற்காட்டியுள்ள சக்கரத்தில் அஷ்டமாதிபதியான குரு 8-ம் வீட்டோனான தேய்பிறைச் சந்திரனுடன் கூடி ஜெனன ராசிக்கு ஆறாம் ராசியிலிருந்து சனியால் பார்வை பெற்றான் ஆனதால் அவன் திரேகத்திலுள்ள கொடிய நீர் வியாதியால் அவன் திரேகம் சின்னபின்னப்பட்டு இறப் பான். சனி கேந்திரம் பெற்று பார்ப்பதால் ஷ தோஷம் நிவர்த்தியாகு மென்பதை பலர் சந்தேகிக்கலாம்.

சனியை குரு பார்க்கவும் குருவை சனி பார்க்கவுமுள் ளன வாதலால் சனியைவிடகுருவே முக்கியமான கிரகமா மையால் சனி பார்வை விசேஷம் பலிதமாகாது.

இவ்வாறே மற்றுமுள்ள கிரகத்தையும் ஆராய்ந்து கீழ் கண்டவாறு பலன் சொல்லவேண்டும் மேற்சொன்னபடி 9, 8, 12 லிருந்தால் சத்துருக்களாலும் அகாலத்துண்டாகிற ஆபத்தாலும் தன் சுய ஜெனங்களாலும் அவயபின்னத் தோடிருப்பானெனினும் சுபர்கள் பார்வை பெற்றிருந்தால் கைகால்கள் ஊனப்பட்டிறப்பா ரென்னுங் கூறுக.

ஜெனன லக்கினத்திலும் சந்திரனும் குஜனுமிருந்து ஜெனன லக்கினாதிபதி 6, 8, 12, லிருந்தால் நீர் சம்மந்தமான ஜன்னி முதலிய பாதையால் மரணமாகுவானென சாஸ்திரங்கள் முறையிடும்.

தூமாதி கிரகப்படி சூரியனின்றராசியில் அல்லது 6, 8, 12ல் எமகண்டம் வருங்காலம் கொடிய நோயால் மரணமாகுவாரரென்றுங் கூறுவர்.

லக்கினத்திற்கு சுகாதிபதியும் அஷ்டமாதியும் சேர்ந்து ஒரே ராசியிலிருக்கில் அந்த ஜாதகனின் பிதாவின் கிராமமெதுவோ அந்த கிராமத்திலிறப்பான் அஷ்டமாதிபதியாகிய ஆயுள் ஸ்தானாதிபதி ஜென்ம லக்கினத்திற்கு 6,8, 12-ம் வீட்டுற் குடையவனுடன் கூடி இருப்பானேயாமானால் அன்னிய தூர தேசங்களிலிருந்து போவான்,

மேற்படி எட்டாம் வீட்டதிபதி மேஷ விருக்ஷிகத்திற்காக்ஷி நாதனுடன்கூடி 6, 8, 12 லிருந்து திருடரால் மரணமடைவான்.

8 க்குடையோன் இராகு கேதுவுடன் கூடி 6, 8, 12, லிருந்தால் துற்செய்கையால் மரண மடைவான்.

## 9-ம் இடம்

9-ம் இடம் பிதுர்ஸ்தான மெனவும் ஜெனனராசி எந்த ராசியாயினும் பிதுர் காரகன் சூரியனெனவுங் கூறுதல் வேண்டும்.

உதாரணமாக மேஷ லக்கினத்திற்கு பிதுர் ஸ்தானாதிபதி சூரியனும், ரிஷப லக்கினத்திற்கு மிதுன லக்கினத்தோற்கும் சனியும் கடக லக்கினத்திற்கு குருவும், சிங்க லக்கினத்திற்கு குஜனும் கன்னியா லக்கினத்திற்கு சுக்கிரனும் துலா லக்கினத்திற்கு புதனும், விருக்ஷிக லக்கினத்திற்கு ராசிக்கு சந்திரனும் தனுசு லக்கினத்திற்கு சூரியனும் மகர லக்கினத்திற்கு புதனும், கும்ப லக்கினத்தோர்க்கு சுக்கிரனும் மீன லக்கினத்திற்கு குஜனும் பிதுர்பதியுமாவார்கள்.

பிதாவைப் பற்றிய பலன் யோகம் ஆயுள் முதலியவைகளை கவனிப்பது ஒன்பதாம் வீட்டுக்குடையவனாலும் சூரியனாலுமே அப்பலனை நிலை கூற வேண்டும்.

ஒன்பதாம் வீட்டதிபதி சுபனாயினும், அசுபனாயினும் அவனிருக்கும் வன்மைக்குரிய பலாபலனையே தருவான்.

பிதுர் ஸ்தரனாதிபதி மாத்திரம் பலம் பெற்று பிதுருகாரனாகிய சூரியன் வலிவிழந்திருப்பானாகில் அவர்களுக்குறிய பலன் விஷயங்களை மேன்மையா யுரைப்பது அசாத்தியம்.

பிதா ஸ்தானங்களைக் கவனிக்கும்போது 9-க்கு 9-ம் இடமாகிய ஜெனன ராசிக்கைந்தாம் ராசியையும் கவனிப்பது நலம்.

ஐந்தாமிடமென்பது அம்மான் புத்திரன் என்னும் ஸ்தானமென முன்பே கூறியுள்ளேனாயினும் 5-ம் இடம் பிதாவைப்பெற்ற பாட்டன் ஸ்தானமாகும்.

5-ம் வீட்டோனும் 9-ம் வீட்டோனும் பிதுர் காரகனென்று சொல்லிய சூரியனோடு சேர்வது கூடாது. அப்படி சனி. சூரியன் 5,9 என்னும் வீட்டிற்குடையவர்கள் ஓர் ராசியில் சேர்ந்திருந்தாலும் அல்லது சனி தவிர மற்றுமுள்ள மூன்று கிரகங்கள் ஒன்று சேர்ந்து சனியால் பார்க்கப்பட்டிருந்தாலும் பிதாவுக்கு அரிட்டமுண்டாகும்.

5,ம் 9-ம் வீட்டதிபரோடு சூரியன் சேரவும், இம்மூவரையும் சனி பார்க்கவுமானால் பிதாவுக்கு அரிட்டம் உண்டென கூறுவதற்கு சாஸ்திரங்களில் இடமுண்டு.

சிலர் சனி ஆயுள் காரகனாயிற்றே சனி கொல்வானா என்பது கொள்கையாகும்.

அனேக சாஸ்திரங்களில் சனி சேர்ந்தால் நற்பலனும் சனி பார்த்தால் துற்பலனும் உண்டென்று கூறி இருக்கின்றனர்.

சனி பார்த்தால் உடனே மரணமெனக் கொள்வது முறையல்ல, ஷ சனியின் திசையாவது அவனிருந்த க்ஷேத்திராதிபதி திசையாவது அவன் பெற்ற வற்காதிபதி அங்கிசதிபதி இவர்கள் திசையிலேயே சொல்வார்கள்.

9-ம் ராசியில் சனி நின்று 1, 4, 7, 10-ல் குஜன் நிற்கில் தகப்பனுக்கரிட்டம்.

சூரியன் குஜன் இவ்விருவரும் ஜென்ம லக்கினத்திற்கு 8-ம் ராசியிலிருந்தாலும் தகப்பனுக்கரிட்டமுண்டு.

ஜென்ம ராசிக்கு 9-ல் பாவகிரகங்களில் அவர்கள் நின்ற ராசிக்கு 1,4,7,10-ல் பாவகிரகங்களிருப்பினும் தந்தைக்கரிட்டமுண்டு பிதுர்காரனாகிய சூரியன் நின்ற ராசிக்கு 7-ல் சனி குஜன் முதலியோரிருப்பாராயினும் தந்தைக் கரிட்டமுண்டு.

சூரியனுடன் இராகு சகிதமாகி ஜென்ம லக்கினத்திற்கு 5-ம் ராசியிலும் பிதுருஸ்தானத்தில் சனியும் நிற்க அவர்கள் திசை காலங்களில் பிதாவுக்கரிட்டமுண்டு.

5-ம் வீட்டுக்குடையோன் பலம் பெற்றிருந்து மற்றுமுள்ள கிரகங்கள் எவ்விதமிருப்பினும் தந்தைக்குறிய அரிட்டமானது நீக்கும்.

ஜெனன காலங்களில் சூரியன் நின்ற ராசிக்குவலமிடங்களில் நீச்சப் பகைப்பெற்ற கொடிய கிரகங்களிருக்குமாயின் அவன் பிதா அக்குழவியானது தன் தாய் கற்பத்திலிருக்கும் போதே கெண்டம் செய்யும்.

## பிதாவின் விஷயம்

பிதுரு ஸ்தானாதிபதி தன் க்ஷேத்திரத்திற்கு எவ்வளவு பலம் பெற்றிருக்கிறானோ அவ்வளவு பலம் அவன் பிதாவுக்குண்டு.

பிதுரு ஸ்தானாதிபதி எவ்வளவு பலமிழந்தானோ அவ்வளவு பிதாவுக் கீனமுண்டு.

(இப்பால் சோதிடர்கள் கவனிக்க வேண்டிய விஷயம்)

பிதுரு ஸ்தானாதிபதியோ அல்லது காரகனோ எவ்விதத்தால் பலம் குறைந்தது.

ஆதியில் பிதுர் ஸ்தானாதிபதியும் காரகனுமிருக்கும் வண்மையால் பிதுரு இருக்க அந்தஸ்து அதாவது யோக யோகங்களை கவனித்து பின்பு கீழ்வருமாறு கவனித்தல் நலம் பிதுரு ஸ்தானாதிபதி தன் க்ஷேத்திரத்திற்கு எந்த ஸ்தானத்தில் பலம் பெற்றான் அல்லது பலமிழந்தானென்

றும் இரண்டாவது எவர்களுடன் கூடி அல்லது எவர்களு டன் சேர்ந்து பலமிழந்தானென்றும் கவனிப்பதே நலம்.

உதாரணமாக பிதுரு ஸ்தானாதிபதி சனீயாக வைத் துக் கொள்வோம்.

சனி தன் சுயக்ஷேத்திரத்திலேயே ஆக்ஷி பெற்றதோடு தன் வீட்டிற்கு நான்காமிராசிக் குடையோனான குஜனு டன் சகிதம் பெற்றதாக வைத்துக்கொள்வோம் அப்போது அந்த ஜாதகனின் பிதா எவர்களுதவியால் அல்லது எவர் கள் பொருளால் பலமடைந்து அல்லது செல்வத்தோடி ருக்க வேண்டும் என ஆராய்வோம்.

| ல | சனி ராகு | | சூ சந் |
|---|---|---|---|
| கே | இராசி | | பு ச அ |
| | | | ராகு |
| குரு சந் | | | |

மேற்கண்ட இராசி சக்கரத்தை கவனியுங்கள் பிதுரு ஸ்தானாதி ஆக்ஷி அவனோடு 10-க்குடை குஜன் சகிதம் 3, 10-க்குடைய குஜன் ஜென்ம ராசிக்கு 6, 11-க்குடையவ னாவான் காரகத்துவத்தில் குஜன் சகோதரகாரகத்துவத் தில் குஜன் சகோதர காரகவான்.

தப்பார் சனியும் தகுபாக்யந்தர
இப்பார் குஜனும் இவனோ சேர்ந்திட
மேய்ப்பா ரொருபந்தைந் தினுற்குள்ளே
தப்பாதிவனுக்கே வருஞ் செல்வம்.

என்ற வாக்கியப்படி ஜெனன லக்கினாதிபதியும் ஜேஷ்ட ஸ்தானாதிபதியுங்கூடி பித்ரு ஸ்தானத்திலேயே நின்றதாலும் அவை பித்ரு ஸ்தானத்திற்கு 3, 5, 8, 11 ஆகையாலும் இந்த ஜாதகனின் பிதாவுக்கு இவனுக்குமுன் பிறந்தோராலும் இந்த ஜாதகனாலும் பாட்டன் வற்கத் தாராலும் விசேஷதன மூடையவனாக இருப்பானெனக் கொள்க!

இன்னும் மற்றுமுள்ள லக்கினங்களுக்கும் இவ்வாறே பிதுர் ஸ்தானாதிபதியோடு சேர்ந்த கிரகம் எந்த வற்கத்திற்குடையவன் எவன் பார்த்தவன் எவன் அப்படிப் பார்த்தவனோ சேர்ந்தவனோ கொடுக்குந் தன்மை யுடையவனாவென்றும் கொடுக்குந்தன்மை யுடையவனாகில் கொடுப்பானென்றும் கூறுக இத்துடன் அஷ்டகவர்க்கு காலசக்கிரம் முதலியவைகளையும் அனுசரித்துக் கூறுக இனி பிதாவின் பொதுப்பலன் விபரங்களைக் கூறுவோம்,

9-ல் சூரியன் நிற்கில் பிதுர் குரு துவேஷி
9-ல் சந்திரன் நிற்கில் பிதாவின் சொல் கடவாள்
9-ல் குஜன் நிற்கில் பிதுர் தோஷம் நிந்தையுள்ளவன்
9-ல் புதன் நிற்கில் தற்க வித்தையுள்ளவன்
9-ல் குரு நிற்கில் பிராமணர் அரசர் பொருளுடை (யோன்
9-ல் சுக்கிரன் நிற்கில் உபாயம் உதார முடையோன்
9-ல் சனி நிற்கில் பிதுர் பாக்கிய தோஷம்
9-ல் இராகு நிற்கில் பிதா குரு துவேஷம்
9-ல் கேது நிற்கில் சிறிய தகப்பனுக்கு தோஷம்

## பிதாவின் பொதுப்பலன்

1. ஜென்ம லக்கினத்திற்கு 9-ம் விட்டதிபன் ஆக்ஷி உச்சம் முதலியவைகளால் வலுப்பெற்றிருப்பானாகின் அந்த ஜாதகனுக்கு பிதாவின் பாக்கியமுண்டெனக் கூறுக.

பிதுர் ஸ்தானாதிபதிக்கு ஜெனன லக்கினாதிபதி ஆறுக்குடையவனாகவரில் அந்த ஜாதகனுக்கும் தனகும் எதிர் விரோதியாய் இருப்பாரெனக் கூறுக.

2. ஜெனன லக்னத்திற்கு 2-ம் வீட்டிற்குடையோன் ஸ்திர லக்கினாதிபதியாகவும் பிதுரு காரகனாகிய சூரியன் ஜலராசியிலிருக்கவும் மேற்படி சூரியன் வேஷ விருக்ஷிகத்திற்காக்ஷிநாதனான குஜன் பார்க்கவும் ஜெனித்த ஜாதகனின் பிதா இவன் ஜெனன காலங்களில் தேசாந்திரங்களிலிருப்பானெனவும் கூறுக.

3. 9-ம் வீட்டதிபதியும் சூரியனும் மேஷம் கடகம் துலாம் மகரம் முதலிய சரராசிகளிலிருக்கவும் மேற்படி கிரகங்கள் தான் நின்ற ராசிக்குடையவன் அங்கிசமும்

பெற்றிருப்பார்களேயானால் அவன் பிதா தேசாந்திரங்களி லிருப்பானெனவுங் கூறுக.

4. 9-ம் வீட்டிற்குடையவன் சூரியனிற்ற ராசிக்கு 9-ம் ராசியிலிருக்கவும் ஜென்ம லக்கினாதிபதி நின்ற ராசிக் கும் 9-ம் ராசியாக நிற்கவும் அவன் பிதாதான் ஜெனன காலங்களில் தேசாந்திரங்களிலிருப்பா னெனவுங் கூறுக.

5. ஜென்ம லக்கினத்திற்கு 8-ம் வீடு சரராசியாகவும் அவ்வீட்டிற்குடையவன் சாராசியிலேயே நிற்கவும் ஷை 8-ம் ராசிக்குடையவன் 8-ம் வீட்டிற்குடையவனைப் பார்க் கவும் 9-ம் வீட்டோன் 8-ம் வீட்டிற்குடையவனைப் பார்க் கவுமானால் அவன் பிதா தேசாந்திரங்களியே காலங்கழிப் பானெனக் கூறுக.

## ஒவ்வொரு ஜாதகர்களுக்கும் பாக்கிய முண்டாகும் காலம்

1. ஜென்ம லக்கினம் எந்த லக்கினமாயினும் அந்த லக்கினத்திற்கு குருசுப ஆதிபத்தியம் பெற்றும் சுப கிரகங்க ளுடன் கூடியுமிருப்பாரே யாமானால் அந்த ஜாதகனுக்கு அந்த ஜாதகன் ஜெனன கால்ங்களிலேயே பாக்கியம் சித்திக்கும்

2. ஷை குரு தன் சுயவர்கோத்தமம் பெற்றும் ஆக்ஷி உச்சம் முதலியவைகளால் பலமடைந்தும் புதன் பாக்கி யாதி பத்தியம் பெற்றுமிருப்பின் எவ்வர்ண காலங்களில் தனம் சித்திக்குமென்க.

3. ஜென்ம லக்கினத்தில் சுக்கிரன் புதன் இவர்களிருக் கவும் நான்காமிடமான சுகஸ்தானத்தில் கொடிய பாவ கிரகங்களிருக்கவும் ஜெனித்த ஜாதகர்களுக்கு வாலிப காலங்களில் தானம் சேருமெனக் கூறுக.

4. ஜெனன லக்கினம் கன்னியாயும் 12-ம் இடமென் னும் விறய ஸ்தானத்தில் இராகு கேதுக்களும் ஷை ஜென்ம லக்கினத்தில் குஜன் நிற்கவுமானால் விருதாபிய காலங் களில் பாக்கியம் சேருமெனவுங் கூறுக.

5. ஜென்ம லக்கினத்திலும் 11-ம் இடத்தினும் 12-ம் இடத்திலும் சுப கிரகங்களும் புதன் பலம் பெறிறிருக்கவும் ஜென்ம லக்கினம் தனுசு, மீனம், என்னுமிராசில் அந்த ஜாதகனுக்கு வாலிப வயதான 15 க்குமேல் தனம் சித்திக்கு மென்வுங் கூறுக.

6. சூரியன் பாவகிரகங்களுடன் கூடி ஆக்ஷி பெற்றிருக்க தனாதிபதி ஜலராசிகளிருக்க அல்லது ஜலராசிக்குடைய கிரகங்களுடன் கூடி இருக்க அவனுக்கு 15 வயதுக்கு மேல் பாக்கியமுண்டாகு மெனவு கூறுக.

9-ம் இடமாகிய பாக்கிய ஸ்தானமென்பது பிதாவைக் குறித்த முக்கியமான இடமாகையால் பிதுர் ஸ்தானாதிபதியாலும் பிதுரு காரனாகிய சூரியனிருக்கும் வன்மையாலும் ஷெ சூரியன் அஷ்டவர்கத்தாலும் ஆயுள் முதலியவைகளை யாராய்ந்து கூறுக.

## பாக்கிய விபரம்

| | | |
|---|---|---|
| உத்திரம், ரேவதி இந்த நக்ஷத்திரங்களில் | சுக்கிரனிருக்கில் | பிதுர் செல்வமில்லை |
| விசாகம் உத்திராடம் உத்திரட்டாதி இந்நாட்களில் | குரு நிற்கினும் | ,, |
| பூராடம் பூரட்டாதி இந்நாட்களில் | புதன் குஜன் நிற்குமாயினும் | ,, |

## 10-ம் இடம்

10-ம் இடமென்பது ஒவ்வொருவரின் உத்தியோகம் யாத்திரை ஒவ்வொருவரின் சுபகர்மம் பாபகர்மம் முதலியவையைப்பற்றிய இடமாகுமென முன் கூறிய முதலாம்

பாகத்திலே கூறியுள்ளோமாகையால் பின்வரும் 10-ம் பாவக விளக்கத்தால் சிலவற்றை ஆராய்வோமாக,

10-ல் சூரியன் நிற்கில் வாகனங்களால் நல்ல மேலான சுகசவுக்கியங்களை யனுபவிப்பவனும், உறவான தொழிலைச் செய்பவனும் தன் பிதா செய்த தொழிலையே செய்பவனும் தரும தானங்களைச் செய்ய முன் வருவோனும் இராஜாக்களால் பூஜிக்கப்படுவோனுமாவான் ,

10-ம் ராசியில் சந்திரன் சுக்கிரன் நிற்கில் தான் எடுத்த காரியத்தை மகாவல்லமையுடன் முடிப்பவனும் தீர்த்த யாத்திரை செய்ய ஆசை யதிகமுடையவனும் மாதாவின் மீது பிரியமும், மாதாவின் சொல்வழுவாது நடக்குந்தன்மை வாய்ந்தவனும் அற்ப பசியுடையவனும் மோகமதிகமுடையவனுமாம்.

10-ம் ராசியில் குஜன் நிற்கில் சூரியனும் எக்காரியங்களிலும் தாஷ்டீகமாய்த தலையிடுவோனும் தானுரைத்த சொற்களைக் கடவாதவனும் அனேக தனங்களைச் சம்பாதித்து பொக்கிஷதாரியாயிருப்பினும் அனேக பந்து ஜனத்திரளுடையவனும் ரரஜாக்களிடம் சேவை செய்யும் தன்மையுடை யவனா யிருப்பான்.

10-ம் ராசியில் புதன் நிற்கில் பெருமை பெற்ற பிரதானியாகுதாலும் ஆசார குருத்தியத்தோ டிருப்பவனும் அன்னிய தேசங்களில் சஞ்சரிக்க மனமுடையவனும். ஞான மார்க்கங்களை யறிந்தவனும் பிராமணர் மீது பக்தி மார்க்கங்களை யறிந்தவனும் கல்வி யதிகமுடையவனுமாம்.

10-ம் ராசியில் குரு நிற்கில்தான் தொடுத்த காரியத்தை நிறைவேற்றுஞ் சமர்த்துடையவனும், நாற்கால் ஜிவசேர்க்கை யுடையவனும், நீண்ட தனத்தை யுடையவனும் தீர்க்க ஆயுளும் பூர்ண கல்வியையுடையவனும் பிராமணர்களை பூசிக்கத் தக்கவனும் ஆவானெனக் கூறுக.

10-ம் ராசியில் சுக்கிரன் நிற்கில் எந்நாளும் சுகத்தையே அனுபவிக்கத் தக்கவனும் தொடுத்த காரிய ஜெயமடைவோனும் இப்பூமியில் யாவரும் புகழத்தக்க ஆலோ

சனை மந்திரியும் பிரசித்தி பெற்றவனும் பூரண யோகமு டையவனாகவு மிருப்பானெனக் கூறுக.

10-ம் ராசியில் சனி நிற்கில் மந்திரித்தனம் செய்பவனும் தெய்வம் பிராமணர் தன் குலத்தோர் முதலியோர்களிடத்தில் ஆசை யதிகமுடையவனும் ஓர் கிராமத்தை பரிபாலிக்கத் தக்கவனும் தனத்சேர்க்கையும் அரசர்களால் மெச்சத்தக்கவனு மாவானெனக் கூறுக.

## பரதே வாச விபரம்

| கிரகங்கள் நின்ற நக்ஷத்திரம் | கிரகம் | விஷயம் |
|---|---|---|
| சோதி பூராடம் அஸ்வனி | சனி நின்றால் | அன்னிய தேசவாசம் |
| மகம் பூசம் | ,, | அடுத்த கிராமவாசம் |
| பூரட்டாதி ஆயில்யம் | இராகு நிற்கில் | பலதேச வாசம் |
| சித்திரையில் | சனி நிற்கில் | யாத்திரை வாசகம் |
| ஆய்ல்யம் கேட்டை ரேவதி | புதன் நிற்கில் | வியாபாரத்தால் பரதேச வாசம் |
| கார்த்திகை உத் உத்திராட (திரம் | சனி நிற்கில் | பிதாவுடன் அன்னிய தேச வாசகம் |

(1) பிதுர்காரனாகிய சூரியனோடு சந்திரன், சுக்கிரன், புதன் இவர்கள் கூடி இருக்கினும் அவன் பிதா தேசாந்திரங்களிருப்பானெனவும் கூறுவாயாக.

(2) மேற்படி பிதுருகாரனாகிய சூரியனோடு சந்திரன் குஜன் சுக்கிரன், குரு இவர்கள் கூட்டம் கூடியிருக்கில் அந்த ஜாதகன் தன் பிதாவுக்கு துவேஷம் செய்பவனாகவும் பிதாவைப்பேச்சுவார்த்தைகளை மாரி நடப்பவனும் ஆவான்

மேற்சொன்ன பிதுருகாரகனோடு சனி, இராகு, கேது இவர்கள்கூடி பிதுர் ஸ்தானமான 9-ம் ராசியில்நிற்பாரேயானால் அவனுடைய பிதாவுக்கு தோஷமெனவும் கூறுவும்.

(3) பிதுருகாரனாகிய சூரியன் 10-ம் ராசியிலிருந்து ஜென்ம லக்கினத்திற்கு மூன்றாம் ராசியிமிருந்தால் அந்த ஜாதகன் தன் பிதுரு வர்கத்திற்கு கொடுமை செய்யும் கொடியவனாவான்.

(4) 9-ம் யிடமாகிய பாக்கியஸ்தானத்தில் சனி, குஜன் சூரியன் இம்மூவருங்கூடி இருக்க அந்த ஜாதகன் பிதாவை துரோகம் செய்பவனாகுவன் 7-ம் 9-ம் ராசியில் குருவும் 5 9 என்னுமிடங்களில் கொடியப் பகைவர்களிருந்தாலும் தன் பிதா துவேஷிக்கத் தக்கவனே எனக்கூறுக.

10-6 ராசியிலே ஏழுகிரகங்களுமிருந்தாலும் 12-ம் ராசி நாதன் சரராசிகளிலிருந்தாலுங் அந்த ஜாதகன் பொருள் சம்பாதிக்கும் நிமித்தமாய் அன்னியதேசங்களில் நெடு நாள் திரிந்திருப்பவனாவான்.

நான்கு பத்தாம் இடங்களில் காலக்கினமாகவும் 12-ம் ராசியில் இராகுவும் அல்லது சுக்கிரன், சந்திரன் இவ்விரு வரும் 10, 12 என்னும் இடங்களிலிருக்கினும் அந்த ஜாத கன் தேசாந்திரங்களில் திரிவானெனக் கூறுக.

சந்திரன், குரு சனி இவர்கள் கூடியிருக்கினும் சந்திர னோடு சுக்கிரன், கூடியிருக்கினும். குருவோடு புதன் குஜன் சூரியன் இவர்கள் கூடியிருந்தாலும் அந்த ஜாதகன் குபேர பட்டணத்திற்குச் சமானமான பெரிய பட்டணங்களில் வாசம் செய்வானெனக் கூறுக.

ஜென்மராசி எந்த ராசியாயினும் மேஷம் தனுசு மீனம் இந்த ராசியில் சூரியனிருக்கப் பிறந்தவர்கள் கீர்த்தி பிர பலம் மேன்பாடுடையவரா யிருப்பார்கள். மேற் சொல்லி யுள்ள சூரியனோடு சுக்கிரன் சகிதம் பெற்றிருக்கவும், சனி பாராதிருக்கவும் ஜெனித்தோர் அபிமானத்தை கைக் கொண்டவராவார்.

10-ம் இடமென்று சொல்லும் உத்தியோக ஸ்தானாபதி யைக் கொண்டே ஒவ்வொருவரின் உத்தியோக விபரங் களைக் கூறவேண்டுமெனக் கூறியதால் 10 ம் வீட்டிற்கு டைய கிரகம் எந்த கிரகமாயினும் அந்தந்த கிரகத்திற் குறிய தொழிலையே உரைக்க வேண்டுமென்றும் பார்வை

சேர்க்கை முதலியவைகளால் மாறுபடுமெனக் கூறியதால் 10-ம் வீட்டதிபதி இராகு, கேதுகளின் வர்க்கம் பெற்று சனி, குரு இவர்கள் வர்கம் பெற்றிருக்கினும் நீச்சம்மூடம் அஸ்தமய முதலியவைகளடைந்து மிருப்பின் அந்த ஜாதகன் தன் சுயதொழிலைவிட்டு அன்னிய தேசங்களில்சேவக விருத்தி செய்வானெனக் கூறுக

தாதுவாய் வந்த கிரகங்களின் வர்கம் பெற்றும் நீச்ச மூடன் அஸ்தமயம் பெற்றிருக்கில் தாதுவாய் வந்த கிரகத்திற்குறிய தொழிலையே செய்வர். மூலவற்க மடைந்திருக்கில் மூல ராசியாதிபர்களின் தொழிலை செய்வார்.

10-ம் ராசியாதிபதி ஜீவ வர்க மடைந்திருக்கில் ஜீவ வர்க தொழிலே செய்வானெனவும் வனங்களில் வாசம் செய்யும் மிருக வகைகளால் தன் ஜீவியத்தை நடத்துவாரென்றும் இவ்வாறே ஒவ்வொரு ஜாதகர்களுக்கும் பத்தாம் வீட்டதிபதி எந்த வர்க்கம் பெற்றானோ அந்த வர்காதிபதியினுடைய தொழிலே செய்வானெவும் கூறவேண்டும்.

பல விதமானத் தொழில் செய்வோர் 4, 7, 10, 11, சூரியன் நிற்க சூரியன் நின்ற ராசிக்குடையோன் தன் சுய வீட்டைப் பார்க்கவும் அல்லது சூரியனோடு பத்தாம் வீட்டதிபதி சகிதம் பெற்றிருக்கவும் அந்த ஜாதகன் சூது களவு உழவுத்தொழில் மாந்திரீகம் பஞ்சலோகம் மிருகம் முதலியவைகளால் அவன் ஜீவனத்தை நடத்துவானெனக் கூறுக,

ஜென்ம லக்கினத்திற்கு 3 10 என்னும் இடங்களில் குஜன் நிற்கவும் மேற்படி குஜன் 10-ம் ராசியதிபதியை நோக்கவும் அல்லது செய்வாயுடன் 10 ம் ராசிநாதன் சகிதம் பெற்றிருக்கவும் அந்த ஜாதகன் ஆசாரத்துவம் வேளாண்மை, ஆயுதப் பரீஷை ரசவாதம் மாந்திரீகம் கொடிய துர்மார்க்கத் தொழில் முதலியவைவோல் தன் ஜீவனத்தை நடத்துவானெனக் கூறுக.

குரு மேற்சொன்னபடி யிருக்கில் பிராமணர்களாலும் அரசர்களாலும் இளம் பருவ மக்கட்கு உபதேசம் செய்வதாலும் தன் ஜிவனத்தை நடத்துவானெனவும் எக்காலமும் நீங்காத தொழிலையுடையவனாய் எந்நாளும் புராணம் பிரசங்கம் சுருதிமொழி இவைகளால் தன் ஜீவனத்தை நடத்துவானெனவும்.

சுக்கிரன் மேற்சொன்னபடி யிருக்கில் வாகனம், பால் நெய் முதலியவைகளாலும் வெண்கலம் முத்து முதலிய வாணிபத்தாலும் பரியாச நாட்டியத்தாலும் நடன சங்கீத வினோத வித்தையாலும் தன் ஜீவியத்தை நடத்துவான்.

சனி மேற்சொன்னபடி நிற்கில் சேவகத்தொழிலாலும் எள்ளு பருத்தி முதலியவைகளாலும் விவாத வார்த்தைகளாலும் தான்னியம் கொலை செய்தால் சுமை தூக்குதல் திருடரை வழி மரிக்குதல் இரும்பு மூலமான பொருளைக் கொண்டு விற்றல் நீலமணி விற்றல், முதலியவைகளால் ஜீவனம் செய்வான்.

இராகு கேதுக்கள் நான்கு ஒன்பது முதலிய இடங்களிலிருக்கில் திருடன் அனியாயமாய் அபகரித்தல் தற்கமாடும் வித்தை பற்பலவேடம் கோள் சொல்லுதல் முதலியவைகளாலும் சூஸ்திரதொழிலாலும் வியாபாரம் வஞ்சனை மாந்திரீக நிசவிர்த்தியாலும் தன் ஜீவியத்தைக் காலங் கழிப்பான்.

## கிரியை முடிப்பவர்களுடைய நக்ஷத்திரங்கள்

சந்திரன் மிருகசிரம் உத்திரட்டாதி அவிட்டம் ஆயில்யம் கார்த்திகையிலிருக்கினும்.

சனி திருவாதிரையிலிருக்கினும்

இராகு பூச நக்ஷத்திரத்திலிருக்கினும்

குஜன் ,,

சுக்கிரன் விசாக நக்ஷத்திரத்திலிருக்கினும்

புதன் ,,

சூரியன் சதய நக்ஷத்திரத்திலும்

குரு அஸ்த நக்ஷத்திரத்திலிருக்கினும் கிரியை முடிப் போனாவான்,

## வியாபாரி

ஜென்ம லக்கினம் மேடமாக குஜன் ஆக்ஷி பெற அவை சந்திரன் நின்ற ராசிக்கு 10-ம் ராசியாயுமிருக்க அவன் வியாபாரம் செய்யுந் தன்மையுடையவனாவான்.

கடக ராசியில் நின்ற சந்திரனைச் சனி பார்க்கில் இரும்பு வியாபாரம் செய்யுந் தன்மையுடையவனாவான்.

கடகத்தில் நின்ற சந்திரனை சூரியன் பார்க்கில் அரசர்களிடம் சேவகத் தொழில் செய்பவானாவான்.

சூரியனும் குஜனும் கும்ப ராசியில் நிற்க வியாபாரம் செய்யுந் தன்கையுடையவனாவன்.

துலாத்தில் நின்ற சந்திரனை குரு பார்க்கில் பொன் வெள்ளி முதலிய நகை வியாபாரம் செய்பவனாகும்.

விருச்சிகத்தில் நின்ற சந்திரனை சுக்கிரன் பார்க்கில் பொருளைக் கொடுத்து வட்டி வாங்கும் வியாபாரம் செய்வான் (பின்) ஒவ்வொரு கிரகங்கள் நின்ற நக்ஷத்திரங்களால் வியாபாரமரிக.

| கிரகம் | நின்ற நக்ஷத்திரம் | பலன் |
|---|---|---|
| சூரியன் | உத்திராடம் பூராடம் | சோதிமலின் வியா |
| சந்திரன் | கார்த்திகை மகம் | ராஜ விபாபாரி |
| குஜன் | ரோகிணி | ,, |
| புதன் | சோதி ஆயில்யம் | மலின் வியாபாரி |
| குரு | திருவாதிரை மிருகசி பூசம் [ரம் | ,, |
| சுக்கிரன் | விசாகம் | ராஜ வியாபாரி |
| சனி | சதயம் | மலின் வியாபாரி |

சந்திரனுக்குப் பத்தில் சனி குஜன் சுக்கிரன் இவர்களிருந்தால் அன்னிய தேசங்களில் சென்று பற்பல வியாபாரம் செய்வான்.

சந்திரனுக்கு 10-ம் வீட்டோன் ஜென்ம லக்கினாதிபதிக்கு உறவுடையவனாகில் கட்டு சரக்கு வியாபாரம் செய்வான்.

## மறுஜெனன வகை

1. ஜென்ம லக்கினத்தில் குருவும் சூரியன் குஜன், இவர்கள் பலம் பெற்றுமிருக்கில் மறு ஜெனனம் மனிதப் பிறப்பேயாகும்.

2. சந்திரன் சுக்கிரன் இவர்கள் பலம் பெற்றிருக்கில் பிதுரு உலகத்தை யடைவான்.

3. மேடராசி முதல் கடக ராசிக்குள் ஜெனன லக்கினமாக இருக்கின் மறுபடியும் மானிடப் பிறப்புண்டு.

4. சிங்கராசி முதல் விருக்ஷிக ராசிக்குள் ஜெனன லக்கினமாயின் மறுபடியும் அரசனாகப் பிறப்பான்.

5. தனுசு முதல் மீனம் வரையில் ஜெனன லக்கினமாயின் சுவர்க்கலோகத்தை யடைவானென்றுங் கூறுக.

6. 12-ம் ராசியில் சுபகிரகங்கள் உச்சம் பெற்றிருக்க சுவர்கபோக மடைவாரெனவுங் கூறுக.

7. சனி புதன் பலம் பெற்றும் 12-ம் வீட்டோன் சஷ்டியங்கிசம் பெறவும் கொடிய கிரகங்கள் பார்க்குமாகில் அனேக நாள் நகரவாதையா யிருப்பானென்றுங் கூறுக.

## 11-ம் இடம்

## பலன் லாபமுண்டாகும் விபரம்

1 11-ம் ராசியில் சூரியனும் அவனுடன் வேறு கிரகங்கள் சேர்க்கையின்றி இருக்கின் அவன் ஜெனித்த ஆறு வருடங்களுக்கு மேல் பொன் முத்து முதலிய பூஷணங்களால் விசேஷலாபமுண்டு. அன்றியும் பவளம் முதலிய ரத்தினங்களால் லாபமுண்டாகும்.

2 11-ம் ராசியில் சந்திரனிலிருந்து வேறு கிரகங்கள் சேர்க்கையிருக்கினும் யில்லாவிடினும் அந்த ஜாதகன் மாங்கிச வகையின் வியாபாரத்தால் லாபமடைவானெனவும் மாமிசவகைகளாலும் விசேஷ லாபமடைவதோடு பொக்கிஷதாரியாயு மிருப்பானெனக் கொள்க.

3. 11-ம் ராசியில் குஜன் நின்று வேறு கிரகங்களின் சேர்க்கையிருக்கினும் இல்லாவிடினும் பிறருக்குக் கடன் கொடுத்து அதனை பெரு முயற்சியோடு சண்டை முதலிய வைகளால் வாங்குதலால் நல்ல லாபத்தையும் கையிருப்பை யுமடைவானெனக் கொள்க.

4. 11-ம் ராசியில் ராகு நிற்கவும் அவனோடு லாபாதி பதி தவிற மற்றும் வேறு கிரகங்கள் சேரினும் சேராவிடினும் அந்த ஜாதகன் பிதா அல்லது பாட்டன்மார் தேடிய பொருள் யாவும் விரையமாகுமென்றும் அவ்விரயமானது விஷத்தாலும் அகஸ்மாத்தாகவும் விரையமாகுமென்றுங் கூறுக.

5. 11-ம் ராசியில் ராகு நிற்க அந்த ஜாதகன் ராஜாக்களோடு போராடுதலும் வழக்கு வாது முதலியவை களாலும் தான் தேடிய தனமும் தன் பிதா பாட்டன் முதலி யோர் தேடிய தனமும் வீணாகுமெனக் கூறுக, அன்றியும் ராஜ்க்களாலும் ராஜாக்கள் மூலமான வாதத்தாலும் தனம் சேகரிப்பானெவுங் கூறுக.

6. 11-ம் ராசியில் ஜென்ம ராசிக்கு 8-ம் வீட்டாதிபதி நிற்கில் அந்த ஜாதகன் பொக்கிஷதனமானதுதுற்தேவதை களாலும் கொடிய தெய்வங்கள் உபாதியாலும் தன் (தனம்) என்னும் லாபமான பொருளாதை சிலவழியும்

இரண்டாமிடமாகிய ஸ்தானத்தில் சனி நின்றிருக்கில் பழைமையான பூர்வோத்திர தனம் சிலவழியு மெனவும் இராண்டாம் ராசியில் ராகு நிற்கில் விஷங்கடித்தலாலும் வயிற்றுவலி அல்லது வயிற்றுக்குள்ளான நோயாலும் அவன் தனம் சிலவாகுமெனவும் பின்னும் பிறர் செய்யும் உபவாசம் மாந்திரிகம் முதலியவைகளாலும் தனம் சில வழியுமெனவுங் கூறுவாயாக.

இங்கு லாபம் என்பதைக் குறித்து குளிகன் ஒன்னும் கிரகத்தைப்பற்றி சில விஷயங்களைக் கூறுவோம்ஏனெனில் குளிகன் நன்மை க்ஷேத்திரம் பெரில் நன்மை பலனில் பல முடையவனும் கொடிய க்ஷேத்திரம் பெரில் கொடிய பலனும் பலம் பொருந்தியவனுமாகும் ஆகையால் குளிகன் என்னும் விஷயங்களைப் பற்றிய விபரம் இவ்விடம் கூறும் 11-ம் வீட்டால் கூறுவோம்.

9-ம் ராசியில் குளிகனிருக்கில் வழி பிரயாண காலம் பொருள் போம்.

7-ம் ராசியில் குளிகனிருக்கில் அன்னியதார இச்சையால் பொருள் போம்.

11-ம் ராசியில் குளிகனிருகில் சினேகிதர் மூலமானவைகளால் போம்.

12-ம் ராசியில் குளிகனிருக்கில் சிநேகிதர் மூலமானவைகளால் பொருள் போம்.

5-ம் சூரியன் நிற்கில் தன்புத்திரர்களால் பொருள் போம்.

9-ம் ராசியதிபனுடன் குளிகன் நிற்கில் திருடராலும் அன்னிய ஜனங்களாலும் தனம் போம்.

இன்னும் மற்றுமுள்ள 1,2,4,6,10 முதலிய இடங்களில் குளிகன் நிற்கில் தன் பூர்வதனம் சிந்திப்பதோடு தன் சுயபொருளும் நெடுநாள் நீடித்திருக்குமெனவுங் கூறுக.

நான்காம் வீட்டதிபனோடு குகன், சனி, குளிகன் இவர்கள் கூடியிருக்கவும் அவர்கள் சுபகிரகங்களுடன் சேர்ந்திருக்கில் அந்த ஜாதகனின் பூர்வோந்திர தனமானது நாற்கால்களையுடைய வாகனத்நாலும் பிரயாணம் செய்யுந் தன்மையாலும் திருடர்களாலும் பிறரை அபகரிக்கும் எண்ணத்தாலும் தனம் போமெனக் கூறுக.

## லாப விக்கினமும் லாப விரையமும்

மூன்றாம் ராசியில் குளிகனிருக்கில் யாத்திரையாலும் பாதைகளிலும் தன் மனம் விரையமாகச் செய்யும்.

(விவரம்) இங்கு மூன்றாம் இடத்தைக் குறித்து பேசவேண்டிய காரணமென்னவெனில் மூன்றாம் இடமென்பது நாம் கூறிவரும் 11-ம் இடமென்னும் லாப ஸ்தானத்திற்கு ஆறாம் க்ஷேத்திரமும், ஜென்ம லக்கினத்திற்கு மூன்றாம் க்ஷேத்திரமுமா கையால் 11ம் ராசிக்கு ரோகமும் ஜென்ம லக்கினத்திற்கு விறயமுமென்பதை விளக்க வேண்டியும் குளிகன் என்னும் கிரகத்தைக் கைப்பற்றி கூறுவதால் பிரயாண காலங்களில் விரயமெனவுங் கூறுவாகும்.

ஷ குளிகன் 7-ம் இடமாகிய காம ஸ்தானத்திலிருப்பார்னாகில் தான் சம்பாதிக்கும் பொருள் அல்லது லாப

மான பொருள் இவைகள் அன்னியதாரத்தின் இச்சையாய் விறயமாகும் 11-ம் ராசியிலேயே குளிகனிருக்கில் தன் மூத்த சகோதரர்களால் தனக்குவரும் பொருள் விரயமாகும்.

புத்திர ஸ்தானாதிபதியும் புத்திரகாரகனும் சேர்ந்து 8-ம் ராசியிலிருப்பார்களானால் தான் சம்பாதிக்கும் பொருள் தன புத்திரர்களால் விரயமாகுமெனவுங் கூறுக.

ஜேஷ்ட சகோதர மென்பது ஒவ்வொரு ஜாதகனின் முன் பிறந்த சகோதர சகோதரிகளைக் குறித்ததாகும்.

11-ம் வீட்டதிபனெவனோ அந்த கிரகமே ஒவ்வொரு வரின் முன் பிறந்த சகோதர சகோதரிக் குடையவராவர்.

11-ம் வீட்டதிபதி புருஷக்கோளாராகி ஒற்றை ராசிக ளில் பலம் பெற்றும் ஒற்றை ர்ாசி கிரகங்களுடன் கூடியும் பார்வையுற்று மிருந்தால் அவனுக்கு முன் பிறந்த சகோதரம் ஆணாகும்.

11-ம் வீட்டோன் ஸ்திரீ கிரகமாய் இரட்டை ராசி களின் நின்று ஸ்திரீ கோட்களோடு சகிதம் பெற்றும் பார்வையுமிருந்தால் முன் பிறந்தது ஸ்திரீ பிரஜை என்னும் கொள்க.

11-ம் வீட்டதிபதி புருஷ கிரகமாகி இரட்டை ராசி வலு பெற்றும் ஸ்திரீ கிரகமாகி ஒற்றை ராசிகளில் வலுபெற்று மிருந்தால் மற்றுமுள்ள பார்வை சேர்க்கை முதலியவை களாலும் ஒருவர்க் கொருவருள்ள பலத்தாலும் ஆண் பெண் எனக் கூறவேண்டும்.

11-ம் வீட்டதிபன் ஜெனன லக்கினத்திலேயே நின்றும் ஜெனன லக்கினாதிபதி 11-ம் வீட்டிலிருக்கினும் குஜன் 11-ம் ராசியிலின்றி வேறு க்ஷேத்திரங்களினுமிருப்பாரே யாமா னால் இந்த ஜாதகனையே ஜேஷ்டமெனக் கூறவேண்டும்.

11-ம் வீட்டில் குஜனும் 11-ம் வீட்டோனும் பலம் பெற்று சுபகோட்களால் பார்வையுற்றுமிருந்தால் ஜேஷ்ட கோதர முண்டென்றும் அதன் சங்கியைகளை கிரகங்க ளெத்தனையெனக் கண்டு சொல்லுக.

இங்கு 11-ம் ராசியில் கிரகங்கள் நின்ற விபரங்களைக் கூறுவோம்.

## 11-ல் சூரியன் நின்ற பலன்

சகோதரர் பந்து ஜெனப்பகை ஓர் காதுநோயாளன் அடிமை யுடையவன் பூரண செல்வமுடையோன் தான் தொடுத்த காரியத்தை வெகு சிரமத்தோடு செய்வபன்.

## 11-ல் சந்திரன் நின்ற பலன்

மாதுரு வகையாலும் உழவுத்தொழிலாலும் வியாபாரத் தாலும் லாபமதிகமுடையவன் அழகிய புத்திரர் ஆளடிமை தீர்க ஆயுள் முதலியவைகளையுடையவன் மாந்திரீகம் கற்ப் போன் பாக்கியமுடையவன்.

## 11-ல் குஜன் நின்ற பலன்

புண்பட்ட நெஞ்சமுடையவன் சதுர வாக்கு மன மகிழ்ச்சி யுடையவன், தன் ஜேஷ்ட சகோரராலும் பூமியை டண் படுத்துவதாலும் லாபத்தை யடைபவன் காமமதிக முடையவன் செவி மந்தமுடையவன் நல்வாக்குடையன்.

## 11-ல் புதன் நின்ற பலன்

ஆளடி மையும் கீர்த்தி பிரதாபம் தான் கண்ட இடம் சந்தோஷமும் வியாபாரத்தாலும் கவித்துவத்தாலும் லாபம் வாகன சேர்கையுடையவன், பிராமணர் அரசர் புத்திரர் இவர்களால் நல்ல மேலான லாபத்தை யடைபவன்.

## 11-ல் குரு நின்ற பலன்

அரசர்களுக்குச் சமமானவன் நற்புத்தி விவகாரக் கேள்வி உண்மையான ஞானம் வாகன சேர்க்கை, பொன் வியாபாரத்தாலும் ராஜாங்கத்தாலும் இலாபமடைவோன் வித்தையினால் தனலாபமுடையவன் அநேக களத்திர முடையவன்.

## 11-ல் சிக்கிரன் நின்ற பலன்

அற்ப ஆயுள் குரூரசிந்தை வஞ்சக நெஞ்சமுடைவன் அன்னியதார ஆசையுடையவன், வெள்ளி, வெண்கலம், முத்து முதலிய வியாபாரத்தால் லாபமதிக முடையவன், பொன் நாட்டியங்களால் லாபமுடையவன்,

## 11-ல் சனி நின்றபலன்

ஞான மார்க்கங்களை யாரய்ந்தவன்சிற்பசாஸ்திரிபூர்ண அறிவு வாய்ந்தவன், சுமை சுமைத்தல் கொலை செய்தலும், சகோதர தோஷத்தை யுடைவனும், செவிடுடையவன் நீச்சர் மன்னவர் முதலியவைகளால் லாபமதிகமுடையவன்

## 11-ல் இராகு நின்ற பலன்

பின்புத்தி, நோயாளன், வித்தையில் சிறந்தவன், தெய்வத்தினிடத்தும் பிராமணர்களிடத்தும் பக்தியுடையவன், செவி மந்தமுடையவன் மூத்த சகோதர தோஷமுடையவன்,

## 11-ல் கேது நின்ற பலன்

தன் சகோதரர்களால் துன்பமுடையவன் புத்திரர்களாலும் திருட்டு வியாபாரத்தாலும் தன் பகைவர்களாலும் வித்தையாலும் லாபமுடையவன், உபாய புத்தியும் சொந்த பந்துக்களின் துவேஷமுடையவ னெனவுங் கூறுக.

## லாபமுண்டாகு மிடம்

சூரியனுடன் 10-ம் வீட்டோன் கூடி 11-ம் ராசியிலிருக்க நானாவித லாபம்.

11-ம் வீட்டோன் சராசிகயிருக்க தூரதேசத்தில் லாபம்

11-ம் வீட்டோன் ஸ்திரி ராசியிலிருக்க எல்லாயிடங்களிலும் லாபம்

## 11-ல் கேது நிற்கில் குறித்த இடத்தில் லாபம்

## 12-ம் இடம்

12-ம் இடமென்பது விரயம் மோஷம் விறயம் என்னும் ஷேத்திரங்களை குறித்த இடமென முன் கூறிய முதல் பாகத்திலேயே கூறியுள்ளேன்.

இங்கு 12-ம் இடமாகிய விரயம் என்னும் விஷயங்களைப் பற்றி இங்கு கூறுவோமாக.

12-ம் இடமான கொடிய கிரகங்களுக் காதிபத்தியமிருப் பது விசேஷம் அல்லது கொடிய கிரகங்களிருப்பது விசேஷம் இவ்விரண்டுமின்றி 1,6,7,10 என்னும் வீட்டுக் குடையோராவது 5,9, எனனும் வீட்டிற்குடையோராவது விறய ஸ்தானம் பெறலாகாது.

ஏனெனில் 12-ம் மிடமென்பது விறயஸ்தான ராயினும் விறயம் என்பது எவ்விதத்தாலுண்டாகும் என்னும் விஷயத் தைக் காட்டும் க்ஷேத்திரமாகும்.

உதாரணமாக கீழ்க்கண்ட சக்கரத்தைக் கவனியுங்கள்

| | | | |
|---|---|---|---|
| ல | | சனி ராகு | |
| | இராசி | | |
| அ சூ சு | | | |
| பு குரு | சந் கே | | |

இங்கு காட்டியுள்ள சக்கரத்திற்கு 12-ம் வீட்டதிபதி சுக்கிரனாகும் சுக்கிரன் மூன்றாமிடம் விறய ஸ்தானம் பெற் றிருக்கிறான் சுக்கிரனுக்கு 12-ம் ஆதிபத்தியம் வந்ததால் அந்த ஜாதகன் பொன் வெள்ளி முதலிய பூஷணங்களா லும் பெண்கள் மூலமான சிலவு அதிகத்தாலும் விறயம் செய்வானென ஏற்படுகிறது ஆயினும் அவனோ லாபாதி யும் சம்மந்தப்பட்டபடியால் லாபத்தைக்கொண்டே விரயம் செய்வானென ஏற்படுகிறது சூரியன் மூன்றாம் வீட்டிற் குடையோனாகையால் எவ்வளவு சிலவு செய்யினும் பிற ரறியாமலும். சகோதர வற்கத்தாருக்கு சில பொருள் சிலவு செய்வானெனக் கூறவேண்டும், இவ்வாறே 12-ம் வீட்டதி பன் சூரியனாகில் தன் சரீர வளர்ச்சிக்காயும் பிறர் வர்கத் தாருக்கும் சிலவு செய்வானெனவும் சந்திரனாகில் மாதுரு வர்க்கத்தார்க்கும் சரீர புஷ்டிக்காயும் சிலவு செய்வானென வும் புதனாகில் வியாபாரம் முதலியவைகளால் சிலவு செய் வானெனவும், குருவாகில் ராஜாக்களாலும் புத்திரர் மூல மான அவசரச் சிலவாக விறயமாகுமெனவும் சனியாகில்

தன் சுயத்தொழிலாலும் தனக்கு வேண்டுமென்ற நினைவாலும் சிலவு செய்வானெனவும் கூறுக.

12-ம் வீட்டோன் சூரியனாகி துலா ராசியில் நீச்சம் பெற்றிருக்க பிதாவின் தொந்தரவால் தன் தனம் விறயமாகுமெனவும் சந்திரனாகில் மாதுரு, குஜனாகில் சகோதரன் புதனால் அம்மான் குருவாகில், புத்திரர் சுக்கிரனால், களத்திரத்தாலும் சனியால் தன் சுயத்தொழிலும் விறயமாகுமென கூறுவதாகும்.

12-ம் வீட்டோனால் மோஷம் என்னும் வகையைக் காணும் விதம்.

1. சூரியனாகில் மோஷம்
2. சந்திரனாகில் மானிட ஜென்மம்.
3. குஜனாகில் மோஷம்
4. புதனாகில் வைஷ்ணவன்
5. குருவாகில் பீராமணன் அல்லது ஞானி
6. சுக்கிரனாகில் பெண் அல்லது மயன் வம்சம்

நீச்சன் இவ்வாறு பிறப்பானென்பது சாஸ்திர கொள்கை.

## இன்னமும் ஒரு அடைவு

ஜெனன லக்கினாதிபதியும் நான்கு, ஏழு, எட்டு இவ் வீட்டிற்குடைய கிரகங்கள் ஒன்று கூடி மேற்சொன்ன ஸ்தானங்களுக்கு முன் இடமான பாக்கிய ஸ்தானத்திலிருக்க அந்த ஜாதகன் எந்நாளும் நீங்காத தனமுடையவனாய் இருக்குமென்றும் இவை ஆதிகாலத் தோராலுரைந்த வாக்காகையால் தவராதிருக்கு மென்றுங் கூறுவாயாக.

ஜெனன லக்கினத்திற்கு ஏதேனுமொரு ராசியில் ஐந்து கிரகங்கள் கூட்டம்கூடி இருக்க மற்றுமுள்ள கிரகங்கள்ஒவ்வொருவராயிருக்க அந்த ஜாதகன் சூரியனுடைய வெளிச்சமுடையவனாய் கணக்கில்லாத யானை கூட்டங் களுடையயவனாகியும் மிருப்பான்.

சுபகிரகங்களாகிய சந்திரன் புதன் குருசுக்கிரன் இவர்கள் ஒன்று சேர்ந்து நிற்கமற்றய ஐந்து கிரகங்களும் மேற்சொன்ன கிரகங்களுக்கு ஐந்தாமிராசியிலிருந்தால் அந்த ஜாதகன் கடல் சூழ்ந்த இப்பூவுலகை யாளத்தக்கவனும் தன்னைச் சுற்றிலும் அநேகர் சூழ்ந்திருக்கவும் பதவிவாயந்தவனாவான்.

ஜெனன ராசிக்கு நான்காம் ராசியில் இரண்டாம் வீட்டோனும் மற்றும் மூன்று கிரகங்கள் சேர்ந்து ஓர் ராசியிலிருக்க மேற்சொன்ன நான்காம் ராசிக்கு நான்காம் ராசியில் 3-ம் கிரகங்களிருக்க அந்த ஜாதகன் பூச்சக்கரக் குடைக்கீழ் அரசாளும் தேவேந்திரனுக் கொத்தவனாய் அனேக யோக முடையவனென்றும் கூறுவாயாக

ஜெனன ராசிக்கு நான்குக்கு நான்காம் ராசிகளிலேயே ஒவ்வொரு கிரகங்களமர்த்திருக்க சிறப்பு பெற்ற செல்வத்தோடு புவியாள் மன்னனாவான் மேற்சொன்ன இராசிகளிலிறண்டிரண்டு கிரகங்கள் வரிசை பெற்று அமர்ந்திருக்குமேயானால் இப்பூமியில் மேலான செல்வமுடையவனாய் ராஜபோக முடையவனாயுமிருப்பான்.

ஜெனன லக்கினமுதலே தேனுமொரு ராசியில் சப்தக் கிரகங்கள் ஒன்று சேர்ந்திருக்க மற்றய கிரகங்கள் மறு ராசியிலிருக்க அந்த் ஜாதகன் யாதொரு குறைவுமின்றி பிரகாசம் நிறைந்த இத்தேசமெங்கும் பிரக்கியாதியைப் படைத்த அரசனாய் நூறுவயது வரையில் யாதொரு விக்கினமின்றி ராஜ்ஜிய பாரம் செய்பவனாவான்,

அரசு ஸ்தானமாகிய 10-ம் ராசிக்கு வலப்புறத்தில் நற்பலனை விளக்கும் சுக்கிரனிருக்க சந்திரனிருந்த வீட்டிற்குடையோனும் ஜெனன ராசியாதிபதியும் வலம் இடம் இவ்விடங்களிலிருப்பாரேயாமானால் முரசு எக்காளம் பம்பை பேரி முதலிய வாத்தியங்கள் எக்காலமும் முழங்கும்படி அபசாக்ஷி செய்யும் ராஜயோகத்தை யடைவான்.

ஐந்தாம் வீட்டுக்குடையவன் குருவுடன் சகிதம் பெற அவ்வீட்டிற்குடையோன் சந்திரன் வீட்டிலாவது சந்திரனோடாவது கூடியிருக்க, பிரசித்தி பெற்ற ராஜயோக முண்டாவதோடு கூடியிருக்க. சி கையும் வந்தடையும் ஐந்தாமதிபதி நின்ற ராசிக்கு ஏழாம் இராசியில் குருவும் அவனும்

மேற்சொன்ன படி சந்திரனுடன் சேர்ந்திருந்தாலும் விஷயத்தைப்புசித்தது போல் இவ்வுலகெங்கும் ஆளவல்லவனாவான்.

குரு நின்ற ராசிக்கு நான்காம் ராசியில் ஐந்தாம் வீட்டதிபதியிருக்க அவனுடன் சந்திரன் சகிதம்பெற அந்த ஜாதகனுக்கு ராஜயோகம் சித்திக்கும் ஆறாம் வீட்டதிபதியும் ஏழு ஐந்தாம் வீட்டதிபதியும் கூட்டங்கூடி நிற்பாராகில் அந்த ஜாதகன் சிவந்த ஜடாபாரத்தையுடைய சிவனைப் போன்ற தன்மையுடையவனாய் இப்பூமியெங்கும் அரசாளத்தக்கவனாவான்.

இராகு கேதுக்களிலொருவருடன் குரு நிற்க அவனும் சந்திரன் நின்ற ராசியிலேயே இருப்பானாகில் எந்நாளும் குறைவடையப்பட மாட்டாத ராஜயோகத்தையே அனுபவிப்பான். மேலும் யானைத்திரளதிக முடையவனும் தேடுதற்குறிய சிவிகைப் பல்லக்கையுடையவனும் அரசாங்கமும் இன்னும் பலகோடி பொருளையு முடையவனாவான்.

ஜெனன லக்கினத்திற்கு 5-ம் வீட்டதிபதியும் சந்திரனும் குரு சந்திரனின்ற வீட்டிற்கு குடையோன் அவர்கள் ஒன்று கூடியும் இராகு கேதுக்களிலாரேனு மொருவர் சகிதம் பெறாமலுமிருந்தால் கொஞ்ச செல்வத்தையுடைய ராஜயோக முண்டாகு மென்றும் கூறுவாயாக.

குரு ஜெனன லக்கினாதிபதி சுக்கிரன் சந்திரன் சந்திரனிருந்த வீட்டிற்குடையோன் 1,4,7, 10-க்குடையோர் இரண்டு ஒன்பது இவ்வீட்டிற்குடையோர் சுபகிரகங்கள் இவர்கள் யாவரும் ஒன்று கூடி இருக்கினும் கேந்திரம் கோணம் இவ்விராசிகளிலிருந்து ஒருவர்க்கொருவர் நோக்கினும் அந்த ஜாதகன் நராதிபதியாய் யானை பசு முதலியவைகளை அரசாக்ஷி செய்யத்தக்க ராஜயோகம் உண்டு.

12-ம் இடமான மோக்ஷஸ்தானத்தில் நற்கோட்கள் பல கூட்டங் கூடியும் மற்றைய ராசிகளில் ஒவ்வொரு கிரகங்களும் அல்லது கொடியவரும் சுபருமாக இரண்டு கிரகங்கள் கூடி இருக்க பிரசித்திப்பெற்ற செல்வமுண்டாவதோடு மெத்தை மேடைகளும் யானைக் கூட்டங்களுமுண்டாகும்.

ஜெனன ராசிக்கு எந்த ராசியாகினும் இராசி ஒன்றுக்கு இரண்டிரண்டு கிரகங்கள்கூடி இருக்கில் அந்தஜாதகனுக்கு

மேலான யோகமே உண்டு. மேற்கூறியபடி சந்திரனிருந்த ராசிக்கு 10-ம் ராசியிலிருப்பாராகில் அந்த ஜாதகன் இப் பூமிக்கே ஓர் மன்னனாகி புகழ்ச்சி பெற்றிருப்பானென்றுங் கூறுவாயாக.

ஏதேனுமொரு ராசியில் ஐந்தி கிரகங்கள் கூட்டங்கூடி யிருக்க மற்ற கிரகங்கள் மேற் சொன்ன கிரகங்களுக்கு இரண்டாம் ராசிக்கிரண்டாம் ராசிகளாக வரிசைப் பெற ஒவ்வொரு கிரகங்களர்த்திருக்கினும் அல்லது மும்மூன்று ராகிகளமர்ந்திருக்கினும் அந்த ஜாதகனுக்குப் பிரசண்ட யோகமுண்டாவதோடு இப்பூமிக்கு மிக்க கிருஷ்டமுடைய வனாய் அரசாக்ஷிசெய்துக்கொண்டு மிருப்பான்.

கால் சுபகிரகங்கள் ஐந்து ஓர் ராசியில் கூடி இருப்பார் களாகில் அவர்களுக்கே தொரு பகையும் கிடையாது 5, 6, குடையோராகிலும் பகையின்றி அமிர்த்தற்திற் கொப்பாகிய நற்பலனையே விளைவிப்பார். அந்த ஜாதகன் நல்ல ராஜ யோகமுடையவனாகவே இருப்பானென்றுங் கூறுக.

கேந்திரங்களான 1, 4, 7, 10-க்குடையோரும் 5, 9-க் குடையோரும் ஆக்ஷி முதலிய பலம் பெற்று இருப்பார்களே யாமனால் தன் தரித்திரம் யாவம் நீங்குவதோடு கிரேகத்தி லுள்ள பிணி முதலிய தோஷங்களையும் நீக்கி மண்டலாதி பதியாயும் கிரகதோஷமே கிடையாதென்றுங் கூறுவாக,

பிரசித்திபெற்ற எந்நாளும் நீங்கப்படாத யோகமுண் டாவதற்கும் நரயோகமும் யானை குதிரை முதலிய யோக மும் மேன்மேலும் உண்டாவதற்கு எவ்வித கிரகமிருக்க வேண்டுமெனின் கேந்திரம் திரிகோணம் இவ்விராசிகளில் கூட்டங்கூடிய கிரகங்களிருக்குமாகில் சிரேஷ்டமுடையவ னாய், சிறப்புப் பெற்ற மேன்பாடுடையவனால் இப்பூமி எங்கும் அரசாளத்தக்க சம்பத்துடன் வாழ்ந்தவனாயுமிருப் பான்.

ஜெனன ராசிக்கு ஐந்தாம் ராசியாதிபதி சுபகோட்களு டன் கூடி குரு நின்ற 11-ம் ராசியிலிருக்க ஷ குரு நின்ற ராசிக்கு 12-ம் ராசியாதிபதி ஜெனன லக்கினத்திற்கு நான் காம் ராசியிலிருக்க குருவோடு சூரியனும் கூடியிருக்க அந்த

ஜாதகனுக்கு ராஜயோக முண்டாகும் அன்றியும் போது மான செல்வமும் எந்நாளும் நீங்காத சம்பத்துடையவனா யுமிருப்பான்

வேதத்திற்காதாரமாகிய அரசு குரு பகவான் என்னும் சுக்கிரன் சொன்ன வாக்கியமானது ஒரு நாளும் பொய்க் காது இதில் எவ்விதமேனும் சந்தேகமில்லை சாஸ்திரத்தி லேயே ஆராய்ச்சி மையுடைய மேதாவிகளால் அங்கீகரிக் கப்பட்டு சொன்ன நூலாகையால் இதிற்சொல்லியபடி கிரக மிருக்குமாயின் அனேக காலம் சுகத்தோடு ஜிவித்திருப்பார் கள் என கூறுவாயாக.

ஒவ்வொரு ஜாதகர்களுக்கு நற்பலனைக் கொடுக்கும் கிரக மெதுவனில் குரு சந்திரனிருந்த வீட்டுக்குடையோன் ஜெனனலக்கினாதிபதி இராகு விருந்த வீட்டுக்குடையோன் ஒன்பதாம் வீட்டுக்குடையவர்களாகிய இவர்களே நல்ல சவுக்கியத்தைக் கொடுப்பவர்கள். இவர்களை விடவேரை யோகத்தைத் தருவோரில்லை.

## தீர்க்காயுள் கண்டம்

## (மற்றுமொருவிதம்)

சனி இருந்த வீட்டிற்குடையோன் சுபகிரகங்களுடன் மறவிட ஸ்தானமின்றி வேறு ஸ்தானங்களிருந்த ஆயுள் ஸ்தானாபதியாகிய 8-ம் வீட்டதிபதி நட்பு பெற்றிருக்க அழகுடைய சூரியனும் சனியும் அவர்களுக்கு முன் வீட் டோரும் பின் வீட்டோரும் உறவு ஷேத்திரம் பெற்றிருக்க அந்த ஜாதகனுக்கு வயது நூறு என்றுரைக்கலாமும்.

அஷ்டம ஸ்தானமான ஆயுள் ஸ்தானத்தில் பாவக் கிரகங்களன்றி நற்கோட்கள் சேர்ந்திருக்க துஷ்டதனத்தை யுடைய சனி நட்பு ஸ்தானம் பெற்றிக்க இரண்டாம் வீட் டிற்குடையவன் சனியிருந்த வீட்டிற்குடையவன் க்ஷேத்திரத் திலும் அவன் நான்காம் ராசியில் சமம் பெற்றிருக்க அந்த ஜாதகனுக்கு வயது நூறு என்றும் கணித வல்லோர் கூறுவர்.

சனி நின்ற ராசிக்கு வலது இடங்களிலிருந்தும் ஆறாம் ராசியில் பூரண நற்கோட்களிருக்க 8-ம் வீட்டிற்குடைய

வன் ஆக்ஷி அல்லது நட்பாய் பலம் பெற்றிருக்க நற்கோ
ளெனப் பெயர் பெற்ற குரு ஜெனன ராசிக்கு நான்காம்
ராசியிலிருக்க அந்த ஜாதகனுக்குப் பரமன் கொடுத்தவயது
நூறு எனவும் அதற்கு குறையாது ஜிவித்திருப்பானென்றும்
கூறுவாயாக.

அஷ்டம ஸ்தானமாகிய ஆயுள் ஸ்தானத்திற்கு 8. 12ம்
இடங்களில் சுக்கிரன் குரு சந்திரன் இவர்களிருக்க சனி
நின்ற வீட்டுக்குடையோன் சமம் பெற்றிருக்க அவனுக்கு
நான்காம் ராகியில் குரு அஷ்டமாதிபதியும் கூடியிருக்க
அவனுக்கு நூறு வயதென்று கூறுவாயாக

6, 8, 12ம் ராசிக்குடையவர்கள் ஜெனன ராசிக்குநான்
காம் ராசியில் சேர்ந்திருக்க நான்காம் ராசிக்கு 6, 8, 12க்கு
டைய கோட்கள் நற்கோட்களுடன் சகிதம்பெற்றிருக்க6-ம்
ராசியில் சனி இருக்க அவனை பலம் பெற்ற கேட்களாவது
நற்கோட்களாவது நோக்க அவன் 52 வயது வரையில்
ஜீவித்திருப்பானென்று கூறுவாயாக.

சனி நின்ற ராசிக்கு 8, 12-ம் ராசிகளில் சுக்கிரன்புதன்
இவர்களிருக்க ஜெனன லக்கினாதிபதி நின்ற ராசிக்குநான்
காம் ராசியில் அஷ்டம் ஸ்தானாதிபதியும் சந்திரனும்
சேர்ந்திருக்க அந்த ஜாதகனுக்கு வயது நூறு வரையில்
ஜிவித்திருப்பானெனறு கூறுவர்.

எட்டாம் ராசியிலாவது எட்டாம் வீட்டிற்குடையோனா
வது ஆக்ஷி உச்சம் நட்பு முதலியவைகள்பெற்றிருக்கஆயுள்
ஸ்தானாதிபதியாகிய சனி ஆக்ஷி உச்சம் நட்பு முதலியவை
கள் பெற்றிருக்க மேற்சொன்ன கிரகங்களை நற்கோட்கள்
பார்க்க சனியோடு சூரியன் சகிதம் பெறாதிருக்க அந்த
ஜாதகனுக்கு வயது நூறு என்றும் கூறுவர்.

ஜெனன லக்கினத்திற்கு எட்டாம் வீட்டோன் சுபக்கிர
கங்களின் ஆக்ஷி ஸ்தானங்தளிழிக்க மேற்சொன்ன கிரகங்
களை சுபகிரகங்களால் பார்க்கப்படும் பாவகிரகங்களால்
பார்க்கப்படாமலுமிருக்க ஜெனன ராசியில் நற்கோட்க
ளெனப் பெயர் வாய்ந்த சுக்கிரனிருக்க அந்த ஜாதகன்
நூறு வயது வரையில் ஜீவித்திருப்பான்.

அஷ்டம ஸ்தானாதிபதி தனஸ்தானமான இரண்டாம் ராசியிலிருக்க ஜெனன ராசியில் ஏழாம் வீட்டாதிபதி சேர ஜெனன லக்கினாதிபதி 3 அல்லது 10ம் ராசியிலிருக்க அவனை பாவகிரகங்கள் பாராதிருக்க 10 ம் ராசியில் நற் கோளாகிய குருவிருக்க அந்த ஜாதகனுக்கு வயது நூறு என்றுங் கூறுவர்.

ஆறாம் வீட்டாதிபதியும் எட்டாம் வீட்டாதிபதியும் விரய ஸ்தானமாகிய 12-ம் ராசியிலிருக்க அந்த ஸ்தானத் திற்கு 6, 8. 11-ம் ராசியிலிருக்க அந்த ஸ்தானத்திற்கு எட் டாம் ராசியிலிருக்க ஜெனன லக்கினம் 8 ம் இடம் இந்த ராசி குரு வீடாகவும் அந்த ராசியில் சுக்கிரனிருக்க அந்த ஜாதகன் 100 வயது வரையில் ஜீவித்திருப்பானென்று சொல்வாயாக.

சந்திரன் எவ்விதத்திலேனும் பெருமை பெற்று சுக்கிர னின்ற ராசிக்கு ஏழாம் ராசியிலிருக்க நான்காம் ராசியில் சனியும் சுக்கிரன் குரு இவர்களிருக்க மேற்சொல்லியர்களை சூரியன், குஜன் இராகு கேது இவர்கள் நோக்கா திருப்ப ரேல் அந்த ஜாதகனை எமன் அடிக்கடி அழைத்தாலும் 100 வயது வரையில் ஜீவித்திருப்பான்.

ஜெனன லக்கினத்தில் சுக்கிரனிருக்க அவனைப் பகை கிரகங்கள் பாராதிருக்க சந்திரனின்ற ராசியில் நற்கோட் கள் தவிர மற்றும் பாவகிரகங்களில்லாமலும் அஷ்டமஸ்தா னத்தில் சுபகிரகங்களும் சந்திரன் பெருமை பெற்றுமிருப்ப அந்த ஜாதகன் எவ்விதமும் ஆயுள் பின்னமின்றி 100 வய தோடிருப்பான்.

ஜெனன லக்கினத்தில் நட்பு பெற்றிருக்க அல்லது ஆக்ஷி உச்சம் பெற்றிருக்க சந்திரனும் ஆக்ஷி உச்சம் நட்பு பெற்றுமிருக்கவும் மேற்சொன்னவர்களை போலகிரகங்கள் பாராது சுபகேட்களால் பார்க்கப்பட்டிருக்கஅந்தஜாதகன் ஏதொருபின்னமின்றி 100 வயதோடு ஜீவித்திருப்பான்.

சூரியனும் சூரியர் நேர்நோக்கில் பார்க்கும் ஸ்தானாதி பதியும் நற்கோட்களாய் கோணம் பெற்றிருக்க ஜெனன ராசிக்கு 1, 4, 7, 10-ம் வீட்டிற்குடையோரும் பெற்றிருக்க 7-ந் வீட்டதிபதியும் சரராசிகளில் நட்பு பெற்றிருக்க 7-ம் பாசியில் குருவும், சந்திரன் நட்பு அல்லது உச்சம் பெற்றி

ருக்க அந்த ஜாதகன் சூரியனை கண்டவாறு தோஷம் யாவும் நீங்கி .00 வயது வரையில் ஜீவித்திருப்பான்.

ஜெனனலக்கினாதிபதியும் சந்திரனின்ற ராசியாதிபதியும் அஷ்டமாதிபதி சனி இவர்கள் ஸ்தானங்களின்ற ஓர் ராசியிலிருக்க சுக்கிரன் புதன் குரு இவர்கள் ஒன்று சேர அந்த ஜாதகன் அனேக நாள் ஆயுளையுடையவனாய் இப்பூமியில் வாழ்ந்திருப்பான்.

சனியோடு கொடிய 'கோட்கள் சகிதம் பெற்று ஆறு அல்லது எட்டாமிராசியிலிருக்க எட்டாம் வீட்டதிபதி ஆக்ஷி அல்லது நட்பு பெற்று சுபகிரகங்களால் பார்க்கப் பட்டிருக்க சுக்கிரன் குரு சந்திரன் இவர்கள் சேர்ந்து ஓர் ராசியிலிருக்க அந்த ஜாதகன் சக்கிரவர்த்தியாகி 100 வயது வரையில் ஜீவித்திருப்பான்.

உற்பத்தி என்னும் 6-ம் வீட்டதிபதி ஜெனன லக்கினாதிபதிக்கு நட்பாய் நற்கோட்களின் க்ஷேத்திரங்களிலிருந்து சூரியானால் பார்க்தப்படாது இராகு கேது சனி இவர்கள் கோணராசிகளிலிருக்க அந்த ஜாதகனுக்கு வயது 100க்குக் குறையாதென்று சொல்லுவாயாக.

சந்திரன் எந்த ராசியிலிருந்தானோ அந்த ராசிக்கு நான் காமிராசியில் குரு சுக்கிரன் புதன் இவர்களிருக்க அல்லது ஜெனன லக்கினாதிபதி நின்ற ராசிக்கு 10-ம் ராசியிலிருக்க அல்லது நோக்க அஷ்டம ஸ்தானாதிபதியும் சூரியன் சனி குஜன் இவர்களும் சந்திரனின்ற வீட்டிற் குடையோனும் கோணராசிகளிலிருந்தால் அந்த ஜாதகனுக்கு வயது நூறு என்றுரைக்கலாகும்.

## பிரதியோக காண்டம்

ஏழாம் இராசியதிபதி 4, 10-க்குடையவனுடன் கூடி ஒன்பதாம் ஸ்தானத்திலேனும் ஒன்பதாம் வீட்டிற்குடையவனோடாவது கூடியிருக்க ஐந்தாம் வீட்டதிபதி அஸ்தமயம் பெறாமல் ஜெனன லக்கினத்திலிருக்க அந்த ஜாதகனுக்கு ராஜயோகம் சித்திக்கும்.

ஜெனன லக்கினத்திலாவது எட்டாம் இடத்திலாவது ஏழாம் வீட்டிலாவது மேற்சொன்ன ராஜயோகம் சித்திக்கும் சமுத்திரங்களால் சூழ்ந்த தீவுகளையும், தேசங்களையும்

ஆழிதறித்தாள் வாழ்வானென்று இப்பூமியி னுதிர்த்தோர்க் குறைப்பாயாக.

ஜெனன லக்கினத்திற்கு நான்காமிடத்தோனும் ஐந்தா மிடத்தோனும் கூடி ஏழாம் ராசியிலிருக்க எல்லாமிடத்திற் ஜெனன லக்கினாதிபதி இருக்க ஏழாமிடத்தோன் ஒன்ப தாம் ராசியிலிருக்க 9-ம் வீட்டதிபதி சகிதம் பெற்றிருக்க ஜீவன ஸ்தானாதிபதி லாபஸ்தானம் பெற்றிருக்க அந்த ஜாதகனுக்கு இராஜயோகம் முண்டென்றும் கூறுவாயாக.

சந்திரனின்ற வீட்டிற்குடையோனும் குருவும் ஓர் ராசியி லிருக்க அவனோடு சுக்கிரனும் சகிதம் பெற அஷ்டம ஸ்தானாதிபதி ஆக்ஷி அல்லது நட்பு பெற்றிருக்க ஜெனன லக்கினாதிபதி குரு நின்ற ராசிக்கு ஏழாமிராசியிலிருக்க அல்லது குருவால் பார்க்கப்பட்ட பெண்களில் சிறப்பு பொருந்தியவனே அந்த ஜாதகனுக்கு இராஜயோக முண் டென்க.

உடலாதிபதியும் உயிராதிபதியும் நற்கோட்களுடன் சகிதம் பெற்றிருக்க சூரியன் சனி கேது இவர்கள் ஆறாம் ராசியிலிருக்க அந்த ஜாதகன் இப்பூமி எங்கும் பிரக்யாதி வாய்ந்தவனாகிய மிக்க சிரேஷ்டமுடையவனாய் சந் திரனை சிரசிலணிந்த கயிலாசபதியைப் போன்று சுகத் தோடு வாழ்ந்திருப்பான்.

ராகு கேதுக்களிலிருந்த வீட்டிற்குடையோர்கள் விரய ஸ்தானமாகிய 12-ம் வீட்டிலன்றியும் 10-ம் ராசியில் குஜன் சனி சூரியனிவர்களில்லாமலும் ஜெனன லக்கினாதிபதி யோடு சுபக்கிரகங்களெனப் பெயர் பெற்ற சுக்கிரன் குரு சந்திரன் இவர்கள் சேர்ந்திருக்கில் நல்ல மேலான யோக மென்றுங் கூறுவர்.

ஜெனன ராசி முதல் பாக்கிய ஸ்தானமாகிய 9-ம் வீட் டிற்குள் நான்கு அல்லது 5 கிரகங்கள் அணியாய் அமர்ந் திருப்பாராகில் அந்த ஜாதகன் இப்பூமி எங்கினும் நிலைவுப் பெற்று அரசாள்வானென்றும் மன்மத பாணங்களை வீசும் சக்தி வாய்ந்தவனே அப்பூமியிள்ளோர்க்குப் கூறுவாயாக.

ஜெனன லக்கினத்திற்கு 8-ம் ராசியிலும் 10,11-ம் ராசி யிலும் சந்திரன் சுக்கிரன் புதன் இவர்களிருக்க அவர்க ளோடு இராகு சகிதம் பெற சூரியன் சேராதிருக்க உதய

லக்னாதிபதி குருவாகவும் குரு ஆஷி பெற்றிருப்பாராகில் அந்த ஜாதகன் மிக்க பெருமையும் பிரயாதியும் வாய்ந்திருப்பதோடு நெடுநாள் அரசாண்டுக்கொண்டுமிருப்பான்.

ஜெனன லக்கினத்திற்கு 1, 4, 7, 10-க் குடையோர் ஆக்ஷி அல்லது உச்சம் பெற்றிருக்க சுக்கிரனும் ஒன்பதாம் வீட்டிற்குடையோனும் கூடி இருக்க அவனோடு பகை கிரகங்கள் சேராதிருக்க சந்திரன் ஜெனன ராசியிலேயே நிற்க அவனுக்கு அரசாளத்தக்க ராஜயோக முண்டென்று கூறுவாயாக.

ஜெனன ராசிக்குப் பத்தாம் முதல் ராசி 10-ம் வீடுவரையில் 5 கிரகங்களிருக்க ஜெனன ராசியில் நான்கு கிரகங்களிருக்க அந்த ஜாதகன்பலத்தைப் படைத்த சிங்கத்தைப் போல் அரசாள்வானென்று இப்பூமியிலுள்ளோர்க்குக் கூறுவாயாக.

ஜெனன லக்கினத்திற்கு ஏழாம் ராசி முதல் ஏழு வீடு வரையில் 5 கிரகங்களிருக்க ஜாதகனுக்கு ராஜயோகம் சித்திக்கு மென்பார் தாழ்ச்சி பெற்றிருந்தாலும் மேற் சொன்ன ராஜயோகமே உண்டாவதோடு எந்நாளும் இகழ்ச்சி யடையாது அரசாண்டு கொண்டுமிருப்பான்.

ஜெனன லக்கின முதல் இரண்டு வீட்டிற்குள் 3 கிரகங்கள் சேர்ந்திருக்க அல்லது இராகு கேதுகளுடன் சேர்ந்து நான்குகிரகமாய் ஜென்ன லக்கினத்திலிருக்க அந்த ஜாதகனுக்கு ஒளி வீசும் இப்பூவுலகெங்கும், யோகத்திற்கு தாழ்வில்லாதவனாய் ஸ்ரீசுகத்தில் மீறியவனாய் சாமர்த்தியத்தோடு அரசாண்டு கொண்டிருப்பான்.

உதயாதிபதியும் இரண்டாம் விட்டதிபதியும் சேர்ந்து நக்ஷத்திரமாகிய 11ம் இடம் சேர சூரியனும் குஜனும் நின்ற ராசிக்கும் பன்னிரண்டாம் ராசியில் சனி நிற்க குரு நின்ற ராசிக்குடையோனும் சந்திரனும் சேர்ந்த சந்திரனிருக்கும் அங்கிசையிலிருக்க சந்திரனின்ற வீட்டிற்குடையோன் ஜெனன ராசியிலிருந்தாலும் ராஜயோக முண்டென்று கூறுவர்

ஜெனன லக்கினத்திற்கு 5-ம் ராசி முதல் 5 ராசி வரையில் (சந்திரன்) புதன், குரு, சுக்கிரன் ஆகிய நான்கு கிர

கங்களிருக்க மற்றய கிரகங்கள் 11-ம் மிடமென்னும் லாப ஸ்தானம் பெற்றிருக்க அந்த ஜாதகன் மிக்க செல்வத்தோடு சிங்காதனத்தில் மீதிருந்து மேன்மை பெற்ற அரசனாய் இப்பூமி எங்கும் ரக்ஷிப்பானென்று கூறுவாயாக.

சோதிட ஆசான் இரண்டாம் பாகம் முற்றிற்று.

கடவுள் துணை

ஜாதக கணிதாரம்பம்

என்னும்

# சோதிட ஆசான்

(சோதிடர் உதவியின்றி கற்கும் முறை)

மூன்றாம் பாகம்

---

நூலாசிரியர் :

மு. மார்க்கலிங்க சோதிடர் அவர்கள்

குமாரரும் சிஷ்யருமான

பால ஜோதிட கணித நூற்புலவர்

மா. தெய்வசிகாமணி சோதிடரவர்கள்

---

பதிப்பாளர் :

**சண்முகானந்த புக்டிபோ**

67, T, K. முதலி தெரு,

சூளை, சென்னை-600 112.

# ம லை ய ா ள

# மாந்திரீகபோதனம்

## இ தி ல்

சகல தேவதைகளின் வசியங்களும், பல வித மான இடையூறுகளின்றி பாரில் வாழ்வதற்கு கந்த வழிகளும் உடல் கட்டு மந்திரம் பேய் பிசாசுகளை ஓட்டும் மந்திரம் சகலதோஷ நிவா ரண மந்திரம், ஏவல் வைப்பு, பில்லி சூனியம் முதலியவைகளை நீக்குவதற்குண்டான மந்திரம் ராஜவசியம், ஜெனவசியம், ஸ்திரீ புருஷ வசியங் களும் பலவிதமான நோய்களைவிளக்குதற்குண் டான மர்மமான முறைகளும் விஷஜந்துக்களின் கடிவிஷமிறங்கும் மந்திரங்களும் அஞ்சன்மை கூட்டும் முறைகளும், மற்றும் அநுபவமான மாந் திரீக மார்க்கங்களும் சிரமத்தைப் பாராது மிக்க எளிய நடையில் பல மாந்திரீக நிபுணர்களின் மேற்பார்வையைக் கொண்டு பிழையறபரீக்ஷித்து மந்திரம் கற்றுக்கொள்ள மிக சுலபமான முறை யில் தெளிவுடன் அச்சிடப்பட்டுள்ளது,

இதில் அனேக பூஜா சக்கரங்களும் அடங்கியது.

இதன் விலை ரூ. 10

---

சண்முகானந்தா புக்டிபோ
67, T. K. முதலி தெருவு,
சூளை, சென்னை-600 112.

# முகவுரை

-()-(:)-(:)-

ஸ்ரீ சன்முகப்பெருமானது திருவருளால் உலகிற் பிறந்த ஆன்மகோடிகள் சதாதுக்கமதை நீக்கிச் சுகத்தைக் கோருவது சகஜமெனினும் மக்கட் பிறவியையுடைய நாம் சதா துக்கத்தையோ (அ சுகத்தையோ நம் ஆயுள் பரியந்தமனுபவித்ததாயில்லை. இவ்வாறான சுகதுக்கங்களை பிற்கால பலனை முன்னதாயறியவே ஜோதிட சாஸ்திரம் ஏற்பட்டுள்ளவாயினும் அதனைக் கிரந்தங்களாலும் மற்றும் பல விதங்களாலும் மறைக்கப்பட்டு எளிய நடையில் ஒருவருமறிந்து கொள்ளாவண்ணம் மிருந்ததை எனது நண்பர் கே. ஏ. மதுரை முதலியாரவர்கள் உதவியால் இதற்கு முன்னே புதிய இரண்டு பாகங்களிலுள்ள விஷயங்கள் போக மூன்றாம் பாகத்தில் திரேகாண பலன் அங்கிச பலன் திசை புத்தி பலன் முதலியவற்றை செவ்வனே எழுதி உலக பரோபகாரமாய்ச் சொற்ப விலைக்கு விற்கவும் ஏற்பாடு செய்துள்ளோம் ஆதலால் அனைவரும் இதனை வாங்கி வாசித்து ஆசி கூறுமாறு மிகவும் வணக்கத்துடன் கேட்டுக் கொள்ளும்.

தங்கள் அன்புள்ள,
ஏ. ஆர் எம். தெய்வசிகாமணி
பால சோதிட கணிதநூற் புலவர்.

மூன்றாம் பாகம்

# விஷய அட்டவணை

| நெ. | விஷயம் | பக்கம் |
|---|---|---|

## சோதிடர்கள் கவனிக்க வேண்டிய முறை

| நெ, | விஷயம் | பக்கம |
|---|---|---|

உ

கடவுள் துணை,

ஜாதக கணிதாரம்பம்

என்னும்

# சோதிட ஆசான்

(மூன்றாம் பாகம்)

---

## சோதிடர்கள் கவனிக்க வேண்டிய முறை

### கடவுள் துதி

நன்று நற்குழவி தோன்றும்

பொழுதி னுல்நன் னீராடிக்

கன்றொடு பசும் பொன் பூமி

கலை பல மறையோர் கீய்ந்து

சென்று மைந்தனை யெடுத்துத்

திருமுகங் கண்டு செவ்வேள்

ஒன்றிய ஜாதக்ங்க

டோலை லெழுதி வைப்பாம்

என்ற பெரியோர் வாக்கியப்படி குழந்தைப் பிறந்தவுடன் பிதா ஸ்நானம் செய்து ஏழைகளுக்கு பொன் முதலியவை

களை தானம் செய்து பணிவுடன் ஜாதகம் எழுதிக்கொள்ள வேண்டுமென புராணங்களில் கூறியுள்ளன.

ஜாதங்கணிப்போர் முதன் முதலாக அவர்கள் சொல்லும் மணி நிமிஷங்களால் (முதற்பாகத்தில்) கண்ட படி ஆண் பெண்ணறிந்து கொள்ள வேண்டுவது கடமை யாகும் பின்பு சூர்யோதய முதல் பிறந்த மணி நிமிஷம் வரையில் எத்தனை நாழிகை வினாடிகளாயினவென்று கணக்கிடுவது சிலாக்கியம் எப்படி யெனில்.

| | | | |
|---|---|---|---|
| 60 | வினாடி | 1 | நாழிகை |
| 60 | நாழிகை | 1 | நாள் |
| 7 | நாள் | 1 | வாரம் |
| ३0 | நாள் | 1 | மாதம் |
| 6 | மாதற் | 1 | அயனம் |
| 2 | அயனம் | 1 | வருஷம் |

உதாரணமாக இரவு மணி 5 க்குக் குழந்தை பிறந்த தென்றால் அப்போது நாழிசை 57 அரை ஆகும் இவ்வாறு நாழிகையினளவைக் கண்ட பிறகு குழந்தை ஜெனித்த மாத ராசி நாழியை அம்மாத தேதிகளெவ்வளவோ அத்தனை பேருக்குப் பங்கிட்டுக் குழந்தை பிறந்த தேதி வரையிலு மேற்படும் பங்கு வினாடிகளைக் கழித்து விட்டு மீதமேற் படும் நாழிகை வினாடியுடன் ஜெனன நாழிகை வரையில் எத்தனை ராசிகள் வருகின்றனவோ அதுவரையில் கீழ்க் கண்டவாறு கூட்டிக்காண்பது வேயாகும், அவை இலக் கினஸ்புட உதயாதி நாழிகையாகும் இவ்வாரே லக்கினம் நக்ஷத்திரம் முதலியவைகளையும் ஆராய்ந்தே தீரவேண் டும். ஏனெனில் குறித்த பலாபலன்களை கண்டிப்பாம் நிகழ்வதற்கு போதுமான சாதனங்களைக் காட்டும் முக்கிய வழியாகும்.

இதனை முன்சொன்ன 12 பாகங்களிலும்காண

லாம் திரிகோண நக்ஷந்திரங்கள் என்பது 6-க்கு

9-வது நக்ஷத்திரம் உதாரணம அஸ்வனிக்கு

9-மகம் மகத்திற்கு 9-மூலம்

இவ்வாறே மற்றய நக்ஷத்திரங்களுக்கும் காண்பது முக்கியமாகும் லக்கினம் என்பது 12 வகையென முன்பே கூறியுள்ளேன் மேற்சொன்ன 12 ராசிகளும் வேத புருஷனுடைய அங்கங்களாகும் ஆதலாலேயே.

பார்புகழ் லக்கினம் சித்தியோன் ரெண்டுக்குப்
பகர்தீஷை பரிஷையாகும்

பனிரெண்டு தன்னயம் தனம் புதயலெடுக்கலாம்
பாரமூன்று விருது சண்டை

சீர்நாலு யாத்திரை வித்தையாம் அஞ்சளவு
செய்யலாம் ஊர் பயணமாம்

செறியாரு விரைகோடி ஏழு கலியாணமும்
செய்யலாம் சுத்தமாகும்

ஆர்மேவு அஷரம் பூனூல் தலைமயிர்
அன்பாக ஒன்ப தென்நே

ஐரெண்டு அன்னம் புசிக்க குழந்தை விளையாட
அழகாய் மகிழ்ந்தருள் செய

கார்மேவி பட்டாபிஷேகம் தக்கமனை கோல
ஆறிரண்டும் சம்பன்ன ராம்

தக்குமுக் கில்லாத லக்கிண சுத்தியை
தயவுட னிரிந்து பாரே.

என்ற மேற்சொன்ன 12 ராசிகளான கால புருஷ அங்க மென்னும் மேஷம், ரிஷபம், மிதுனம், கடகம், சிங்கம், கன்னி, துலாம், விருச்சிகம், தனுசு, மகரம், கும்பம் மீனமென்னும் ராசிகளே லக்கினம், தனம், சகோதரம், அன்னை, அம்மான், தைரியம், களத்திரம், ஆயுள், தந்தை, கர்மம், லாபம், விரயமென முறையே மாரி மாரி வருமாகையாலும் இவையாவும் உதயாதி யணியைக் கொண்டதாகையாலும் சோதிடர்கள் உதயாதி மணியை நன்கு ஆராய்ந்து தெரிவதோடு, கிரக அடவியையும் கீழ்க் கண்ட மகஜ்யா புஜஜயா கோடி எண்களால் ஸ்புடம் செய்து ஜாதகம் சொல்வதோடு வருங்கால பலனை தோராயமாயுரையர்து பண்டைகால சாத்திர முறைப்படி கூறவேண்டுமென்பது உங்கள் மனதிலிருக்க வற்புறுத்து கிறேன்.

## நோக்கு வலிது.

| | | |
|---|---|---|
| சூரியன்<br>புதன்<br>சந்திரன்<br>சுக்கிரன் | முழு நோக்கில் வலியர் | செவ்வாய் முக்கால் நோக்கில் வலியன்<br>சனி அரைக்கால் நோக்கில் வலியன் |

இராகு, குரு } அரைக்கால் நோக்கில் ,,

## இராசி நோக்கு

மேஷமும் விருச்சிகமும் எதிர்நோக்கு
துலாமும் ,,
சிங்கம் மகரம் ,,
ரிடபம் கடகம் முழு பார்வை

## கிரக பார்வை

| | | |
|---|---|---|
| சூரியன்<br>சந்திரன்<br>சுக்கிரன்<br>புதன்<br>இராகு<br>கேது | ஏழாம் ராசி<br>பார்வை | சனிக்கு 3,7,10-பார்வை<br>குஜன் 4,7,8, ,,<br>குரு 5,7,9, ,, |

| | |
|---|---|
| சூரியன், | குஜன்--நேர்பார்வை |
| புதன் | சுக்கிரன்--பக்கபார்வை |
| குரு, | சந்திரன்--சமபார்வை |
| சனி | ராகு, கேது-அதோ முகபார்வை |

## அஸ்தமய விபரம்

| | | |
|---|---|---|
| சூரியனுக்கு | 17 | பாகையிலிருந்தால் அஸ்தமயம் |
| புதன் | 13 | ,, |
| குரு | 11 | ,, |
| சுக்கிரன் | 9 | ,, |
| சனி | 15 | ,, |

## வார சூன்னியம்

| | |
|---|---|
| ஞாயிறு | அனு, கேட் மகம் விசாகம், பரணி, மிருக |
| திங்கள் | பூரா. அனு மக பூரட், கார், விசா, |
| செவ்வாய் | அவி, திரு, சதை கேட் திரு, |
| புதன் | மூலம், திரு, கார்த், அவி, அஸ், பர, |
| வியாழன் | மிரு, பூரா, ரேவ. புனர், பூரம், |
| வெள்ளி | பூசம், விசா, ரோக, அவி, மிரு அத், அனு |
| சனி | அத், பூசம், புநர், உத், ரேவ, |

இவை சுப கன்மங்களுக்காகாத நாள்

நிஷேகம்-ஸ்ரீபூத்த நாள் முதல் 3 நாள் விலக்கப்பட்டு மற்ற நாட்களில் நிஷேகம் செய்வது உத்தமம்.

ஒற்றை நாளில் செய்யில் ஆண் எனவும் இரட்டை நாளாகில் பெண் எனவும் கூறவும்.

நக்ஷத்திர உத்தமமும் அதமமும்:-நிஷேகத்திற்கு சோதி மூலம் அனுஷம் ரோகிணி திருவோணம் ரேவதி உத்திரம் உத்திராடம் இவை உத்தமம்.

அவிட்டம் சித்திரை புனர்பூசம் பூசம் மிருக்சிரம் அஸ்வனி இவை மத்திபம்.

திதி உத்திமமும் மத்திபமும் :-பிரதமை துவிதியை சதுர்த்தி பஞ்சமி சஷ்டி சப்தமி நவமி முதலியவை உத்தமம்.

அஷ்டமதி நத்தை உவா இவை ஆகாவாம்,

பும்சவனம்:-மூன்றாம் மாதம் வளர்பிறை காலங்களில் வெள்ளி திங்கள் முதலியவாரங்களில் திருவோணம் பூசம், இந்நாட்களை நீக்கி 8-ம் இடம் சுத்தமுள்ள ராசியில் செய்ய உத்தமம்.

மற்ற காலங்களில் செய்யில் அதமமெனவும் தீராத பிணியை காட்டி துன்பமுண்டாகு மென்றும் சாஸ்திரங்கள் கூறும்.

சீமந்தம்:-எட்டாமாதம் வளர்பிறை வரும் பொழுதில் சப்தமி துவாதசி கூடிய நாளில் திருவோணம் சுவாதி இந்த நாட்களில் குறித்த லக்கினத்தை சுபகிரகம் நோக்குண்டாகச் செய்ய உத்தமம்

பிராமணருக்கு 3-ம் மாதமும் க்ஷத்திரிய வைசிய சூத்திராகில் 6, 8-ம் மாதம் நீக்கி அஷ்டமி சுத்தியுள்ள தினம் செய்ய நன்மை.

சூதலனை புகல்:-அஸ்தம் மிருகசிரம் அஸ்வனி திருவோணம் சித்திரை உத்திரம் உத்திராடம் உத்திரட்டாதி அனுஷம் புனர்பூசம் சுவாதி இந்நாட்களில் சனி வெள்ளி புதன் திங்கள் இவை நல்லது.

அஷ்டம் சுத்தியுள்ள தினத்தில் சுபகிரகம் நோக்குண்டாகச் செய்யின் உத்தமம்.

பிள்ளைப்பிறப்பு: குழவி பிறந்தவுடன் அவன் பிதா ஸ்நானம் செய்து பின்பு ஜாதகம் கணிப்பது.

குழவி பிறந்த 12-நாள் வரை ஜாதகம் கணிக்கலாகாதென்பது ஈஸ்திரமொழி.

நாமகரணம்:-திருவோணம் ரேவதி மிருகசிரம் ரோகணி மூலம் அத்தம், சதயம், அவிட்டம், அனுஷம், உத்திரம் உத்ராடம், உத்ரட்டாதி சோதி புனர்பூசம் நவமி உவாவொழிய மற்றய காலங்களிற் செய்ய நன்மை,

பிராமணருக்கு 12-ம் நாளும் மற்றயோருக்கு 30-ஆம் நாளும் செய்ய உத்தமம் ஸ்திரராசிகளில் உச்சி காலத்திற்கு முன் அஷ்டம் சுத்தியாய் செய்ய நன்மையாம்.

உவநிஷ்கரணம்:-குழந்தை பிறந்த மூன்றாம் மாதம் உத்தம நக்ஷத்திரத்தில் குழவிக்கு சூரியனைக் காட்டுவதும் நான்காமாதம் சந்திரனைக்காட்டி இரண்டாவது பசுவை காட்டி உவநிஷ்கரணம் செய்வதாம்.

இவை பிராமணர் பிராமணரல்லாதார் யாவருக்கும் பொதுவானதாகும்.

காதுகுத்தல்:-குழந்தை ஜெனித்த 7-9 ஆம் மாதம் 12 19 ஆம் நாளில் திருவோணம், மிருகசிரம், புனர்பூசம் பூசம், அவிட்டம், உத்திரம், உத்திராடம், உத்திரட்டாதி, அஸ்தம். ரேவதி, சித்திரை திருவாதிரை இவை உத்தமம்.

துவாதசி, திரயோதசி, துதிகை திருதிகை பஞ்சமிசஷ்டி சத்தமி இவை கூடிய நாளில் சுபவாரமும் சுப கோளுமாக வும் செய்யில் நன்மையாகும்.

வித்தியாரம்பம்:-5-ம் வயதில் உத்தராயணம் ஒற்றை மாதத்தில் அஸ்வனி, அனுஷம், புனர்பூசம், திருவாதிரை, திருவோணம், அவிட்டம் சதயம், அத்தம் சித்திரை சோதி உத்திரம் ரோகிணி இவை கூடிய நாளில் செய்ய உத்தமம்.

1-3-11-ஆமிடம் சுத்தியுள்ள தினத்தில் செய்ய உத்தமம்

முடிசூட்டல்:-மிருகசிரம், ரோகணி, அஸ்வனி, உத்தி ரம் உத்திராடம், உத்திரட்டாதி, சோதி, சித்திரை, புனர் பூசம், ரேவதி, அனுஷம் திருவோணம் அவிட்டம் இவை நன்றெனவும் மற்றவை தீதெனவுங் கொள்க.

இவைகள் நக்ஷத்திர ஒரைகளிலும் சுபவாரங்கள் தவிர கன்னி துலாம் தவிர மற்றய ராசிகள் நன்றெனக் கொள்க.

## தீர்க்காயுள் விளக்கம்

அஷ்டமாதிபனிந்திருந்த வீட்டிற் கிருபுறமும் சுப கிரகங் களிருக்க சனி நின்ற ராசிக்கு நான்கா மிராசியில் குருசுக்கிர னிருக்க வளர்பிறைச் சந்திரன் சூரியனின்ற ராசிக்காறாமி ராசியிலிருக்க அந்த ஜாதகனுக்கு வயது தீர்க்கம்.

சனி நின்ற ராசிக்கு எட்டாம் ராசியில் புதனும் வளர் பிறைச் சந்திரனுக்கெட்டில் புதனும் சுக்கிரனுக்கு நாளில் குருவும் ஜெனன லக்கினாதிபதி க்ஷீணம் பெற்றிருப்பாரேயானாலும் தீர்க்க வயதாகும்.

ஜெனன லக்கினாதிபதி சந்திரனிருந்த லக்கினாதிபதி இவர்கள் பாபிகளினங்கிசம் பெறவும், ஜென்ம லக்கினாதிபதி (அ) சந்திர லாக்கினாதிபதி இவர்களிருந்த ராசிக்கு நான்கில் சூரியன் குஜனிவர்களிருக்க அந்த ஜாதகனுக்கு வயது தீர்க்கம்.

ஜென்ம லக்கினத்திற்கு கேந்திராதிபதிகள் 5-9 என்னுமிடங்களிலும் அவர்களுக் கேழாமிராசியில் சனி நிற்க இரண்டாமாதிபதி எட்டிலு மிருந்தாலும் தீர்க்க வயதேமாகும்.

## இன்னும் மற்று முள்ளவைகளையும் ஆராய்ந்து இதன் எட்டாம் பாவக விளக்கத்தால் நிலை கூறுக,

ஜென்ம லக்கினாதிபதி 8-1: ஆம் இராசிகளிலிருக்க அவனை கொடிய கிரகங்கள் கூடி நோக்கவும் ஜெனன லக்கினாதிபதி வற்கம் (அ) நீச்சம் அஸ்தமயம் முதலியவைகளால் பலமிழந்திருக்க, அந்த ஜாதகன் மிக்க தரித்திரமுடையவனாய் அற்ப ஆயுளோடிறந்து போவானெனக் கூறுவர்.

ஜெனன லக்கினாதிபதியாயினும் (அ)வேறு ஸ்தானங்களுக்குடைய கிரகங்களாயினும் பகை நீச்சம் அஸ்தமயம் வக்க்ரம் பெற்ற கோட்களிருக்குமேயானால் அவர்கள் எவ்விதமான பலனையும் தர சக்தியுள்ளவர்களல்ல, அதிலும் 8-12 என்பது கொடியதிலும் கொடிய க்ஷேத்திரமாகும், அப்படிப்பட்ட ஜாதகங்கள் பல விஷயங்களுக்கும் ஆயுள் விஷயங்களுக்கும் அற்பமேயாகும்.

## வாக்கு பலன்

வாக்கு ஸ்தானமான இரண்டாமிடத்திற்குரிய கிரகமும் சுப கிரகங்களும் கூடி இரண்டா மிராசியிலேயேயிருந்தாலும் (அ) இரண்டாம் வீட்டைப் பார்த்தாலும் அந்த ஜாதகனுக்குக் கல்வியும் செல்வ முண்டு இரண்டாம் வீட்டதிபதி 6 8 முதலிய இடங்களில் பகை நீச்சம் பெற்றிருக்கவும்

வாக்கு ஸ்தானாதிபதியும்கொடிய கிரகமாகவேயிருப்பானே யானால் அந்த ஜாதகன் வஞ்சனை பொய் முதலியவை களையுடையவனாகவே யிருப்பான்.

குறிப்பு;—வாக்கு ஸ்தானாதிபதிக்குறிய வித்தை யெது வோ அந்த வித்தையே அந்த ஜாதகனுக்குறியதாகும். வாக்கு ஸ்தானாதிபதி யிருக்குந் தன்மையைக் கொண்டே அத்னை நிலை கூறவேண்டும் வாக்குஸ்தானம் என்பது தனம் குடும்பம் க்ஷேத்திரம் மகுத்துவம் வாக்குயென பல பெயர்கள் பெரும் யாவரும் தெரிந்த விஷயம்

ஜெனன லக்கினாதிபதி ஜெனன லக்கினத்திற்கு 5-9-1 என்னுமிடகளிருக்கவும் அவனோடு சுபகிரங்கள் கூடியிருக்கவுமானால், அவன் பிதா தயிரியமுடைவானக வும் நற்குண முடையவனாகவும், கீர்த்தி பிரதா பங்களுள்ள வனாக இருப்பதோடு இந்த ஜாதகன் தன் தந்தையைவிட மிக்க சிறப்பு பெற்றவனாகவும் புத்திரபாககிமுடையவனாய் சிறப்பு பெற்று வாழ்ந்திருப்பானெனவுங் கூறுக.

ஜெனன லக்கினத்தால் பொதுவாய் எல்லா விபரங் களையுமறிய யேதுவாகும், பின்பு மற்றுமுள்ள விவரங்களா லேயே அதனை நிலை கூறுவது சிலாக்யமாகும்,

அன்றியும் உயிர் என்பது ஜெனன லக்கினமும் உடல் என்பது, சந்திரனிருந்த ராசியுமென சாஸ்திரங்கள் கூறியுள் ளன ஏனெனில் இவையிரண்டும் குறித்த பிறந்த காலத்தா லேற்டும்வதாலென்க

## பாவக்கோள் பலம்

ஜெனன லககினத்திற்குடைய கிரகமும், மூன்றாம் ராசிக்குடைய கிரகமும் ஐந்தாம் வீட்டிற்குடைய கிரகமும் குஜனுடன் சேர்ந்து அவர்களோடு மற்றும் கிரகங்கள் சேர்ந்து ஒருவர்க் கொருவர் நடப்பினராயும் பலம் பெற்று மிருப்பார்களேயாமானால், அந்த ஜாதகனும் மிக்க பராக் கிரமமுடையவனாய் பலம் பெற்றே யிருப்பான்.

ஒவ்வோர் கிரங்களுக்கும் சத்ருமித்ரு சமம் என்கிற கிரகங்களுள்ளன அவையாவன,

| | | |
|---|---|---|
| சூரியனுக்கு | குஜன், சந்திரன், குரு உரவு | |
| சந்திரனுக்கு | புதன், சூரியன் | ,, |
| செவ்வாய்க்கு | குரு, சூரியன், சந்திரன் | ,, |
| புதனுக்கு | சுக்கிரன், சூர்யன் | ,, |
| குருவுக்கு | சூர்யன், சந்திரன், குஜன் | ,, |
| சுக்கிரனுக்கு | சனி, புதன் | ,, |
| சனிக்கு | புதன், சுக்கிரன் | ,, |
| சூரியனுக்கு | சுக்கிரன், சனி பகைவர் | ,, |
| சந்திரனுக்கு | | ,, |
| செவ்வாய்க்கு | புதன் | பகைவன் |
| புதனுக்கு | சந்திரன், | ,, |
| குருவுக்கு | சுக்கிரன், புதன் | ,, |
| சுக்கிரனுக்கு | சூர்யன், சந்திரன் | ,, |
| சனிக்கு | சூர்யன், சந்திரன் | ,, |

## முதற் பாவகம்

தாதுமூல ஜீவனென்கிற மூன்றினால் ஜீவ லக்கினமென்கிற மிதுனம் கன்னி தனுசு மகரமென்கிற நான்கு ராசியிலுள்ள ஏதேனுமொரு ராசியில் ஜெனனமாகி அவ்வி ராசியில் கொடிய கோட்களிருக்கினும் நோக்கினும், அந்த ராசிக்குடையோரும் சேர்ந்து (அ) பார்த்திருப்பார்களேயாமானால் அந்த ஜாதகங்களுக்கு எவ்வித தோஷ மிருப்பினும் சூரியனைக் கண்ட பனிபோல் நீங்கிப்போகும், அன்றியும் இப்பூமியில் கீர்த்தி மிகுந்த மன்னவனாயும் தன் குலத்திலுள்ளோர் கெல்லாம் மேம்பட்டவனாய் வாழ்வானெனவும் சோதிட வல்லவர் கூறுவார்.

அனேக சோதிடர்கள் ஜென்ம லக்கினத்திற்கு 1,4,7 10-ல் சுக்கிரன் குரு இவர்களிருப்பார்களேயானால் எல்லாதோஷமும் பரிகாரமெனக் கூறியிருக்கின்றனர். இந் நூலோர் கூறிய ராசியானால், குருவுக்கும் புதனுக்கும் சொந்த வீடாகையால் எவ்வித தோஷமும் பரிகாரம் என்றனர்.

தோஷம் என்பது பல வகைப்படும்-அவையோகம் ஆயுள் வியாதி களத்திரம், புத்திரன், சகோதிரன் பிருதி

முதலிய தோஷங்களேயாகும் மேற்சொன்ன தோஷ பரிகாரம் என்பது எவ்வகை வற்கத்தாராயினும் அவரவர் கள் ஸ்தானங்களுக்குத்தக்கபடிபார்த்துக்கொள்வதேசிலாக் யமாகும். 'இதனைப் பின்வரும் பாவக விவரத்தாலரியலாம்.

## நிறஞ் சொல்லல்

ஒவ்வொருவருக்கும் நிறங்களைச் சொல்லவேண்டிய விவரமெப்படியெனில் ஜெனன லக்கினாதிபதியிருக்கும் அங்கிசாதிபதியாலும் சந்திர லக்கினாதிபதியிருக்கும் அங்கி சாதிபதியாலும் இவ்விருவரையும் பார்க்கும் கோட்களிருக் கும் அங்கிசாதிபதியாலும், அவரவர்கள் நிறங்களைச் சொல்லவேண்டுமென்பது சாஸ்திரக்கொள்கை.

## அங்கிஸமரியுந் தன்மை

| நக்ஷத்திரம் | பாதம் 1 | 2 | 3 | 4 |
|---|---|---|---|---|
| அஸ்வனி | மே | ரி | மி | க |
| பரணி | சி | க | வ | வி |
| கார்த்திகை | த | ம | கு | மீ |
| உரோகணி | மே | ரி | மி | க |
| மிருகசிரம் | சி | க | து | வி |
| திருவாதிரை | த | ம | கு | மி |
| புனர்பூசம் | மே | ரி | மி | க |
| பூசம் | சி | க | து | வி |
| ஆயில்யம் | த | ம | கு | மீ |
| மகம் | மே | ரி | மி | க |
| பூரம் | சி | க | து | வி |
| உத்திரம் | த | ம | கு | மீ |
| அஸ்தம் | மே | ரி | மி | க |
| சித்திரை | சி | க | து | வி |
| சுவாதி | த | ம | கு | மீ |
| விசாகம் | மே | ரி | மி | க |
| அனுஷம் | சி | க | து | வி |
| கேட்டை | த | ம | கு | மீ |
| மூலம் | மே | ரி | மி | க |
| பூராடம் | சி | க | து | மி |

| நக்ஷத்திரம் | பாதம் | | | |
|---|---|---|---|---|
| உத்திராடம் | த | ம | மு | மீ |
| திருவோணம் | மே | ரி | மி | க |
| அவிட்டம் | சி | க | து | வி |
| சதயம் | த | ம | கு | மீ |
| பூரட்டாதி | மே | ரி | மி | க |
| உத்ரட்டாதி | சி | க | து | வி |
| ரேவதி | த | ம | கு | மீ |

குறிப்பு:—மே—ரி—மி—க, என்பது மேஷம் ரிஷபம், மிதுனம், கடகம். என்பனவாகும் மேலே குறிப்பித்தஎண்கள் நக்ஷத்திர பாதங்களைக் குறித்ததாகும்.

## கிரக நிறம்

| | | |
|---|---|---|
| சந்திரன் | சூரியன் | புதன் பச்சை |
| சுக்கிரன் | வெள்ளை குஜன் | சிவப்புகுருமஞ்சள் |
| | கேது | சனி ராகு கருப்பு |

உதாரணம்:—ஜென்மலக்கினாதிபதி சந்திரனங்கிசமும் சந்திர லக்கினாதிபதி சந்திரனங்கிசமும் பெற்ற தாய் வைத்துக்கொள்வோம் சந்திரனுக்கு வெண்மை சனிக்குக் கருப்பு நிறமுமாகையால் சமநிறமெனக் கொள்வதே முறை.

இவ்வாறே மற்றுமுள்ள ஜாதங்கட்டுகும் கொள்வதே முறையாகும். அங்கிசங்களில் அந்தந்த வீட்டுக்குடையவர் களே அங்கிசா திபதியாவார்கள்.

ஜெனன லக்கினாதிபதி கேந்திரங்களிலாவது திரி கோணங்களிலாவது, அவையாவன 1, 4, 7, 10-கேந்திரம் 5-9 திரிகோணமென்னு மிடங்களிலிருந்து அவனோடு சுப கிரகங்களென பெயர் பெற்ற சந்திரன் புதன் சுக்கிரன் குரு முதலியோர் சசிதம் பெற்றும் ஜெனன லக்கினாதிபதியிருக் கும் ஓராதிபதி சனி குஜன் இராகு கேது முதலிய கொடிய கிரகங்களி லொருவனாய் பலம் பெற்றிருக்க அந்தஜாதகன் மிக்க கீர்த்திப் பிரதாபங்களுடையவனாய் நூறு வயது வரை யிலிருப்பாமெனக் கொள்க.

சுபர் அசுபர் என்பது மேற்சொல்லிய கிரகங்களேயாயி னும் ஒவ்வோர் லக்கினத்திற்கும் சுபன் அசுபன் மாரகன் யோகனெனவும் பிரிக்கப்பட்டிருக்கின்றன. அதன் விபரங் களை முதல் பாகத்தில் பார்க்கலாம். ஆயுள் விபரங்களை

கிரக அடவியைக் கொண்டு நிலை கூறவேண்டுவதாயினும் அஷ்டவர்க்கு கால சக்கரம் முதலியவைகளையும் ஆராய் வது கடமையாகும் எப்படியெனில் கால சக்கரங்களில்நிற்க

| | | |
|---|---|---|
| மேடம் சிங்கம் தனுசுக்கு | வயது | 100 |
| ரிடபம் கன்னி மகரத்திற்கு | ,, | 85 |
| மிதுனம் துலாம் கும்பத்திற்கு | ,, | 83 |
| கடகம் விருச்சிகம் மீனத்திற்கு | ,, | 86 |

எனவும் இவை வலவோட்டிட வோட்டென்னும் நக்ஷத்திர பாதங்களாலும் கதிகளாலுப் அதிகப்பட்டும் குறைந்துங் காணப்படுமாகையால் கிரக அடவியோடு மற்றுமுள்ள லக்ஷணங்களையுமாராய்ந்து பலன் கூறுதல் நலம்.

## சமகிரகங்கள்

| | | |
|---|---|---|
| சூரியனுக்கு | புதன் | சமனாகும் |
| சந்திரனுக்கு | சூஜன், குரு, சுக்ரன், சனி | ,, |
| குஜனுக்கு | சுக்ரன், சனி | ,, |
| புதனுக்கு | குரு சனி, குஜன் | ,, |
| குருவுக்கு | சனி | ,, |
| சுக்கிரனுக்கு | குஜன் குரு | ,, |
| சனிக்கு | குரு | ,, |

ஒன்பதாமிடத்தோனான பாக்கியாதிபதி ஜெனன லக்கினத்திலும், லக்கினாதிபதி பாக்கியத்திலிருக்கினும், நோக்கினும் இவ்வாறே சந்திரனிருந்த வீட்டிற்குடையோன் கடக ராசியிலுமிருக்க இவர்களை சுக்கிரன் குரு யிவர்கள் நோக்குவாரேயானால் அந்த ஜாதகனுக்கு பூரண ஆயுளுண்டாவதோடு செல்வம் அறிவு நல்ல கூட்டம் நற்குணம் முதலியவைகளும் அரசாளத்தக்க யோகமும், உண்டாகும் என்பதாகும்.

பாக்கியம் என்பது ஒன்பதா மிராசியை குறித்த க்ஷேத் திரமாகும் 9-ஆம் வீட்டதிபதியோடு ஜெனன லக்கினத்ததி பதி சந்திரன் இவர்களும் ஒருவர்க்கொருவர் மாரியிருப்பார் களேயானால் அவன் யோகங்களையோ ஆயுளையோ, உளவின்றி வர்ணிக்கலாம். இத்துடன் முழு சுபகிரகங்க ளான குரு சுக்கிரனும் பார்க்கவோ அல்லது சேர்த்தோ

யிருப்பார்களேயாமானால் அரசனுக்குச் சமமானவனென்றே கூறவேண்டும்.

பாக்கியமென்றால் அதிர்ஷ்டம் ஜெயம் தன் பூஸ்திதிறொக்கதனம் மகப்பேறு இவ்வகையைக் குறித்தயிடமாகையால் அஷ்டலக்ஷ்மியும் வாசம் செய்வாளெனக் கூறுவதற்கிடமுண்டு.

நான்கு வீட்டிற்குடையவனான மாதுருஸ்தானதிபதி தன் சுயக்ஷேத்திரத்திலேயே ஆக்ஷி பெற்றிருக்க அல்லது குற்றமில்லாத நான்கு இரண்டு ஒன்று இவ்வீட்டிற்குடையவரோடு சகிதம் பெற்றிருக்க அவனைப் பார்ப்பவர்கள் பாராமலிருக்கவுமானால் அந்த ஜாதகன் இப்பூமியில் மிக்க மேன்மையுடையவனாய் வாழ்வானெனவுங் கூறுவாயாக.

மாதுருஸ்நானம் என்பது சுகம் என்னும் சவுக்கியத்தையுங் குறித்த க்ஷேத்திரமாகையால் அப்பலனை ஜாதகனுக்குச் சொல்ல நேர்ந்தது.

நான்காம் வீடென்பதும் கேந்திரமாகையால் கேந்திராதி பகல் சுபகோட்களாக வருவது தீது, ஆதலால் கேந்திராதிபதிகள் சுபகோட்களாகியிருக்கின் அதற்குத்தக்கவாறு பலனுரைப்பது சிலாக்கியமாகும்.

ஜெனன லக்கினத்திற்கு விரயாதிபதியென்கிற 12-ஆம் வீட்டோன் உச்சம் ஆக்ஷி நட்பு பெற்று எந்த வீட்டிலிருந்தானோ' அந்த வீட்டிற்குப் பன்னிரண்டசாமி ராசியில் பலம் பெற்ற கிரகங்கள் சேர்ந்திருக்க. அந்த ஜாதகன் இப்பூமியில் மிக்க வீர பராக்கிரமமுடையவனாய் ராஜாக்களுக்குச் சமானமாய் வாழ்ந்திருப்பானெனக் கூறுக.

பன்னிரண்டாமிட மென்பது கொடிய க்ஷேத்திரமென முன்பே கூறியுள்ளேன் அவன் எவ்விதத்திலாயினும் பலம் பெற்றிருப்பானாயின், அத்தோஷம்பரிகாரம் அன்றியும் மேற்சொல்லியது ஜெனன லக்கினாதிபதிக்குப் பன்னிரண்டாம் ராசியதிபனைக் குறித்தாகும். இங்குலக்கினத்திற்கு விரயாதிபனைக் குறித்துக் கூறுவோம்.

ஜெனன லக்கினத்திற்கு விரய ஸ்தானத்தில் அசுப கிரகங்களிருப்பினும் அல்லது நட்பு கிரகங்களிருக்கினும் இரண்டு பத்தாம் வீட்டோர்கள் ஷ பன்னிரண்டாம் ராசி

யில் பலயீனம் பெற்றிருக்கினும் நீச்சம் அஸ்தமயம் பெற்றிழிக்கினும் அவனை பார்ப்பானேயாமானால் அந்த ஜாதகன் ஓர் கிராமத்தையாளும் கீர்த்தி வாய்ந்தவனாவான்.

குரு நோக்கின கோடி தோஷபரிகாரமென்பது மேலோர் கருத்து ஆதலால் எல்லா தோஷமும் பரிகாரமாகி அரசாளத் தக்கவனாவானென்பது பெரியோர் வாக்கியம் குரு தேவ புரோகிதரும் எல்லோருக்கும் நற்பலனையே தர மனமுடைய வருமாகும்.

மேற்சொன்ன பத்தாம் வீட்டதிபனோடு மூன்று கிரகங்கள் சகிதம் பெற்று, எந்த ராசியிலிருந்தாலும் அந்த ஜாதகனுக்குச்சன்னியாசி யோகமென்று பெயர் 10-ஆம் வீட்டோனுடன் ஒரு கிரகம் கூடியிருந்தால் உண்மை ஞானியாவானெனவுங் கூறுவதற்குச் சாஸ்திரங்களிடமுண்டு.

## உத்தியோகம்

சர ராசியில் ஜெனித்தோர் அன்னிய தேசங்களிலேயே வாசம் செய்வானெனவும் திரராசியில் ஜெனித்தவர் அடுத்த கிராம வாசம் செய்பவரும், உபயராசியில் பிறந்தவர் உள்ளூரில் வாசம் செய்பவராயு மிருப்பாரென கூறலாம் ஆயினும், இதனை பன்னிரண்டாம் ராசிநாதனிருக்குந் தன்மையாலே என் நிலை கூறவேண்டும் எப்படியெனில் பன்னிரண்டாம் வீட்டிற்குடையோன் ஆக்ஷி பெற்று ஜெனனலக்கினாதியை பார்க்கின் ஜெனித்த லக்கினம்எந்தலக்கினமாயினும்அவன் உள்ளூரிலேயே வாசம் செய்பவனாவான் 52-ஆம் இடமானது அன்னிய தேசத்தின் உத்யோகத்தைக் குறித்த க்ஷேத்திரமாகும்.

இராகுவும் ரிஷப ராசிக்குடையவனும் சனி வர்க்கம் பெற்று குரு தீச்சம் மூடம் பெற்று நிற்க அந்த ஜாதகன் தன் சுயதொழிலைவிட்டு, சேவகா விருத்தி செய்யுந் தன்மையுடையவனாவான்.

மேற் சொல்லியவர்கள் தாதுவர்கமாய், நீச்சம் மூடம் பெற்று நிற்கில் ஜீவனைக் கொண்டு விற்பனை செய்பவனாவான் மூலவர்க்கம் பெற்றிருக்கில் பொருளைக்கொண்டு விற்பனை செய்யும் தொழிலையடையவனாவான் சீவவர்க்கம் பெற்றிருக்கில் சீவன்களான பக்ஷிவகையால் ஜீவிப்பான், மிருகவர்கமடைந்திருக்கில் மிருகங்களைக் கொண்டு விற்பனை செய்யுந் தன்மையுடையவனாவான்,

ஜென்ம லக்கினம் சரராசியாயும் சரராசியிலிருந்து கிரகம் சரராசியிலேயே நின்று ஜெனன லக்கினாதிபதியை நோக்குவானாகில் அந்த ஜாதகன் அன்னிய தேசங்களிலே வாழ்ந்திருப்பானெனக் கூறுக.

திரராசி ஜெனனமாயம் திரராசியிலிருந்த கோட்கள் திரராசியிலேயேயிருக்கும் ஜெனன லக்கினாதிபதியை நோக்க அந்த ஜாதகன் அடுத்த கிராமத்திலேயே வாசம் செய்வானெனக் கூறுக பத்தாம் வீட்டோன் சூரியன் அங் கிசையால் பலம் பெற்றிருக்க தலை சுமையால் ஜிவனம்.

சந்திரனங்கிசையால் பலன் பெற்றிருக்க பயிர் தொழில் ஜீவனம் செய்வான்

குஜனங்கிசத்தால் பலம் பெற, இரும்பு பொன்னால் ஜீவனம்.

புதனங்கிசத்தால் பலம்பெற, காவியவித்தையால் ஜீவனம்

குரு அங்கிசத்தால் பலம் பெற, பிரமணர் தேவதை களாலும்.

சுக்கிரனங்கிசத்தால் பலம் பெற, பசு எருமை முதலிய வைகளரலும்.

சனியங்கிசத்தால் பலம் பெற, புல், வைக்கோல் முத லியவைகளாலும்

சில நூற்கள் சுக்கிரனங்கிசையானால். ரத்தினம், வெள்ளி விற்பானெனவும் சனியங்மிசமாயின் ஈனத்தொழி லால் கஷ்டப்பட்டு ஜீவிப்பானெனவுங் கூறும்

ஜெனன லக்கினாதிபதி கொடிய கிரகங்களுடன் கூடி ஜென்ம லக்கினத்திற்கு பன்னிரண்டாமிடமான விறய ஸ்தானத்தில்கொடிய கிரகங்களின் க்ஷேத்திரங்களில் நின்றிருக்கவுமானால் அந்த ஜாதகன் எத்தொழிலுக் கும் யீனமுடையவனாகவே யிருப்பான், அவர்களோடு கேது சகிதம் பெற்றிருப்பானாகில் நீச்ச ராஜாக்களிடத்தி லிருந்து வாழத்தக்க பதவி வாய்ந்தவனாகுவான்.

ஜெனன லக்கினாதிபதி 10-ம் வீட்டோனுடன் கூட 10-ஆம் வீட்டோன் சூரியனாகில் சூதுவாது முதலிய கொடிய மார்க்கங்களால் ஜீவிப்பானென்வும்.

சந்திரனாகில் வியாபாரம் பயிர்த்தொழில் வஸ்திரவியாபாரம் வெண்கலம் மாமிசம் முதலியவைகளாலும் குஜனாகில் கருமாரத்தொழில் (அ) அக்கினி முகமாகச் செய்யுந் தொழில் முதலியவைகளாலும்,

புதனாகில மாந்திரீகம் வாத்திமைத் தொழில் கதை காவியம் சொல்லல் மன்னர்கள் கூட்டுறவு, தமிழ் மொழி நாட்டியம் முதலிய காரியங்களாலும்.

குருவாகில் அரசர் பிராமணர் முதலியோராலும் குழந்தைகளுக்குபதேசம் செய்வதாலும் பொன்னைக் கொண்டு விற்குந் தொழிலாலும், எக்காரித்தையும் கஷ்டப்பட்டு ஊக்கத்தோடு செய்யுந் தன்மையாலும், புராதனமான புண்ய கதைகளைப்புகழ்வதாலும் நெய் பால் மோர் தயிர் அன்னம் முதலியவைகளை விற்பதாலும் வாகனங்களை வாங்குதல் விற்றல் முதலியவை வியாபாரத்தாலும் நடன சங்கீத வினோத தொழிலாலும் ஜீவனம் செய்வானெனக்கூறுக முதலாம் பாவகத்தைக் குறித்தும் ஜீவன விஷயங்களைக் குறித்துப் போசலாமென சாஸ்திர அத்தாக்ஷியுண்டாகையால் சிலவற்றை யிங்கு சொல்லியுள்ளன மற்றும் விபரங்களை 10-ஆம் இடம் பார்க்கவும்.

## நோக்கு பலன்

ஜென்ம லக்கினாதிபதி ஜென்ம லக்கினத்திற்கு 6, 8, 12 முதலிய க்ஷேத்திரங்களிருந்தும் அவனுடன் வேறு கிரகங்கள் சேராது தனித்தும் அவர்களிடமிருந்து ராசிநாதன் சந்திரனுடன் சேரவும், அவர்களை சனி பார்க்கவுகானால் அந்த ஜாதகனின் பருத்த தொந்தியானது வாட நலிந்த சரீரமுடையவனாகயிருப்பானெனவும் கூறுக

ஜெனன லக்கினாதிபதி 6 8 12-லிருக்கில் அவன் உடல் வாடி மெலிந்து போகு மென்பது மேற்சொன்ன கொடிய ஸ்தானங்களிலிருந்ததேயாகும் அன்றியும்,

உதயத்தி காரி பாம்பு
உற்றிடில் பெரிய நாபி
இவை விலாச்சனிமால் கூடி
ஜென்மத்தி நிற்கிற் கூனாம்

என்ற வாக்கியப்படி ஜெனன லக்கினத்தில் சனிராகு நிற்க பெருத்த நாபியனெனவும், சனியோடு புதன் கூடி ஜென்மத்தில் நிற்கில் கூனன் என்றும் கூறியுள்ளன.

ஜெனன லக்கினாதிபதி 6,8,12, லிருக்கினும் அவ னோடு பாவக்கிரகங்கள் சகிதம் பெற்றிருக்கில்,

ஆறுபன்னிரண்டிற் பாவ
ராடியிற் சிசுவரிட்டம் என்றும்
வீறுளபத்திற் செவ்வாய்
வெண்மதி கூடிநிற்கின்
மாறிய வியத்திற் செவ்வாய்
வருங்கால மகவுக்காகர

என்றனர். 6,12, பாவ கிரகங்களிருக்கில் சிசுவுக்கே அரிட்ட மெனவும், 1-ல் குஜனும் சந்திரனுமிருந்து கோசார ரீதியால் குஜன் 12ஆம் ராசியில் பிரவேச காலம் அக் குழவிக்காகாதெனவுங் கூறியுள்ளாராகையால் 6,8,12, நின்ற கிரகம் கொடிய கிரகங்களா என்பதையுமாராய்ந்து கூறுக.

ஜெனன லக்கினாதிபதி எந்த ராசியிலேனும் பகைப் பெற்றிருக்கவும் சந்திர நின்ற ராசிநாதனும் பகைப் பெற் றிருக்கவும் அந்த ஜாதகனுக்கு எல்லா விஷயங்களுக்கும் பகையே காட்டும் ஜெனன லக்கினாதிபதியோடு இராகு கேதுக்களிலொருவர் சேர்ந்து 8, 12-என்னுமிடங்களிலிருப் பாரேயானால் அவர்கள் திசைப்பொசிப்பில் அங்கயீனமு முண்டாகுமெனக் கூறுவார்.

அங்கப்பழுதென்பதை பற்பலவிதமா யாராய்ந்து கூற வேண்டும் ஜெனனலக்கினாதிபதி இராகு அல்லது கேது வுடன் சம்மந்தப்பட்டதாலேயே அங்கப் பழுதென்று கூற லாகாது. ஏனெனில், இராகு கேதுக்களுக்கு அங்க ஊன மேயாயினும் நட்பு ஆக்ஷி உச்சம் பெற்ற கிரகங்களி லொன்று நோக்கு மாயின் அந்த தோஷமானது பனிபோல் நீங்கும்.

சித்துள வேழுறகேழு மிரண்டிற் றிகழ்பானு
சத்தினிவிந்துர முற்றிடிலங்கப் பழுதாவான் என்றபடி
ஏழாம் இராசியில் குஜனும் இரண்டில் சூரியனும் 10-ஆம் ராசியில் சந்திரன் பலம் பெற்றிருக்கினும் அங்கப்பழு தென்றனர் ஆனதால் அங்கப்பழுதென்பதை எவ்வாறு அங்கப்பழுதுண்டாகும், அங்கங்களில் எந்த அங்கம் அவை எக்காலத்திலுண்டாகும் என ஆராய்ந்து கூறுவதே சிலாக் கியமாகும் கிரகங்களின் அங்க விபரங்கள் கீழ் வருமாறு.

| | | | |
|---|---|---|---|
| செவ்வாய்க்கு | தலை | குருவுக்கு | வயிறு |
| சுக்கிரனுக்கு | முகம் | சனிக்கு | தொடை |
| புதனுக்கு | கழுத்து | இராகுக்கு | முழங்கால் |
| சந்திரனுக்கு | தோள் | கேதுக்கு | உள்ளங்கால் |
| சூரியனுக்கு | மார்பு | | |

## இராசிகளின் அங்கங்கள்,

| | | | |
|---|---|---|---|
| மேஷம் | சிரசு | துலாம் | அடி வயிறு |
| ரிஷபம் | முகம் | விருச்சிகம் | சிசுனம் |
| மிதுனம் | மார்பு | தனுசு | இரு தொடை |
| கடகம் | இருதயம் | மகரம் | இருமுழங்கால் |
| சிங்கம் | வயிறு | கும்பம் | கணுக்கால் |
| கன்னி | தொப்புள் | மீனம் | இரண்டு பாதம் |

இவ்வாறு கிரக அங்கங்களையும், இராசியங்கங்களையும் சோதித்து அங்கவிபரங்களைக் கூறுக.

ஒத்திரு கடக லக்கின மல்லா தொருபத்தா
யத்திடு மதியைச் சனிதான் பார்க்கிற் காலூனம்

கடக லக்கின மல்லாத ஜாதகங்கட்கு 10ல் நின்ற சந்திரனைச்சனி காணில், ஒருகால் ஊனம் என்படி அவயவங்களைக் குறித்து ஆராய்க, அவையுண்டாகுங் காலம் திசை புத்தி யாலறிக.

## ரோக விஷயபாவம்

| ரோகம் | | நிவர்த்தி |
|---|---|---|
| ஒருவருஷத்திற்குள் ரோகம் உண்டாதல். | ஜெனனாதிபதி பகைநீச்சம் பெற்று 10-5-9 என்னுமிடங்களிருப்பது. | 1-4-7-10-5-9 என்னுமிடங்களிருக்கினும் புதன் உச்சம் பெற்றுபார்ப்பது |
| ஷை | மேற்சொன்ன ஜெனன லக்கினாதிபதியைச் சேர்ந்த கிரமக்குடையவனாகவும் நோக்கும் கிரகம் இருப்பது, | ரோகாதிபதி ஆக்ஷியாயும். 6-ல் இராகு கேதுகள் இருப்பது வேயாம். |

லக்கினாதிபதி பலயீனம் பெறுவது எல்லா விஷயங்களுக்கும் கொடியதேயாகும் ஜெனன லக்கினாதிபதி பலயீனம் பெற்றால் ரோக முண்டாவதோடு ஆயுளும் குறைவாகும், அனேக நூலாசிரியர்கள் ஜெனன லக்கினாதிபதி க்ஷீணம் நீச்சம் பகை அஸ்தமயம் பெற்றிருப்பானேயானால், ஜெனித்த 8-நாள் வரையில் பால அரிட்ட தோஷமுண்டு எனவும், அப்பால் அரிட்ட தோஷமானது நீங்கிய பிறகே அந்த ஜாதகனுக்கு ஆயுள் விபரங்களைக் கூறவேண்டு மெனவும் கூறியதோடு சிறப்பு பொருத்திய கேரளமுனிவர்.

எட்டினி லுதயந் தன்னிலிரவியு
மிருக்க நோக்க
பொட்டென உதையோன் கூடிற்
பொல்லாத பித்த ரோகம்
கட்டிய கக்சியாளே கனல் வண்ண
னிருந்திட்டாலும்
விட்டிடாதிருக்கும் பித்த
ரோகமென் மேலுந்தானே,

ஜெனன லக்கினத்திலாவது 8-ஆம ராசியிலாவது சூரியனிருக்க அல்லது அவனோடு ஜெனன லக்கினாதிபதியும் சேர்ந்திருப்பானே யாமானால் கொடிய பித்தரோகம் உண்டாகுமெனவும் மேற்சொல்லிய 1, 8-ஆம் ராசியில் சூரியனிருந்தாலும் அவனாயுள் முடியும்வரை பித்தரோகம் மென்பது விடாதெனவுங் ஜெனன லக்கினாதிபதியா லறிவதோடு பின்வரும் ஆறாம் பாவக விளக்கத்தாலுங் கண்டு கொள்க.

ஜெனன லக்கினாதிபதி கொடிய பாவ கிரகங்களோடு கூடி சுப கோட்களின் வீட்டிலிருக்கினும் சுகமில்லை ஜெனன லக்கினாதிபதி குருவோடு கூடி 6, 8, 12 என்னு மிடங்களிலிருக்கினும் அவனோடு சந்திரனும் சகிதம் பெற்றிருப்பானேயாமானால் அவன் ஜெனித்தது முதல் ரோக முடையவனாகவேயிருப்பான்.

கொடிய கோட்களென்பது சனி குஜன் சூரியன் ராகு கேது இவர்களைக் குறித்ததாகுமென முன்பே கூறியுள்ளேன். ஜெனனாதிபதி பாவர்களுடன் சேர்ந்து 6,8,12-லிருந்தால் மாத்திரம் ரோகம் சொல்லலாம் இவ்வாறு

ஜென்ம லக்கினாதிபதி 6,8, லிருந்தால் கட்டாயம் ரோக முண்டாகு மென்பதற்கு போதுமான சாதனங்களுண்டு எப்படியெனில்,

எட்டினிற செவ்வாய் நிற்க
வேழனிற் பாபர் நிற்க
மட்டினி லெண்டிரண்டின்
மணயாரக கேது நன்றாள்
தொட்டிடுந் திலகமாதே
தோன்றிய முதலாய்க்கொண்டு
வீட்டிடார ரெணங்கள் கண்டு
வீழ்வனே குய்யரோகத்தில்

என்றபடி 8-ல் செவ்வாயும் ஏழல்கொடிய கிரகங்களும் 2,8 என்னுமிடத்தில் கேதும் நின்றால் அவன் தோன்றிய நாள் முதல் அளவில்லாத ரெணங்கள் கண்டு குய்யரோகத்தால் இருப்பானெனவும்,

அருந்து முதய மேட்டினுக்கு
மதிபர்மதியு மதிபவனன்
வருந்து சனியு பாம்பு கந்தவர்
கமடைய உதயந்தனிற் குளிகன்
திருந்துங் குளிக பாவனுமே
சேர்ந்து நிற்கக் குருவர்கம்
பொருந்து மாரிலிலா திருக்கிற்
புகலுஞ் சரீரத்துற் கந்தம்,

என்ற வாக்கியப்படியும் கிரக அடவியால் எல்லா முண்டாகுமாகையால், கிரக அடவியைச் சோதித்து பதில் சொல்லுவது சிலாக்கியமாகும்.

கொடிய கிரகங்களுடன் கூடிய ஜெனன லக்கினாதி பதி தன் பலம் குறைந்திருப்பதோடு செவ்வாய் இராகு இவ் விருவருங்கூடி சந்திரனோடு சனியும், சம்மந்தப்பட அந்த ஜாதகனுக்கு அற்ப ஆயுளாய் மரித்துப் போவானெனக் கட்டாயம் கூறுவாயாக:-

உடலும் உயிரும் பலயீனமடையின் மரிப்பது நிச்ச யமேயாகும், உடலை விட உயிரே விசேஷம் ஆனதால்,

சீப்ண மதியேயானால் செல்வருந் தாழ்ந்து நிற்பர்
கூரனிப் பாபர்மேலாய்க் கொல்லுவர் கொஞ்சநாளில்
என்றதாலும் தேய்பிறைச் சந்திரனாக இருந்தால் எவ்வித செல்வமுடையவரும், தாழ்ந்து போவார். அவனோடு கொடிய கிரகங்களும் சகிதமுற் றிருந்தால் சில நாளில் கொல்லும் என்றும்

பூரண பலம் பெற்ற சுபகிரகங்கள் சுபக்ஷேத்திரங்களிலிருந்து விடுவாரேயானால் எவ்வித தோஷ மேற்படினும் மரிப்பதற்குக் காரணமில்லை எனவும் கட்டாயமாய் கூறியுள்ளார். இவ்வளவிற்கும் மூலாதாரப் பொருள் ஜெனன லக்கினாதிபதியே ஆதலால் ஜெனன லக்கினாதிபதியைக் கொண்டே மற்றும் பலன்களை நிலை கூறுக.

## ஊமை லக்ஷணம்

குழவி ஜெனித்த போது ஜெனன லக்கினம் விருச்சிகமாயும், துலா ராசியில் சந்திரனுமிருக்கவும் ஜெனன ராசியைப் பாவகோட்கள் பார்க்கவும் அந்த ஜாதகன் மத்திப வயதில் ஊமையாய்ப் போவான்.

மீனமுதல் மேடராசிக்குள் மீனமும் மேடமும் சந்தித்த லக்கினமாயும் இவ்விரு ராசியி லேதேனுமொன்றில்கொடிய கிரகங்களிலிருக்க அவன் ஜெனித்த ஐந்து வயதுக்குள்வாய் ஊமையாய்ப் போகும்.

கொடிய கோட்களின் ஓசை சந்தியிற் ஜெனனமாகவும் ஜெனன லக்கினத்தை கொடிய கோட்கள் நோக்குறவும் அந்த ஜாதகனின் வாய்குளருமெனக் கூறுக.

## பல்லுடன் பிறக்கும் லக்ஷணம்

மிதுனம் கன்னி முதலிய ராசிகளின் அதிபதியான புதனங்கிசையில் ஜெனிக்கவும் ஜெனன லக்கினத்தில் குஜன் சனி யிவர்களிருக்கவும் பிறந்த பேர்களுக்கு ஜெனன காலப்போதே பல்லுடன் பிறக்குமென்று கூறுக.

## கூனன்

வளர்பிறைச் சந்திரனை குஜன் ஏழாம் பார்வையாய்ப் பார்க்க ஜெனன லக்கினம் கடகமாக ஜெனித்தவன் கூனுடையவனும் சந்திரன், சனி, செவ்வாய் இம்மூவரும் மீனவிராசியை நோக்க மீனராசியே ஜெனன லக்கினமாக கூனுடையனாவானெனக் கூறுவது சாஸ்திர முறையாகும்.

## செவிடன்

ஜெனன லக்கினம மீனம் விருச்சிகம் கடகமாக சந்தி ரனுடன் கொடிய கிரகங்கள் சம்மந்தமுற்றிருக்க அந்த ஜாதகன் செவிடாகப் போவான்.

## குருடன்

சூரியனைச் சந்திரன் சனி இவ்விருவரும் நோக்கவும் ஜெனன லக்கினம் மகரமாகவும் அந்த ஜாதகன் குருட னாய்ப் போவானெனக் கூறுக.

## அவயவக் குறைவு

ஜெனன லக்கினம் எந்த ராசியானாலும் அந்தராசிக்கு திரிகோண ராசிகளான 5-9 ஆம் ராசிகளிலும் ஜெனன லக்கினத்தும் கொடிய தீய கிரகங்களிருக்க அந்த ஜாத கனுக்கு அவயவ குறைவுமுண்டாகும்மென சோதிட சாஸ் திரங்கள் கூறும்.

## சப்பாணி

ஜெனன லக்குனம் மேடம் ரிடபம் மிதுனமாயிருந்து ஜென்ம லக்கினத்திற்கு திரிகோண ராசிகளில் கொடிய கிரகங்களிலிருந்து 12-ஆம் வீட்டதிபதியும் பலயீனம் பெற றிருப்பானேயாமானாய் அந்த ஜாதகன் சப்பாணியாய் ஜெனிப்பான்.

மேற்சொன்னபடி கிரகங்களிருப்பின் அவயவ குறைவு சப்பாணி குருடன் ஊமை, செவிடன், அங்கயீனம் முதலிய வகைகளுண்டாகுமென கூறி வந்துள்ளோம், ஆயினும் இன்னும் பற்பல கிரக சேர்க்கையால் அவை மாறுவது முண்டு ஏனெனில், கிரகங்களில் ஒன்றுக்கொன்று பல முடையதெனவும் ஒருவராலேற்படும் தோஷத்தை இன் னொரு கிரகம் தீர்க்கவும் சக்தியுண்டெனவும் கூறியுள்ளார். எப்படியெனில்,

இராகு கேதுக்கள் தோஷத்தை புதன் தீர்ப்பான்
புதனாலேற்படும் தோஷத்தை சனி தீர்ப்பான்
இம்மூவராலு மேற்படும் தோஷத்தை குஜன் தீர்ப்பான்
இந்நால்வர்கள் (அதாவது) ராகு, கேது, சனி, குஜன்
இம்மூவர்களின் தோஷத்தையும் சுக்ரன் தீர்ப்பான்,

இராகு, கேது, சனி புதன், குஜன், சுக்கிரன் இவர்கள் தோஷத்தை குரு தீர்ப்பரன்.

மேற்சொன்ன 6-கிரகங்களின் தோஷத்தை சந்திரன் தீர்ப்பான்,

இவரனைவர்களின் தோஷத்தையும் சூரியனே பரிகறிப்பானெனக் கூறியதால் முன்சொன்னபடி பற்பல அங்கயீனர்களாய் பிறந்தபோதும் அதைத்தீர்ப்பாருண்டாவென ஆலோசித்து அப்படி தீர்ப்பாரென்றேற்படுமாயின் தீருமெனவுங் கூறுக, எப்படியெனில்,

தீக்கோள் சம்பந்தப்படினும் சுபர்கள் சேராமேலும் பாராமலுமிருந்தால் மேற்சொன்ன அங்கபழுது கட்டாயமுண்டாகுமெனவும் சுபர்கள் சேர்க்கை நோக்கு பார்வையிருக்குமாயின் அந்தந்த கொடிய கோட்களின் திசை புத்தி காலங்களில் அந்தந்த கிரகத்திற்குத் தகக்வாறு வியாதியை கொடுத்து நிவர்த்தியாகும்.

தோஷ நிவர்த்தியென்பது ஒவ்வோர் விஷயங்களுக்குமுண்டாவென்று ஆலோசித்தே தீரவேண்டும் ஏனெனில், ஓர் கிரகத்தால் நற்பலனுண்டாகுமென ஏற்படுமாயின் வேறு கிரகங்களால் அவை பின்னமாகுமா இல்லையாவென்று கொடிய பலனென ஏற்படும் கிரகத்தைக் குறித்து அதனை நிவர்த்தி செய்ய வேண்டும் இதுவுமன்றியில் ஜெனன காலங்களில் கிரக சேர்க்கை பார்வை முதலியவைகளால் கொடிமாலை (அழுக்கு) செத்தையென அக்குழவியைச் சுற்ற ஜெனிப்பதுண்டு அவ்வாறு ஜெனிப்பதையும் கொடிய கிரகங்களாலேயே ஆலோசித்துத் தீரவேண்டும்.

சுபகிரகங்களுக்கு அவ்வாறான தோஷம் கிடையாது. ஆனால் பாவபலத்தாலும் மற்றுமுள்ள ஆக்ஷி உச்சம்நீச்சம் பகை சமமென்கிற ஐந்துவித குணத்தாலும் சுபர்களும் அசுபர்களாவதுண்டு.

உதாரணமாக சுபர்களில் மிக முக்கிய கிரகம் குருவென சொல்லப்படுகிறது. ஆனால் குருவுக்கு கேந்திர ஆதிபத்தியம் வரினும் கேந்திரங்களிலிருக்கினும் தன் பகைவன் வீட்டிலிருக்கினும் தன்னிலும் மேம்பட்ட பலம் பெற்ற கொடிய கோட்களுடன் பேரினும் பார்வை பெரினும் அவன் கொடியவனேயாவான் அவ்வாறு கொடியவனாக வந்த சுபன் கொடிய பலனைத் தர பூரண பலம் பெற்றவனாகிறான் இவ்வாறே மற்றய கிரகங்களுக்கும் கொள்க ஆயினும் முன்சொன்ன கொடிமாலை முதலியவைகளுண்டாக்க சக்தியுடையவனல்ல.

உதாரணமாக சத்தியம் தயை தாக்ஷண்யம் பொருமை, ஈவு இறக்கம் உடைய ஒரு மனிதனுக்கு அவன் பூர்வ வினையால் கொலைச்செய்யும் உத்தியோகம் கிடைத்தால் கொலைச் செய்வது பாவம் என்ற எண்ணங்கொண்டு கொலை களத்திற்கு வராமலிருப்பதா சத்தியத்தைப் பின் பற்றுவதா, உண்மையுடையவன் ஒரு காலும் தவரான்,

பொய் உலோபம், வஞ்சம் முதலிய துற்குணங்களுடைய ஒருவனுக்கு கொலை செய்யுந் தொழிலும் மேற் சொன்ன குணங்களை உபயோகப் படுத்துவான் இது போலவே கிரகங்களுக்கும் உண்டு என சோதிடர்கள் கவனிக்கவும்,

கொடிமாலை, முதலியவைகளைக் குறித்து யோசிக்கையில் ஜெனன லக்கினத்தையும் சந்திர லக்கிணத்தையும் ஆராய்ந்து சொல்ல வேண்டும்,

விபரம் கீழ் வருமாறு:

## கொடி சுற்றிப் பிறத்தல்,

ஜெனன லக்கினத்தில் சனி நிற்க சந்திரனை இராகு (அ) கேது நோக்க ஜெனன லக்கினாதிபதி அஷ்டமாதிபதியுடன் சகிதம் பெற அந்த ஜாதகன் கொடி சுற்றியே பிறப்பான.

ஜெனன லக்கினத்தில் செவ்வாய் நிற்க ஜெனன லக்கினாதிபதியுடன் சேர இராகு (அ) கேது ஜெனன லக்கினத்தை நோக்க, இராகு நோக்கில் ( சங்கொடி யெனவும் கேது நோக்கில் கருங்கொடி யெனவுங் கூறுக.

ஜெனன லக்கினாதிபதி சனியுடன் சேர சந்திரனுடன் இராகு சகிதம் பெற ஜெனன லக்கினத்தை குஜன் நோக்க அந்த ஜாதகன் மாலையுடன் பிறப்பான்.

ஜெனன லககினம் மகரம் கும்பம் ரிடபமாகவும் லக்கினத்திலாவது லக்கினாதிபதியோடாவது சனி குஜன் சேர அல்லது நோக்க கொடியுடனேயே ஜெனிப்பான்.

ஜெனன லக்கினாதிபத்தியம் சுபர்களுக்காயினும் அல்லது அசுபர்களுக்காயினும் ஆதிபத்தியம் வருவதைப் பற்றி தோஷமில்லை ஆதலால் ஜெனன லக்கின விஷயமாய் சிலவற்றைப் பேசுவோம்.

மேடலக்கினம் ஜெனனமாக, ஜெனன லக்கினத்தில் சந்திரன் நிற்க அவனை குருநோக்க அந்த ஜாதகன் அரசர்களுக்குச் சமானமானவன்.

அறிவிப்பு :— இதற்குக் காரணம் குருவும் சந்திரனுமே யாகும் ஜெனன லக்கினத்தில் சந்திரனிருப்பது ஈஸ்வரி குரு பார்ப்பது அரசன், ஆகையால் அரசனைப்போல லக்ஷிமி கடாக்ஷம் பொருந்தியிருப்பான் என்ற கருத்தை யொட்டி அரசர்களுக்குச் சமானமானவனென கூறப்பட்டன குருவுக்கு ஐந்து ஏழு ஒன்பது என்னுமிடம் பார்வையென முன்பே கூறியுள்ளேன் ஜெனன லக்கினத்தை குரு எத்தனையாவது ராசியிலிருந்து பார்ப்பான் என்பதை கீழ் கண்ட சக்கரத்தில் கவனிக்கவும்.

1-வது சக்கரம்

| லசந் | | | |
|---|---|---|---|
| | 5-ஆம் | பார்வை | |
| | | | |
| | குரு | | |

2-வது சக்கரம்

| | | லசந் | |
|---|---|---|---|
| | 7-ஆம் | பார்வை | |
| | | | |
| குரு | | | |

3-வது சக்கரம்

| குரு | | | |
|---|---|---|---|
| | 10-ஆம் | பார்வை | |
| | | | |
| லசந் | | | |

முதற் சக்கரத்தில் குரு 5-ஆம் பார்வையாய்ப் பார்க்குறான் அவை ஜெனனலக்கினத்திற்கு 9 ஆம் வீடு9-ஆவது இடமென்பது திரிகோணம் சுபகிரகங்கள் திரிகோணத்திலிருக்கலாம் என சாஸ்திரங்களில் கூறுவதோடு, அனுபவ வாயிலாகவும் ஒற்றுமையுண்டு.

இரண்டாம் சக்கரத்தில் 7ஆம் பார்வையாகிறது சுப கிரகங்கள் கேந்திரம் பெற்றால் கொடிய பலனென முன்பே கூறியுள்ளேன் அசுபகிரகங்கள் கேந்திரம் பெறலாமெனவும் சொன்னேன் இரண்டாம் சக்கிரமாகிய தனுசு லக்கினத்திற்கு குருவுக்கு 1, 4-ஆம் வீடு ஆதிபத்தியம் வருகிறது.

இவ்வாறே மற்றுமுள்ள கிரகங்கட்கும் பார்வை விபரங்களை ஆலோசிப்பது சோதிடர்களின் கடமை இனி பின் வரும் விஷயங்களை கவனிப்போம்,

ரிடபலக்கினத்தில் ஜெனிதது குரு, புதன் இவர்கள் கடக ராசியில் நிற்கவும் மகர ராசியில் குஜன் நிற்கவுமானால் அந்த ஜாதகன் அரசனாவான்.

மேற்சொல்லியதோடு கூட்டங்கூடிய சுபகிரகங்கள் நோக்குமாயின் புவி சக்கரவர்த்தியவாவான் மேட ராசியில் சனி நிற்பானேயானால் அந்த ஜாதகனுக்கு ஜலத்தால் கண்டமுண்டெனவுங் கூறுக.

மேட லக்கினம் மூன்றாத் திரிகோணத்தில் ஜெனிக்க ஜெனன லக்கினத்தையும் ஜெனனலக்கினாதிபதியையும் கொடிய பாவகிரகங்கள் நோக்குமாயின் அந்த ஜாதகன் கட்டு காவலாலும் விஷப்பூச்சிகளாலும் அக்கினியாலும் வாதைப்படுவான்.

மேட ராசியில் ஜெனிக்க விருச்சிக ராசியில் சனி வக்கிரகம் பெற ஜெனன லக்கினத்தைச் சேய் பார்க்க ஜெனித்த இரண்டாம் வருடத்தி லரிட்டம் காட்டும்.

மேற் சொல்லியபடியே கிரகமிருந்து 4 ஆம் ராசியில் குரு நின்று சனி பார்வையில்லாமலும் சூரியன் பார்க்கவும் ஆனால் ஜெனித்த மூன்றாம் வருடத்தில் கொண்டமுண்டாகும்

## ரிடபம் ஜெனனம்

ஜெனன லக்கினம் ரிடபமாக ஜென்ம லக்கினத்தில் சந்திரன் குரு நிற்க 9 ல் சுக்கிரன் (அல்லது) சுக்கிரன் நீச்ச மூடமின்றி சூரியன் சனி மார்க்கம் பெற்று நிற்கில் அந்த ஜாதகன் புவிச் சக்கிரவர்த்தியாவான்.

ரிடப இராசியிலுதிக்க ரிடபத்தில் சந்திரனிருக்க குரு நோக்குற, அந்த ஜாதகன் அரசர்களுக்குச் சமான மானவன் மற்றுமுள்ள சுபகிரகங்களும் சுப க்ஷேத்திரங்களி லிருந்து நோக்குவாராகில் பெருமை பெற்ற அரசனாவான்.

ரிடப லக்கினம் ஜெனனமாக ஜெனன லக்கினத்தில் குஜன் நிற்க லக்கின திரிகோண ராசிகளிலும் கொடிய கிரகங்களிருக்கு ஜெனன லக்கினாதிபதியும் விரயம் பெற அந்த ஜாதகனுக்கு அக்கினியாலும் அபாயகரமான பாரை களாலும் ஆபத்துண்டாகுமெனக் கூறுக.

ரிடப லக்கினமாயும் 4-ஆம் ராசியில் சூரியன் சந்திரன் நிற்க அந்த ஜாதகனுக்குக் களத்திர விவாகமுண்டு. அல்லது களத்திரத்தால் அவமானம் அடைவான்.

மேற்சொல்லிய ரிடப ராசியைக் கொடிய கிரகங்கள் நோக்க அந்த ஜாதனுக்கு அற்ப புத்திரனே யாகும்.

ரிடப லக்கினத்தில் உதிக்க 4ஆம் ராசியில் அக்கிரகம் நிற்க அந்த ஜாதசனுக்குக் களத்திர நாசமுண்டாகும். ஷ 7-ராசியிலேயே சந்திரனும் இருக்கில் ஏகதாரவிரதனாகும். அவனோடு குஜனும் சகிதம் பெற்றிருக்கின் விபசார களத்தி ரத்தினாலேயே காலங் கழிப்பானெனக் கூறுக.

ரிடப லக்கினத்தில் ஜெனிக்க ஜெனன லக்கினத்தில் சூரியன், நிற்க ஜனன லக்கினத்தை சனி குஜன் நோக்க அந்த ஜாதகன் பயங்கர விழிகளையுடையனாவான், இரண்டாம் ராசியிலும் கொடிய கிரகங்கள் இருக்க முக ரோகமும் விழிரோகமும் உண்டாகுமெனக் கூறுக.

ரிடப லக்கினம் முதல் திரேகாணத்தில் ஜெனிக்க இரண்டாம் வீட்டுக்கு அதிபதி இராகு (அ) கேதுடன் கூடி ஜெனன லக்கினத்தில் சேர 10-ஆம் வீட்டுக்கு அதிபதி ஜெனன லக்கினத்தைப் பார்க்க அந்த ஜாதகன் விகட வித்தை (அ) விஷத்தை இரக்கும் வித்தையால் ஜீவிப்பான் எனவும் இராகுக்குப்பகைவன் நோக்கில் அந்த வித்தையா லேயே மரிப்பானெனவுங் கூறுக.

## லக்கினம் மிதுனம்

மிதுன லக்கினம் ஜெனன லக்கினமாக லக்கினத்தில் புதனிற்க அவனை சுபகிரகங்கள் நோக்க அஜ்ஜாதகன் மன்னவர்களுக்குச் சமமானவனென்று கூறுக ஷ லக்னம்

ஜெனனமாயும் லக்னத்திற்கு 8, ஆம் ராசியில் பகைக் கிரகங்களிருக்கவும் லக்கினாதிபதியாவது நோக்கும் கிரகமாவது மிருகவர்க்கம் பெற்றிருக்க அந்த ஜாதகனுக்கு மிருக ஜெந்துக்களால் அச்சமுண்டாகும் எனக் கூறுக,

லக்னம் மிதுனமாகவும் 6ஆம் ராசியில் சனி வக்கிரம் பெற, அவனை குஜன் பார்க்க அவன் ஜெனித்த 12-ஆம் வருடம் அரிட்டமுண்டாகும்.

மிதுன லக்னம் ஜெனனமாக சந்திரனின்ற ராசிக்குடையோனும் பலம் பெற்றிருக்க அந்த ஜாதகன் சதா சன்யாசி வேடமுடையவனாகவே யிருப்பான்.

ஜெனன லக்னம் மிதுனமாகி அவ்விராசியில் இராகு நிற்கில் அந்த ஜாதகன் யோகியாவான், மிதுனத்தில் சுக்கிரனிருந்து அவனைச் சூரியன் பார்க்கவும் அவன் மோகசாரத்தில் மூழ்கியவனாவான் ஷெ லக்னத்தில் குரு நிற்க அல்லது பார்க்க அவன் திரேகம் வற்றிமூத்திர கிரிச்சனம் உடையவனாவான்.

மிதுன லக்னம் ஜெனனமாக சுக்கிரனோடு பாவ கிரகங்கள் கூடியிருக்க அல்லது பார்க்கவுமானால் மூத்திரக் கிரிச்சனம் உடையவனாவான்.

புதன் கேந்திர கோணங்களிலிருந்து ஜெனன ராசியிலும் சந்திரனிருக்க மேக ரோகம் மூத்திரக்கிரிச்சனம் இவைகளையுடையவனாகுவான்.

மிதுன லக்னம் ஜெனனமாக, சுக்கிரன் சூரியன் இவர்கள் சகிதம் பெற்றிருக்க அவனைப்பாவர்கள் காண புதன் 1-4-7-10ஆம் ராசியிலிருக்க அவை இரட்டைப்பெண் குழவியாக ஜெனிக்கும்.

இரண்டு 12ஆம் ராசியில் கொடிய கிரகங்கள் இருக்க அவர்களுக்கு நேத்திரரோக முண்டாகுமென கூறுக.

மிதுன லக்னத்தில் ஜெனிக்க சூரியன் குஜன் குரு இவர்கள் ஒன்று கூடியிருக்கில் அவர்கள் இரட்டை ஆண் குழவியாக ஜெனிப்பார்கள்.

கொடிய கிரகங்களோடு புதன் சகிதம் பெற்றிருக்க அவர்களை சுப கிரகங்கள் பார்க்க அவர்கள் இரட்டை ஆண் குழவியாக ஜெனிப்பரெனக் கூறுக.

மிதுன லக்னம் ஜெனனமாக குஜனுடன் குரு சகிதம் பெற்று கேந்திரங்களிருக்க அவனோடு புதன் சகிதம் பெற்றாலும் அல்லது பார்த்தாலும் அவர்கள் இரட்டை பிறப்பின்ராகவே இருப்பார்கள்.

மிதுனம் ஜெனனமாக சூரியன் குரு சந்திரன் இவர்கள் கூடியிருக்க புதனும் கேந்திரம் பெற்றிருக்க அவர்கள் இரட்டை ஆண் பிறப்பாகவே ஜெனிப்பார்.

ஷை லக்னத்தில் ஜெனிக்க குஜனுடன் சந்திரன் சுக்கிரனிவர்கள் கூடியிருக்க அவர்களைப் பாபக்கிரகங்கள்நோக்க புதன் கேந்திரம் பெற்றிருக்க இரட்டை பெண்ணாய்ப் பிறப்பார்,

மிதுன லக்கினத்தில் ஜெனித்து 8-ஆம்ராசியில்கொடிய கிரகங்கள் சேர்ந்திருக்க, அந்த ஜாதகனுக்கு மூத்திரரோகமும் ஆசனரோகமும் உண்டாகும்,

## லக்கினம் கடகம்

கடக ராசியில் ஜெனிக்க அந்த ராசிக்கு இரண்டு பத்து என்னும் இராசியில் சந்திரனிருக்க அந்த ஜாதகன் அரசர்களுக்குச் சமானமானவனாவான்.

ஷை ராசியே ஜெனனமாக அவ்விராசியில் குரு நிற்க அல்லது கடக ராசியை நோக்க சந்திரன் கேந்திரங்களில் இருக்கினும் அரசர்களுக்குச் சமானமானவனென்றேகூறுக.

கடக ராசியில் ஜெனிக்க கொடிய கோட்கள் மூன்றாந் திரிகோணம் பெற்று எதிர்பார்வையாய்ப் பார்க்கின் அந்த ஜாதகனுக்குக் காட்டில் வாழும் மிருகங்களால் பயமுண்டாகும் அன்றியும் அவன் தீயசொர்க்களையுடையவனாயும் இருப்பான் எனக் கூறுக,

ஜெனனம் கடகமாகவும் 7-ஆம் ராசியில் சனி நிற்கவும் அவனுக்கு பலதாரமுண்டெனவும் அவன் களத்திரம் யாவும் விபசாரம் செய்யுந் தன்மையுடையதாகவேயிருக்குமெனவும் அவன் மனைவிகளில் ஒன்று வம்பு தும்புகள் செய்வதாகவும் அக்களத்திரத்தால் அபிமான யீனமும் துன்பமு முண்டாகுமென்றுங் கூறுக.

கடக லக்னம் ஜெனனமாகவும் சந்திரனும் செவ்வாயும் கூடி ஏழாம் ராசியிலிருக்கவும் அவனுக்கு நல்ல உத்தம களத்திரமுண்டாகுமென்றும் 12-8-6 ஆம் ராசியில் சூரியனும் சந்திரனுங் கூடியிருந்தால் தரித்திரனும் துன்பமுடையவனாகவுமே யிருப்டான்.

கடக லக்னத்தில் ஜெனித்தோர்க்கு ஜெனன லக்கினத்திலாவது பத்தாம் ராசியிலாவது அம்புலியாகிய சந்திரன் கூடியிருக்கில் களத்திர கிலேசமும் தோஷமும் சொல்லுவாயாக.

ஷெ லக்னத்தோர்க்கு இராகுவும் சூரியனும் கூடி ஏக ராசியிலிருப்பாரேயானால் அவன் களத்திரத்தால் தன் தனம் யாவும் நாசமாய்ப் போகுமெனவும் கூறுக,

கடகலக்னத்தில் ஜெனிக்கவும் லக்னத்தில் சந்திரனும் 5-ல் குஜனும் (அ) சந்திரனும் குஜனும் கூடி நிற்கில் அவனுடைய சரீரமானது துர்பலமாய் போகுமெனவும்.

மேற்படி ராசியில் ராகு நிற்கில் புத்திரதோஷமும் துவேஷமும் உண்டாகுமெனக் கூறுக

## லக்கினம் சிங்கம்

ஜெனனம் சிங்கமாகவும் அவ்விராசியில் கொடிய கிரகங்களிருக்கவும் சுபகிரகங்கள் பார்க்கவும் அந்த ஜாதகன் அரசர்களுக்குச் சமானமானவனாவான்.

லக்கினத்தில் சந்திரனும் சூரியன் குஜன் அங்கிசமும் பெற இரண்டாம் ராசியில் புதன் உச்சம் பெற அந்த ஜாதகன் நீச்ச கர்மம் செய்யும் அரசனெனவுங் கூறுவர்.

லக்னம் சிங்கமாகவும் அவ்விராசியில் குஜனும் அவ்விராசியை குரு பார்க்கவுமானால், ஜெனனம் இரண்டாம் திரிகோணமாகவும் அந்த ஜாதகனுக்குப்பக்ஷிதோஷமுண்டாகுமெனவுங் கூறுக.

லக்கினம் சிங்கமாகவும் அவ்விராசியில் சனி நிற்கவும் சந்திரனை சூரியன் பார்க்கவும் அவன் ஜெனித்த ஆறாம் வருடத்தில் கண்டமுண்டெனவும்.

இரண்டு பன்னிரண்டாம் ராசியில் பாவ கிரகங்கள் இருக்கவும் அவர்கள் க்ஷீணம் பெற்றிருப்பார்களேயானால் அவன் மனைவியால் பல துயரமும் துன்பமுண்டாகுமெனக் கூறுக.

லக்னம் சிங்கமாகவும் இரண்டு அல்லது மூன்றாம் ராசியில் சூரியனும் 5-ல் குஜன் 10-ல் குரு இவ்வாறு நிற்கில் அந்த ஜாதகன் பெருத்த தரித்திரனும் வெகு ஜன விரோதியுமாயிருப்பான்.

லக்னம் சிங்கமாகவும் அவ்விராசிக்கு பகை கோட்கள் நோக்கவும் சூரியனையும் தனக்குச் சத்ரு கிரகங்கள் பார்க்கவும் அந்த ஜாதகனுக்கு அற்ப புத்திரனென்றே கூற வேண்டும்.

மேற்படி லக்கினத்தோற்கு சூரியன் 11-ஆம் ராசியிலி ருக்கில் அவனுக்கு அற்ப புத்திரனென்றே கூறுவாயாக.

லக்னம் சிங்கமாகவும் சூரியனும் சந்திரனும் ஒன்று கூடி யிருக்கவும், ஜெனன லக்னத்தையாவது ஷ சூரிய சந்திர ரையாவது சனி குஜன் கூடிப்பார்ப்பாராகில் அந்த ஜாத கன் குருடனாகப்போவான் ஷ லக்னத்தில் சூரியனிருந்து (அ) வேறு ராசியில் நின்று தன் சுய ராசியை நோக்குவா னாகில் அந்த ஜாதகனுக்கு மாலைக்கண்ணாகுமென்று சாஸ்திரங்கள் கூறும்.

## லக்கினம் கன்னி

ஜெனன லக்கினம் கன்னியாகவும் அவ்விராசியில் நற் கோட்கள் இருக்கவும் அந்த ஜாதகன் அரசர்களுக்குச் சமான முடையவனாகுவான் ஷ ராசியேஜெனனமாயும் அவ்விராசியில் சூரியன் இருக்கவும் 7-ல் நிற்கவும் அந்த ஜாதகனுக்குக் களத்திர அச்சமும் தோஷமும் கூறுக.

லக்னம் கன்னியாகவும் ஏழாம் ராசியில் குஜன் சுக்ரன் நிற்கவும் அந்த ஜாதகனுக்கும் களத்திர அச்சமுண்டாகும்.

அல்லது சனியும் குஜனும் கூடி ஷ 7 ஆம் ராசிலிருக்க அவனைப் பாவ கிரகங்கள் பார்க்க அந்த ஜாதகனை எந் நாளிலும் அண்டரோகம் என்னும் கொடிய வியாதி வாட் டும்.

லக்னம் கன்னியாயும் 8-ஆம் ராசியில் சனி வக்கிரம் பெற்றும் குஜன் பார்வையும் பெறறிருந்தால் ஜெனித்த இரண்டு ஆண்டினுள் கண்டமுண்டாகும்.

மேற்படி ராசியில் குரு நிற்கவும் அவனை சுக்கிரன் நோக்காதிருக்கவும் சந்திரன் பார்க்கவுமானால் 3-வருடத் தில் அரிட்டமுண்டெனக் கூறுக

லக்னம் கன்னியாகவும் 12-ல் சுக்ரனும் நின்றால் ஜெனித்த 6 வருடத்தில் கண்டமுண்டாகும் மேற்படி ராசி யில் குஜனும் அவனைச் சனி பார்க்கவுமானால் 8-ல் (அ) 12-ல் கண்டமுன்டாகும்.

லக்னம் கன்னியாயும் அவ்விராசியில் குரு நிற்கின் உடனே அரிட்டமுண்டு அக்கண்டமானது தவருமாயின் 12-ஆம் வருடம் கண்டமுண்டு.

மேற்படி லக்கினத்தில் ஜெனித்து கொடிய கிரகங்கள் பாராதிருப்பாராயின் புத்திரர்களால் அற்ப யோகமுண் டாகுமென்றுங் கூறுவாயாக.

லக்னம் கன்னியாகவும் அவ்வீட்டிற்குடையவன் பாவர் களுடன் சகிதம் பெறவும் ஜெனன லக்கினாதியை அட்ட

5

மாதி பார்க்கவும் அந்தஜாதகனின் வாலிப காலத்தில் ரத்த காசமென்னும் வியாதியால் தன் உயிர் விடுவான்.

லக்னம் கன்னியாவும் சந்திரன் குஜன் சுக்ரன் இவர்கள் கொடிய கிரங்களுடன் கூடி ஓர் ராசியிலிருக்க 7-ஆம் ராசியில் புதன் நிற்கவுமானால் அப்பிரப்பானது இரண்டு பெண் குழவியாக ஜெனிக்கு மெனவுங் கூறுவாயாக.

லக்னம் கன்னியாவும் முதல் திரிகோணத்தில் சனி நிற்கவும் 10-ஆம் வீட்டோன் ராகு (அ)கேதுவுடன் கூடி மேற்படி லக்னத்தை நோக்க அந்த ஜாதகன் சர்ப வித்தையால் ஜீவிப்பான்.

மேற் சொல்லியவைகளை 6-ஆம் வீட்டோனாவது எட்டாம் வீட்டோனாவதுபார்பானாகில் சர்பதோஷத்தால் மரமாகுவானென்றுங் கூறுக.

லக்னம் கன்ͤ யாயும் ரவி, குரு குஜன் இம்மூவருங் கூடியிருக்க அப்பிறப்பானது இரட்டைப் பெண்ணாகப் பிறக்கும்.

ஷ கன்னியாராசி ஜெனனமாயும் சுக்ரனுடன் சனியுங் கூடி கேந்திரம் பெற்றிருக்கவும் புதன் பார்க்கவுமானாலும் இரட்டை ஆண் பிறப்பாய் ஜெனிக்கு மெனவே கூறலாம்.

லக்னம் கன்னியாயும் 5-ம் ராசியில் குருவும் நிற்க அந்த ஜாதகனுக்கும் புத்திர தோஷமுண்டாகும்

மேற்படி லக்னத்தில் ஜெனனமாகி லக்னாதிபதி சுக்கிர வர்க்கம் பெற அந்த ஜாதகன் தரித்திரமுடையவனாகவே இருப்பானெனக் கூறுக,

## லக்னம் துலாம்

துலா முதயமாகவும் 8-ஆம் ராசியில் சனி செவ்வாயும் அவனோடு சூரியனுங் கூடியிருக்க, அவன் ஜெனித்த ஒரு மாதத்தில் கண்டமுண்டு.

ஜெனன ராசியில் கொடிய கிரகங்களிருக்கினும் பார்க்கினும், ஜெனித்த ஒரு வருடத்தில் கண்டமுண்டாகுமெனவுங் கூறுக,

துலாமுதயமாகவும் நான்காம் ராசியில் இராகுவும் அவனை சனி குஜனும் பார்ப்பாரேயாமானால் அந்த ஜாதகன். விஷத்தை யுண்பவனாவான்.

துலா மிரண்டாந்திரி கோணத்தில் ஜெனிக்கவும் விராசியை கொடிய கிரகங்கள் கூடிப்பார்க்கவுமானல் அந்த ஜாதகனைப் பக்ஷி தோஷம் சாரும்.

துலா முதயமாக குஜன் பாவர்க்கம் பெற்று நிற்க அந்த ஜாதகனுக்குப் புத்திர நாசமுண்டு, மற்றும் 6-ராசிகளின் பலன் 52-ஆம் பக்கம் பார்க்கவும்

மேடமுதல் லக்கினம் வரையும் லக்கின முதல் வரையும் எண்ணிய துகையால் பெருக்கி 27–ல் வகுத்து நின்ற நக்ஷத்திரத்திற்கு கீழ்கண்டவாறு மண்டலமரியவும்.

| நெ. | நக்ஷத்திரம் | மண்டலம் | நெ | நக்ஷத்திரம் | மண்டலம் |
|---|---|---|---|---|---|
| 1 | அஸ்வனி | தேவர் மண்டலம் | 14 | சித்திரை | அரக்கர் மண்டலம் |
| 2 | பரணி | நர மண்டலம் | 15 | சுவாதி | தேவர் மண்டலம் |
| 3 | கார்த்திகை | அரக்கர் மண்டலம் | 16 | விசாகம் | அரக்கர் மண்டலம் |
| 4 | உரோகிணி | நர மண்டலம் | 17 | அனுஷம் | தேவர் மண்டலம் |
| 5 | மிருகசிரம் | தேவர் மண்டலம் | 18 | கேட்டை | அரக்கர் மண்டலம் |
| 6 | திருவாதி | நர மண்டலம் | 19 | மூலம் | ஷை |
| 7 | புனர் பூசம் | தேவர் மண்டலம் | 20 | பூராடம் | நர மண்டலம் |
| 8 | பூசம் | தேவர் மண்டலம் | 21 | உத்ராடம் | ஷை |
| 9 | ஆயில்யம் | அரக்க மண்டலம் | 22 | திருவோணம் | தேவர் மண்டலம் |
| 10 | மகம் | ஷை | 23 | அவிட்டம் | ராக்ஷஸ மண்டலம் |
| 11 | பூரம் | நர மண்டலம் | 24 | சதயம் | அரக்கர் மண்டலம் |
| 12 | உத்திரம் | ஷை | 25 | பூரட்டாதி | நர மண்டலம் |
| 13 | அஸ்தம் | தேவர் மண்டலம் | 26 | உத்ரட்டாதி | ஷை |
| | | | 27 | ரேவதி | தேவர் மண்டலம் |

# மண்டல பலன் மற்றுமொரு விதம்

## இவை மண்டல பலனாகும்

நரமண்டல பலன் :—நரமண்டலத் ததிபதியின் திசை அல்லது புத்தி அந்திரம் காலசக்கிரம் இவைகள் வரின் அந்த ஜாதகனுக்கும் ஷ மண்டலம் பெற்றவருக்கும் வர்க்கத்தாருக்கும் நகை, நாணயம் சேர்தலும் தான் கோரிய எண்ணம் ஈடேறுதலும் ஆயுதங்களால் நல்ல லாபமும் லாவாதேவிகளில் நாணய சிலாக்கியமும் எடுத்த கார்ய அனுகூலம் பூமி லாபம் வெள்ளி லாபங்களும் அயிஸ்வர்ய விருத்தி தான்னிய சம்பத்து சுய ஜெனங்களால் மரியாதை களத்திர சுயசயன போகம் சினேகிதரால் விசேஷ அனுகூலம், தாயாதி ஜெனப்பகை நிவர்த்தி யாதல் பழய கால நோய் நிவர்த்தியாதல்; வித்தை யுண்டாதல் கை விட்டுப்போன பொருள் கைகூடுதல் ஆரோக்கியம் முதலிய பலனுண்டாகும்.

### அரக்கர் மண்டல பலன்

அரக்கர் மண்டலம் பெற்ற கோட்களின் திசைபுத்தி அந்திரம் சூக்ஷும பிராணகாலம் அவமிருத்து தோஷம் யதேச்சயாய் கிடைத்த கைப்பொருள் நஷ்டம் குடும்ப மூல வியாகூல தொந்தரவு வருமான விக்கினம் தாயாதி (அ) சுய ஜெனப்பகை தீவான் திரவஸ்து நஷ்டம் மனைவியால் சில இடையூறு பொருள் நஷ்டம், அபவாத நிந்தை காமாலை வீக்கம் விஷபேதி தேவாலயங்களுக்குச் சென்று அவமானப்படுதல், சயன விக்கினம் ராஜதொந்தரவு தாயாதி ஜெனங்களோடு அன்னிய தேசம் போக எத்தனம் மனஸ்தானத்தால் உயிர்விடவும் துணிதல், சகோதரர்களால் சல்லிய மூலமான தொந்தரவுண்டாதல், தீராப்பிணி இவைகளுண்டாதலுமாம்.

### தேவர் மண்டல பலன்

தேவர் மண்டலம் பெற்ற கோட்களின், திசை புக்தி அந்திரம் சூக்ஷமம் பார்வை சேர்க்கை காலங்களில் அவன் தரும் பலன்களாவன எத்தொழில் செய்யினும் லாபம், தீவாந்திர வஸ்துக்களா[illegible] தீர்த்தயாத்திரை

சென்று நல்ல சவுக்கியத்தோடு திரும்புதல், ஆபரண அனு கூலமும் சயன சந்துருஷ்டி யுண்டாதல், மனைவியாகூலம் நீங்குதல், மனைவியல் பொருள் சேர்தல் அயிர்வர்ய விருத்தியாதல் தனது வகையராக்களில் கலியாண சம்பவம் நடத்தல் தன் பூர்வ ஜன்மங்களாலேற்பட்ட சல்லியம் நிவர்த்தியாதல், அயிஸ்வர்யத்தைக் குறித்துச் செய்யும் வழக்கு ஜெயித்தல் தயாள குணமும் தானம் தருமம் பரோப கார சிந்தை யுண்டாதல், தேவாலயங்களுக்குச் சென்று புண்ணிய தீர்த்தஸ்நான முண்டாதல் தனவைசியாள் நேச முண்டாதலுமாம்.

அறிவிப்பு முன்பக்கத்தில் மண்டலவிபரம் கூறினோ மல்லவா இவை நவகிரகங்களுக்கும் உலகில் பிறந்த எல்லா ஜீவ சந்துக்களுக்கும் ஒரேவிதமான பொதுப்பல னாகும், கிரகங்கள் ஒன்றுக்கொன்று பார்வை சேர்க்கை யிடம் முதலியவைகளால் அவரவர்களின் குணம் மாறுபடு வதைப்போலவே மேற்சொல்லிய மண்டல பலனும் மாறு மாகையால்.

சோதிடர்கள் முதன்முதலாக கிரகங்களுக்குரிய குணம் இவ்வாருடையது பின்பு பார்வையால் இவ்வாறு மாரியது மூன்றாவது சேர்க்கையா லிவ்வாறு குணம் மேற்பட்டது எனவும் அக்காலங்களில் அஷ்டவர்க்க கணிதப்படி அந் தந்த வர்க்கத்தார்க்கு கெண்டாகால தோஷமின்றி யிருப்ப தனால் இவ்வித பலன் கிடைக்கும் என்பதை யாராய்ந்துச் சொல்லவேண்டும் மண்டலம் என்பது ஜெனன காலங்களில் அவரவர்களிருந்த க்ஷேத்திரத்தின் பெயரைக் குறிக் மிட மென்பவை முன்பே சொல்லியுள்ளேன்.

சைவனாகிய ஒருவன் நீச்ச குலத்தோன் வீட்டிலிருந் தால் அவன் சைவ ஆசாரத்திற்கு பலவித பின்ன முண்டா கும். இதுபோலவே நீச்சகுலத்தோ னொருவன் சைவன் வீட்டிலிருந்தால் தான் செய்யும் கொடிய செய்கைக்கெல் லாம் பலவிதமான இடையூருண்டாகும். அதைப்போலவே தேவர் மண்டலம் பெற்ற கோட்களின் திசை நடக்கும் போது அவனோடு அரக்கர் மண்டலம் பெற்றவனை விட மிகுந்த பலமுடையவனாகி மேற்சொல்லியவனுடன் சேர்ந்தோ அல்லது பார்த்தோ யிருப்பானாயின் அவன் தன் வலிவு குறைந்து நிற்பான் எதிரியின் பலமே நடக்கு மாகையால், சோதிடர்கள் ஒவ்வோர் விஷயங்களுக்கும் இவ்வாராலோசித்து விடை சொல்வதே தரும சாஸ்திர மாகும்.



இதுவன்றி ஏதேனும் ஒரு கிரகம் சொர்க்ஷேத்திரத் திலோ உச்சமாகவேயிருந்து விடுமாயின்.

உச்சமொன்றுடன் காலொன்னு கேந்திரம்
அச்சமுக்காலதி பதியோர் பலம்.
மெச்சநட்புக் கரைபால மிக்கால்
துச்ச நீசப் பலனெனச் சொல்லுமே.

என்ற வாக்கியப்படி உச்சக்ஷேத்திரத்திலிருந்த கிரகங்களுக்கு 1 கால் பலனும் கேந்திரங்களிருந்த கிரகங்களுக்கு 1 பலனும் பகை ஸ்தானத்திலிருந்த கிரகங்களுக்கு முக்கால் பலனும் ஆக்ஷி ஸ்தானத்திலிருந்த கிரகங்கட்கு முழுப்பலனும் நட்பு ஸ்தானத்திலிருந்த கிரகங்களுக்கு அரைப்பலனும் என்று வர்ணித்து விடுவது பொருந்தாது.

ஆக்ஷிஸ்தானத்திலிருந்த கோட்களுக்கு அவ்விராசியிலேயே மூலத்திரிகோணமென வருவதுணடு அப்படி மூலத்திரிகோணமின்றி ஆக்ஷியாயிருப்பினும் தான் பெற்ற ஆக்ஷி பலம் தன்னிடமிருக்கின்றனவா (அல்லது) வேறு கிரகங்கள் பரித்துக்கொண்டனராவென்று ஆராய்ந்து பலன் சொல்ல வேண்டும் இத்துடன் பகலில் பலமுடைய கிரகங்கள் பல இரவில் பலமுடைய கிரகமுள்ளன அவையாவன :—

சனி, சந்திரன் அங்காரன் இரவில் பலமுடையோர்
குரு, சூரியன், சுக்ரன், பகலில் பலமுடையோர்
புதனுக்கு எக்காலத்திலும் பலமாகும்,

என்றபடி பகலில் பிறந்த குழவிக்கு இரவில் பலமுடைய கிரகங்களின் பலமிருந்தாலென்ன அவைபயன் படா.

பகலில் தூங்குமொருவனுக்குப் பக்ஷி மேய்க்குந் தொழில் கொடுத்தாலாகுமா, அது போலவே பகலில் ஜெனித்தோர்க்கு பகலில் பலமுடைய ராசிகள் பலமும் இரவில் பிறந்தோர்க்கு இரவில் பலமுடைய ராசிகள் பலமும் வேண்டும்.

46-ஆம் பக்கத்தின் தொடர்ச்சி.

## துலாம்

துலாமுதயமாக 7-ஆம் ராசியில் செவ்வாய் நிற்கவும் அவனைக் கொடிய கிரகங்கள் பார்க்கவும், அவனுக்கும் களத்திரமானது விபசாரம் செய்யுந் தன்மையுடையதாகயிருக்கும்.

கேற் சொல்லிய லக்கினத்தை கொடிய கிரகங்கள் பர்ப்பாராயின் அந்த ஜாதகனுக்குப் புத்திர நாசமுண்டு.

மேற்படி ராசியில் குஜன் நிற்பானாகில் விபசார களத் திர மென்றுங் கூறுவாயாக,

## லக்கினம் விருச்சிகம்

விருச்சிக ராசியின் முதல் திரிகோணத்தில் ஜெனிக்க அவ்விராசியைக் கொடிய கிரகங்கள் நோக்கினும் பார்க்கி னும் அந்த ஜாதகனுக்கு நாற்கால் ஜிவன்களால் துன்ப முண்டாகு மெனவும்.

மேற்சொன்ன லக்னத்தின் முதல் திரிகோணமாகில் அந்த ஜாதகனுக்கு விடபயம் உண்டாகுமெனவுங் கூறு வாயாக,

லக்னம் விருச்சிகமாயும் அவ்விராசி கேழாம் ராசியில் தேற்பிறைச் சந்திரனுருக்க அவனை குரு பார்திருப்பான் அக்குழவி ஜெனித்த 8 (அ)9-ஆம் வருடம் அரிட்டமுண்டு.

மேற்படி ராசியில் சுக்ரன் சனி நிற்க அவனைச் செவ் வாய் முழுநோக்காகப் பார்க்க அந்த ஜாதகன் ஜெனித்த இரண்டாவ தாண்டில் அரிட்டமுண்டாகும்.

லக்னம் விருச்சிகமாயும் அவ்விராக்கு 5-9 என்னுமிராசி யில் குரு நிற்க குரு நின்ற ராசிக்கு 1-4-7-10-ல் செவ்வாய் நிற்க அக்குழவி ஜெனித்தவுடன் அரிட்டம் காட்டும்.

விருச்சிகத்திற்கு ஏழாம் ராசியில் சுக்கிரனிருக்கில் தன் களத்திரம் விபசாரமுள்ளதாகும்

7-ல் புதன் நிற்கில் உற்றார் நாசமெனவுங் கொள்க.

விருச்சிகக ராசிக்கு ஐந்து எட்டாம் ராசிக்குடையோர் சேர்த்து ஜெனன ராசியில் நிற்கில் அவனுக்கும் புத்திர நாச முண்டு, அன்றியும் களத்திர நாச முண்டு.

## லக்கினம் தனுசு

லக்னம் தனுசாகவும் அவ்விராசியில் குஜனிருக்கவும் அவனை சுபகோட்க்கள் நோக்குவரேல் அந்த ஜாதகன் ராஜாதி ராஜனாக யிருப்பான்.

மேற்சொன்ன ராசியின் முதல் திரிகோணமாகில் அந்த ராசியைக் கொடிய கிரகங்கள் பார்ப்பரேல் (அ) கூடுவரேல் அவனுக்கு விடபயமுண்டு.

மேற்படி ராசியே ஜெனனமாக 8-ஆம் ராசியில் புதனிருக்கவும் அவனைக்கொடிய கிரகங்கள் பார்க்க அவன் ஜெனித்த நான்காவதாண்டிலேயே அரிட்டமுண்டு, அவை தவறுமாயினும் அவனுக்காயுள் அற்பமேயாகும் மேற்படி ராசியின் நான் காந்திரிகோணத்தில் ஜெனனமும் சந்திரன் எட்டிலும் அவனோடு புதனும் சதி நோக்க குரு கேந்திரத்திருக்கினும் அற்ப ஆயுளேயாகும்.

மேற்படி ராசியே ஜெனன லக்னமாயும் எட்டாம் வீட்டோன் ஜெனன லக்னத்திலிருக்கவு,ம் அந்த ஜாதகனுக்கும் அற்ப ஆயுளேயாகும்.

## லக்னம் மகரோதயம்

ஜெனனம் கும்பமாயும் அவ்விராசியில் கேது நிற்கவும் ஏழாம் ராசியில் சந்திரனிருக்கவும் ஒன்பதாம் ராசியில் சனி 12-ஆம் ராசியில் சூரியனும் இருப்பானேயானால், அந்த ஜாதகன் இப்பூமியில் மிக்க சிறப்பு பெற்ற மன்னனாகயிருப்பானெனக் கூறுக.

மேற்படி ராசியின் முதல் திரிகோணத்தில் ஜெனனமாயும் அவ்விராசியில் தீய கிரகங்களிருக்க அல்லது பார்க்க அவனுக்கு மிருகங்களால் பயமுண்டெனவும் அவ்விராசியில் குருவும் 7-ல் சனி நிற்கவும் புகழ்ச்சியுடைவனாகவே யிருப்பானாயினும் களத்திர புரத்ர அற்பமும் தன் அந்திய வயதில் துக்கமும் துயரமுண்டாவதோடு கொடிய கஷ்டம் உண்டாகும்.

மேற்படி ராசியில் ஜெனனமாகி 7-ஆம் ராசியில் சந்திரனும் குஜனுமிருக்க அவனுக்கு களத்திரத்தாற் செல்வம் உண்டு சந்திரனுடன் சனி நிற்கில் அவனுக்கேற்படும் களத்திரம் தோஷமுண்டாகும் சூரியனும் இராகுவும் சேரில் அவனுடைய களத்திரத்தால் அவனுக்கு அவமானம் உண்டாகு மெனவுங் கூறுவாயாக.

மேற்படி ராசியில் ஜெனனமாகி சந்திரன் பாவ கிரகங்களுடன் கூகு 6-8-12 ஆம் ராசிகளிலே நிற்க அவர்களை குஜனும் சனியும் நோக்குவரேயாமானால் அந்த ஜாதகனுக்குப் பக்ஷி தோஷம் உண்டாகுமென்று சாஸ்திரங்கள் கூறும்

## லக்னம் கும்பம்

ஜெனன லக்னம் கும்பமாகவும் அவ்விராசியின் முதல் திரிகோணத்தில் ஜெனனமாகியும் (அ) இரண்டாம் திரிகோணத்தில்உதிக்கினும்அவ்விராசியைக்கொடியகோட்கள்

நோக்குவரேல் அவன் ஜெனித்த நான்கு ஆண்டின் அரிட்டமுண்டாகும்.

மேற்படி ராசிக்கு ஆறாம் ராசியில சுக்கிரனிருக்கில் ஆறாம் வருடத்தில் கண்டமுண்டு என்று சாஸ்திரங்கள் கூறும்.

மேற்படி ராசியே ஜெனனமாக சூரியன் ஆறாம் ராசியிலிருக்கவும் அவனுக்கு நான்காமாண்டிலேயே கண்டம் உண்டு.

கும்பமே ஜெனனமாகவும்அவ்விராசியைக்ஷீணசந்திரன் நோக்கவும் சந்திரன் இருந்த வீட்டோன் மேற்படி கும்ப ராசிக்கு பனிரெண்டாம் ராசியிலிருக்கவும் அந்த ஜாதகனுக்கு நீர் சம்பந்த வியாதியும் தூலதேகியுமா யிருப்பதோடு பகைவர் அதிகமுள்ளவனாகவே யிருப்பானெனவுங் கொள்ளவும்.

## மீன லக்கினம்

மீனராசியில் ஜெனிக்கவும் குரு ஏழாம் ராசியிலிருக்கவும் நான்காம் ராசியில் அசுபகிரகங்களிருக்கவுமானால். அந்த ஜாதகனுக்குக் களத்திர நாசமுண்டு.

ஷ ராசியே ஜெனனமாகி மூன்றாம் ராசியில் சூரியனிருக்க 10ஆம் ராசியில் சந்திரனிருப்பானேயானால் உடனே அரிட்டமுண்டு.

ஷ ராசியே ஜெனனமாக 5-ஆம் ராசியில் செவ்வாயும் மீனராசிக்குடையோன் மேற்படி செவ்வாயின் வர்கோத்துமம் பெறவும் அவன் ஜெனித்த நாளன்றே கண்டமுண்டு.

மூன்றாம் ராசியில் சூரியனும் சந்திரனுமிருப்பார்களேயாமானால் ஆறாம் நாளில் கண்டம் செய்யும்.

லக்னம் மீனமாகவும் எட்டாம் ராசியில் சூரியன் சனி செவ்வாய் இம்மூவரும் கூடியிருக்கின், அவன் ஜெனித்த ஒரு மாதத்தில் கண்டமுண்டு.

மேற்சொல்லியவர்களுடன் பாவக் கோட்கள் சகிதம் பெறவும் சூரியனால் பார்க்கப்பட்டு மிருந்தால், ஜெனித்த ஓர் வருடத்தில் கண்டமுண்டு.

ஷ ராசியே ஜெனனமாகி அவ்விராசிக்காறாம்ராசியில் சுக்கிரனிருக்கவும் ஜெனித்த ஆறாம் வருடம்அரிட்டமுண்டு

ஷெ ராசியே ஜெனனமாகிச் சந்திரனும் சூரியனும் கூடியிருக்க சுக்கிரன் ஏழாம் ராசியிலிருந்தாலும் ஜெனித்த ஓர் வருடத்தில் கண்டமுண்டு.

ஷெ ராசியே ஜெனனமாக சூரியனும் சந்திரனும் ஒன்று கூடியிருக்க அவர்களைக் கொடிய கிரகங்கள் நோக்கவுமானால் அந்த ஜாதகனுக்கு ஜலத்தால் கண்டமுண்டு.

ஷெ ராசியில் மூன்றாம்திரேகாணத்திலிருக்கவும்5-ஆம் ராசியில் கொடிய கிரகங்களிருக்கவும் அல்லது மேற்படி குரு தீறவர்க்கம் பெற்றிருக்கினும் புத்திரரில்லை என்க.

## அறிவிப்பு

இதுவரையில் ஒவ்வோர் லக்கின பலாபலன்களைக் கூறியுள்ளோம் கிரகங்கள் தனது ஆபந்தியத்தாலும் சேர்க்கையாலும் பற்பல விதமான பலனைத் தருவார்கள் அவை யாவள தீயகோட்கள் நற்பலனையும் சுபகோட்கள் தீயபலனையும் அளிப்பதும் சில மற்றும் கொடியோர் கொடிய பலனையும் சுபர்கள் நற்பலனையோ அளிப்பதும் சில நாம் தினசரி திசாபுக்தியாலும் அந்தர சூக்ஷும பிராணமென்கிற மூவகையாலும் பலனையறிய வேண்டும் போது அட்டவர்க்கம் கண்டிப்பாய் வேண்டும் அஷ்டவர்க்கமில்லாவிடில் சரியான காலத்தில் சரியான பலனையறிவது மிகவும் துற்பலம் இத்துடன் காலசக்கிர மண்டலம் சமயமென்கிறதையு மறிவது சிலாக்கியம்.

மண்டலம் என்றால் நவகோட்கள் ஜாதகன் ஜெனன காலங்களில் எவர்கள் மண்டலம் பெற்றான். என்பதை யறிவுதே யாகும் மண்டலம் என்பது மூவகை படும் அவை யாவன அரக்கர் மண்டலம், நரமண்டலம் தேவர்மண்டலம் என்பன இம்மூன்றினுள் அரக்கர், மண்டலமே சொடியதாகும் மற்றுமுள்ள இரண்டு மண்டலங்களும் சமயோசித பலனும் யோக பலனும் தரும் மண்டலமறிய வேண்டுவது எவ்விதமெனில் ராசிகளில் முதல் ராசியான மேடராசி முதல் ஜெனன லக்கினம் எத்தனையாவது ராசியாகிறது என எண்ணிக் கொண்டுஜெனன லக்கினம் முதல் நவகிரகங்கள் நின்ற ராசி வரையிலெண்ணி அத்துகையால் பெருக்கி நக்ஷத்திரங்கள் 27-க்கும் பங்கிட்டு மிகுந்த தொகைக்கு இன்ன மண்டலமெனக் காண்பதோயாகும்மண்டலம் என்பதையறிவது யோக பலனையும் திசாபுத்தியையும் விளக்கி காட்டுவதேயாகும். இவை பாகத்தில் கூறியது யோக மற்றும் மிகுந்துள்ளவைகளை இப் புத்தகத்தின் 47-ஆம் பக்கம் காணலாம்.

ஜெனன காலங்களில் ஒவ்வோர் கிரகம் எந்த ராசியில் இருந்தன வென்று காணும் முறை,

கிரகங்கள் ஒவ்வோர் ராசியிலும் சஞ்சரிக்கும் காலங் களை முன்னமேயே சொல்லியுள்ளேன் சோதிடர்கள் ஒவ் வொருவரும் முன் சொன்னபடி லக்ன ஸ்புடம் செய்து லக்ணத்தையறிந்த பிறகு பின்பு கிரகமடைக்கவும் ஒவ்வோர் கிரகங்கள் அவரவர்களுக்குறிய காலத்தை ஓர் ராசியில் கடக்கும்போது அவர்கள் 9 பாதங்களை கடக்க வேண்டும். அவையாவன இரண்டே கால் நக்ஷத்திர வீதம் ஓர் ராசியில் சஞ்சரிப்பார் இதையறிய வேண்டுவதெனில் கீழ்க்கண்ட வைகளை கவனிக்கவும்.

இவை கிரகங்க ளெனப்படும்

| | |
|---|---|
| வைகாசி, ஆனி, ஆடிக்கு | 57 |
| சித்திரை, ஆவணிக்கு | 58 |
| புரட்டாசி, பங்குனிக்கு | 59 |
| மாசி, ஐப்பசிக்கு | 60 |
| மார்கழி, கார்த்திகைக்கு தைக்கு | 61 |

இந்த வாக்கியப்படி மேல் வாக்கியத்தில் கீழ்வரும் வாக்கியத்தில் வாங்கிக்கண்ட சேஷத்தை கலையாக்கிக் காண்பதே [சந்திர கதியாகும் திக்குங் காரணத்துக்கும் சந்திர கதியில் சூரிய கதியை வாங்கி நாழிகையைக் காண் பதாம்.

அசுரமான மென்பது பூர்வ பங்குனி [பிரதமைத்திதி முதல் ஆறு மாதத்தைக் களைந்து அப்பால் ஆறு மாதம் கூட்ட வேண்டும் சகரமானத்துக்கு சிற்திரை முதல் 6- கூட்டவேண்டும்.

இவை 6-நாளைக் கோரி லக்கங் களைவதுங் கூட்டு வது மறிந்து சந்திரனுக்கும் சூரியனுக்கும் அகரமான ம்ரிவார்.

இவ்வாறு கணிதம் செய்வாராகில் கிரகங்கள் நின்ற நக்ஷத்திரபாத சாரத்தை யெளிதிலரியலாம் பிறகு கீழ் கண்டவாறு கிரகங்களை யமைத்து கொள்ளவும்,

| சக்கரம் | | | |
|---|---|---|---|
| பூரட்டாதி 1<br>உத்ரட்டாதி 4<br>ரேவதி 4<br>மீனம் | அஸ்வனி 4<br>பரணி 4<br>கார்த்திகை 1<br>மேடம் | கார்தீதிகை 3<br>உரோகணி 4<br>மிருகசிரம் 2<br>ரிடபம் | மிருகசிரம் 2<br>திருவாதிரை 4<br>புனர் பூசம் 3<br>மிதுனம் |
| அவிட்டம் 2<br>சதயம் 4<br>பூரட்டாதி 3<br>கும்பம் | இந்த கக்கரத்தில் நக்ஷத்திரங்களின் பக்கத்திலிருப்பது நக்ஷத்திரபாதகங்களைக் குறித்ததாகும் பஞ்சாங்கத்தைக் கொண்டு கிரக பாதசாரம் காண்போர் ஜெனன தேதிக்கு முன் தேதியிலேயே காணவும். | | புனர்பூசம் 4<br>பூசம் 4<br>ஆயில்யம் 4<br>கடகம் |
| உத்ராடம் 3<br>திருவோணம் 4<br>அவிட்டம் 2<br>மகரம் | | | மகம் 4<br>பூரம் 4<br>உத்திரம் 1<br>சிங்கம் |
| மூலம் 4<br>பூராடம் 4<br>உத்ராடம் 1<br>தனுசு | விவாகம் 1<br>அனுஷம் 4<br>கேட்டை 4<br>விருச்சிகம் | சித்திரை 2<br>சுவாதி 4<br>விசாகம் 3<br>துலாம் | உத்ரம் 3<br>அஸ்தம் 4<br>சித்திரை 2<br>கன்னி |

சோதிடர்களில் சிலரோ உச்சகிரகத்தையும் தாம்பூலம் தக்ஷிணையைக்கொண்டு முக்கால பலனையும் இனிவரும் ஜென்மத்தையும் கடந்த மூன்று ஜென்மங்களையும் விக்கின மின்றி சொல்கின்றனர். இதனாலேயே சோதிடம் நாளடைவில் பிரக்யாதி குறைவதோடு சோதிடரென வருவோர் நம்பத்தகாதவரெனவுங் கூறப்படுகிறது ஆதலால் ஒவ்வொருவரும் கிரக ஆராய்ச்சியை யறிந்து பலன் சொல்லுமாறு கேட்டுக்கொள்வதோடு கிரக பல பிண்ட கணிதங்களையு மரிந்துரைக்குமாறு தூண்டுகின்றன இனி திரேகாணம் காணும் விதம் கூறுவோம்.

## திரேகாண மறியும் விதம்

ஆடுகுதற் கடகவரை நான் சிராசிக்கும்
  ஆறிரண்டு திரேகாண மேட முதலாகும்
நாடுசிங்க முதலாக நான் கிராசிக்கும்
  நான்மூன்று திரேகாணம் தனுசுமுத நடக்கும்
தேடுதனு முதன் மீன நான் கோரைக்கும்
  திரேகாணம் பன்னிரண்டுஞ் சிங்கமுதற்சொல்லும்
தீடுசய முனியுரைத்த உத்திரவின் படியே
  நிறைநிறையாப் பகுத்தறிந்து நகழ்ந்தரிதல்நெறியே

மேடமுதல் கடகம் வரையிலுள்ள நான்கு ராசிகளுக்கும் மேட முதலாகவும் சிங்கமுதல் விருச்சிகம் வரையிலுள்ள நான்கு ராசிகட்கும் தனுசு முதலாகவும் தனுசு முதல் மீனம் வரையிலுள்ள நான்கு ராசிகளுக்கும் சிங்க முதலாகவுங் கொள்வதென ஜெயமுனி யுரைத்த வாக்கியப்படி ஜெனன லக்னத்தின் நாழிகையை மூன்றாகப் பகிர்ந்து குழவி யுதித்த பங்கு எவையோ அதனை, மேடம், ரிடபம், கடகம் மிதுனத்திற்கு மேடமுதலாயும் சிங்கம், கன்னி, துலாம், விருச்சிகத்திற்கு தனுசு முதலாயும் தனுசு, மகரம், கும்பம், மீனத்திற்கு சிங்க முதலாயும் ஜெனித்த பாகம் வரையில் கண்டு கொள்க.

உதாரணம் கன்னியா ராசியில் சென்ற நாழிகை 2. இருப்பு நாழிகை 3-ல் ஜெனனமாயின் கன்னியா ராசிக்குரிய நாழிகை 5-ஐ 3 பேருக்குப் பங்கிட நபர் ஒன்றுக்கு நாழிகை 1-வினாடி 40 ஆகும், கன்னியா ராசியில் சென்ற நாழிகை 2-ஆகையால் மேற்படி 1-40 போக இரண்டாம் திரேகாணத்தில் சென்ற நாழிகை 0 வினாடி 20 நீக்கி

இரண்டாந் திரேகாண இருப்பு 10 ஆகையால் இரண்டாந் திரேகாணத்தில் உதித்ததாய்க் கொள்ளவும் இவ்வாறே மற்றுமுள்ள ஜாதகங்களுக்குக்கொண்டு 1·ஆம திரே காணம் 2-ஆம் திரேகாணம் மூன்றாந் திரேகாணம் என ஒவ்வோர் ராசிக்கும் கீழ்கண்டவாறு பலன் சொல்லுக.

## மேடம் 1-ஆம் திரேகாணம்

கருத்த சரீரமுடையவன் இரத்தக் கண்ணன், தான் செய்யுங் காரியத்தில் பிடிவாத முடையவன், வெள்ளை வஸ்திரங்களின் மேல் பிரியமுடையவன் முன்கோபி கருத்த உரோமமுடையவன் தீரன்.

## ஷை 2-ஆம் திரேகாணம்

சாப்பாட்டிற் பிரியன் ஸ்ரீ தேகவர்ணன் இரத்த நிரவஸ் நிராபரணப் பிரியன் நீண்டமுகம் குறைவல்லாத தேக முடையவன் ஆபரணங்களைப் பூண ஆசையுடையவன் ஸ்ரீ களைப் போல் பேசவும் ஆடவும் பாடவுமுடையவன்.

## மேற்படி 3-ஆம் திரேகாணம்

புருட திரேகமும் பொன்னிற தேகமும் சிவப்பு வஸ்திரப் பிரியன் சகல காரய வல்லமையுடையவன் குரூர காரியங் களைச் செய்பவன் தான் செய்யுங் காரியங்களில் வாஞ்சை யும்] [ஆசையையுமுடையவன் விரதங்களைச் சிதைக்க ஆசைப்படுபவன் எனவுங் கூறுவாயாக.

## ரிடபம், முதற் றிரே காண பலன்

முதற்றிரே காணத்திற்கு பெண் எனவும், அக்கினியால் வெந்த புடவையும் கும்பத்தை ஏந்தி நிற்கும் தன்மையும் திரண்ட பசிதாக முடைய தெனவும், ஆபரணங்களில் ஆசையும் நெற்றிக்கு மேலும் சுருண்ட ஆபரணமும் பேய் பிடிக்குந் தன்மையுஞ் சுருண்ட உரோமமும் உடையதெனக் கூறுவாயாக.

## மேற்படி இரண்டாந் திரேகாணம்

ரிடபத்தைப் போன்ற உருவமும், ஆணுருவமும் சதுர மான முகமும் வலது கையைத் தூக்கியதெனவும் கலப்பை வண்டி கூரான ஆயுதமும், தான்னியம் பசு இவைகளை யுடையதும், அளவில்லாத பெருமையுடைய விந்தையும் நெடிய பசியுடைய தெனவுங் கூறுக.

## மேற்படி மூன்றாந் திரிகோணம்

மதயானையைப் போன்றதும் மாகாதர நோயுள்ளதும் நொண்டித்தனமும் புருடனும் வியாகூல நெஞ்சமுடையதும் எக்காரியத்திலும் சந்தேகமுடையதும் வறுமையுடையதும், அடிக்கடி பேசுந்தன்மையுடையதும் எனக்கூறுக.

## மிதுனம், முதற் றிரேகாணம்

பெண்ணுருவமுடைய அழகிய ஸ்தனபாரங்களையுடையதும், அறிய நூற்களை வாசிக்க எண்ணமுடையது ஆயுதம் பழக்குவிக்க எத்தனமுடையதும் நீண்ட நாள் வாழ்ந்திருக்கக் கூடியதும் புத்திர சந்தானங் குறைந்தும் அபாயகரமான காரியங்களில் பிரவேசிக்குந்தன்மையுடையதுமாம்.

## மேற்படி இரண்டாந் திரேகாணம்

அழகிய பெருத்த சரீரமுடைய புருட உருவமும் வருணனைப்போன்றே அழகிய நிறமும் பெருத்த சம்பத்தோடு றொக்கதனமும் உயர்ந்த ஆபரணங்களைப் பூண்பதும் தான் பேசியகாரியத்தில் ஆசையுடையவனாகவும் எக்காலமும் நடந்து கொண்டே யிருக்கப்பிரியமுடையவனாயும் இருப்பான்.

## மேற்படி மூன்றாந் திரேகாணம்

புருட உருவமும் அழகிய சரீரமும் இளைய வயதிலேயே ஆபரணங்கன் மேல் ஆசையும் தனம் சேகரிக்க எண்ணமுடையதும், தனது வர்க்கமூலமான உபகார முடையவர்களும் தன் வாழ் நாட்களை சந்தோஷத்தோடேயே கடத்துதலும் எண்ணிறந்த வாகனமும் ஆளடிமைகளை யுடையதும் தீராத சந்தோஷம் உடையவனெனக் கூறுக.

## கடகம் முதற் றிரேகாணம்

யானைப்போன்றே பெருத்த சரீரமுடையவனும், வனங்களில் சஞ்சரிக்கப்பிரியமும் நன்றாய்க் கஷ்டப்பட்டு ஜீவிக்கத்தக்க எண்ணமும் புருசிரூபமும் கந்த மூலங்களைப் புசிப்பதில் மிக்க பிரியமும் நானாவிதமான தொழிலைக் கற்பவனும் அயிஸ் வர்ய விருத்திமுடையவனுமாம்.

## மேற்படி இரண்டாந் திரேகாணம்

பெண்கள் லீலாவினோதமும் சமர்த்தும் சவுரிய வீர பராக்கிரமமும் வேலான அதிகாரிகளால் சுகத்தை யனுபவிக்கத் தக்கவனும் உன்னத கௌர்ணமயமான மாடிகளி

லேயேவசிக்கும் குணமும் வாலிபத்திலும் விருதாபியத்திலும் கொஞ்சம் வறுமையாளனுமாம்.

## மேற்படி மூன்றாந் திரேகாணம்

இராஜாக்களையொத்த அழகும். பொன்னாபரணங் களையணிந்து கொள்ளும் ஆசையும் ஓடம், தோணி தெப் பம் முதலியவற்றிலேச் செல்ல ஆசையும் தயவு தாக்ஷண்ய சிந்தையும் அன்னிய தேசங்களில் சென்று கஷ்டப்படத் தக்கவனுமாம்.

## சிங்கம் முதற் திரேகாணம்

முதுகில் கூறுடையவனும் அறிய பெரிய நூற்களை வாசிக்க இஷ்டமும் சமமான உயரமும் யாவரையும் ஜெயிக் கும் வல்லமைசாலியும் சிங்கத்தைப் போன்ற வீராவேசமும் சேவகத்தொழில் செய்து ஜீவிக்கத் தக்கனுமாம்.

## மேற்படி இரண்டாந் திரேகாணம்

உன்னதமான் வீடும் வாகனங்களும் நிலத்தை உழுது பயன்படுத்தி வாழத்தக்கவனும் நல்ல சம்பத்துடைய களத் திரமும் நீண்ட ஆயுள் விருத்தியும் பருத்த தொந்தியும் சிறுத்த கால்களுமுடைய புருடனும்; தான் கொண்ட எண் ணத்தை முடிவுக்குந் தீரமுடையவனுமாம்.

## மேற்படி மூன்றாந் திரேகாணம்

அன்னியதார இச்சையும் வருணத் திக்கில் சில கஷ்டங் களுண்டதாலும், எவர்களுந் தனக்குப் பகைவராகவே காணப்படுதலும் எந்நாளிலும் தன் குலமங்கை மீது பழி சொல்லத் தக்கவனு சிவார்ஜனை செய்பவனுமாம்,

## கன்னி முதற் திரேகாணம்

பெண்ணிற் சிறப்பு பெற்ற அழகும் தீர ஆலோசித்தே ஓர் காரியத்தைச் செய்யுந் தன்மையும் தன் நாயகனிடம் வாஞ்சை யதிகம் சுய ஜனங்களால் சந்தோஷமும் சவுக்கிய மும் உண்டாதலும் எவ்வன பருவ காலத்தில் சில கஷ்டங் களும் உண்டாகு மென்பதாம்.

## மேற்படி இரண்டாந் திரேகாணம்

உடலும் முழுதும் உரோமமும் கருத்த தேகமும் கருத்த வஸ்திரத்தின் மீது நீண்ட பிரியமும் தான் கொண்ட எண் ணத்தை முடிக்குவரை அடுத்து முயற்சி செய்தலும் பரோப காரமில்லாமையும் உயர் தர பதவி வாய்ந்தவனு மாவான்

## மேற்படி மூன்றாந் திரேகாணம்

சிவந்த தேகமும் எக்காரியமும் ஜெயம் செவதில் மிக்க சாமர்த்திமும் விஷ்ணுபக்தி நிறைந்தவனும் இளம் பிராயத் திலேயே நல்ல யோகத்தை யனுபவிக்கத்தக்கவனும் உயர்ந்த நெடிய மூக்கு பருத்த தேகியுமாம்.

## துலாம் முதற் திரேகாணம்

இருமாப்புடைய பேச்சுவார்த்தையும், றொக்கதனமும் பெருத்த சரீரமும் உபவாச மிருப்பதில் மகா வல்லவனும் தீரா நோயாளனும் அடிக்கடித்தன் பணத்தைச்சிலவு செய் வோனும் இடபேதக வாசமுனடயவனும் உயர்ந்த நெடிய மூக்குடைய வனுமாம்.

## மேற்படி இரண்டாந் திரேகாணம்

பெண்களைப் போன்ற தேகனும் பெண்களைப் போல வே பேசி நடிக்குந் திரனும் சிரிப்பதில் பிரியனும் உல்லாச மான ஏளனமொழிகளைப் பேசுபவனும் அறிய நூற்களை வாசித்து அதனின்றிருக்கும் விஷயங்களை யாராய்ச்சி செய்பவனுமாம்.

## மேற்படி மூன்றாந் திரேகாணம்

தராசுத் தொழில் செய்வதில் பிரியனும் உண்மையாள னும் உயர்தரப் பதவியையுடையவனும் பெண்களிடத்திலே யே தன் காலத்தைக் கழிக்க ஆசைப்படுவோனும் ராஜாக் களிடம் சேவகத் தொழில் செய்பவனும் ஆவான்.

## விருச்சிகம் முதற் திரேகாணம்

கொடிய வார்த்தைகளைப் பேசுபவனும் ஜீவர்களை யும் சிக்க ஆசையுடையவனும் தன்னிச்சையாய் நடந்து கொள்பவனும் தீராத அலைச்சலையுடையவனுங் காலை மாலை கடவுளை வணங்கு வோனும் அர்த்தலாபமு முடையவன்.

## மேற்படி இரண்டாந் திரேகாணம

சன்மார்க்க குணயில்லாதவனும் தன் இஷ்டம் போல் சிலவு செய்பவனும் தீராத கோபியும் உயர்தர பதவியிலே யே யிருக்க ஆசைப்படுவோனும் சமயத்திற்கேத்த பேச்சு வார்த்தைகளையுடையவனும் அயிஸ்வர்யவானுமாம்.

## மேற்படி மூன்றாந் திரேகாணம்

உண்மையாளன் தருமம் செய்ய ஆசைப்படுவோன் கருமி சயன சுகமுடையவன், பெண்களின் சுகங்களின் மேல் இச்சை யில்லாதவன் அனாதைகளை. யாதரிக்க எண்ணமுடையவன் ஒன்று மறியாதவன் தீராத விசன முடையவன்.

## தனுசு முதற் றிரேகாணம்

பிராமணரைப்போன்ற சைவமுடையவன் பிராமணரிடமே நேசம் செய்பவன் நீண்ட ஆயுளும் றொக்க தனமும் எக்காரியத்தைச் செய்யினும் பொருள் சம்பாதிக்கும் இஷ்டத்தோடேயே செய்பவன் ஆலஸ்யமான புத்தியை யுடையவன் கோபி,

## மேற்படி இரண்டாந் திரேகாணம்

மத்திப தனமும் அந்நிய் வயதில் வறுமையுடையவனும், சிவாலய தரிசனை செய்ய ஆசையுடையவனும், முக விசால முடையவனும் முன் கோபியும் தன் இனத்தவரைச் சேராது வாழ்பவனும் சுய ஜெனங்களால் தொந்தரவுடையவனுமாம்.

## மேற்படி மூன்றாந் திரேகாணம்

புருடனில் மிக்க அழகு பொருந்தியவனும் மத்திய அன்னம் புசிப்போனும் அகட விகட வார்த்தைளாட வல்லவனும் விகடக்கதைகளை ஜோடித்தெழுத வல்லவனும் சமரச தனமும் ஏகபத்தினி விரதனுமாகுவன்.

## மகரம் முதற் றிரேகாணம்

கொடியவர்களிடம் நேசம் செய்யவனும் உண்மையை யுரையாதவனும் அங்குசத்தில் மருவுடையவனும் சுய பந்துக்களால் அவமானமடைய வல்லவனும் சுய ஜனச்சேர்க்கை யில்லாதவனுமாம்.

## மேற்படி இரண்டாந் திரேகாணம்

அரச சேவையும் ஆயுள் விருத்தி நீண்டநாள் ஸ்ரீ போக யிச்சை கொடியோர் நேசம் சயன சுகம் பொய் பிரட்டல் செய்தல் உருவ பங்கம் தீராப்பிணி அனேக களத்திரம் சமயத்திற் கேற்ற பேச்சு வார்த்தை யுடையவன்.

## மேற்படி மூன்றாந் திரேகாணம்

கருத்த தேகமும் கட்குடித்தலில் சிறந்தவன் தன் வாழ் நாட்களைப் பற்றி சிந்தியாதவன் உயர்தர பதவியுடைய வனாயினும் களத்திர யீனன் புத்திர துவேஷமுடையவன் ஒருவாறு தன் மனதைத் தேற்றிக் கொள்பவன்.

## கும்பம் முதற் றிரேகரணம்

உதவியாளரில்லாதவன் உண்மையை யுரையாதவன் நேத்திரரோகி சயன போகங்களில் யீடுபட்டவன் சமநிற தேகி சம்பத்துடையவன் சன்மார்க்மில்லாதவன் உயர்ந்த நெடிய திரேகமுடையவன் சரணாகதி யடையவன்,

## மேற்படி இரண்டாந் திரேகாணம்

குற்றமில்லாத நெஞ்சமுடையவன், குசேலன் பெரியோர் களால் நன்கு மதிக்கப்படுபவன் ஆபரண விருத்தியையுடை யுவன் குறவரிடம் நேசம் செய்பவன் வாலிபத்திலும் இளைய வயதிலும் பெருத்த சம்பத்தை யுடையவன்.

## மேற்படி மூன்றாந் திரேகாணம்

பெண்களைப் போலொத்தவன் தயிரன்னம் புசிக்கப் பிரியன் உண்மைமொழியே பேசுபவன் உரவு செய்வோர்க்கு நன்மை செய்ய ஆசைப்படுபவன், உயர்தர ஞானி ஒன்று மறியாதவன் உலகோபகாரி.

## மீனம் முதற் திரேகாணம்

நெடுநாள் கஷ்டப்பட்டு விசேஷதனத்தைக் சம்பாதிப்ப வன் யாவரையும் சமமாகப்பாவிப்பவன் உருவத்தில் நிறைந் தவன் சைவபோஜனப்பிரியன் தனது வாழ்நாள் யாவம் சந்தோஷத்திலேயே கழிப்பவன் ஆயுத அப்பியாசி.

## மேற்படி இரண்டாந் திரேகாணம்

சிலநாள் அலைச்சலும் சிலநாள் சுகத்தையுமுடைய வன் உற்றார் பெற்றோரிடம் ஒன்றுஞ்சொல்லாதவன் ஒரு போக்கான எனனமுடையன் அரிய சாஸ்திரங்களை வாசித்து அதனின்றிருக்கும் விஷயங்களை ஆராய்ந்துபார்ப் பவன்

## மேற்படி மூன்றாந் திரேகாணம்

இருதார முடையவன், பொருளைச் சம்பாதித்து சிலவு செய்பவன், கொடியோர்கள் நேசமில்லாதவன், குறவர்

பக்திமான் சாஸ்திர நிபுணன் யாவராலும் மதிக்கப்பெற்ற வன், தயாதி ஜெனனமில்லாதவன் அந்தியில் யோகமுடை யவன்.

## அஷ்டவாக்கு

அஷ்டக வர்க்க மென்பது தானே
யாதித்தன் சந்திரன் செய்வா
யிட்டமாம் புந்தி பொன் புகர்சனிய
னிலக்கினத்துட னெட்டு வகையி
வட்டவான் புவிமே வட்டக வர்க்கம்
வகுத்தனர் வகுத்ததைக் கூறிக் கூறிற்
ரிட்டாமா மிராசி பணிரெண்டிற் கோட்கள்
சேரிட முறைமையி வைத்தே (1)
வத்திடுஞ் கோட்களே ழுக்குமான
வாக்கிய முறைப்படி தானே
தொகுத்திடும் வகையு மிகுதிரிகோண
சோதனை சோதித்துப் பின்னர்
பகுக்கு மேகாதி பத்தியம் செய்து
பண்புற் றகத்த பிண்டத்தை
மிருக்கு மோரைக்குங் கிரகங் கடனுக்கு
முயன்குணா காரமே யிசைப்பார்.

என்ற ஆன்றோர் வாக்கியப்படி சூரியன், சந்திரன், செய் வாய் புதன் குரு. சுக்ரம், சனி லக்கினம் ஆகிய எண்மரின் வர்க்கத்தைக்கொண்டே ஜாதகம் கணிக்க வேண்டு மாகை யால் அட்ட வர்க்கம் என்றனர் இவர்கள் ஜெனன ஜாதகப் படி எந்தெந்த ராசியிலிருந்தார்களோ அவ்வாறே கிரகங் களை நிருத்தி, சப்த கிரகங்களுக்கும் குறித்திருக்குங் கீழ் கண்ட வாக்கியபடி 12 ராசிகளிலும் அமைத்து ய்முதாய மெனக் கண்டும், பின்னர் திரிகோணம் ஏகாதிபத்தியம் எனவுங் கண்டு நேர்ந்த சுத்த பிண்டத்தை கிரகங்களுக்கும் ஜெனன கால ஓரா நாதனுக்குத் தக்கபடி அந்த வர்கத் தார்க்கு பலன் சொல்லவேண்டுமெனக் கூறியபடியால் சோதிடர்கள் ஒவ்வோர் கிரகங்களுக்குங் குறித்திருக்கும் எண்கள் அந்த கிரகம் நின்றது முதல் குறித்த எண்ணின் ராசியிலொன்றுளனவும் மற்றும்வரும்எண்களுக்கும்கிரகளுக்குங்

கொண்டு சமுதாயமென்னும் 12 அறைகளையுடைய சக்கர தில் அடைத்துப் பின் திரிகோணம் ஏகாதி பத்தியமெனக் கொள்ள வேண்டும் அட்டகவர்க்கம் என்பது எட்டுவர்க மெனவும் கூறினேனாகையால், அந்த வர்கம் என்பது அந்த ஜாதகனின் வர்க்கத்தரைக் குறித்ததாகக் கொள்ளவும் இதன் விபரம் முதல் பாகத்தில் மிக்க தெளிவாகக் கூறியுள்ளேன்.

சோதிட ஆ ான் இரண்டு பாகம் வரையில் சோதிடம் கற் ா முயல்வோர்க்கு வேண்டிய முக்கிய வழிகளும் பாவ பலன்கள் சொல்லவேண்டிய தீர்மானங்களும் வெகுவிரியாய் கூறியுள்ளேன் இங்கு மூன்றாம் பாகத்தில் பாவபலன் சொல்லும் உதாரணமும், திசை புக்தி பலனையும் கூறுவோம்.

## பிதுர்

பிதுர் என்பது தந்தை தகப்பன், என பல பொருள்கள் படும். பிதாவிற்குறிய பலன்யாயும், தா ன் எவரிந்திரியத்திற்கு உற்பவித்தார்களோ அந்த பிதாவேயடைவாரென்பது திண்ணம் இதன் மூலமாக சந்தேகங்களுக்கு பதில் சொல்ல அநேக சாஸ்திரங்கலிடமுண்டு. இவ்வாறு மாதாவுக்கும் சொல்லவேண்டும்.

ஆதலால் சே திடர்கள் ஜெனித்த குழவிபானது எவ்வாறு உதித்ததென ஆராய்வது முக்கிய கடமையாகும் இதற்காகவே முன் கூறிய இரண்டு பாகங்களிலும் நக்ஷத்திர ஸ்புடம் லக்னஸ்புடம் முதலியவைகள் கட்டாயம் செய்யவேண்டுமென வற்புருத்தலாயிற்று.

பிதாவின் பலன் விபரங்களை யாராயுமிடத்துபிதாவின் சகோதர சகோதரி மூலமான விஷயங்களையுமாராய்ந்தே தீரவேண்டும்.

ஒன்பதாமிடமான பிதுருஸ்தானத்தாலும் ஒன்பதாம் வீட்டிற்குடையவனிருக்கும் தன்மையாலும் ஷ வீட்டிலிருக்கும் கிரகத்தின் தன்மையாலும் மற்றும் பார்வை முதலியவைகளாலும் பிதாவின் பலனையுரைக்க வேண்டுமென முன்பே கூறியுள்ளேனாகையால் இங்கு பிதாவின் கெண்டகால விஷயங்களையாராய்வோமாக.

பிதாவின் கெண்டா கெண்டங்களையறிவதற்குமுக்கியமாய் அஷ்டக வர்கம் வேண்டும் (அதாவது) சூரியன் அஷ்ட கவர்க்கமேயாம்.

சூரியன் அஷ்டகவர்க்கில் கெண்ட கெண்ட காலபிந்து ஏவ்வாறேற்படுகின்றனவோ, அவ்வெண்களுக்குறிய நக்ஷத்திர ராசியில் சனிவாசம் செய்யுங்காவம் பிதாவிற்கு கெண்டமுண்டாகுமென முன்பே கூறியுள்ளபடி ஷெ கெண்டாந்த ராசிகளில் சனியோ அல்லது மற்றும் கொடிய கிரகங்களோ வாசஞ்செய்யுங்காலம் எவர் திசைபுக்தி நடக்கிறதென ஆராயவேண்டும்.

எவ்வாரெனில் ஜெனனலக்கினத்திற்கு அதாவது ஜாதகன் சூதக கர்மம் செய்யத்தக்க திசை அல்லது புக்தியா

ஜாதகனுக்கு சூதககர்மம் செய்யத்தக்க திசையாயின் அவை யாருக்குச் செய்யும் என்பதை ஆராய்ந்தரிதல் வேண்டுமாகையில் பிதாவுக்கா அல்லது பிதாவின் வர்க்கத்தாருக்கா என இவ்விதங்களாய் ஆராய்ந்துபார்க்கவேண்டுமென சோதிடர்களின் மனதில் வற்புருத்துகிறேன்.

இவ்விதம் ஆராய்வோமாயின் உண்மை விஷயம் வெளியானதோடு திசைபுக்தியையும் கவனிக்க வேண்டியதாகிறது.

பிதுர் லக்கினத்திற்கு 2, 8, 12-ஆம் வீட்டிற்குடையவன் திசை பிதாவுக்கு மாரகுமெனக் கூறியிருக்கிறது.

மேற்சொன்னபடி 2, 8, 12-ஆம் வீட்டோன் திசை நடக்கினும், அதுகாலம் சூரியன் அஷ்டகவர்க்கபடி கெண்டாந்த ராசிகளில் சனி முதலிய கொடிய கோட்கள் வாசஞ்செய்கின்றனரா வென்பதை கவனிக்கவேண்டும் இவ்வாறே மற்றுமுள்ள வர்க்கத்தாற்கும் பிரித்துச்சொல்வதே கெண்டாந்த காலங்களை உண்மையி லரியவாமென்பதற்குச் சிறிதேனும் ஐயமில்லை.

## புக்தி பலன்

புக்தி பலனைச் சொல்லுகையால் விசேஷமாய்ப் பாவ பலன்களை யனுசரித்தே தீரவேண்டும் திசா நாதனும் புத்தி நாதனும் சுபர்களாயின் சுப பலனென்றும் அசுபர்களாயின் அசுப பல னென்றும் எண்ணுவது கூடாது.

ஒவ்வொரு திசா புக்தி நாதர்களும் தான் தரும் பலன் சுபாசுப தாரதம்மியமுள்ளதோடு அவரிருக்கும் பாவபலம் சேர்க்கை பலம் பார்வை பலம்முதலியவைகளையொட்டியே பலன் நடக்கும் இதற்கடுத்தாப்போல அக்காலங்களில் கெண்டகால நக்ஷத்திரமின்றி குரு நற்க்ஷேத்திரங்களில் வாசம் செய்வாயின் இன்னும் விசேஷ பலனும் துற்க்ஷேத்திர வாசகாலம் கொடிய பலனும் நடக்கும் இவ்வாறு பிரித்தே புக்திபலன் சொல்லவேண்டுவது அவசியமாகும்.

## (சூரிய திசை)

சூரியன் திசை ஸு 6-ல் தன் சுயபுக்தி மீ 3-நாள் 18-க்கு நடக்கும் பலன் மன்னரால் பகை. குரோதமுண்டா தல் மனைவியால் பலவித வியாகூலமும் மனைவிக்கு கெண் டாதி கெண்டங்களுண்டாகுதலும் மார்பு நோயுண்டாத லும், முக ரோகமுண்டாதலும் குன்ம ரோகமும் பல்வலி யுண்டாதலும், தன் பந்துக்களால் பகையுண்டாதலும் தன் ஊரிலுள்ள ஜனங்கள் விரோதமாகுதலும் சுரம் காட்டுதலும், சிலேதம ரோகமுண்டாகுமென்வுங் கூறுவார்.

அறிவிப்பு:—சூரியன் மகா திசையில் சூரியன் சுய புக்திக்குறிய பொதுப்பலனை யிங்கு கூறலானோம் ஆயி னும் சூரியன் திசைக்கு போதகன் வேதகன் பரசகன் காரகர் முதலியோர் பின்வரும் புத்திகளில் காணலாம் அவை சூரியனுக்குறியோர் யார் எனவுங் காணவேண்டும்.

மேற்படி சூரியன் ஜெனன லக்கினத்திற்கு யோகத் தைத் தருவோனாகவும் ஜெனன ராசிக்கு 1-4-7-10-ல் யிருப்பானேயானால் மேற்படி துற்பலன் நீங்கி நற்பலனே விளைவிப்பான் ஏனெனில் கொடிய கிரகங்கள் கேந்திரம் பெரின் நற்பலனென சாஸ்திரங்கள் கூறுவதனாலென்க மேற்படி 14-7-10-லிருப்பனேயாமானால் மன்னரால் அனு கூலம் பிதுர் ஜனக் கூட்டுறவு செய்தொழில் விருத்தி எடுத்த காரியம் அனுகூலமும் தெய்வ பிரார்த்தனை நிறைவேறு தல் முதலிய பலனும்.

5 9 என்னுமிடங்களிலிருந்தால், தன மூலமான வழக்கு பிதாவுக்கு ஜாட்டியம் பகைதுவேஷம் எத்தன காரிய பின் னம் முதலியவைகளும் 6-8-12லிருந்தால் மனவியாதி உஷ்ண நோய் இடம் விட்டுப் பேறுதல் இன்னும் பற்பல அசௌக்கிய பலனே யுண்டாகும்,

## சூரியன் மகா திசையில் சந்திரன் புக்தி மீ 6-க்கும் பலன்

உத்தியோக முதலிய செய்தொழில் லாபம் உத்தியோக முதலிய சேவகா விருத்தி ஆடையாபரண அலங்ருதம் சயன மூல சந்தோஷம் தனது களத்திரத்தால் சந்தோஷம்தீவா ந் திர பொன் பொருள் சேர்க்கை, வெகுமானம் செய்தொழில் பலித முதலியவைகளுமாம்.

மேற்படி சந்திரன் க்ஷீண சந்திரனும் 14-7-10-லிருந் தால் புத்தி குரைச்சல்மனஸ்தாபம்தாபஜுரம்சீதனசம்மந்த

யொதி செய்தொழில் மூலபலித குறைவு தனது மாதுர் ஜனப்பகை உத்தியோகம் செய்யுமிடத்தில் தொந்தரவு முதலியவைகளுண்டாம்.

5-9 என்னு மிடங்களி லிருந்தால், கொடியோர் நேசம் நட்பினால் பொருள் சிலவு மனஸ் தாப கரரியங்களில் தலையிதில் தேவபிராமணாள் துவேஷம், ஆயாசம் கிரு சிரும்பு சயன சந்தேகம் இவைகளும்,

6-8-12 லிருந்தால் கொடிய பகை சீதன சம்மந்த பிணி குடும்ப கூலமான பிணி பீடை தேவாலயங்களுக்குச் சென்று கஷ்டப்படுதல் இடபேதக வாசம் முதலியவைகளும் உண்டாகும்.

## சூரியன் மகாதிசையில் குஜன் புத்தி மீ 4 நாள் 6-க்கு பலன்

பகை தொந்தரவு, கன்று காலி நஷ்டம், நெருப்பினால் பயம், அன்ன துவேஷம் மனைவியால் பலதொந்திரவ உண்டாகுதல் தேவாலயங்களில் சென்று கொடிய கஷ்டமுண்டாதல் ஆயுதங்களால் பயமுண்டாதல், எத்தன காரிய மூலமாய் அவ்மானப்படுதல், தன் சகோதரரால் வியாகூலம் இவைகள் உண்டாகும்.

மேற்படி குஜன் கேந்திரங்களிலிருந்து சுபர்களால் திருஷ்டி பெற்றிருந்தால் நினைத்த காரிய ஜெயம் லாவா தேவிகளால் நாணய சிலாக்கியம், அழகிய ஆபரணங்களை வாங்குதல் சயன சந்தோஷமுண்டாதல், சகோதரரால்மன சந்தோஷமும் தன் வியாகூலமும் தீங்குதலை உயர்ந்த மனுஷனால் தான் நாடிய காரிவம் ஜெயமாகுதல் இவைகளும்,

5-9 என்னும் திரிகோணங்களில் தன் உறவினனால் பார்க்கப்பட்டிருந்தால், பிதுர் வர்க்க மனுஷரால் வியகூலா நிவர்த்தியாதல் சுவஜெனங்களால் நல்ல மரியாதையுண்டாதல் முதலியவைகளும்.

6-8-12 லிருந்தால் தீராப்பகை தொடு வழக்கு பெண்களால் கலகம் மனபயங்கரம் சம்போக விக்கிணம் உயர்தர மனுஷரால் கஷ்டம் முதலியவைகளைக் கொடுத்து நிவர்த்தியாதலும் உண்டாகும்.

## சூரியன் மகா திசையில் கேதுபுக்தி
## ஶ்ரீ 4 நாள் 6-க்கு

ஜனபந்துக்களால் வியாகூலம். வாகனம் பொன் பூமி விரயம் கைவிட்ட பொருள் சேர்க்கையாகி மறுபடியும் விறய மாகில் குடும்பத்தில் மூதேவி வாசம் மனதில் பெருத்த வியாகூலம் மனைவிக்கும் பெரும் பிணி கண்டாதி கண்டம் விஷபடம் சஞ்சலம் ஆயுதக்கருவியால் பயம் பயிர்மூல பலித குறைவு.

மேற்படி கேதுகேந்திரங்களிருந்தால் ராஜாக்கள் தயவு உயர்தர மனுஷரால் அனுகூலம் அற்ப தொழில் மூலமான விசேஷ லாபம் தயவு தாக்ஷண்யம் நானா விதமான பரிமளாதிகளால் பலிதம் நூதன வித்தை கற்றுக் கொள்ளுதல், முதலியவைகளுண்டாகும்.

மேற்படி கேது திரிகோணங்களிலிருந்து, சுபகோட்களின் பார்வையுற்றிருந்தால் ஜல சம்மந்தமான தொழிலால் விசேஷ அனுகூலம் தெய்வ பிரார்த்தனையுண்டாதல்,

6-8-12 லிருந்தால் தீராப்பகை வாராவினை அயிஸ்வரிய நஷ்டம் கொடுமையான தண்டனை முதலியவைகளுண்டாதலுமாம்.

## சூரிய மகா திசையில் சுக்கிர புக்தி
## ஷூ 1-க்கு பலன்

நீண்ட பொன் ஆபரண சித்தி தேவ பிராமணன் பக்தி ராஜ அனுகூலம் பெண்கள் மூலமான சந்தோஷம் வெள்ளி வெங்கல பாத்திர வருமானம் தேவாலய புண்ணிய தீர்த்த ஸ்தானம் ஆயுதலாபம் இஷ்ட அன்னபோஜனம் புத்திரர் மூலமான மனசந்தோஷம்.

ஷெ சுக்கிரன் கேந்திரங்களிலிருந்தால், சயன சந்ருஷ்டி குறவு அன்ன துவேஷம் ஆயுத விறயம் முதலியவைகள் உண்டாதல் திரேகாணங்களிலிருந்தால் விசேஷ தன லாபம். பூமி வாங்குதல் சாரதி முதலியவைகள் வாங்குதல் எடுத்த காரியம் உடனுக்குடன் ஜெனன மாகுதல்.

6-8-12 லிருந்தால் களத்திரநலி குடும்ப மூலமான வியாகூலம் முதலியவைகளுண்டாதலாம்.

## சந்திர மகா திசை வரு 10-ல்
## சந்திரன் தன் சுயபுக்தி மீ 10-க்கு

கலியாண சுபசோபனம் அரிய பொன் பொருள் சேர்க்கையுண்டாதல், நாற்கால் ஜீவசேர்க்கை இஷ்ட தேவதா பிரார்த்தனை நிறைவேறுதல், தேவாலய புண்ணிய தீர்த்த ஸ்நானம், செய்தொழில் பலவிதம் அரசரால் மகிழ்ச்சியும் இஷ்டான்ன போஜனமுண்டாதலுமாம்,

ஷை சந்திரன் கேந்திரங்களிலிருந்தால் மாதுர் மூல மான மனவியாகூல மேற்பட்டு நிவர்த்தியாதல் ஆடையா பரண அலங்குதம் நூதனபந்து ஜெனங்களால் பகை தன விரயமுண்டாகும்.

மேற்படி சந்திரன் திரிகோணங்களிலிருந்தால், லாவா தேவிகளில் நாணம் சிலாக்கியம் சுயஜெனவிஸ்வாசம் செய் தொழில் மூலமான விசேஷ தனலாபம் இஷ்டா அன்ன போஜனம் ஸ்ரீ ஜெனக் கூட்டுறவு.

மேற்படி சந்திரன் 6 8-12 லிருந்தால் ஸ்ரீ ஜனங்களால் கொடிய பகை, சயனவிக்கினம் நாணயப்பழுது, நீச்சஜன துவேஷமுண்டாகும் தேய்பிறைச் சந்திரனாயின் இன்னும் கொடிய பலனென்று கூறலாம்.

78-ஆம் பக்கத்தின் ராகு புக்தி பலன் முதல் புதன் புக்தி வரையில் பலன்.

## சூரியன் மகா திசையில் ராகு புக்தி
## மீ -10-நாள் 24-க்கு பலன்

தனது பந்துக்களின் நாசம், பிதுரார்ச்சித பூமிநாசம் இராஜாக்களின் கோபத்தால் பயம் உஷ்ணசம் மந்தம் அல்லது விஷப்பிணியுண்டாதல் ஆடையாபரணங்கள் தன்மை விட்டு நீங்குதல் இடையூருண்டாதல்கிரணகாயமேற்படுதல் பலவித ஆலோசனையுண்டாதல் தன் மனதிலுள்ள அகங்காரம் ஒழுதல் முதலிய பலனுண்டு.

இராகு கேந்திரங்களில் பலம் பெற்றிருந்தால், சல்லிய நிவர்த்தி நெடுநாளாய்பட்ட ரோகம் நிவர்த்தியாதல், தார சம்மந்தமான சந்தேக மொழிதல், உபவாசசிருத்தியம் ஆளடிமைச் சேர்தல் தேவாலய புண்ணிய தீர்த்த ஸ்நான முண்டாதல், முதலிய பலனுண்டாகும்.

ஷ இராகு 5·9 என்னும் திரிகோணங்களிலிருந்தால் பிதுர்வர்க சூதகாதிதோஷம் புத்திராளுக்கு பலத்த பிணி பீடை கெண்டாதி கெண்டங்களுடாதல்,தெய்வபிரார்த்தனை விக்கினமாதல் முதலியவைகளுண்டு.

ஷ இராகு 6-8-12 லிருந்தால் கொடியபகை துவேஷம் ரோகமுண்டாதல் வஞ்சம் செய்ய எத்தனித்தல்: அன்னிய கிராமம் சொல்ல உத்தேசமுண்டாதலுமாம்.

## சூரியன் மகாதிசையில் குரு புத்தி மாதம் 9-நாள் 18-க்கு

பொன் பூஷணம் சேர்தல் வியாபார மூலமான விசேஷ லாபமுண்டாதல், ராஜாக்கள் மூலமானவழக்குவாதுஜெயித்தல், நூதனமான பூமி வங்குதல் மனசந்தோஷ் மசினேகர் மூலமான உற்சாகமே, நாற்கால் ஜீவசேர்க்கை யுண்டாதல் கீர்த்தி பிரதாப முண்டாதலுமாம்.

ஷ குரு கேந்திரங்களிலிருந்தால் நினைத்த காரியம் நாள் அடைவில் ஜெயமாதல் உபவாசியிருந்தால் தெய்வானுகிரகம் குறைச்சல் அரசர்களால் பயங்கரமுண்டாதல் எத்தனை கார்ய மூலமாய்ப் பற்பல பகையுண்டாதல், உயர்தர மனுஷாள் விட்டுப் பிரிதல்.

ஷ குரு 5-9 என்னுமிடங்களிலிருந்தால் இஷ்டதேவதா பிரார்த்தனை லாவாதேவி நாணய சிலாக்கியம் கைபொருள் வருத்து நூதன் பூமிவாங்குதல், குடும்ப மூல ஒற்றுமையும் மனசந்தோஷமுன்டாதல் ஆலயங்களுக்குத் தலைமை வகித்தலி எத்தன் கார்ய அனுகூலமுண்டாதல்.

ஷ குரு 6, 8, லிருந்தால் தீராப்பகை இடபேதக வாசம் அரசாகளால் தண்டனை, ஆலையமூலமான பிரார்த்தனை விக்கினமாதல், தேவபிராமண துவேஷமுண்டாதல் களத்திர புத்திர பகையிடையூருண்டாகும்.

## சூரியன் மகா திசையில் சனிபுக்தி மீ 11 நாள் 12-க்கு பலன்

பகைவரால் விசேஷ தொந்திரவு கெய்தொழில் மூலமான நஷ்டம் மனைவியால் பீடை மனைவிக்கு பயங்கரம் அன்னிய ஜனங்களால் பகையுண்டாதல் ஐஸ்வர்யம் குறைதல், கைப்பொருள் விறயம், தனது பந்துக்களால் பகையுண்

டாதல், மன்னரால் பொல்லாப்பு நாற்கால் ஜீவநஷ்டமுண்டாதலுமாம்.

ஷை சனி கேந்திரங்களிலிருந்தால், சூத்திர ஜென மனுஷனால் நினைந்த காரியஜெயம் அவனால் விசேஷ தன சம்பத்தும் தான்யசம்பத்து முண்டாதல் மேலான அதிகாரிகளால் பேட்டி செய்தொழில் மூலமான சேஷ தனலாபம் நீச்சப் பிரபுக்கள் விஸ்வாசம் இடபேதகவாசம்.

ஷை சனி திரிகோணங்களிலிருந்தால், திவாந்திர வஸ்து வருமானம், ஓர் மனுஷனை நாடிச்செல்லும் அவனால் பலவிதமான சவுக்கியமும் சந்தோஷமும் உண்டாதல், ஆலய தருமபரோபகாரம் உத்தேசமான அனுகூலம்.

மேற்படி சனி 6-8-12 லிருந்தால் கட்டிச் சிறங்கு விஷபேதி அன்னிய ஜெனப்பகை தீராததொந்திரவு உள்ளன்புள்ள மனுஷர்கள் விரோதமாகுதல் நீச்ச அரசரால் சில கஷ்டமுண்டாதல் ஆபரண பூஷண விறயம் முதலியவைகளுண்டாகும் என்பதாம்.

## சூரிய மகா திசையில் புதன் புக்தி
## மீ 10 நான் 6-க்கு

வியாபார மூலமான விசேஷ தனலாபம் வைஷ்ணவ ஜன மனுஷனால் நினைத்த கார்ய ஜெய முண்டாதல் ஆரோக்கியம் சயன சந்தோஷம் லாவாதேவிகளால் லாபம் பொன் பூஷண சேர்க்கை எந்த இடங்களிலும் நல்ல கௌரவம் அன்னிய தேசங்களினின்று பொருள் வருத்து ஆடையாபரண சேர்க்கை மனதிலுள்ள சந்தேகம் நிவர்த்தியாகும்.

மேற்படி புதன் கேந்திரங்களிலிருந்தால் மனதில் பலவிதமான கவலை ஓமயாகம் செய்தல் ஆலயதரிசனம் அன்ன பிரதி வியாபார மந்தம் அதிக சிலவு முதலியவைகளுமாம்.

5-9 என்னுமிடங்களிலிருந்தால் ஐஸ்வர்ய விருத்தி கொடுக்கல் வாங்கல் முதலியவைகளில் சந்தோஷம், ஆலய தரும பரோபகாரம், ஆலயங்களிலே தனங்கண்டெடுத்தல் முதலியவைகளுமாம்.

மேற்படி புதன் 6-8-12லிருந்தால் கொடியபகை தீராப்பிணி, ராஜ சந்தோஷம் சயன சந்தோஷம் ஆபரண சித்தி எத்தன கார்ய அனுகூலம் தாக்ஷண்யமில்லாமை முதலிய பலன் நடக்கும்.

## சந்திரன் மகா திசையில் குஜன் புக்தி மீ 7-க்குப் பலன்

ஜுரம் தலைநோயுண்டாதல் வைசூரி காண்குதல் வழக்கு வாதுண்டாதல் பழய மனுஷன் மூலமான தபால் வருத்தும், அவர்களால் மன வியாகூலமும் உண்டாதல் எத்தன காரிய பின்னம் சகோதர ஜன நிஷ்டூரம், பசு தோஷம் பிராமண ஜன விரோதம், அக்கினியால் பீடை முதலியவைகளுமாம்.

மேற்படி குஜன் கேந்திரங்களிலிருந்தால் தீராப்பகை நிவர்த்தி, சயன சந்தோஷம் மங்களகரமான தபால் வருத்து இஷ்டார்த்த சித்தி தெய்வ அனுக்கிரகம் தீவாந்திர வஸ்து நஷ்டம்.

மேற்படி குஜன் திரிகோணங்களிலிருந்தால், அற்ப பலன் சொற்பலாபம் மேதாவிகளால், காரிய அனுகூலம் அன்னிய தேசங்களுக்குச் சென்றயிடத்தில் காரிய அனு கூலம் தயவு தாக்ஷண்யம்.

மேறபடி குஜன் 6-8-12-லிருந்தால் கொடிய பகை தீராப்பகை இடபேதக வாசம் மனசஞ்சலம் துஷ்ட கிரகங் களால் மனசஞ்சலம் முதலியவைகளுண்டாகும் என்பதாம்.

## சந்திரன் மகா திசையில் இராகு புக்தி வரு 1 மீ 6-க்கு

சர்ப்ப பயமுண்டாதல், பேய்ப்பிசாசு பீடை திரேகத் தில் காயமுண்டாதல் களத்திர புத்திராள் தன்னை விட்டு நீங்குதல் வியாபார மூலமான விசேஷ நஷ்டமுண்டாதல் எக்காரியமும் தாமதப்பட்டு ஆகுதல் 'அன்ன குறைச்சல் வறுமையும் வியாகூலம் உண்டாதல் எத்தன காரிய மூல மான விசேஷ பொருள் விரயமும் தாமதத்துடன் கை கூடு தலுமாம்.

மேற்படி இராகு கேந்திரங்களிலிருந்து சந்திரனை நோக்காதிருந்தால் தனவைசியாள் நேசம் எத்தன காரிய அனுகூலமும் சமரச பூஷணலாபம், ஓடம் தோணி தெப்ப முதலியவைகளால் தனலாபம் கொடுத்த காரிய ஜெயம் தெய்வ கோரிக்கை.

மேற்படி இராகு திரிகோணங்களிலிருந்து புதனால் பார்க்ககப்பட்டால் விவசாய லாபம் செய்தொழிலால் அள விறந்த செல்வம் நகை நாணய சேர்க்கை மேலான அதி காரிகளாலனுகூலம்.

6-8-12-லிருந்தால் தீராதபிணி பீடை விஷப்பீடை சுய ஜென துவேஷம் நானா விதமான தொந்திரவால் இளைத்தல் தன பிரபுக்களால் ஆச்சர்யம் முதலியவைகளுண்டாகும் என்பதாம்.

## சந்திரன் மகா திசையில் குரு புக்தி
## வரு 1 மாதம் 4-க்கு

தருமார்த்த காரியங்களின் தலையிடுதல், யானை குதிரை முதலியவைகளை வாங்குதல், சிறப்பு பெற்ற மன்னவரால் அனுகூலமுண்டாதல், நாற்கால் ஜீவாளகளால் விசேஷ லாபமுண்டாதல் பூமி மூலமான விசேஷ தன தான்னியச் சேர்க்கையுண்டாதல் ரசக்கட்டுச்சரக்குகளால் விசேஷ லாபமும் பொன் பொருள் சேர்க்கையுண்டாதலுமாம்.

மேற்படி குரு கேந்திரங்களிலிருந்தால் ராஜமூலமான வழக்கு வந்து நேர்ந்து ஜெயமடைதலும் நாளடைவில் தன் வியாகூலம் நிவர்த்தியாதலும் உத்தியோக மூலமான சமரச லாபங்களும் தான்னிய சம்பத்துண்டாதலுமாம்.

மேற்படி குரு திரிகோணங்களிலிருந்தால், பிராமண நேசம் புத்திர உற்பவம் குடும்பத்தில் லக்ஷிமி விலாசம் அன்னிய கிராமங்களுக்குச் சென்று சவுக்கியத்துடன் திரும்புதல் எத்தனை காரிய அனுகூலமுண்டாதல், மனஸ்தாப நிவர்த்தியும் ஆளடிமார் சேர்க்கையுமாம்.

6-8-12-லிருந்தால் பூமி மூலமான பலித குறவு அன்னிய சைவ ஜனங்களால் பகைவைசூரி முதலிய அபாயமான வியாதி யுண்டாதலுமாம்.

## சந்திரன் மகா திசையில் சனி புக்தி
## வரு 1 மீ 7-க்கு

பசியோடலைந்து திரிதல், அகாலபோஜனம் செய்தல், சக்தியற்றிருத்தல், நாற்கால் ஜீவனால் வியாகூலமும் நஷ்டமுமேற்படுதல். உறவினரால் பகையுண்டாதல் நீச்ச போஜனாதிகளில் ஆசையுண்டாதல் மனஸ்தாபமும் தொடுத்த காரிய அபஜெயமும் ஏற்படுதல் தனது வகையராக்களில் சூதகர்தி தோஷமுண்டாதல்,

மேற்படி சனி கேந்திரங்களில் பலம் பெற்றிருக்கின், வியாபார தனலாபம் காலை உளுந்து முதலிய சரக்குகளில்

விஷேச தனலாபமுண்டாதல், அன்னிய ஜெனங்களால் ஆதரவுண்டாகுதல், தீர்த்தஸ்தானம் செய்தல் தேவாலய புண்ணிய தீர்த்தஸ்தானம் செய்தல், சனி மேற்படி திரி கோணங்களிலிருந்தால் மனஸ்தாப நிவர்த்தி 'முத்தா பரண சேர்க்கை இடம் விட்டுப்பேருதல் அபவாத நிந்தை யுண்டாகி நிவர்த்தியாகுதல்,

6-8-12-லிருந்தால் கொடிய காரிய சிலவு, நீச்சமிலேச் சர்களால் கஷ்டம் இடையூறு தனப்பிரபு நேசம் அயிஸ் வர்ய விருத்தி குறைவு தனதான்னிய சம்டத்து, சயன விக்கினம், முதலியவைகளுண்டாகும் என்பதாம்,

## சந்திரன் மகா திசையில் புக்தி
## ஷூ 1 மீ 5-க்கு

கிறய விக்கிறய மூலமான விசேஷ தனலாபம் வஸ்திரா பரண லாபம், வைசியப்பிரபு நேசம் கல்வி மூலமான அபி விருத்தி புகழ்ச்சியுண்டாதல் கிரக கட்டட ஆரம்பம், பொன் பொருள், சேர்தல் மேலான அதிகாரிகளால் நற் கீர்த்தியும் கியாதியுண்டாவதோடு சிறப்பும் செல்வமுண்டா கும்.

ஷ 7-புதன் கேந்திரங்களிலிருந்தால் அபவாத நிந்தை யுண்டாவதுபோல காண்குதல், அதன் மூலமான மனவியா கூலமும், அலைச்சலுமுண்டாதல் எத்தன காரிய மூலமாய் விசேஷ அலைச்சலும் விரக்தியுமுண்டாகுதலுமாம்.

ஷ புதன் திரிகோணங்களிலிருந்தால், அறிய பூஷ ணங்களை வாங்குதலும் வடக்கு திசையில் நிலம் வாங்குத லும், ஆடையாபரணச் சேர்க்கையுண்டாதலும் விவசாய வளர்ச்சியும் உண்டாதலுமாம்.

6-8-12-லிருந்தால் வைஷ்ணவ மனுஷனால் வழக்கு வாது தசையைப்பற்றிய நோய் இஷ்டஜன பிரசப்தி எடுத்த காரிய ஜெயமடைவது போலிருந்து திடீரென அபஜெயப் படுதலுமாம்.

## சந்திரன் மகா திசையில் கேது புக்தி
## மாதம் 7-க்கு பலன்

தாய் தந்தையர்க்குக் கெண்டாதி கெண்டங்களுண்டா குதலும் அயிஸ்வர்யம் நாளுக்கு நாள் பலயீனமடைதலும் அன்னிய ஜென துவேஷமும் தீர்த்தஸ்தானயிடங்களில்

சண்டைச் சச்சரவுண்டாதலும், அரசர்களால் கோபமுண்டாகுதலும் தீராத பகையும் மனஸ்தாபமுண்டு.

கேந்திரங்களில் பலம் பெற்றிருந்தால் சோரரால் கைவிட்டுப்போன தனம் கைக் வந்து சேர்தலும், திரேகத்திலுள்ள கொடிய பிணி நிவர்த்தியாகுதலும் மனதைரிய குறைவும் உண்மையே, பேசினும் பொய்யனென்றே அபவாதமும் உண்டாகும்.

ஷ புதன் திரிகோணங்களிலிருந்தால், வாராப் பகையும் தானே வந்து நேருதல் இஷ்ட அன்ன போஜனப் பிராப்தி சயன சுக சந்தோஷம் யாவும் வுண்டாதல் நூதன நீச்சஸ்திரீ சேருதல் மேலான அதிகாரிகளால் பேட்டி இவைகளுண்டாகும்.

6-8-12 லிருந்தால் விஷப்பிணி திரேக ஜாட்டியம் அதிகச்சிலவு முதலியவைகளுண்டாகும் என்பதாம்.

## சந்திரன் மகா திசை சுக்கிர புக்தி
## வூ 1 மாதம் 8-க்கு பலன்

விருந்துண்ணல், கலியாண சம்ரசங்களுக்குச் செல்லுதல் கடன் நிவர்த்தியாதல், அனைவராலும் அங்கிகரிக்கப் படுதல் வெள்ளி, வெண்கல பாத்திரம் சேருதல் இடபேதமாகுதல் சென்ற யிடத்தில் மேலான தனதான்னியம் சித்திக்குதல், ஆளடிமை சேர்தல்.

கேந்திரங்களில் வலுபெற்றிருந்தால், கலியாண சம்ரச சுபம் ஸ்ரீகள் மூலமான கோள் கலகம் நிவர்த்தியாதல், நெடுநாளடைவில் தன் கைவிட்டுப்போன தனம் வந்து சேர்க்குதல் உறவினரால் வரவேற்றல்.

திரிகோணங்களிலிருந்தால் அபவாதமானபஞ்சாயத்து முதலிய காரியங்களுக்குத் தலைமை வகித்தல், அயிஸ்வர்ய விருத்தியும் சயன சத்ருஷ்டியுமுண்டு.

6-8-12 லிருந்தால் கோபகிருத்தியம் வருத்தம் இஷ்டஜன பந்துக்கள் விரோதமாகுதல் ஸ்ரீ மூலமான நோய் வியாபாரலாபம் இவைகளுண்டாகும்.

## சந்திரன் மகா திசையில் சூரியன் புக்தி
## மாதம் 6-க்கு பலன்

குன்ம வியாதி, மூத்திரரோகம் தந்தரோகம் வாத பித்த ரோகம் ஸ்தீர கெண்டாதி கண்டங்கள் பூமி தன் கை

விட்டுப் போகுதல் அலைச்சல் திரிச்சல் அன்னிய ஜெனப் பகை பிதுருவர்க்க மனுஷரால் வறக்கு வாது இடபேதக வாசம் அன்னிய ஜனப பகை உதாரண வாக்கு.

ஷ சூரியன், கேந்திரங்களிலிருந்தால், பிதுர்வர்க பூஸ்திதி நிலை வழக்கு வாது ஜெயம் அன்னதான தரும் பரோபகாரம் சிவப்பு நிறமான வஸ்துக்களால் விசேஷ தனலாபம் உயர்தரப்பதவி நன்மார்க்க காரியங்களிலேயே தன் மனதைச் செல்லுதல்.

மேற்படி சூரியன் திரிகோணங்களிலிருந்தால் மன்னரால் உதவி மேற்படி மன்னர்களாலேயேதான் எடுத்தகாரியம் ஈடேருதல், அயிஸ்வர்ய விருத்தி எத்தன காரிய அனுகூலம் தயாதி ஜெனங்களால் சம்பந்து.

6-8-12 லிருந்தால் தேவ பிராமண பக்தி குறவு குடும்பத்தில் பிசாசு பயம் நீச்ச ஜனபகை. மனதிற்கு ஓர் விதமான பயங்கரம் விறக்தி ஏற்படுதல் இவைகளும் உண்டாகும்.

## குஜமகா திசையில் வருடம் 7-ல்
## குஜன் தன் சுயபுத்தி மீ 4 நாள் 27-க்கு

வைசூரி காண்குதல் மேக சம்மந்தமான பிணி பீடையுண்டமாகுதல் ரெணகாயங் காட்டல் மித்திரப் பிரவாகமுண்டாகுதல் தான் செய்யுந் தொழில் அல்லது வியாபாரத்தை விட்டு நீக்கம். தன் இஷ்ட ஜனங்கள் விரோதமாகுதல் முன் கோப முண்டாகுதல் மனையாள் மக்களை விட்டு பிரிந்திருத்தல்.

மேற்படி குஜன் கேந்திரங்களிலிருந்தால், பெண்கள் மூலமான பகை நிவர்த்தி ஆபரண சேர்க்கை மனஸ்தாப நிவர்த்தி பூமி மூலமான விவகார பயிசல் ஆயுதச்சேர்க்கை எந்த நாளும் சந்தோஷத்தோடிருத்தலுமாம்.

மேற்படி குஜன் திரிக்கோணங்களி லிருந்தால், அற்ப பலிதமும் சொற்பலாபமும் உண்டாவதோடு, தான்கோரிய எண்ணங்களும் நாளடைவில் ஜெயமாகும்.

6-8-11 லிருந்தால் கொடிய பகை நிச்சத்துவேஷம் அக்கினி முகமாய்ச் செய்யுந் தொழிலால் வியாகூலம் ஆபரண விரயம் அகால போஜனம் செய்யவும் நேரும்.

## மேற்படி திசையில் இராகு புக்தி வருடம் 1-நாள் 18-க்கு

மன்னவரால் பகை வியாகூலம் வஞ்சனை பில்லி சூன்னிய முண்டாகுதல், தனதான்னிய சம்பத்து குறைதல் பூமியில் லரபம் முதலியவைகள் தன்கைவிட்டு போகுதல் ஜனங்களால் கோபமேற்படுதல் தொழில் வாணிப வருமானக் குறைவு இவைகளுண்டாகும்.

மேற்படி ராகு கேந்திரங்களிலிருந்தால் சயன சம்மந்தமான பிணி பீடை கொடுத்து பிற்காலங்காலங்களில் சவுக்கியமும் சம்மத்து முண்டு தூரதேசம் போயிருந்த ஜனங்கள் மூலமான சவுக்கியமும் எத்தனகாரிய அனுகூலமு முண்டாகும், இடம் விட்டு போகும்படி நேர்ந்து சென்ற இடத்தில் சவுக்கியமும் சந்தோஷமும் உண்டு.

மேற்படி இராகு திரிக்கோணங்களில் வலுப்பெற்றிருந் விஷ சம்மந்தமான வித்தையால் விசேஷ தனலாபமும் புகழும் நங்கீர்த்தியும் எந்நாளும் ஜனக் கூடத்திலேயே நிற்குதலுமாம் அயிஸ்வர்ய விருத்தியுண்டு.

9-8-12 லிருந்தால் கொடிய வியாதி வலிவு குறைந்து நடக்கவும் சக்தியற்றிருப்பான்.

## குஜன் மகா திசையில் குரு புக்தி மாதம் 11-நாள் 6-க்கு பலன்

சவுகரியம் தனதான்ய சேர்க்கை தாசி தாசாள் சேர்க்கை உயர்தரப்பதவி வாய்ந்த மனுஷனால் விசேஷ தான்னிய பலிதம் மனவியாகூல நிவர்த்தி எத்தன கார்ய அனுகூலம், அரசர்களால் மேம்பாடு வேளாண்மை பலிதம் தண்டிகை வஸ்திரலாபம் இவைகளுண்டாகும்.

மேற்படி குரு கேந்திரங்களிலிருந்தால் ராஜ பகை ஐஸ்வர்ய நஷ்டம் ஆளடிமை நஷ்டம் மனஸ்தாபம் பிதுர் வகை சூதகம் எத்தன கார்ய விக்கினம் தாயாதி ஜெனப்பகை வாத பித்த சிலேத்மம் இவைகளுண்டாகும்.

திரிகோணங்களிலிருந்தால் அன்னிய ஜெனக் கூட்டுறவு தாயாதிகளால் நேர்ந்த வழக்கரவது ஜெயம் பழைய நஷ்டம் திரவியங்கள் நாளடைவில் லாபமாம்.

மேற்படி குரு 6-8-12லிருந்தால் புத்திர நஷ்டம் சண்டை சச்சரவு, உத்தியோக முதலிய செய்தொழில் பலித குறைவு ஆபரண பூஷண லாபம் தான்னிய சம்பத்து இஷ்ட தேவதா பிரார்த்தனை விக்கினம் வருமான குறைவு.

## குஜ மகா திசையில் சனி புக்தி
## வருடம் 1 மாதம் 1-நாள் 9-க்கு

துக்கம் எந்நேரமும் அழுதகண் சிந்தையா பிருத்தஉதன் கையிலுள்ள பொருள் நஷ்டம் தேவாலய தீர்த்த ஸ்தானம் தாசிதாசாளுடன் சண்டை செய்தல் அவர்களால் பொருள் நஷ்டம் ஆயுத விரயம்,

மேற்படி சனி கேந்திரங்களி லிருந்தால் சத்ரு ஜெயம் வாகனம் வாங்குதல் எடுத்த காரியம் விக்கினமின்றி ஜெயம் மாகுதல் வேசையாளர் கூடுதலால் நீச்சதொழில் ஆரம்பம் சுபஜென விஸ்வாசம் தான்னிய சம்பத்து சகோதிர மூல மான சுபசோபனம்.

மேற்படி சனி திரிகோணங்களிலிருந்தால் கெர்ப நஷ்டம் மனைவியால் தொந்திரவு மதுபானங்களை யிச்சித்தேல் ஆடையாபரண லாபம் லாவா தேவிகளில் சிலாக்கியம் தெய்வ கோரிக்கை யீடேறுதல்.

மேற்படி சனி 6-8-12-லிருந்தால் கோபமாய் பிறருடன் சண்டை செய்தல் ஆபரண விரயம் மனஸ்தாபம் பொன் பொருள் நஷ்டங்கள் மூலமான வழக்கு வாது சுய ஜெனப்பகை இவைகளுண்டாகும்.

## குஜன் மகா திசையில் புதன் புக்தி
## மீ 11 நாள் 27-க்கு

இப்பூமியில் நான்கு சிறப்பு பெற்று விளங்குதலும் நல்ல இஷ்டமாகிய அன்ன பதார்த்தங்களைப் புசித்தலும், வாகன பூஷண வஸ்திரலாபமும் கல்யாண மாகுதலும் திரேக காந்தி பொன் பூஷண லாபமும் திரவிய சகாயமும், வித்தை அப்பியாச விருத்தியும், தொடுத்த காரிய ஜெயமும், மேலான அதிகாரிகளால் சிறப்பு முண்டாகும்.

ஷ புதன் கேந்திரங்களிலிருந்தால், வியாபாரம்செய்தல் அதன் மூலமாய் அநேக கூட்டங் கூட்டாளிகள் வந்து

சேர்தல் சயன மூலமான சந்துருஷ்டி உபாயத்தா லெதிரியை ஜெயித்தல், ஓர் நாமதாரி மனுஷனால் தான் தொடுத்த காரியத்தை ஜெயப்படுத்தலுமாம்.

ஷ புதன் திரிகோணங்களிலிருந்தால் வித்தியாப்பியாச விருத்தி, புராண விகாயக் கேள்வி, தன் தான்ய சம்பத்து உற்சவாதிகளில் தலைமை வகித்தல், பூமி ஆளடியார் சேர்தல் இடபேதக வாசமாகி சவுக்யம் நேர்தல் உயர்ந்த அந்தஸ்து, மதுரமான வாக்கு நாணயம்.

ஷ புதன் 6-8-12லிருந்தால் வியாபார மூலமான அர்த்த லாபம் சயன சுகபோக விக்கினம் தாரபுத்திர கிலேசம் இவைகளுண்டு.

## குஜன் மகா திசையில் கேது புக்தி
## மீ 4 நாள் 27-க்கு

தான் தொடுத்திருந்த ஜெபதப விக்கினம் வாக்கு நிஷ்டூரம் துவேஷம் பொருள் சிலவு நீச்சரால் கலகம் பகைவரனேகமாயுண்டாதல், அன்னிய கிராமங்களுக்குச் செல்ல எத்தனம், செய்தொழில் வக்கினம் இவைகளுண்டாகும்.

ஷ கேது கேந்திரங்களிலிருந்தால் செய்தொழில் மூலமான விசேஷ தன்லாபம் ஆளடிமை சேர்தல் நீச்ச ஸ்திரீயால் பொருள் வருத்து அவர்கள் மூலமான பற்பல உபகார கிருத்தியம்.

திரிகோணங்களிலிருந்தால், அற்பசவுக்கியமும் சொற்ப லாபமும் உண்டாவதோடு விஷப்பிணியுண்டு.

6-8-12 லிருந்தால் செய்தொழிலில் நஷ்டம் விக்கினம் ஆயுத பூஷண லாபம் மேலான அதிகாரிகள் பேட்டி நன்றி மறத்தல் முதலியவைகளுண்டு.

## குஜன் மகா திசையில் சுக்கிர புக்தி
## ஒ 1 மீ 2-க்கு

கீர்த்தி பிரதாபம் பரிமள சுகந்த பரிமளாதிகள் லாபம் யாகம் ஓமம் எக்ய முதலியவைகள் செய்தல் போகபாக்கியம் உலகிலுள்ள யாவரும் புகழ்ச்சியாய்ப்பேசுதல் தன் சத்ருக்கள்

தன் கைவசமாகுதல் உபாயத்தால் ஜெயிக்குந் திறமை கன்றுகாலை சேர்க்கை எத்தன காரிய அனுகூலம்.

ஷ சுக்கிரன் கேந்திரங்களிலிருந்தால், மாற்றலருண்டாதல், அவர்களால் சிற்சில இடையூறுண்டாதல் அயிஸ்வரியம் குறைதல், ஸ்திரி மூலமான நோயுண்டாதல். எந்நாளும் மனவியாகூலத்தோடிருத்தல்.

ஷ சுக்கிரன் திரிகோணத்திலிருந்தால் தான்ய வருத்து பசு வாகனம் வாங்குதல் அக்கினி திக்கிலிருந்து தன் சொந்த ஸ்திரீ ஜெனத்தால் பொருள் வருத்து ஆபரண பூஷண லாபம் தேவாலய புண்ணிய தீர்த்த ஸ்தானம்.

6-8-12 லிருந்தால் ஸ்திரீகளால் கலகம் வழக்கு வாது துற்விஷயக்கினவு காமாலை வீக்கம் விஷபேதி.

## குஜன் மகா திசையில் சூரிய புத்தி
## மீ 4 நாள் 6-க்கு

மனையாள். பிள்ளை முதலியோர்க்கும் தனக்கும் பீடை முதலியவையும் வியாதியு முண்டாவதோடு,பொருட் சிலவும் தான்னிய சம்பத்து குறைவு முண்டாகும் வித்தியாப்பியாச விருத்தி குறைவும் செய்தொழில் மூலமான தனதான்ய சம்பத்து குறைவு முண்டாகும்.

மேற்படி சூரியன் கேந்திரத்திலிந்தால் பிதுர் வர்க்க ஜனங்களால் மரியாதை அக்கினி அல்லது கிழக்கு திக்கிலிருந்து பொருள் வருத்து ஆடையா பரண அலங்கிருதம் ஐஸ்வர்ய விருத்தி தேவாலய புண்ணிய தீர்த்தம் மனஸ்தாப நிவர்த்தி, சுயஜெய விஸ்வாசம் தான்னி சம்பத்து.

மேற்படி சூரியன் திரிகோணத்திலிருந்தால் புத்திர சேர்க்கை, அவமானம் செய்தொழில் பின்னம் ஈகலவாகன சேர்க்கை, அன்னிய ஜெனங்களாலாடையா பரண சேர்க்கை மேலான அதிகாரிகளால் பேட்டி,

மேற்படி சூரியன் 6-8-12 லிருந்தால் எத்தன காரிய பின்னம் தீவாந்திர வஸ்து நஷ்டம் சுயஜெனதுவேஷம்தான தரும பரோபகாரம் எத்தன காரிய அனுகூலமும் இவைகளுண்டாகும்.

## குஜன் மகா திசையில் சந்திர புக்தி மீ 7-க்கு பலன்

ஞான மாக்கங்களையனுசரித்தல்,சிவாலய பக்தி, வாயு வால் பீடை, நட்பினராலும் மனைவியாலும் பகை, கைகால் ஒச்சுருவு தான் செய்திருந்த தருமார்த்த காரியம் அடியோ டொழில் ஆயுத விரயம் கன்று காலி விரயம் நினைத்த காரி யவிக்கினம், வைசியாள் விரோதம்.

மேற்படி சந்திரன்வளர்பிறையை யுடையவனாய் கேந்தி ரத்தலிருப்பானாகில் இஷ்ட அன்னபோஜனம் பந்து ஜனக் கூட்டுறவு ஆயாசம் கிருகிருப்பு அபவாதமான பழி நிவர்த்தி ஐஸ்வர்யவிருத்தி மாதுர் பகை நிவர்த்தியும் பகையுமுண்டு,

மேற்படி சந்திரன் திரிகோகணகளி லிருந்தால், மனவி யா கூல நிவர்த்தி, எத்தன காரிய அனுகூலம் சரீரபீடை நிவர்த்தி மனதிலுள்ள பயங்கரம், பகிஷ்காரமாகுதல் எத்த னகரரிய அனுகூலம்.

மேற்படி சந்திரன் 6-8-12 லிருந்தால், கொடிய பகை மாதுர் ஜன சூதகாதி தோஷம் வியாபார அந்த லாபம் இவை களுமாம்

## இராகு மகாதிசையில் வூ 18க்கு இராகு சுய புக்தி வூ 2 மீ 8 நாள் 12-க்கு

சண்டை முகத்திலப ஜெயமடைதல் மிருகத்தினால் திரேகத்தில் காயமுண்டாதல்,தன் சேவகர்கள் மூலமாகவே தனக்கு அவமானமும் விறயமுண்டாதல் தனது மனைவி மக்கள் மூலமான வியாகூலமும் பகையுமுண்டாவதோடு எத்தன காரியமும் அபஜெயமாகும்.

மேற்படி இராகு 6-8-12 லிருந்தால் வாத பித்த சிலே தமவியாதி மனைவியால் தொந்திரவு கன்று காலி சேர்க் கைக் குறவு தன பிரபு விஸ்வாசம் ஆபரண பூஷண வஸ்திர லாபம் திருடர் பயம் உத்தியோக முதலிய செய்தொழில் விக்கினம் அதனால் மனஸ்தபேமும் வியாகூலமுமுண்டாவ தோடு கொய்டி பகையு முண்டாகும் அன்னியதேசம் செல்லும்படி நேரும்.

## இராகு மகா திசையில் குரு புக்தி
## ஷ மீ 4-நாள் 24-க்கு

திரவியலாபம், பூஷணலாபம், பந்துஜெனக் கூட்டுறவு அன்னிய ஜெனக் கூட்டுறவு, அடிமையாள் பலித்தல் கன்று காலி சேர்க்கை தேவபிரமாண பிரபு விஸ்வாசம் அயிஸ்வர் யம் விருத்தியும், எத்தன காரிய அனுகூலமு முண்டாகும் கடன் வாங்குதலும் கொடுத்தலுமாம்.

மேற்படி குருகேந்திர திரிகோணங்களிலிருந்தால் மன வியாகூல நிவர்த்தி ராஜ மூலத்திலிருந்து பூமி தன்மைக்கு வந்து சேருதல். ஆபரண பூஷண லாபம் அன்னியோன்னிய சினேகமுண்டாதல் பிராமணரால் உபதேசம் பெருதலுமாம்.

ஷ குரு 6-7-12 லிருந்தால் பிராமணான் துவேஷம் தன் பூஸ்திதி யாவும் நசிந்து போதலும் உயர்ந்த ஜாதி மனுஷனால் தன் கைப்பொருள் விறயமாகுதலும் உண்டா கும்.

## இராகு மகா திசையில் சனி புக்தி
## வருடம் 2 மாதம் 10 நாள் 6-க்கு

விருக்ஷங்களின் மேலேறி வீழ்தல், மானக்கேடு துற் புத்தி துற்சன சினேகம் அன்னியரால் கொடிய பகை தன் குடும்ப மூலமான விசேஷ தன்னிய விறயம் துடையில் ரண காய முண்டாதல், ஆயுத நஷ்டம் பொன் பொருள் நஷ்டம் அயிஸ்டவர்ய நஷ்டம்.

மேற்படி சனி கேந்திர திரிகோணங்களிலிருந்தால் வெள்ளி வெண்கல பாத்திரச் சேர்க்கை கறுத்த எருமை வாகன சேர்க்கை தன் பிரபு நேசம், தான் கொண்ட எண்ணம் ஈடேருதல் இவைகளுண்டு.

மேற்படி சனி 6-8-12லிருந்தால் தீராப்பகை கொடிய வசனப் பிரியம் எத்தன காரியார்த்தமாய் அன்னிய தேசங் களுக்குச் சென்று திரும்புதலுமாம்.

## இராகு மகா திசையில் புதன் புக்தி
## வருடம் 2 மாதம் 6 நாள் 28-க்கு

பெண்கள் மூலமான சுபசோபனம் மானபிமானங்களுக் குக் கட்டுபடுதல், இஷ்ட அன்ன போஜனம் பொன்பொருள்

தானே வந்து சேர்தல், ராஜாக்கள் தயவு பகை நிவர்த்திர அயிஸ்வர்ய விருத்தி, தன் சொத்துக்களை ஜெயித்தலுமாம்.

மேற்படி புதன் கேத்திரத் திரிகோணங்களிலிருந்தால் மேலான பலனும் நற்கீர்த்தியும் கியாதியுமுண்டாகும் ஷ புதன் 6-8-12 விருந்தால் அன்னிய ஜன கூட்டுறவு தன பிரபு விரோதம் ஆளடிமை சாகுதலுமாம்.

## இராகு மகா திசையில் கேது புத்தி ஷூ 1 நாள் 18-க்கு பலன்

வீட்டில் களவு போகுதல் அகால போஜனம் செய்தல் அன்னியஜன துவேஷ முண்டாதல் தனது மித்ருக்களால் கொடிய பகையுண்டாதல் தன்தாரம் மரணமடைதல் ஆள டிமை உறவோர் முதலியவர்கள் வருத்தத்துட னிருத்தல், அன்னிய தேசங்களினின்று வருத்தமான தபால் வருத்து.

ஷ. கேது கேந்திரங்களிலிருந்தால் பகைவர் சித்திக்கு தல் கடற்கரை சாமான்களால் விசேஷ தான்னியச் சேர்க் கையும் தனச் சேர்க்கையுமுண்டாகுதல் ஆலஸ்யமான புத்தி.

ஷ கேது 6-8-12விருந்தால் கட்டி சிறங்கு விடம்புருகி தனது திரேகத்தில் ஓர் அடையாள முண்டாகுதல் மனவிய கூலமும் பகையும் நேர்தலுமாம்.

## இராகு மகா திசையில் சுக்கிரன் புக்தி வருடம் 2 மாதம் 8-க்கு பலன்

இவ்வுலகிலுள்ள அதிசயங்களைக் காணச் செல்லுதல், ரதசாரதி மூலமாகப் பிராயணம் செய்தல், அன்னிய ஜெனக் கூட்டுறவு தெய்வப் பிரார்த்தனை யீடேறுதல், நூதன ஸ்திரீ சேருதல், கொடிய பகை நிவர்த்தியாதல், வித்தியா வினோதப் பரிக்ஷை ஆளடியார் சேர்க்கை.

மேற்படி சுக்கிரன் கேந்திர திரிகோணங்களிலிருந்தால் உண்மையான காரியங்களிலேயே தலையிடஎத்தனித்தல், அபவாதமான காரியம் யாவும் நாளடைவில் நிவர்த்தியா தல் அயிஸ்வர்ய விருத்தியும் தன சம்பத்து முண்டாதல்.

ஷ சுக்கிரன் 6-8-12விருந்தால், ஸ்திரீ மூலம் கலகம் எத்தன் காரிய பின்னம் பொருள் சிலவுதன் சுய ஜனங்களே தனக்கு விரோதமாகுதல்.

## இராகு மகாதிசையில் சூரிய புக்தி
## மாதம் 10 நாள் 24-க்கு

தன் சுய ஜனங்களாலும், அன்னிய ஜனங்களாலும் அபவாத நிந்தையும் எத்தன கார்ய பின்னமும் தேவாலய புண்ணியதீர்த்தஸ்தானங்களு முண்டாவதோடு, அக்காலம் கொண்டதற்கு சமதையான பிணி பீடையும் ஆலஸ்யமான புத்தியுமுண்டாகும்.

ஷெ சூரியன் கேந்திரிகோணங்களிலிந்தால் உல்லாச மான பேச்சு வார்த்தையும், பெண்கள் கல்வியில் ஈடுபட்டி ருக்கும் புத்தியுமுண்டாகும்.

மேற்படி சூரியன் 6-8-12 லிருந்தால் வழக்குவாது பொருள் விரயம் அபஜெயம் முதலியவைகளுண்டு.

## இராகு மகா திசையில் சந்திர புக்தி
## வருடம் 1 மாதம் 6-க்கு

வாகனங்களின் மீதேறி வீழ்தல் சென்நெல் பூமி இவை கள் லாபமும் வாணிபம் பலிக்குதலும், கலியாண சமாசாரங் களும்வித்தையா அப்பியாச விருத்தியும் ஜெயம் பெரும் சக் தியும் அபபேதகமாகிய இடத்தில் நல்ல சரீர சவுக்கியமும் சந்தோஷமும் உண்டாகும்.

மேற்படி சந்திரன் 6-8-12 லிருந்தால் மாதுரு ஜன கண்டாதி கண்டம் தீராப்பகை அவுஷதங் கொள்ளம் முதலி யவைகளும், எத்தன கார்ய அனுகூலமும் உண்டாகும்

## இராகு மகா திசையில் குஜன் புக்தி
## வருடம் 1 நாள் 18-க்கு

மேற்படி குஜன் 6-8-12 லிருந்தால், எலும்பு சம்பந்த வியாதி, ரெணகாயங்க ளேற்படும், தனதான்னிய சம்பந்து முதலியவைகளும் மற்றுமனேக பகைவரால் விசேஷ துன்ப முண்டு.

## குரும்காதிசை வருடம் 16-க்கு
## குரு சுய யுக்தி ஷூ 2 மாதம் 1 நாள் 18

தனதான்ய சேர்க்கை, ஆளடிமை, சேர்க்கை, எத்தன கார்ய அனுகூல தயவு தாக்ஷண்யம், உண்மையான கார்யங் களையே செய்தல், தீவாந்திர வஸ்திர பூஷணலாபம் லாவா தேவிகளால் நாணய சிலாக்கியம் தனபிரபு நேசம் கிருக்ஷி தான்னிய பலிதம்

மேற்படி குரு 6-8-12 முதலிய கொடிய க்ஷேத்திரங்களி லிருந்தால் தெய்வபூஜை விக்கினம் பிரார்த்தனைதேவியால் கொடிய கஷ்டம் அகாலபோஜனம் சயன குறவுமுதலியவை களுண்டாகும்.

மேற்படி குரு கேந்திர திரிகோணங்களிலிந்தால் பூமி மூலமான உற்பத்தி வகைகளில் விசேஷ தனலாபம் அயிஸ் வர்ய விருத்தி.

## குரு மகாதிசையில் சனி புத்தி
## வருடம் 2 மாதம் 6 நாள் 12-க்கு

மன்னவரால் கோபம் சுய ஜனங்களே தனக்குச் சதி செய்ய யெத்தனித்தவீண்காரியத்தில் தலையிடல், மேலான அதிகாரிகள் மூலமான கோபத்தால் சிக்ஷை செய்தல், லா வா தேவிகளால் நாணய பழுது உத்தியோக மூலமான விரோதம் ஆளடிமை சக்தி குறைவு நித்திரை பங்கம் இவை களுண்டாம்.

மேற்படி சனி கேந்திர கோணங்களி லிருந்தால், சுய ஜனங்கள் மூலமான மரியாதை மனோ உற்சாகம் தைரியம் ஆடையாபரண வருத்து எத்தன கார்ய சித்தி செய்தொழில் மூலமான விசேஷ தனலாபம் தயாளகுணம் சயன சநது ருஷ்டி.

மேற்படி சனி 6-8-12 லிருந்தால் இடறி வீழ்தல் கொடிய பகை தனதான்ய சம்பத்து குறவு மனஸ்தாபம் வெளியில் போக எத்தனம்.

## குரு மகா திசையில் புதன் புத்தி
## வருடம் 2 மாதம் 3 நாள் 6-க்கு

வாசனை நிறைந்த புஷ்பங்களால் வியாபாரம் செய்தல் புத்திரலாபம் கல்யாண சுபசோபனம்தேவானுகூலம் தீர்த்

யாத்திரைச் சென்று சுகமே திரும்புதல், அன்னிய ஜன போகம் முதலியதாகிய சுவபலனையே தரும்.

ஷ புதன் 6 8-12லிருந்தால் அபவாத நிந்தை செய் தொழில் பங்கம் சயனவிக்னம் கையிலுள்ள நாணய பழுது தேவாலய புண்ணியஸ்தானம் முதலிய பலன் நடக்கும்.

## குரு மகா திசையில் சுக்கிர புக்தி
## மீ 11 நாள் 6-க்கு பலன்

புத்திர நாசம் தான்னிய நாசம், பிராமண பகை விஷ பயம் கெண்டத்திற்குச் சமதயாண பிணி, கைப்பொருள் விரயம் சகோதரரால் வியாகூலம், செய்யத்தகாத கார்யத் தைச் செய்தல், லாவாதேவி விரோதம் முதலிய கொடிய பலன் நடக்கும்.

ஷ கேது, கேந்திர திரிகோணங்களிலிருந்தால் ப்ரி மளத்திரவியலாபம் யானை, குதிரை ஒட்டை முதலிய வாக னங்கள் வாங்குதல், தெய்வானுகூலம் அன்னிய தேசங்களி லிருந்து பொருள் வருந்து.

## குரு மகா திசையில் சுக்கிர புக்தி
## வருடம் 2 மாதம் 8-க்கு

அபிடேகம் பூஷணலாபம் தெய்வபிராமண பக்தி மன்ன ரால் பொருள் வருத்து பொன் பூமி சேர்க்கை ஸ்திரீ சேர்க் கைநூதன சினேகிதர்களால் பொருள் வருத்து, தான் அகப் பட்டுக் கொண்டிருந்த தொந்தரவிலிருந்து வெளிப்படுதல், சுய ஜெனக் சேர்க்கை, ஆபரண பூஷணச் சேர்க்கை முதலியவைகளுண்டாகும்.

ஷ சுக்கிரன் கேந்திரத் திரிகோணங்களிலிருந்தால் இன்னும் விசேஷ சுபபலனும் இத்துடன் அஷ்டகவர்களுள் கண்டம் கால நக்ஷத்திரங்களில் குருவாசம் செய்வாராயின் ராஜயோக பலனாகவே நடக்கும்.

6-8-12லிருந்தால் தீராத கடனும் ஜாட்டியங்களுமுண் டாவதோடு, கெண்டத்திற்குச் சமமான பிணியுமுண்டாகும்.

## குரு மகா திசையில் சூரிய புக்தி
## மீ 9 நாள் 18-க்கு பலன்

தான் செய்யுந்தொழில் மூலமான நாசம் திரவியலாபம் தன் பந்து ஜெனப் பகை, மன்னவர் சேர்த்துமுகம் சிரம்

முதலிய இடங்களில் ரோகம் விழி பலமான வியாதி மனச் சலிப்பு. இப்புத்தியின் மத்தியில் நஷ்டதிரவியலாபமும் சௌக்கிய பலனும் நடக்கும்.

ஷை சூரியன் கேந்திரத் திரிகோணங்களிலிருந்தால் மேற்சொன்ன துர்ப்பலன் நீங்கி சௌக்கிய பலன் விளையும்.

6-8-12லிருந்தால் வியாதி பீடை, மனசஞ்சலம் இட பேதகம் முதலிய பலன் நடக்கும்.

## குரு மகா திசையில் சனி புக்தி வருடம் 1 மாதம் 4-க்கு பலன்

விலையுயர்ந்த குதிரை முதலியவைகளை வாங்குதலும் பூமி லாபமும், வஸ்திர லாபமும், கை விட்ட பொருள் சேர்தலும் வியாபாரம் செய்தலும் வியாபார மூலமான விசேஷ பொருள் பலிதமும், சினேகித நட்பு, ராஜபோஜனம் கல்வி அதவிருத்தியும் உண்டாகும்.

மேற்படி சந்திரன் 6-8-12லிருந்தால் குடும்ப மூலமான சஷ்டாடசம் அபாரமான சிலவு மன அவ்வியாசம் ஜல சம்மதமான கண்டம் எழுத்து மூலமான பஞ்சாயத்து, அன்னிய தேசம் செல்ல எத்தன முதலியவைகளுமாம்.

கேந்திர திரிகோணங்களிலிருந்தால், நாளுக்கு நாள் பூரண கலை வளருவது போல் தன விருத்தியும் சந்தோஷமும் உண்டாகும்.

## குரு மகா திசையில் குஜன் புக்தி மாதம் 11-நாள் 6-க்கு பலன்

துஷ்ட மிருகங்களால் வாதையும் ரெண காயங்களும் தொந்திரவு முதலிய இடர் பிணிகளும், என்னாளும் நீங்காத ரோகமும் ஸ்தான பிரட்டம், கையிலுள்ள கருவி முதலியவைகளை வேறொருவர்க் கொள்ளுதலும் திருடரால் பயமும் சஞ்சலம் வருமான விக்கினம் முதலியவைகளுமாம்.

மேற்படி குஜன் கேந்திரங்களில் சுபர் திருஷ்டியால் பலப்பட்டிருந்தால், நூதன மண் மனை வாங்குதலும், மன சந்தோஷ நிவர்த்தியாதலும் அய்ஸ்வர்ய விருத்தியுமாம்.

6-8-12-லிருந்தால் தீராத கடன், ஸ்திரீமும் துவேஷம் முதலியவைகளுண்டாகும் என்பதாம்.

## குரு மகா திசையில் இராகு புத்தி வருடம் 2 மாதம் 4 நாள் 24-க்கு

நீச்ச விருத்தி சுகமில்லாமை நிந்தை பாம்பு, தேள் முதலிய விஷ ஜெந்துக்கள் தீண்டல், உற்றார் பெற்றார் சேதம் மனைவி பகை, இடபேதக வாசம் தன் கௌரவ குறைவு மிறித்தற்குச் சமமான பிணி, எத்தன காரியங்களால் மன வியாகூலமும் பகையுமுண்டாதல்.

மேற்படி இராகு கேந்திர திரிகோணங்களிலிருந்தால் நீச்ச ஸ்திரீ சேர்க்கை அவர்கள் மூலமான பொருள் விறயம் எத்தன காரிய அனுகூலம் அன்னிய தேசங்களில் உற்பத்தியாகும் சரக்கு வகைகளில் வியாபாரமும் அதன் மூலம் விசேஷ தனலாபமும்.

## சனி மகாதிசை வருடம் 19-க்கு சனிக்கு தன் சுய புக்தி வருடம் 3-நாள் 3-க்கு

புத்திர நாசம், பொருள், நாசம், சத்ருக்களால் பயங்கரம் பிச்சையெடுத்தல், முதுகு மூலமான நரம்பு சம்மந்த வியாதி ஜலசம்மந்தகெண்டாதி கண்டம் வாணிப மூல நஷ்டம் அன்னியர்களுக்காய்த் தான் தலையிட்டுக் கஷ்டப்படுதல், அனைவரும் பொய்யனேன்று இகழ்ச்சி செய்தல்.

ஷ சனி கேந்திரங்களில் வலுபெற்றிருந்தால், எக்காரியம் செய்யினும் லாபம், மனைவி மூலப்பொருள் வருத்துதிரேக ஆரோக்கியம் தெய்வானுகூலம், தேவதைகளுக்குப் பலியிடல் முதலியவைகளாம்.

## சனி மகா திசையில் புதன் புத்தி வருடம் 2 மாதம் 8-நாள் 2-க்கு

தன் சுயதேசத்தில் பூது வாங்குதலும் குருவுபதேசம் பெருதலும், தன் அடிமையாளரால் லாபமும் நல்ல போக பாக்கியமும் அழகிய பட்டு பட்டாடைவாங்குதலும் உயர்ந்த தன்னடக்கையுள்ளவனாகவே நடத்தலும் உலகத்தில்

யாவரும் சீமானென்று புகழத்தக்கச் செல்வமும் புகழும் கியாதியும் கடவுள் வணக்கமும் உண்டாகும்.

மேற்படி புதன் 6-8-12லிருந்தால் வித்தையா பங்கம் தசையைப் பற்றிய வியாதி வியாபார நஷ்டம் உண்மையே பேசினும் பொய்யனென்கிற கீர்த்தி, தனது வர்கம் (அ) அம்மான் வகைகளில் சூதகாதிதோஷம் மனஸ்தாபம் முதலிய வைகளுண்டு.

## சனி மகா திசையில் கேது புக்தி வருடம் 1 மாதம் 1 நாள் 9-க்கு

அகால போஜம் மனவியாதி திரேகத்தில் விஷத்தா லேற்படும் சொயு சிரங்கு தனது அடிமையாட்களும் தன் பந்துக்களும் தன்னைவிட்டு நீங்குதல் அன்னிய ஜன துவேஷம் சொர்ப்பணங் காண்குதல் முக்கிய கார்ய நாசம் தனது புத்திரர்கள் தன்னை விட்டி வேராகுதல் களத்திர ஜன துவேஷம் இவைகளுண்டு,

மேற்படி கேது கேந்திரங்களில் வலுப் பெற்றிருந்தால் சுயஜென விஸ்வாசம் பந்து ஜெனக் கூட்டுறவு தீராப்பிணி நிவர்த்தி. ஓர் சுமங்கிலியால் பொருள் வருத்து இஷ்ட ஜென விஸ்வாசம் ஆளடிமை சேர்தல் கொடுக்கல் வாங்கல் முதலிய காரிய ஜெயம்.

## சனி மகா திசையில் சுக்ர புக்தி வருடம் 3 மாதம் 2-க்கு

தனச்சேர்க்கை, ஸ்திரீகளா லேற்படும் வியாதி தெய்வ பகை பிராமணரால் பயம், சங்கீதப் பிரீதி கிருக்ஷி தான்ய பலிதம், கன்று காளை சேர்க்கை புதிதாய் பிரகபிரவேசம் செய்தல் தன் இஷ்டம் போல் சர்வ ஜனங்களும் நடந்து கொள்ள யாவரும் புகப்த்தக்கச் செல்வம் சேருதல் முதலிய வைகளுமாம்,

ஷ சுக்கிரன் கேந்திரத் திரிகோணங்களிலிருந்து ராகு கேதுக்கள் பாவையின்றி யிருப்பானேயாமானால் நூதனபெ ரன் பூஷணம் வாங்குதலும் பூமி மூலமான புதயல் தனங்கி டைதலும் நாளுக்கு நாள் ஐஸ்வர்யம் விருத்தியாதலுமாம்.

## சனி மகா திசையில் சூரிய புத்தி மாதம் 11 நாள் 12-க்கு

ராஜக்களால் பகை, மனஸ்தாபம் திரேக பீடை உற்றார்பகை, தான் குடியிருக்கும்வீடு தன் கை விட்டுப் போகுதல், மனைவி மக்கள் தன்னை விட்டுவேராகுதல் அன்னிய தேசங்களில் சஞ்சத்தல் தன் வீட்டில் களவுப்போகுதல் அன்னிய ஜனப்பகையும் துவேஷமும் உண்டாகும்.

ஷை சூரியன் 1-4-7-10-ல் குருவால் பார்வையுற்றிருந்து உத்தியோக நிலை யத்திர சம்மந்த தொழிலாரம்பம் செய்தல் அதன் மூலமான விசேஷ தனலாபமும் தான்னிய லாபமும் உண்டாதல், இடபேதமாகி அங்கு ஓர் ஸ்திரீயால் விசேஷ பொருள் லாபமுண்டாதனும் உண்டு.

## சனி மகாதிசையில் சந்திரன் புக்தி வருடம் 1 மாதம் 4-க்கு பலன்

பிராமணபத்தி தெய்பக்தி யுண்டாதல். புத்திரர்களால் சம்பத்து, தானதரும பரோபகாரம் செய்தலும் தார புத்திராளுக்கு சுல்ப பிணியைக் கொடுத்து நிவர்த்திதாதலும். உற்றார்பகை, தன் மனம் வெறி கொண்டதைப் போலலைந்து திரிவானென கூறலாம்.

ஷை சந்திரன் க்ஷீனமுடையவனாய் 6-8-12 லிருப்பானேயாமானல், தன் குல ஸ்திரீமேல் அபவாதம் ஆளடிமை சித்தி அயிஸ்வர்யநாசம் தன் சுக பலயீனம் அமிர்தத்திற்கொப்பான தனது பொருளை தன் கைவிட்டு நீங்கும்பாடி செய்து கொள்ளல் தேவாலயங்களுக்குச் சென்று அவமானப்படுத்தலுமாம்.

## சனி மகா திசையில் குஜன் புக்தி வருடம் 1 மாதம் 1 நாள் 9-க்கு பலன்

பிராமணரால் பகை, பிராமணனுக்கே அபாயமான தொந்திரவு நிலைவிட்டுப்பேருதல் நேத்திரரோகம் ஆயுதத்தாலும் அக்கினியாலும் காயமேற்படுதல், கைகால் முடக்கல், திருடராலும் பெண்களாலும் தனது கைப்பொருள் சேதம் இறுதியில் தனது வர்க்க மூலமானப் பகை முதலிய வைகளுமாம்.

ஷ சனி தனது உறவினரால் பார்க்கப்பட்டு ஜெனன லக்கினத்திற்கு கேந்திர திரிகோணங்களிலிருந்தால் கள்ள ரால் பொருள் வருத்து ஜல சம்மந்தமான பொருளால் விசேஷ தனலாபம் ஆளடியார் சித்தியெனவன ஸ்திரீ சேர்தல், கோள் கலக நிவர்த்தியும் சந்தோஷமும் உண்டு.

6 8-12 நீச்சம் பகை பெற்றிருந்தால் கடனால் தொந் திரவு உபவாசம் மனஸ்தாபம் சந்தேகம் முதலிய கொடிய பலனே நடக்கும் என்பதாம்.

## சனி மகா திசையில் இராகு புக்தி வருடம் 2 மீ 6 நாள் 1-க்கு

குட்ட வியாதி காண்குதல், சித்தபிரமை, திரேகத்தில் கிருமிகளா லேற்படும் வியாதி கைப்பொருள் விரயம், சோம் பல், சங்கடம் ராஜாக்களால் பயம் சிறை, விஷபேதி முனி சேர்க்கை புத்தி குறைச்சல் முதலியவைகளுமாம்.

ஷ ராகு 1,4,7,10-ல் வலு பெற்றிருப்பானே யாமா னால் மாந்திரீகம் கற்றல் அனைவருக்கும் பரோபகாரம் செய்தல் ஆயுத பூஷணவாபம்,தனது பூமி மூலமான கிருஷி தான்னிய பலிதம் அஸ்தத்தில் புதிதால் ஒரு உறுப்பு உண் டாதலுமாம்.

## சனி மகா திசையில் குரு புக்தி வருடம் 2 மீ 6 நாள் 1-க்கு

முத்து பவழம் கோமேதம் வைடூரியு மென்னும் விலை யுயர்ந்த ரத்தின வகைகளால் லாபம் பசுவாகனச்சேர்க்கை கோவில் கோபுரம் குளம் கட்டி வைத்தல், தருமதாதாவென் னும் கீர்த்தியுண்டதால் தனது சத்துருக்களை ஜெயித்தல் வியாபாரம் நாளுக்கு நாள் மேன்மைப்படுதல் முதலிய பலன் நடக்கும்.

ஷ குரு நீச்சம் பகைப்பெற்றும் கொடிய க்ஷேத்திரங் களிருந்தால் ஆபரண விரயம், தொடுத்த கார்ய அபஜெயம் உத்தேச பின்னம், வியாகூலம், செய்தொழில் மூலமான விரயம், ஆயுத விரயம் முதலிய பலனே நடக்கும்.

## புதன் மகா திசை வருடம் 17-க்கு புதன் சுயபுக்திவருடம் 2 மாதம் 4 நாள் 27-க்கு

ஞானக் கல்வியுண்டாதல், சாஸ்திரங்களை யாராய்தல் பற்பல தான்னிய வகைகளால் லாபமுண்டாதல் வேளாண் மைப் பலிக்குதல் உலகத்தோர் மதிக்கத்தக்க நன்மை யைச் செய்தல், விதரணம் சாதுர்யம் முதலியவைகளாம்.

ஷ புதன் பகை நீச்சத்தாலும் கொடியோர் சேர்க்கை யாலும் கேந்திர தோஷத்தாலும் பீடிக்கப்பட்டிருப்பானே யாமானால் வியாபாரமும் நஷ்டமும் அற்ப பிணியும் வித்தை யாபங்கமும் செய்வான் இவை பாவபலனுக கேற்றாப்போல் கூறுக.

## புதன் மகா திசையில் கேது புக்தி வருடம் 1 மாதம் 1 நாள் 27-க்கு

அச்சம் அபமிருந்து நட்பினரால் பகைவலது கண் ணோம் வஞ்சனை பில்லி சூன்னிய முண்டாதல் அன்னிய ரால் கன்டபடுதல் அக்கினியால் பயமுண்டாதல் இராஜ ராலும் சேரராலும் தன் தனம் யாவும் பகிஷ்காரமாகுதல் தன் கைப்பொருளும் பூமியும் தன் கைவிட்டுப் போகுதல்.

ஷ கேது கேந்திரங்களில் பலம் பெற்றிருப்பானேயா மானால் நீச்சரால் பொருள் வகுத்து அன்னிய ஜனகோபம் தெய்வச்சகாயம் உண்மை ஞானம் தன சம்பத்து தானிசயம் பத்துண்டாதல் கொடியோர்கள் நேசம் நீங்குதல் முதலிய சவுக்கிய பலனுண்டாகும்

## புதன் மகாதிசையில் சுக்கிர புக்தி வருடம் 2 மாதம் 10-க்கு

திரண்வஸ்திராபாணமும் வாகனம் செல்வமும் புத்திரப் பேருண்டாகலும் கடன் தீர்தலும் எத்தன கார்ய முலமான விசேஷ் லாபமும் மனவியாகூலம் நீங்குதலும் வைசிய ஜென துவேஷமும் ஆலஸ்மான புத்தியும் வெள்ளி வியாபாரம்

செய்தல் மனதிற்குச் சந்தேகம் உறவினரால் பொருள் வருத்து.

மேற்படி சுக்ரன் கொடியோர் க்ஷேத்திரங்களிலும் 6-8-12 லிருப்பானேயாமானால் வெண்ணிறமுடைய மனுஷனால் வியாகூலமும் ஐஸ்வர்ய தனவிறயமும் எத்தேச காலமும் மன வியாகூல தோடிருத்தலும் உண்டாகும்.

ஷெ கேந்திரங்களில் நல்லோருறவிலிருந்து ஆக்ஷி உச்சம் பெற்றிருப்பானே யாமானால் கலியாண சுபசோபனங்களும் ஆளடியார் சேர்க்கையும் செய்தொழிலால் பல கூட்டங் கூட்டங்களில் முதலிய பலன் நடக்கும்.

## புதன் மகா திசையில் சூரிய புக்தி மாதம் 10 நாள் 6-க்கு

கபால ரோகம், ஜன்னி வாத்ஜுரம், பித்தப் பாண்டு கேந்திர மரைப்பு தனது குருவாலும் பத்தினியாலும் நித்தை ஏற்படுதல்: கன்று காலிகள் தன் கைவிட்டுப் போகுதல் தெய்வத்தால் அச்சம் பயமும் செல்வங் குறைதலும் மனதிலுள்ள வியாகூலம் நாளுக்கு நாள் அதிகப்படுத்தலும் செய்தொழிலால் விரயங்களும் உண்டாகும்.

ஷெ சூரியன் சுக்கிரன் சனியுடன் சேர்ந்து வேறு கிரகங்களுடன் கூடி பலம் பெற்றிருப்பாளாகில் பிதுர்ச்செல்வம் கை கூடுதலும் பிதுரார்ஜிதமான வழக்குவாது ஜெயித்தலும் தன் சுயஜெனங்களாலேற்பட்ட கை நிவர்த்தியாதலும் ராஜாக்கள் மூலமான வழக்கு வாதுஜெயித்தல் முதலியபலா பலன்கள் நடக்கும்.

## புதன் மகா திசையில் சந்திர புக்தி வருடம் 1 மாதம் 5-க்கு

அளவிறந்த செல்வமுண்டாகுதலும், தேவதா பூஜை செய்தலும், திருடரை ஜெயித்தலும் நட்பினரால் விசேஷ சவுக்கிய தனலாபமும் தான் நினைத்த காரியம் யாவும் சித்தியாகுதலும் களத்திர சயன சுகபோகங்களும் க்ஷேத்திர லாபமும் மகிழ்ச்சியுமுண்டாகும்.

மேற்படி சந்திரன் க்ஷிணறுடையவனாய் பகை நீச்சம் பெற்றிருப்பானேயானால், அன்னிய ஜென துவேஷமும் ஆளடியார்ப்பகை துஷ்டர்களால் மனஸ்தாபம் யாவரையும் விரோதமாக்குதல் நாளுக்கு நாள் செல்வங் குறைதல் முதலிய பலனாகவே நடக்கும்.

ஆக்ஷி உச்சங்களால் வலுப்பெற்றிருப்பானால் பிரகாச மாகிய பொருளால் லாபமுண்டாதல். அன்னிய ஜனங் களால் ஆதரவுண்டாதல் முதலிய பலன் நடக்கும்.

## புதன் மகாதிசையில் குஜன் புக்தி மாதம் 11 நாள் 27-க்கு

ஸ்திரீகளால் தன் தனம் யாவும் சிலவழித்தல் உற்றார் நாசம். சத்ருத்துவம் சண்டை முதலியவைகளுண்டாதல் அக்கினியாலும் அஜீரணத்தாலும் திரேகத்தில் வியாதியுண் டாதல் வியாபாரத்தை நிறுத்தல் முதலிய பலன் நடக்கும்.

மேற்படி குஜன் தன் சுயவீடுகளிலாக்ஷிபெற்றும் அவை ஜெனன லக்கினத்திற்கு 2 8ட் என்னும் க்ஷேத்திரமாயு மிருந்தால் குடும்ப மூலமான சந்தோஷம் ஆலயதரும பரோபகாரம் அயிஸ்வர்ய விருத்தி சுயஜென விஸ்வாசம் சகல ஜனவாசியப் சேனாதி பத்தியப் நன்னடக்கை தேவ தாயக்தி சண்டை சச்சரவு முதலியவை நடக்கும்.

## புதன் மகா திசையில் ராகு புக்தி வருடம் 2 மாதம் 6 நாள் 18-க்கு

ஸ்திரீகள் நேசம் ஸ்திரீ சேர்க்கையாலும் துஷ்டர்களா லும் பொருள் நஷ்டம் மன சந்தேகம் ஆபரண பூஷணலாப விக்கினம் கோபம் செய்தொழிலால் விறயம் விலங்கு பகை யுண்டாதல் ஆலய தரும எத்தன காரிய விக்கினம் பகை இடது கண் வலி அனைவரும் விரோதமாகுதல் முதலிய பலன் நடக்கும்.

மேற்படி இராகு கேந்திரங்களில் வலுப்பெற்றிருப்பானே யாமானால் களத்திர புத்திர சந்தோஷம் பொன் வெள்ளி சேர்க்கை, பூமி மூலமான வாணிபம் பலிக்குதல் எக்காரியத் திலும் நன்மையே உண்டாகும்.

6-8-12ல் நீச்சம் பகைப் பெற்றிருப்பானேயாமானால் அலைச்சல் திரிச்சல் வைசூரி யுண்டாதல் ரோகம் நெருப் பின்ால் பயம் வாணிபம் மூலமான நஷ்டம் எத்தன கார்ய பின்ன முதலியவைகளுண்டாகும்.

## புதன் மகாதிசையில் குரு புக்தி வருடம் 2 மாதம் 3 நாள் 6-க்கு

வேளாண்மை பலிதம் சவுக்கியம் தேவதா அர்ஜுனை புராண காவியம் கேட்குதல் சிவாலயங்களிலேயே குடியாயி ருத்தல் பகைவரை ஜெயப்படுத்தல் கைவிட்ட பொருள் தானே வந்தடைதல் குருவுபதேசமாகுதல் கீர்த்தி பிரதாபம் மன்னரால் கௌரவம் இஷ்ட அன்னபோஜனம் தேவாலய தீர்த்த முண்டாதல் முதலிய புதன் நடக்கும்.

மேற்படி குரு இராகு கேதுக்களுடன் கூடி நீச்சம்பகைப் பெற்றிருப்பானேயாமானால் பிதாவுக்கு அரிட்டம் மன்ன ரால் பயம் இடம் விட்டுப் போக எத்தணம் ராஜ பிளவை யுண்டாதல்

தன் கைப்பொருள் தன்னை விட்டு நீங்குதல் தேவதா பிரார்த்தனை விக்னமாகுதல் முதலிய கார்யங்கள் நடை பெறும்.

6-8-12 லிருந்தால் சித்தப்பிரமை அலைச்சல் திரிச்சல் விஷபயம் சூன்னிய முண்டாதல் வாதைவியாகூல முண்டா குதல் மனைவியால் தொந்திரவு அற்பபகை முதலியவை களுமாம்.

## புதன் மகாதிசையில் சனி புத்தி வருடம் 2 மாதம் 8 நாள் 9-க்கு

இடம் விட்டு போகுதல் தெய்வத்தையும் அந்தணர் களையும் நிந்தித்தல் ஈனவிருத்தி தோட்டம் துரவுகளால் நஷ்டம் கருத்த நிறமுடைய சரக்குகளால் நஷ்டம் அபாய மானகார்யங்களில் தலையிடுதல்கைகால்வீக்கம்குடைச்சல் மயக்கம் ஜூரபீடை தேசப்பிரஷ்டம் அன்னிய ஜெனங்க ளால் தொந்திரவு ஆலஸ்யமான புத்திமுதலியவைகளுமாம்.



ஷ சனி கேந்திரங்களிலிருந்தால் லாபம் கல்யாணம் சத்துருநாசம் வெற்றி பெருதல் செந்நெல்லால் லாபம்

சம்பத்துண்டாதல் அன்னிய தேவாதா அர்ஜுனனை ஆலயபிரவேசம் தன தானய வருத்து இஷ்ட தேவதா பிரார்த்தனை ஆளடிமை சேர்தல்,

ஷ சனி 6-8-12 லிருந்தால் யானை குதிரை மக்கள் பெண்டீர் இவைகள் நாசமும் வேந்தராலும் சத்துருவாலும் வியாகூலமும் சிறை விலங்கு வருதலுமாம்.

## கேது மகாதிசை 7

## கேது தன் சுய புக்தி மீ 4-நாள் 27-க்கு பலன்

விஷப்பிணி அர்த்த நாசம் திரேகசுககுறவு அன்னிய தேகசஞ்சாரம் செய்தொழில் பின்னம் எத்தன காரிய பின்னம் சுயஜென துவேஷம் போட்டிப்பொல்லாங்கு திரேக பீடை நகைநாணய பின்னம் பகை தொந்தரவு மனச் சலிப்பு.

ஷ கேது கேந்திரத் திரிகோணங்களிலிருந்தால் உத்தி யோக மேம்பாடு கருப்பு தான்னிய கிருஷி லாபம் தன தான் னிய வருத்து உத்தியோக லாபம் முதலிய நற்பலனே செய்யும்.

ஷ கேது திரிகோணங்களிலிருந்து அவன் நின்ற வீட் டுக்குடையவன் யீனம் பெற்றிருந்தால் அலைச்சல் திரிச்சல் ஆடையாபரண நஷ்டம் துர் எண்ணம் தயவு தாக்ஷண்ய குறவு மேலான அதிகாரிகளால் தொந்தரவு.

மேற்படி கேது 6-8-12லிருந்தால் சண்டை சச்சரவு திரேகத்தில் கட்டிச்சிரங்கு மனதிற்கு ஓர் விதமான பயங் கரம் தேவபிராமண துவேஷம் முதலியவைகளுமாம்,

## கேது மகாதிசையின் சுக்கிர புக்தி

## வருடம் 1 மாதம் 2-க்கு

பொன் வகையான வியாபார மேம்பாடு ஸ்திரீ சேர்க் கை தயவு தாக்ஷண்யம் நடன சங்கீதப் பிரீதி மனதிலுள்ள வியாகூல நிவர்த்தி எத்தன காரிய ஜெயம் குடும்பத்தில் சுப்ரபோஜனம் ஆளடியார் சேர்தல் தனது வர்க்கத்தில் சுப சோபனம் உண்டாதல்.

மேற்படி சுக்கிரன் கேந்திரங்களிலிருந்தால் ஐஸ்வரிய விருத்தி குறவு சயன பிணி மதிர்கள் மூலமான கோள்

கலகம் வித்தையா பங்கம் நாற்கால் ஜீவ ஆனி மனஸ் தாபம் தேவ பிராமண துவேஷம்.

மேற்படி சுக்கிரன் திரிகோணங்களில் வலுபெற்றிருந் தால் கைவிட்ட பொருள் வருத்து கலியாண முதலிய சுபகாரியங்கள் செய்தல் அன்னிய தேசங்களிலிருந்து கெம்பு முத்தாபரண வருத்து பட்டு பட்டாடை வந்து சேர்தல் முதலிய சுபபலன் நடக்கும்.

மேற்படி சுக்கிரன் 6-8-12-ல் க்ஷீணம் பெற்றிருந்தால் ஆயாசம் ஸ்திரீபோக மூலமான நோய் இஷ்ட ஜெனத்து வேஷம், அன்னிய ஜனப்பகை விஷபேதி தூரதேசங்களி லிருந்து மனஸ்தாபமான சங்கதி வருத்து கொடியநோய் முதலிய அசுபலன் நடக்கும்.

## கேது மகா திசையில் சூரிய புக்தி மாதம் 4 நாள் 6-க்கு

திரேக பலயீனம் பந்து ஜெனப்பகை, அதிக தூரர் அலைந்து திரிதல் மன்னர்களால் விரோதமுண்டாதல் பிதுர் வகை ஜனங்களால் விறயம் வியாகூல முதலியவை களுண்டாகுதல் அன்னிய ஜனங்களால் தன் சுயயிடத்தை விட்டுப்பிரிதலும் சென்ற இடங்களில் துன்பமும் பயங்கர மும் உண்டாகும்.

மேற்படி சூரியன் கேந்திரங்களில் வலுப்பெற்றும் அவ் வீட்டிற் குடையோர் நட்பு சமம் முதலியவைகளாயிருக்கின் சிவப்பு தான்னிய பலிதம், மனதில் நினைத்த கார்யத்தை உடனே செய்து முடிக்குதல், அன்னிய ஜென மரியாதை யும் அவர்களால் உதவியுமுண்டாதல், ஆபரணங்களும் பற்பல கருவிகளையும் வாங்குதல்.

மேற்படி சூரியன் திரிகோணங்களிலிருந்தால், பிதுர் ஜன கோபம் பலருக்குப் பயப்படுதல், உஷ்ண சம்மந்த பிணி நாளுக்கு நாள் தன் செல்வங் குறைதல் அயிஸ்வர்ய விருத்தி குறைவு.

ஷை சூரியன் 6-8-12லிருந்தால் வியாதி விசனம் பீடை தொடுத்த கார்ய அபஜெயம் அல்லது தான் செய்யுந் தொழில் முகாந்திரங்களில் பலவிதத் தொந்திரவு.

## கேது மகாதிசையில் சுக்குரன் புக்தி மாதம் 10-க்

மன உற்சாகம் சரீர ஆரோக்கிய முதலிய செய்தொழில் பலிதம் ஜலசம்மந்தமான பொருள்களால் நல்ல லாபமும் அதன் மூலமான வெண்மைநிற தான்னிய பலிதமும் வாகன சேர்க்கை முதலியவைகளுண்டாகும்.

ஷ சந்திரன் கேந்திரங்களிலிருந்தும் மேற்படிசந்திரன் ஜெனன காலங்களில் க்ஷீணம் பெற்றவனாயுமிருந்தால் ஜன்னி தலைவலி முதலிய கொடிய நோயும் விலையுயர்ந்த ஆபரணங்களில் சில நஷ்டமாகுதலும் அன்னியதேசம் செல்ல எத்தனப்படுதலுமாம்.

ஷ சந்திரன் திரிகோணங்களில் வலுப்பெற்றிருந்தால் மாதுருவகை ஜனங்களால் மரியாதை பிரகாசமான் வஸ்துக்களால் நிறைந்த லாபம் நாளுக்கு நாள் தனவளர்ச்சி.

ஷ சந்திரன் 6-8-12 லிருந்தால் சரிர ஜாட்டியம்சீதன சம்மந்த பிணி புத்தி குரைச்சல் அன்னியதேசசரக்குகளால் நல்ல லாபமும் எத்தன கத்தன கார்ய அனுகூலமாவதைப் போல் காட்டி அதனால் கஷ்டமும் தொந்திரவும் உண்டாகும்.

## கேது மகா திசையில் குஜன் புக்தி மாதம் 4 நாள் 27-க்கு பலன்

ஸ்திரீஜன துவேஷம் நீச்ச ஜனங்களால் பகை இடபோக வாசம் விஷப்பிணி, ஆயுத. காயம், நீச்ச மிவே சஷ்டாடகம், பகை வியாதி.

மேற்படி குஜன் 1-4.7.10 லிருந்தால் அக்கினி முகமாக செய்யுந்தொழிலால் லாபம் லாவா தேவிகளால் நாணய சிலாக்கியம் நானாவிதமான தொந்திர்வு நிவர்த்தி.

மேற்படி குஜன் 5-9 லிருந்தால் வரவுக்குத் தக்கின சிலவு தான்னிய சிலவு கைவிட்டதனச் சேர்க்கை தனது சகோதர வற்க பீடை நிவர்த்தி.

## கேது மகா திசையில் இராகு புத்தி வருடம் 1 மாதம் 10 நாள் 18-க்கு பலன்

தயுாதி ஜனப்பகை சைவ ஜனங்களால் வழக்கு வாது ஒத்தன கரிய பின்னம் மேற்கு திக்கிலிருந்து அபவாதை நித்தை வருதல்.

ஷெ ராகு 1·4-7-0லிருந்தால் பங்கு பாக விவகார பைசல் கொடுக்கல் வாங்கல் முதலிய காரிய அனுகூலம் புதயல் கிடைத்தல்.

ஷெ ராகு 5-9 லிருந்தால் இஷ்டஜன துவேஷம் நீங்கல் விஷப் பூச்சுகளலேற் பட்ட வியாதி நீங்குதல் மனவியா டைல நிவர்த்தி முதலியவைகளுமாம்.

## கேது மகா திசையில் குரு புத்தி மாதம் 11 நாள் 6-க்கு பலன்

ராஜமூல காரிய அனுகூலம் பிராமணப் பிரபுக்களால் தான் கோரிய மனுஷனை ஜெயப்படுத்தல் தனது வர்க்க மூலமான சூதகாதி தோஷம் ஆயுத லாபம்.

மேற்படி குரு 1-4.7.10 லிருந்தால் மனோவியாகூல நிவர்த்தி செய்தொழில் மூலமான விசேஷ தனலாபம்கீர்த்தி பிரதாபம், நீச்ச ஜனங்களாலும் பிராமண பிரபுக்களாலும் மரியாதை.

திரிகோணங்களிலிருந்தால் தனது வர்க மூலமான சந்தோஷக் கீர்த்திப் பிரதாபம். ஆளடியார் சித்தி நூதன மண்மனை வாங்குதல் ஜெயம்.

## கேது மகா திசையில் சனி புக்தி வருடம் 1 மாதம் 1 நாள் 8-க்கு பலன்

நூதன வியாபாரம் செய்தல். அதன் மூலமான விசேஷ தனலாபம் பந்து ஜனங்களால் கௌரவம் சயனசுகசந் சந்தோஷம் ஆடையாபரண அலங்கிருதம்.

1-4-7-10 லிருந்தால் மணியமுடாதல், அயிஸ்வர்ய விருத்தி லாவக தேவி நாணய் சிலாக்கியம் நூதன பிரபு விஸ் வாசம், சந்தோஷ முதலிய செய்தொழில் விருத்தி.

5-9 லிருந்தால் பாக்கிய யோக்கிய சிலாக்ய மேம்பாடு பிதுர்வர்க்க தனார்சித நிலை சௌக்யம். அன்னதான பரோபகாரம் தீவாந்திர வஸ்திர பூஷண அலங்ருதம் இவை கள் உண்டாகும்

## கேது மகாதிசையில் புதன் புக்தி மீ 11 நாள் 27-க்கு பலன்

வியாபார தனார்சிதம் ஆளடியார் சேர்க்கை தன தான்னிய சம்பத்து நூதன ஆடையாபரண அலங்ருதம் மனவியாகூல நிவர்த்தி சயன சுகபோகம்.

5-9 லிருந்தால் கீர்த்திப் பிரதாபம் நானாவிதமான காரிய அனுகூலம் பந்து ஜனங்களால் மரியாதை, ஆடை யாபரண அலங்ருதம் சைவஜன விஸ்வாசம் சம்போகம்.

1-4-7-10 லிருந்தால் சரீர சௌக்கியம் அன்னதானம் செய்தல் ஆரோக்கியம் நூதன ஸ்திரீஜன நேசம் ஆடையா பரண அலங்ருதம் முதலியவைகளுமாம்

## சுக்கிர மகாதிசையில் சுக்கிரன் சுயபுக்தி வரு 3 மாதம் 4-க்கு

ஷை சுக்கிரன் 1, 4, 7, 10 என்னுமிடங்களிலிருந்தால் சர்வகாரிய ஜெயம் நாளடைவில் நல்ல லாபம் உத்தியோக முதலிய சேவகா விருத்தி சர்வ ஜனங்களும் தன்வசமாகுதல் ஆயுராரோக்கியம் களத்திர மூலமான மனசந்தோஷம் ஆபரண பூஷண லாபம் மேலான அதிகாரிகள் பேட்டி.

ஷை சுக்கிரன் ஆஷிஉச்சம் பெற்றிருக்கின் ஓடம்தோணி தெப்பம் முதலியவைகளும் உண்டாகும்.

5-8 விருந்தால் எந்த காரியமும் தன் வசமாகுதலும் தாயாதி ஜெனக்கூட்டுறவு மனதிற்கு அடிக்கடி சந்தேகப் படுதலும் கவன பிழையும் உண்டாகும்.

6-8-12 லிருந்தால் நெருப்பு சம்மந்தமான வியாதி கடன் முதலியவைகளுண்டாதல் அன்னிய கிராமங் களுக்குச் செல்ல எத்தனம் றெணகாயம் காச்சல்

முதலியவைகளுண்டாதல் ஐஸ்வர்யவிருத்தி குறவு தாயாதி ஜெனங்களால் தொந்தரவு

மேற்படி சுக்கிரன் 2, 11-லிருந்தால் தனதான்ய சம்பத்து அன்னியராலுதவி கைவிட்டுப்போன தனச்சேர்க்கை அன்னிய தேசகருவிகளால் லாபம் முதலியவைகளுணடாகும்.

## சுக்கிரன் மகாதிசையில் சூரியன் புக்தி

## வருடம் 1 மாதம் 0 நாள் 0-க்கு

சந்திர சூரியன் கேந்திரங்களி லிருந்தால் தொடுத்த காரிய விக்னம் கைப்பொருள் சிலவு சுய ஜெனங்களால் பற்பலபொல்லாங்குவெண்ணிறமுடையமனுஷனால்ஆபத்து அவர்களால் பல தொந்திரவு தேசப்பிரஷ்டம் மாதுர் ஜெனங்களால் மனவியாகூலம் முதலியவைகளுண்டாகும்,

சந்திரனுக்கு சூரியன் 5-9 லிருந்தால் பாக்கிய சித்தி மாதுர் ஜெனக்கூட்டுறவு தனது பந்துக்களில் கலியாண சம்ரம் மரியாதை அயிஸ்வர்ய விருத்தி கொடுக்கல் வாங்கல் முதலிய காரியங்களில் மரியாதை தேவாலங்களுக்குச் சென்று வருதல் உலகத்திலுள்ளவரால் போற்றப்படுதல் பட்டணவாசங்களில் குடியிருத்தல் முதலியவைகளுண்டு.

சூரியன் சந்திரனுக்கு 6 லிருந்தால் ஜன்னிவாத ஜுரம் ஸ்திரி மூலமான கோள் கலகம் உதிர மூலமான ரோகம்

சூரியன் சந்திரனுக்கு 8 லிருந்தால் ஜலம் அதாவது ஏரிகுளம் குட்டை முதலியவைகளில் தவறி வீழ்தல் மரணத்திற் கேதுவான வியாதி முதலியவைகளுமாம்.

சந்திரனும் 12 லிருந்தால் ஓர் காலியாணத்தை ஆரம்பித்து விக்கின மாகுதல்

மாதுர்வர்க மூலமான சூதகாதி தோஷங்களுடாதல்

சந்திரனுக்கு 2 லிருந்தால் தனச்சேர்க்கை பூஷண சேர்க்கை குடும்ப ஒற்றுமை தனது மனம்போல் நடந்து கொள்ளல்

மேற்படி சந்திரனுக்கு 11-லிருந்தால் சமரச லாபம் உத்தேச அனுகூலம் தேய்பிறைச் சந்திரனாகில் கொடிய பலனே நடக்கும்,

மேற்படி சூரியன் சந்திரனுக்கு கேந்திரங்களிருப்பானாதில் நற்பலனைத்தரசக்தியுள்ளனல்லவென்றும் துற்பலனையே இருவரென்னவுங் கூறுவதற்குச் சாத்திரங்களிலிடமுண்

தேய்ப்பிறையையுடையவனாகிக் கேந்திரங்களிலிருந் தால் வித்தியா முயற்சி, ஜெயம் புத்திர சம்பத்து, மனை யார் சேர்க்கை, மனஸ்தாப நிவர்த்தி, முதலிய நற்பலனே விளையும்.

## சுக்கிர மகா திசையில் சந்திர புக்தி வருடம் 1 மாதம் 8 நாள் 0-க்கு (ஆக்ஷிவீடாயின்)

நூதன சிநேகம் தயவு, தாக்ஷண்யம். நினைத்த கார்ய ஜெயம் லாபம் சகோதரர்க் கூட்டுறவு.

சமரச லாபம், வியாகூல நிவர்த்தி, தனபிரபு நேசம் வியாகூல நிவர்த்தி.

தனச்சேர்க்கை தயவு தாக்ஷண்யம் லாவாதேவி நாணய சிலாக்கியம் பந்துஜன கூட்டுறவு சந்தோஷம்.

குடும்ப மூலமான மனவியாகூலம் கவன பிழை வரு மான விக்கினம் சந்தோஷ குறைவு.

சகோதர சஷ்டாடகம் சகோதிர கெண்டம் வீண் விறயம் இஷ்டஜன துவஷ்டம் நித்திரை பங்கம்.

சகோதிர நலிஜாட்டியம் உத்தேச பின்னம் ஐஸ்வர்ய நாசம் சண்டை சச்சரவு.

சரீர சுகம் நெருப்பு சம்மந்தமான தொழிலால், விசேஷ லாபம் கீர்த்தி பிரதாபம் சயன சுகபோகம்.

தீவாந்திர வஸ்து வருமானால், அதனால் விசேஷ சுகம் சௌக்கியம் மாதுரு மூலமான தனப்பிராப்தி.

மாதுரு ஜனங்கள் மூலமான சூதகாதி பீடை, தன் பிது ராச்சித தனங்களில் சுலப விறயம் சந்தோஷம் கீர்த்தி.

எத்தன காரியார்த்த மூலமாய் அன்னிய தேசங்களுக் குச் சென்று ஜெயத்தோடு திரும்புதல், தனப்பிராப்தி.

## கேந்திரங்களிலிருந்தால்

எலிம்பு சம்மந்தமான பிணி பீடை தன் சகோதரர்களே தனக்கு விரோதமாகுதல் அபவாத நிந்தை சூத்திர ஜென விரோதம்.

சிலநாள் வியாதியைக் கொடுத்து நிவர்த்தியாகுதல் மன்தில் நினைத்த காரிய மூலமாய் பணச் சிலவு விரோதமு முண்டாதல் சயன ரோக பிணியைக்கொடுத்து பிற்காலங் களில் நிவர்த்தியாகுதல்.

சயன சுகபோகம் விவாகம் நடத்தல் தான தரும பரோப காரம் நன்மார்க்க காரியங்களிலேயே பிரவேசிக்குதல் அன்னிய ஜன சந்தோஷம் முதலியமைகளுமாம்.

வேதபிராமண பக்தி சரீரத்திற்கு ஓர் விதமான வியாதி ஏற்பட்டு நிவர்த்தியாகுதல் மனச்சலிப்பு தாப ஜுரம் விக்கினம்.

தவறி வீழ்தல் ஆயாசம் கிருகிருப்பு அன்னிய ஜனங்க ளால் சண்டைச்சரவு அன்னிய தேசங்களுக்குச் செல்லல்.

எக்காரியத்திலும் அபஜெயம் வழக்கு வாது நித்திரை பங்கம் அன்னிய ஜெனதுவேஷம் சயனபோக நோய்.

பாக்கிய யோக்கிய சிலாக்கியம் வெள்ளி வெண்கல பாத்திர வருமானம் பிதுர் ஜெனங்கள் மூலமான கலியாண சமரமம் பொருள் விறயம்.

சகோதிர மூலமான சுபசோபனம் புத்திரருண்டாதல் நஷ்டமான திரவியலாபம் அயிஸ்வர்ய விருத்தியும் நாள டைவில் சிலாக்கியமும் உண்டு.

தேவால்ய புண்ணியதீர்த்தஸ்தானம் ஆளடியார் சேர்க் கை மனஸ்தாப நிவர்த்தி, செய்தொழில் மூலமான விசேஷ லாபம் இரும்பு முதலிய வகையில் நல்ல லாபம்,

ராஜாக்கள் தயவு மனதில் நினைத்த காரியம் ஜெயம் வண்டி வாகனச்சேர்க்கை நீண்ட லாபம் சுயஜென மரியா தை தாயாதி ஜெனங்களால் சந்தோஷம்.

நல்ல லாபம் கீர்த்தி பிரதாபம், அன்னிய ஜன [illegible] அனு கூலம் விருக்ஷ வகைகளில் லாபம் சிவந்த தான்னிய பலிதம் சகோதரர்களுக்கு [illegible]யாதி.

நெருப்பு சம்மந்தமான தொழில் மூலமான விசேஷ லாபம் லாவாதேவி விஷயமாய் பிரேதசங்களுக்குச் செல்லு தல் சந்தோஷம்.

வீண்விரயம் நஷ்டம் சண்டைச்சச்சரவு சூதகாதி தோஷம் உஷ்ண மூலமான சொரி சிரங்கு அன்னிய ஜன சந்தோஷத்தால் பொருள் நாசம்.

தீர்த்த யாத்த்ரை சகோதர துவேஷம், அன்னிய ஜெனங்களால் தொந்திரவு விக்கினம் வியாதி பீடை இவைகளுண்டாகும்.

## சுக்கிர மகா திசையில் குஜன் புக்தி வருடம் 1 மாதம் 2

விசேஷ தனலாபம் சத்துருஜெயம் ஆளடியார் சேர்க்கை நல்வாக்கு சுயஜென மரியாதை ஜெயம்.

தேவநா ஆலயங்களுக்குச் சென்று வருதல், நீச்சபிரபுக்களாலும் ராஜாக்களாலும் மரியாதை சயனசந்ருஷ்டி.

குடும்ப கலகம், பங்கு பாக விவகாரம், நனச்சேதம் விஷ ஜெந்துக்கள் வீட்டில் காணப்படுதல், அன்னியஜ்னகோபம் மாச்சர்யம்.

நரம்பு மூலமான விஷப்பிணி ரொக்க தனம் சிலவழிதல் சரீர சுக்குறைவு விஷயங்களால் சரீர ஜாண்டியம்.

சகோதர ஜனசஷ்டாடகம். மனவியாகூலம், சகோதிர கண்டம் பூமி மூலமான பலிதகுறைவு நாற்கால் ஜ்வ ஆனி.

தன்னையறியாமல் மோசம் போதல் லாவாதேவி விக்கினம் நஷ்டம் சஞ்சலம் செய்தொழில் பொல்லாப்பு மனகவலை.

## சுக்கிரன் மகாதிசையில் இராகு புத்தி வருடம் 1 மாதம் 2 க்கு பலன்

நீச்சஜன துவேசம், குடும்ப மூலமான விபத்து செய்தொழில் மூலமான அற்பபகை லாவாதேவிகளால் தொந்திரவு இஷட ஜனப்பகை முதலியவைகள் உண்டாம்.

ஷ குஜன் 1 4-7-10-லிருந்தால், லாவாதேவிகளால் நாணய சிலாக்கியம் சயன சுகபோகம் இஷ்டஜனப்பிராப்தி தொடுத்த கார்யம் யீடேறுதலுமாம்.

6-8-12-லிருந்தால், ஸ்திரீ ஜன துவேஷம் ஆபரண விரயம் நீச்ச முலேச சஷ்டாடகம்.

## சுக்கிரன் மகா திசையில் இராகு புக்தி வருடம் 3-க்கு

நீச்ச ஜனங்களால் வழக்கு வாது உத்தேச கார்ய மூல மானப் பகை சயன துவேஷம் ஆலஸ்யமான புக்தி.

1. 4, 7, 10-லிருந்தால் இரும்பு சம்மந்த தொழிலாலனு கூலமும் பூமி முலமான சமரசலாபம் நரவாகனங் கொள்ளல்.

6, 8, 12-லிருந்தால் சத்ருஜெயம் நாணயப்பழுது ரோகங் காட்டல் முதலியவைகளாம்.

## சுக்கிரன் மகா திசையில் குரு புத்தி வருடம் 2 மாதம் 8-க்கு பலன்

ராஜாக்களா லுனுகூலம் பிராமணப் பிரபு நேசம் ராஜ் மூல கார்ய அனுகூலம் ரொக்கத்தன முண்டாதல் ஆயுத லாபமும் தனதிஷ்ட தெய்வகோரிக்கை யீடேறுதலுமாம்.

## சுக்கிரன் மகா திசையில் குரு புத்தி வருடம் 3 மாதம் 2-க்கு பலன்

மதுவகை விற்றல், லாவாதேவிகளால் விறயம் மனஸ் தாப நிவர்ததி, எடுந்த கார்ய ஜெயம் ஆபரண பூஷண அலங்ருதம், நீச்ச துவேஷம், முதலியவைகளுண்டு.

## சுக்கிரன் மகாதிசையில் புதன்புக்தி வருடம் 3 மாதம் 2-க்கு பலன்

வியாபார தன்லாபம் உதார வாக்கு எத்தொழிலைச் செய்யினும் லாபம் மேலான அதிகாரிகளாலனு கூலம் தீர்த்த யாத்திரை சென்று வருதல்.

## சுக்கிரன் மகா திசையில் கேது புக்தி வருடம் 1 மாதம 2-கது பலன்

வீக்கம், விஷபேதி, கட்டிச்சிரங்குகாமாலை, விரவீக்கம் களத்திர மனஸ்தாபம் குடும்ப மூல விரயம் முதலியவை களுண்டு.

## நக்ஷத்திரங்கள் 27-க்குப் பலன்

### அசுவணி

மருத்துவநாள் தனிலுதித்தோன் மன்னனாவான்
மருவுருபான் மூன்றில் யோகமுன்
விருத்தயரை வேசையரை நேசம் செய்வான்
வேண்டிய பேர்க்குதவி செய்ய விருப்பமுள்ளான்.
பருத்ததொரு புயமுடையான் பலபேர் நேயன்
பாக்கியங்க ளுடையவனாம் பராமரிக்கான்
செருக்குடைய வாலிபத்தில் கண்டமுண்டு
சேயர்களை மிகப் பெறுவன் ஜெகத்தோர் காண.

மருத்துவநாள் என்னும் அசுவணி நக்ஷத்திரத்தில் பிறந்தவன் பலன்களைச் சொல்லுமிடத்து தான் ஜெனித்த இருபத்து மூன்றாவது ஆண்டில் யோகமுடையவனும் வேசிகளிடத்தும் விருத்தர்களிடமும் நேசம் செய்யத்தகுந்தவனும் எல்லோருக்கும் உதவி செய்ய ஆசை செய்ய மனமுடையவனும் பருத்த புயங்களும் பலபேருக்கும் நேசமுடையவனும் திரண்டபுயபல வீரபராக்கிரமுடையவனும் பிறர் சொல்லுங் காரியங்ளைத் தள்ளாதவனும் செறுக்கும் வாலிப வயதில் கண்டமுடையவனும் அனேக புத்கிரர்களையுடையவனுமாவானெனக் கூறுவாயாக

இயம்பிடுவீர் அஸ்வனியில் பிறந்தோர்க்கெல்லாம்
இருநால்கிற் பதினைந்தில் கண்டமுண்டு.
நயம் பெருகும் மன்னரால் பூச்சியனாவான்
நட்புடையான ஆதியினில் யோகமில்லை.
ஜெயம் பெருகும் இவுனுக்கு தேசமெல்லாம்
சேயர்களை மிகவுடையான் சினேகியாவான்
வாங்கு வயதிருபதினில் யோக முண்டு
வருத்தமல்லான் வருகால மரிவான்றானே.

அசுவணியில் பிறந்தோர்க்கு 8வது வயதிலும் பதினைந்தாவது வயதிலும் கெண்டமுண்டாகுமென்றும், பெருமை பெற்ற ராஜக்களால் பூசிக்கத் தகுந்தவனும் யாவரிடத்திலும் சினேகிக்கத் தகுந்தவனும், முதலில் யோகமில்லாதவனும் பற்பல தேசங்களில் பிரக்யாதி படைத்தவனும் அனேக புத்திரர் களையுடையனும், இருபதாம் ஆண்டில் யோகமுடையவனும் வருத்தமில்லாதவனும், வருங்கால பலனைத் தெரிந்து கொள்பவனுமாவானெனக் கூறுவாயாக.

## பரணி

பரணிதனில் பிறந்தவனுக் காயுளுண்டு
 பரமனை யென்னாளிலும் பூசிப்போனாகும்
தரணிதனக் கறியவனாம் தயாளசீலன்
 தனையர்களைப் பெறறிழப்பான் கொடியதோசி
முறனுறவே பேசு பவன் மூர்கனாகும்
 முன்னாளில் யோகமுண்டு மூன்று ஆண்டு
வரமுடையான் வஞ்சமுளான் உண்மைசொல்வான்
 வாதிக்கப் பிரியமுளான் வழுந்துவாயே.

பரணி என்னும் நக்ஷத்திரத்தில் பிறந்தவன் நீண்ட ஆயுளுடையவனும் எக்காலமும் கடவுளை பூசிக்கப்பிரிய முடையவனும் அனேக புத்திரர்களைப் பெற்றழைக்கப்படுப வனும், முறட்டுத்தனமான பேச்சுக் களையுடையவனும் மூர்க்கனும்தான் ஜெனித்த 12 வயதுக்கு மேல மூன்று ஆண்டுகள் வரையில் யோகமுடையவனும் வரப்பிரசாத முடையவனும் வஞ்சம் உண்மை சொல்லாதவனும் வாதம் செய்ய பிரியமுடையவனும் மாவானெனக் கூறுவாயாக,

வீசிய வார்த்தை யுள்ளான்
 விதரண சாலியாவான்
பேசியே நேசம் செய்வான்
 பெரும்புக ழுள்ளோனாவான்
மாசில் பாக்கிய வானென்பர்
 மருவிலா தூயனாவான்
நாசியால் பேசவல்லான் நன்மையு
 முடையோனாமே

விசாலமான வார்த்தைகளை யுடையவனும் கூர்மை யான புத்திசாலியும் யாவரிடமும் ஒழுங்காய் பேசி நேசம் செய்யத் தகுந்தவனும் பெருமையும் புகழுடையவனும் குற்ற மில்லாத நெஞ்சமும், பக்கியமும் உண்டாவதோடு நாசியில் பேசத் தகுந்தவனென்றும் நன்மையையே வுடையவனும் மாவானெக் கூறுவாயாக.

## கிருத்திகை

கேளப்பா மாந்தர்களே கிருத்திகைக்கு.
 கிருபையுளோன் அன்னை தமக்குமன்பன்
வாளப்பா பெரியோருக்கு நேயன் ஞானி
 வறுமையிலான் வர்மன்மிலான் மனது நோகான்

தாளப்ரா யிவனுக்கு யின்னஞ் சொல்வேன்
தவமுடையோர் தமக்கன்பன் தாழ்வுபில்லான்
நாளப்டா யிவனுக்கே வயது நூறு
நானிலத்திலிருந் துயரை நீக்குவானே

கிருத்திகை நக்ஷத்திரத்தில் பிறந்தவன் பலனைச்சொல்லுமிடத்து கிருபையுள்ளவனும் தாய் தந்தையர் மீது நீண்ட பிரியமுடையவனும், பெரியோரிடமும் நேசம் செய்பவனும், வருமை என்பதையறியாதவன் மனது புண்படாதவன்' தவசிகளிடத்திலும் சன்யாசிகளிடத்தும் சினேகம் செய்பவன் இவனுக்கு நூறு வயதென்றுங் கூறுவாயாக.

கிருத்திகையில் பிறந்தவனே மறவனாவான்
கிருத்திகையில் பிறந்தவனே வர்மனாவான்
கிருத்திகையில் பிறந்தவனே கொடியனாவான்
கிருத்திகையில் பிறந்தவனே செல்வனாவான்
கிருத்திகையில் பிறந்தவனே கோபமில்லான்
விருப்பமுடன் செல்லுகிறேன் விபரங் கேளு
செருக்குடையோன் வித்தையிலே மிகுந்த சீலன்
உருக்கமுளோன் உமையவளு முறைத்த வாக்கே

கிருத்திகை நக்ஷத்திரத்தில் பிறந்தவன் திருடனும், கறமி கொடியவன் செல்வமுடையவன் கோபமில்லாதவன், செருக்கும் வித்தையா மேன்மையுடையவனும் உருக்கமுடையவனும் ஆவானெனக் கூறுவாயாக.

## உரோகிணி

வல்லவன் பெருஞ் செல்வனு மாகுவான்.
வந்தபேவர வதைத்திடும் நெஞ்சனாம்
வெல்லுவான் கொடியோர்களை வேகமாய்
மேதினிதனிலே புகழ் பூண்டவன்
சொல்வான் பல்பேர்க்கு மகிழ்வுரை
சூக்ஷியரிவாரின் பிறர் வார்த்தையை
சொல்லுவான் சுந்ரமாதர்கள் வாழ்மனை
செய்யுரோகிணி தன்னில் பிறந்தவன்

உரோகணியில் பிறந்தவன் சாமார்த்தியனும் திரண்ட செல்வத்தை யுடையவனும் தன்னை எதிர் பேரை வதைக்குந் தீரமுடையவனும் கொடியவர்களை சம்மாரம் செய்பவனும் இப்பூமியில் புகழ்ச்சியே அதிக முடையவனும் எல்லோர்க்கும் நல் வார்த்தை சொல்லுபவனும் பிறர் வார்த்தை,

களை சூக்ஷமாய் யறிபவனும் அழகிய மாதர்களிடம் தேடிச் செல்பவனும் ஆவானெனக் கூறுவாயாக.

தெள்ளிய ரோகணிக்குத்
தேசமே யாளவல்லான்
விள்ளரும் புகழேயுள்ளோன்
வேண்டிய மாதைக்கொள்வான்
கள்ளவிழ்க் கோதைமாரை
கடுகியே நேசம் கொள்வான்
துள்ளியதனமு முள்ளான்
தோன்றலு மாகுவானே.

ரோகிணியில் பிறந்தவன் பற்பல தேசங்களையாள வல்லவனும் புகழ்ச்சியதிகமுடையவனும், தான் கோரிய ஸ்திரீயைக் கைக்கொள்பவனும், ஸ்திரீகளை யதிவிரைவில் நேசம் செய்பவனும் திரண்ட செல்வமும் கீர்த்தி பெற்ற அரசனுமாம்.

## மிருக சிரம்

பந்தமா மிருகசீரம் பகைவரை
ஜெயிக்க யில்லான்
சந்ததந்திரிந்து நாய்போல்
தனமதைத் தேடவல்லான்
பிந்திய காரியத்தைப்
பேசுவான் முன்னதாக
கொந்தலர்க் குழலினாரைக்
கூடிடும் சினேகனாமே

மிருகசீர நக்ஷத்திரத்தில் பிறந்தவன் தனது பகைவர் களை ஜெயிக்க வகையில்லாதவனும் எக்காலமும் தனந் தேட வேண்டுமென்ற எண்ணத்துடன் அலைந்து திரிபவ னும், பின்னால் வருங் காரியங்களை முன்னதாகவே அறிந்து சொல்லுபவனும், அழகிய பெண்களிடத்து சினேகம் செய்து மகிழ்ந்திருப்பவனுமாவானெனக் கூறுவா யாக.

இணங்கிய ஞானவனாம்
யிரைவன் போல் வாழ்வான் பின்னும்
பிணங்குமோர் காரியத்தால்
பிறண்டுபோம் தனங்களெல்லாம்
குணங்குறி பெலங்களுள்ளான்
குருகடா க்ஷங்களுள்ளான்
இணங்கி வாழ்ந்த திருப்பேரனாகு
மிவனுக்கு வயது நூறே

யாவரிடத்திலும் இணங்கி யிருப்போனும் ஞானமார்க் கங்களை யறிந்தவனும் ஓர் காரியத்தால் தன் தனம் யாவும் சில வழிதலும் நற்குணம் பலம் குருகடாக்ஷம் இவைகளை யுடையவனும் யாவருக்கும் பயந்து வாழ்ந்திருப்பவனும் நூறு வயது டையவனெனவுங் கூறுவாயாக.

திருவாதிரை

கனத்த ஆதிரையோன் மிக்க
கடுஞ்சொல்லான் எவர்க்கும் மஞ்சான்
வனத்துரு மிருகம் போல
வாழ்குவன் புவியில் நாளும்
இனத்துரு களத்தினாலே
ஏகிடுஞ் செல்வமெல்லாம்
மனத்தினில் மோசமில்லான்
வாழ்வுகள் மிகவுள்ளானே,

பெருமை பெற்ற திருவாதிரை நக்ஷத்திரத்தில் பிறந்த வன் கடுமையான வசனங்களை யுடையவனும், ஒருவருக் கும் பயப்படாதவனும் சுாட்டில் வாழும் தன் இனத்திலேதே கிடைத்த களத்திரத்தால் தன் கைப்பொருள் யாவும் இழந்த போதிலும் மனதில் மோசமென்பதே யில்லாதவனும் பற்பல விதமான வாழ்க்கையுடையவனு மாவானெனக் கூறுவா யாக.

ஒளிதரு மாதிரைக்கு
உத்தமன் தீர்க்கபோகி
வளர்க பெருஞ் செல்வமுள்ளான்
வணங்குவான் ஞானியாகும்
தெளிஎ கல்வியுள்ளான்
செங்கண்ணன் சிறப்புமுள்ளான்
எழில்பெரு மைந்தருள்ளான்
எவருக்கும் நண்பனாமே

ஒளிபொருந்திய திருவாதிரை என்னும் நக்ஷத்திரத்தில் பிறந்தவன், உத்தமசீலனும் போகசுகங்களிலதிகம் யீடுபடு வோனும், வளமை பொருந்திய செல்வமுடையவனும் யாவ ரையும் வணங்கும் ஞானியும் தெள்ளிய வித்தை சிவந்த விழி அழகிய புததிராதியுமுடையவன், யாவருக்கும் நண்பனாயு மிருப்பானெனக் கூறுவாயாக.

துயனும் வெகு நேயனுமாகுவன்
துலங்கு பாக்கிய மெத்தவுஞ் சேர்ப்பவன்
நேயமான கெம்பீரமு மூள்ளவன்
நேசிப்பன் பலபேரை நொடியினில்

ஏய நற்குணன் புத்திமான் மந்திரி
எத்தனித்த பொருளதைக் கொள்ளுவன்
மாயமாக மாயாஜாலமுஞ் செய்குவன்
மா் நிலத்தில் மகிழ்ச்சியுடையவனே.

குற்றமில்லாதவனும், சினேகம் செய்யுந் தன்மையும் ஒளி மொருந்திய பாக்கிய மதிகமுடையவனும் கெம்பீரமும் ஒரு நொடியில் யாவரையும் நேசிக்கத்தக்கவனும் நற்குண மும் புத்தியும் மந்திரியைப் போன்றவனும் மாயாஜால வினோதங்கள் செய்பவனும் இப்பூமியில் சந்தோஷத்தையே அடைபவனுமாவானெனக் கூறுக.

## புனர்பூசம்

புகமுடையோன் புனர்பூசந்தனிற் பிறந்தோன்
புண்ணியவான் நடுவயதில் தரித்ரமுள்ளான்
இகமுடையன் பின் வயதில் மன்னராலே
எவர்களுமே தூஷிப்பார் என்னசொல்வேன்
திகமுடைய் களத்திரத்தால் செல்வங்கொஞ்சம்
திறமடைய்ான் வியாபாரத் தனிலே சற்று
புகலுவய தறுபதினி லிவனுக்கப்பா
புகழ்ச்சியுண்டு மகிழ்ச்சியுண்டு புண்யவானே

புகழ்ச்சியாகிய சந்தோஷத்தையே யுடையவனும் புண் ணியவான் என்றும் மத்திய வய்தில் சுலப தரித்திரமுடைய வனும் பிற்காலங்களில் அரசர்களால் சில கஷ்டங்களை யுடையவனும், பலராலும் தூஷிக்கத்தக்கவனும் இவன் ஜெனித்த அறுபதாமாண்டில் தீர்க செல்வமும் புகழ்ச்சியும் அடைவானெனக் கூறுவாயாக,

பெருமையுளோன் புனர்பூசந் தனில் பிறந்தோன்
பிறர்க்கஞ்சான் நல்லதாரன்
அருமையுள மக்களைப்பெற் றிலைப்பான் பின்னும்
அரசர்களால் கீர்த்தியுண்டு சொன்னேன் சொன்னேன்
மருவ்யதோர் வயது பதினைந்து தன்னில்
வளம் பெரிய மாடாடு பூமியுண்டு
தருமமுளான் எவர்களையுந் துரோ்கம் செய்யான்
எண்ணறிய புரவியுண்டு இவனுக்கென்னே,

பெருமையுள்ளவன், ஒருவருக்கும் அஞ்சாதவன் சஞ் சாரம் செய்ய ஆசையுள்ளவன் அழகிய நல்ல மனைவியை யுடையவன் அனேக குழந்தைகளைப் பெற்றிருப்பவன் ராஜாக்களால் நற்கீர்த்தியுடையவன் தான் ஜெனித்த

வயது பதினைந்தில் பெரிய வீடு ஆடுமாடுகளும் சேர்ப்பவன் தருமம் செய்ய எண்ண முடையவன் கணக்கில்லாத குதிரைகளையுடையவனுமாம்.

## பூசம்

இலக்கணஞ்சேர் பூசத்திற் பிறக்கிலப்பா
இவனுக்கே நடுவயதில் வறுமையுண்டு
கலக்க முருஞ் சிலகாலங் கண்ணோயுண்டு
கடும்பாவ காரியங்கள் செய்வான் பின்னும்
விக்கிலடவு நல்யோக முண்டு பின்னால்
விதரணனாய் வாழ்ந்திருப்பான் சிலது காலம்
பலத்திடவே வாழ்ந்திருப்பான் மேலும் மேனும்
பலபேரை நேசித்து வாழ்வான் பாரே.

பூச நக்ஷத்திரத்தில் பிறந்தவன் பலனைச் சொல்லுமிடத்து மத்தியவயதில் கொஞ்சம் தரித்திரமுடையவனும் கலக்கமென்னும் சஞ்சலம் கண்ணோயுண்டாதல் கொடிய பாவகாரியங்களில் தலையிடுதல், பிற்காலங்களில் நல்ல மேலான யோகமும், நல்ல புத்திசாலியாய் வாழப்படுபவனும் நாளுக்கு நாள் நல்ல மேன்மையே பெருபவனும் அனைவரையும் சினேகித்து வாழப்படுவனுமானெனக் கூறுவாயாக,

துணிவுறு பூசத்தோர்க்குச்
சொல்லுவேன் சத்ருநாசன்
தணிவாகப் பேசவல்லான்
தயைமிக வுடையோனாகும்
மணியுடைகளு முள்ளான்
மன்னரால் செல்வமுண்டு
வணிகனாம் சமதேகத்தன்
வாழ்வுளா னென்று ஓதே.

சத்ருக்களை நாசம் செய்பவனும், தணிவான வார்த்தைகளைப் பேசவல்லவனும் தயவு தாக்ஷிண்யங்களுமுடையவனும் விலையுயர்ந்த ஆடைகளையுடையவனும் அரசர்களால் செல்வமதிக முடையவனும், வியாபாரம் செய்வதில் கைதேர்ந்தவனும், வாழ்க்கை யதிகமுடையவனு மாவானென்றுங் கூறுவாயாக.

## அயில்லியம்,

பரிவுறு குணந்தோனாவான்
பாக்கிய மறபனாகும்
தெரிவுறு வயதுபத்தில்
தேசமே போகவல்லான்

மறியநேத் திரரோகத்தன்
மனதினில் கிலேசமில்லான்
அறிவுறு கல்வியுண்டு
ஆயில்ய நாளனுக்கே.

பறிந்த வார்த்தைகள் பேசத்தகுந்தவனும், அற்ப பாக்கிய முடையவனும், தான் ஜெனித்த பத்தாமாண்டில் அன்னிய தேசாந்திரம் போக வல்லவனும், நேத்திர வியாதி யுடையவனும், கிலேசமென்பதே சற்றேனும் மில்லாதவனும் அறிவைத் தருங்கல்வி யதிகமுடையவனு மாவானெனக் கூறுவாயாக.

சதிரான ஆயில்யத் தோன்
தன்னையே புகழ வல்லான்
புதிய காமத்தோ னாவன் புண்
படு நெஞ்ச னாவன்
எதிராகப் பேசவல்லான்
எவர்க்குமே நண்பனாவான்
நதிசூடு நாதன் பாதமென்
நாளினு மறவான் றானே

தன்னைத்தானே புகழ்ச்சியாய்ப் பேசத் தகுந்தவனும் காமத்திலதிகம் மூழ்கிக்கிடப்பவனும், என்னாளும் புண் பட்ட நெஞ்சமுடையவனும் எவரையும் எதிர்த்து பேசவல்ல வனும் சிவபெருமான் பாத தாமரையை என்னாளும் மற வாதவனு மாவானெனக் கூறுக.

## மகம்

வெல்லுவான் மகந்தன்னில் பிறந்தவன்
வேணதுண்டு யிவனுக்கு பூமியே
செல்லுவான் நெடுந்தூரஞ் சலிப்பிலை
செய்குவான் பலகார்யஞ் சமர்த்தனாய்
கொல்லுவா னெதிர்த்தோரை விரைவினில்
கோபங்கொள்வோன் குறிப்பறி யாதவன்
கல்போன்ற கடும்வார்த் தையையுளன்
காட்வான் பலமாய் வினோதமே

எவரையும் ஜெயிக்கத் தகுந்தவன் அனேக பூமிகளை யுடையவன், அதிக தூரம் நடந்து செல்லுபவன், பற்பல காரியங்களையும் சமர்த்தோடு செய்யத்தகுந்தவன் தன்னை யெதிர்த்தோரை ஜெயித்து கொல்பவன், குறிப்பறியாது

கோபங்கொள்பவன், ஸ்திரீசமானவசனங்களையுடையவன் பற்பலவிதமான மாயாஜாலவினோதங்காட்டுபவனுமாவான்

சாமி மோகன் கருத் தரியா நவன்
நேமி யோர்க்குறு வஞ்சமே செய்குவன்
பூமியோ ரைப்கபுழ்ங் சியாய்ப் பேசியே
சாமிபோலே தழைத்து யிருப்பானே.

மோகாந்த காரத்தில் மூழ்கியவனும், அடுவென்னும் சன்மார்க்கங்களையறியாதவன். இம்பூமிலுள்ள அனைவர்க்கும் வஞ்சமே செய்பவன் அன்றியும் யாவரையும் புகழ்ச்சியாகப் பேசி துரையைப் போன்று சுகித்திருப்பானென்று கூறுக.

## பூரம்

ஆசானாகும் அருள் நிறைச்செல்வனாம்
பேசாவறமி பிராறியாதவன்
தாசாள் தன்னை தரிசனை செவனாவன்
விசால முள்ளான விளம்புவா யிப்பலன்,

அருள் நிறைந்தவன், பொருள் நிறைந்தவன், உபாத்திவைத் தொழில் செய்பவன், ஒருவரிடமும் பேசாத வற்கமுடையவன் ஒருவருக்கு மறியாதவன், உயர்ந்த ஞானிகளையும் பக்தர்களையும் கண்டு களிப்பவன் விசாலமானவனெனவுங் கூறுவாயாக,

பாக்யவான் பெரும்பாட லிர்த்தேர்ந்தவன்
சிலாக்யவா னனைவோர்க்குந் தெரிந்தவன்
யோக்யவான் பாலசாஸ்திரங் கற்பவன்
சிலாக்யவா னனைவோர்க் குபகாரனே.

பாக்கி மதிகமுடையவன் அருமையானபாட்டுகள் பாடுவதில் தேர்ந்தவன், சிலாக்கியமு யோக்கியமுடையவன். பலவிதமான சாஸ்திர ஆராய்ச்சியை யுடையவன். சிலாக்கியவானும் எல்லோர்க்கு முபகாரம் செய்பவனுமாவானெனக் கூறுக,

## உத்திரம்

உத்திரத்தோர் குறைவில்லை குருவுமில்லை
உணவாகச் சாப்பிடுவா னுயர்ந்தோனாகும்
மெத்த பசி யுடையவனாம் மேலோர் நண்பன்
மேவுய திருபதினில் யோகமுள்ளான்

சித்திரத்தில் கைதேர்ந்த வேலைக்காரன்
சிறுதேகன் பெரியோரை நேசம் செய்வான்
நத்திடும்பேர்க் குபகாரம்செய் வான்நாளும்
நாயகனென்றே புவியில் வாழ்குவானே.

உத்திர நக்ஷத்திரத்தில் பிறந்தபேர்களுக்கு என்னாளும் குறைவில்லை எனவும், குருவும் கிடையாதென்றும் ருசியான பதார்த்தங்களைச்சாப்பிட மிகப்பிரிய முடையவனும் நீண்ட உருவமுடையவனும் அதிக பசியாளன் உயர்ந்த அந்தஸ்துடையோருக்கு நண்பன்தான் ஜெனித்த வயது இருபதில் யோக முடையுவனும், சித்திரமெழுதுவதில் கைத்தேர்ந்தவனாம் மெல்லிய சரீரமுடையவன், பெரியோரிடம் நேசம் செய்பவன் எந்நாளும் துரையைப் போன்றவனுமாம்,

புலவனும் பெரிய சாஸ்திரிகள் நல்ல
புண்ணியவானென ஓதும்
பற்பல கார்யம் பரிவுடன் செய்வான்
பாக்கிய முடையவ னாகும்
நலமுரு மர்த்த லாபமு முடையான்
நன்றியை மறந்திடா னாகும்
பலமுறும் பூமி பயுவுடன் சேர்ப்பன்
பலகலை யோதிடு பவனே.

புலவனென்று சொல்லும் வித்துவ சாமர்த்தியமுடையவனும், யாவரும் மதிப்பிடத்தக்க புண்ணியவானும், பற்பல விதமான கார்யங்களை வெகு சீக்கிரம் செய்பவனும், நிறைத்த பூஸ்திதியை யுடையவனும் நலத்தைத்தரும் வியாபாரத்தில் அர்த்தலாப முடையவனும், பிறர் செய்த நன்றியை மறந்திடாதவனும் நீர்ப்பாங்கான பூமிகளைச் சேர்ப்பவனும், பலவித சாஸ்திரங்களை யறிந்தவனுமாகும்.

## அர்த்தம

உத்தமன் வெகுசத்திய னாகுவன்
உயர்ந்த மெய்யன் மருவுள னாகுவான்
சவுரியன் தனந்தேடிடு முத்தமன்
மெத்தவும் புத்ரப் பேருள னாகுவான்
பேசுவான் பிறர்கார்யஞ் சமர்த்தனாய்
நத்திடாரன் பிறர் [illegible]
அத்தம் தன்னிற் பிறந்திடும் பேர்களே.

அந்த நக்ஷத்திரத்தில் பிறந்தவன் பலன்களைச் சொல்லுமிடத்து உத்தமன் சத்தியம் தவராதவன் உயர்ந்த சரீரமுடையவன், மருவுள்ளவன் சிவனிடம் பக்தியுள்ளவன், சவுரியவான் உத்தமன் தனத்தைக் கஷ்டப்பட்டுத் தேடுபவன் அதிக புத்திரப் பேருடையவன் பிறர் கார்யங்களை வெகு சாமார்த்தியமாய்பேசி ஜெயிப்பவன், பிறர் செய்யும் உதவியை எதிர் பார்த்தவன் என்றுங் கூறுவாயாக

வேண்டிடான் பிரராசையும் நேசமும்
 வித்தையும்பல புத்தியு முள்ளவன்
தாண்டிடும் வருந்துன் பங்கள் யாவுமே
 தயிரியன் பல காரிய சித்தியான்
மூண்டிடும் ஜுரவாதமும் பித்தமும்
 முழங்கிடும் வயதாரிலும் பத்திலும்
மாண்டிடும் வரும் வாகனம் யாவுமே
 மயங்கியே திரிவானென ஓலுமே

பிறர் நேசத்தையும் ஆசையையும் வேண்டாதவன், பற்பலவித்தையா அப்பியாசமும் புத்தியுமுடையவன், தனக்கு நேரும் துன்பம் யாவும்பனிபோல் நீங்கி விடுவதும் தைரியமுடையன், எக்காரியத்தையும் ஜெயம் செய்து கொள்ளுபவன் தான் ஜெனித்த ஆறு பத்து இந்த வயதில் ஜுரம், பித்தம் இவைகளையுடையவன், அன்றியும் தனக்கெப்படிப் பட்ட வாகனம் வந்துசேரினும் மாண்டுபோதலும் பிற்காலம் மயக்கத்தோடு திரிபவனுமாவான்

## சித்திரை

ஒருவருக்கு முதவாதானு லோபியாகும்
 உருவறியா திருந்திடுவா னுண்மையில்லான்
பெருகும் வயதறுபதினில் கண்டமுண்டு
 பேசிடுவா யிவனுக்கு மனைவிரெண்டு
பருவமது மாமிசத்தி லிச்சையுள்ளான்
 பலகாலும் புல்சுமப்பான் பருத்தமெய்யன்
மருவுமனையாள் மீது பழியே சொல்லும்
 மன்னனிவ னென்றுலகோர் பேசுவாரே,

ஒருவருக்கு உதவி செய்யாத உலோபியென்ற பட்டமும் உண்மை சொல்லாதவனும், ஒருவருக்கும் உருத்தெரியாது

உலகத்தில் திரிபவனும், மதுமாமிசம் இவைகளுக்கும்பிரியப் படுபவன் எக்காலமும் புல் சுமை சுமந்து திரிபவன், ப்ருத்த சரீரமுடையவன் தன் மனைவி மீது பழி சொல்பவன், என்று இவ்வுலகோர் யாவரும் பேசுவாரெனக் கூறுவாயாக.

காலமரிந் துதவா தான் கடுஞ்சொல்லாளன்
கருத்தரியானன்னியர்மேல் பொறாமை கொள்வான்
ஆலமுண்ட ஈசனுக்கு தொண்டு செய்யான்
அரும்பொருளைத்தேடிமண்ணில்புதைத்துவைப்பான்
பாலகன்போல் பரிந்துப்பான் பசிபொறாதான்
பத்தினியை யிம்சிப்பான் பரத்தையர்க்காய்
காலமெலாந் தொண்டு செய்யுங் கபடனென்று
கருத்தாக உரைத்திடுவார் கலைவல்லோரே.

காலமரிந்து பிறர்க்குதவி செய்யாதாவறு, கடுமையான மொழிகளை யுடையவன் கருத்தில்லாதவன், பிறரைப் பார்த்து பொறமைக் கொள்பவன், கடவுளிடத்தில் பக்தி செய்யப்படாதவன், அருமையான பொருளைத்தேடி மண் ணில் புதைத்து வைப்பவன், பசி பொராதவன் தாசிகளுக் காய் என்னாளும் தொண்டு செய்பவன், கபடனுமாவா னென்று சாஸ்திரங்களையறிந்து மேதாவிகள் கூறுவர்.

## சுவாதி

அன்னை தந்தை தமக்கன்பன் அறத்தைக் காப்போன்
ஆசையிலான் பிறர்பொருள்மே லாசையில்லான்
பின்னைவருங் காரியத்தை யறிந்துகொள்வான்
பிறரறியா திரிந்திடுவான் பேசாமெளனி
தன்னைத்தான் புகழ்ச்சிசெய்வான் கருகண்ணாளன்
தருதலையோ டுறவில்லான் தணிக்கையாளன்
மீன னனையார் மோகமதா லலைந்துசொந்த
பொருள் யாவு மிழந்திடுவர் னெனச்சொல்வாயே

தாய் தந்தையர் மீது நீண்ட பிரியமுடையவன் தருமத் தைக் காப்பவன் பிறர் பொருளுக் காசைவைக்காதவன், அருமையான பொருளைச் சம்பாதிப்பவன், பிறரறியாமல் ஒளித்துத் திரிபவன், மௌனமுடையவன் தன்னைத்தானே புகழ்ச்சி செய்துகொள்ளுபவன் தருதலையின் நேச

மல்லாதவன். பெண்கள் மேகத்தாலைந்து திரிந்து தன் பூஸ்திதியாவும் இழந்து போவானெனவுங் கூறுவாயாக.

தருமமிகு தாசர்களுக் கன்பனாகும்
தரித்திரத்தை யுடையவனாம் தயவுமுள்ளான்
பெருமிதமாய் பேசாதான் பெருமையில்லான்
பித்தசரீ ரத்தனுமாம் தத்தா தூயன்
அருமையுள மக்கள்பல உள்ள னாகும்
ஐரெண்டில் மூவெட்டில் கண்டமுண்டு
மருமனையாள் தனைவெண்டா தூயனென்றும்
மதித்த சுவாதியில் பிறந்தோர் குறைசெய்வாரே

தருமம் செய்யுமன்பர்களுக்கு அன்பனும் தரித்திர முடையவனும் தயவுடையவன் வீண் வார்த்தை பேசாதவன், பெருமையில்லாதவன் பித்த சரீரமுடைய்வன் பிறரை வேண்டாதவன். நல்லவன் அருமையான மக்கள் பலவுடையவனும், பத்தாவது வயதிலும், இருபத்தினான்காவது ஆண்டிலும் கண்டமுடையவன் இரண்டாவது இன்னொரு மனைவியை வேண்டாத உண்மையாளனென்று இவ்வுலகத்தோர் பேசத்தக்க உத்தமனென்று பேசுவார்.

## விசாகம்

மெத்தவும் பன்னீர் விரும்புவன் றனது
மேவு மூத்திர கமனன்
உத்தமன் சீமான் உறவளர் னிறந்த
உறவினர் மேற்பிறிய னுமாம்
நித்திரையாளன் நெடுமெய்யன் கரியன்
நேர்ந்த காரியத் தின்மேல் பிரியன்
சத்தியனாகுந் தனந்தேடு வோனாம்
சதிர் விசாகத்து நாளானே.

வாசனை நிறைந்த பன்னீர் முதலிய வஸ்துக்களின் மேல் நீண்ட பிரியமுடையவனும் தான் மணந்த மனைவி மீது ஆசையுடையவனும் உத்தமமானவனும் சீமான் யாருவருக்கு முறவுடையவன் தன் குத்தவரிலிறந்த பந்துக்களுக்கு விரதமிருப்பவன் அதிக நித்திரை உயர்ந்த சரீரமுடையவன் தற்போது நடக்கும் காரியத்தை பிரியத்தோடு எதிர்நோக்குபவன், சத்தியமுடைய்வன் கஷ்டப்பட்டு தனந்தேட வேண்டுமென்ற வண்ணமுடையவன் என்றுங் கூறுவாயாக.

காட்டுமே பதினொன்றில் கண்டமும்
கருதுவாலிப யோகமு முள்ளவன்
கூட்டுமேபர தாரத்தையே யோகமாய்
குறவர் பக்தியுச் சாகமே யுள்ளவன்
பூட்டுமே நவரத்தின பூஷணம்
புனிதனாகும் புகழ்மிக வுள்ளவன்
நாட்டுமாண்மை செருக்குள னாகுவன்
நவிலும் யோகவான நாரியர் மோகனே.

இவன் ஜெனித்த பதினோராமாண்டில் கெண்டாதி கெண்டங்களையுடையவனும் தன் வாலிப வயதில் யோக முடையவனும், அன்னிய தாரங்கள் அமோகமாய் வந்து சேர்தலும், சிவசண்முக கடவுளிடம் பக்தி வைராக்யமுடையவனும், நவரத்தினப் பூஷணச் சேர்க்கையுள்ளவன் உத்தமன் சந்தோஷமே உள்ளவன், ஆண்மை செருக்கு முதலியவையும் ஸ்திரீகள் மோகனும் யோகானுமாவான்.

## அனுஷம்

சிறந்த செல்வன் சிறுமைந் தருள்ளவன்
சேர்ந்திருக்கப் பிரியமுள்ளவன்
பிறந்த சேய்க்குப் பணபொருள் தேடுவன்
பின்னும் வஞ்சகரைக் கூடிவாழ் குவன்
நிறைந்த மெய்யன் முக்கோண வீடுள்ளவன்
நேத்திரம் பயமாகு முன் னான்கினில்
குறைந்த சாரீரன் குற்றமில் லாதவன்
குவலயத்தோர் புகழு மனுஷனே

யாவரும் புகழ்பெற்ற அனுஷ நக்ஷத்திரத்தில் பிறந்தவன் பலனைச் சொல்லுமிடத்து சிறப்புற்றோங்கிய செல்வமுடையவனும், தான் மக்களுக்குப் பணம் சேகரித்து வைக்குங் காரியங்களில் முயற்சியுடையவனும் வஞ்சம் சூது செய்பவரிடம் வாழ்ந்திருப்பவனும் சமமாகிய மூன்று மூலையுள்ள வீடுகளையுடையவனும், தான் ஜெனித்த பன்னிரண்டாமாண்டில் நேத்திரப்பயமுடையவனும் சிறு குரலையுடையவனும் குற்றமில்லாதவனும் ஆவானெனக் கூறுவாயாக.

குலவு சோமனைப்போல் ரூபமுள்ளவன்
குடியன் நன்மாமுயற்சியை யுள்ளவன்

யிலகுமேனி மிகபோக யாக்கியன்
மிகுந்தசாத்ரீ கனு மெய்யனு மாகுவன்
சிலவிற்கஞ்சான் சிறப்புமே யுள்ளவன்
சித்தந்தன்னிலே குற்ற மில்லாதவன்
குலவுமெய்யன்பர் நேசமே யுள்ளவன்
குமரிதாளை வணங்குவான் நாளுமே.

பிரகாசம் நிறைந்த சந்திரனைப் போன்ற ரூபலா வண்யமுடையவனும், மதுவகைகளை யிச்சிப்போனும், நற் காரியங்களில் முயற்சியுள்ளவன், பிரகாசமான காந்தியும் போகமதிகமும் பாக்கியச் சேர்க்கையுமுள்ளவன், எக்காரி யத்திலும் வைராக்கிய முடையவன், வைராக்கியமும் உண்மையே பேசுபவனும் சிலவு செய்வதற்கு பயப்படாதவ னும், மனதில் குற்றமென்பதே யில்லாதவனும் உண்மை யான பக்தர்களிடத்து நேசமுள்ளவனும் ஈஸ்வரிடம் பக்தி செய்வோனு மாவானெனக் கூறுவாயாக.

## கேட்டை

செய்யதொரு கேட்டைதனில் பிறந்தோருக்கு
செப்புகிறே னிவனுக்கு ஒன்றேபுத்ரன்
ஐயமிலை வட.புறத்தி லனேகபூமி
யறிந்திடுவான் வியாபாரங் கொஞ்சநாளில்
வையத்தி லிவனுக்குப் பின்பு பெண்ணும்
வளமுடைய பிதாவின் சொல் தள்ளானாகும்
கைவிடாதவன் செல்வம் நானிலத்தில்
நாரியர் போல் பணம் பரிப்பான் நயமாயோதே

பிதிசித்தி பெற்ற கேட்டை நக்ஷத்திரத்தில் பிறந்தவன் பலனைச் சொல்லுமிடத்து ஏகபுத்திரனை யுடையவனும், வடக்கு திசையிலனேகம் பூமிகளையுடையவனும் சில நாளில் வியாபாரம் செய்யத்தெரிந்து கொள்வேனும் இவனுக்குப்பின் சகோதரம் பெண் எனவும் தன் பிதாவின் சொல் தவராதவனும் இவன் பூஸ்திதியானது என்னாளும் அழியாதென்றும் தாசிகள் போன்று பணம் பரிக்கத் தக்கவ னென்றுங் கூறுவாயாக.

அறிய கேட்டை தனிற்பிறந்தோ
ரறமும் பொருளு முடையவனான்
பெரிய மெய்ய னனச்சொல்வர்
பேசானுண்மை கபடியுமாம்

பிரியமனைவி யுடையவனாம்
பிறர்மேல் கோபங் கொள்ளாதவன்
பரிவாய் வாய் வார்த்தை யுரைத்திடுவான்
பாக்கியம் பலவுஞ் சேர்ப்பனே.

தேடுதற்கரிய கேட்டை நக்ஷத்திரத்தில் பிறந்தவன் தரும மார்க்கங்களை யறிந்தவனும் பொருளுடையவனும் பருத்த சரீரமுடையவனும், உண்மையைப் பேசாத கபடியும் பிரியமான மனைவியை யுடையவனும் அன்னியரிடங் கோபங் கொள்ளாதவனும், பரிவான வசனங்களை யுடையனும், அளவிறந்த பாக்கியம் சேர்ப்பவனுமானெனக் கூறுவாயாக.

## மூலம்

மூல நக்ஷத்திரத்தில் பிறந்தவனுடைய தாய் தந்தையர் களுக்கு ஆனியும் அடிக்கடி தூங்குமியல்புடையவனும், துஷ்ட கார்யங்களில் பிரவேசிப்போன், தவசிகளிடத்து சன்யாசி களிடத்தும், பக்தி விஸ்வாசமுடையவன் பற்பல விதமான கருவிகளைக் கொண்டு தன் ஜீவியத்தை நடத்துவோன். தான் தொடுத்த கார்யத்தை முடிக்கும்வரை அலைந்து திரிவோன் அனேக விதமான கல்விகளை யறிந்தவன் தனது மனைவியின் சொந்த ஜனங்களிடத்துச் சேர்ந்தவனும் தன் பிதுர்வர்க்க ஜனங்களிட த்துச் சேர்க்கை யுடையவனும், அடிக்கடி செய்த நன்றியை மறந்து போகுவனும் பிறர், பொருள் மேலாசையதிக முடையவனும், கீதாமிர்த பிரியனும் மானெனக் கூறுவாயாக,

## பூராடம்

பூராட நக்ஷத்திரத்தில் பிறந்தவன் பலன்களாவன அன்னிய தேசங்களிலேயிருந்து, வாழ்க்கைச் செய்ய ஆசைப்படுவோனும். அம்மான் வகையா ஜென்மங்களிடத்து. நீண்ட பிரியமுடையவன், மல்லிகை முதலிய வாசனை நிறைந்த புஷ்பங்களிட த்தும், திரவியங்களிடத்தும், ஆசையதிகமுடையவன், நீண்ட உருண்ட சிவந்த பார்வையை யுடையவன், விசாலமான புயங்களும் சிறுத்த தேகமும் உடையவன்.

திருடுவதில் மிக்க சாமார்த்திய முடையவன் பழிபாவ வசனங்களைச் சொல்ல ஆசைப்படுவோன் தயாளசீலன், பிறர்க்குபகாரம் செய்யுங் காரியங்களில் மிக்க சிரத்தையோடிருப்பவன், பலகாரப்பிரியன் என்றுங் கூறுவர்.

## உத்திராடம்

தான் உத்தேசித்த கார்யத்தின் மீது மிகுந்த சிரத்தை யுடையவன், தன் பந்து ஜனங்களிடத்து நீண்ட ஆசையை யுடையவன், நீண்ட உருப்புகளையுடையவன் நல்லோர் களிடத்து நற்பெயரும், துஷ்டர்களிடத்து துஷ்டனென்கிற பெயருமுடையவன், பரிகசவசனங்களையுடையவன், ஒரு வருக்கும் பயப்படாதவன் கிலேசமில்லாத நெஞ்சமுடைய வன் பெண்கள் கல்விக்கு அஞ்சாதவன் நீரில் விளையாட ஆசையுடையவன் ஓமம்யாகம் செய்ய ஆசைபடுவோன் தராதரமறிந்தவன் கீர்த்திப் பிரதாபங்களை யுடையவன். நன்சுற்றத்தாருக்கு அஞ்சாதவன்.

## திருவோணம்

திருவோண நக்ஷத்திரத்தில் பிறந்தவன் பலன்களைச் சொல்லுமிடத்து தருமமென்பது கொஞ்சமேனுமீயாதவனும் முழங்கால் நீண்டவனும் அடிக்கடி கோபித்துக் கொண்டுத் தன்கையில் உள்ள பொருளையிழப்போனும்மனோ வியாதி யையுடையவனும் ஸ்திரீகளிடத்தில் அன்பும் பெண்கள் கலவிக்காய்ப் பலவிதமான கஷ்டங்களை யுடையோனும் கருத்து சுருண்டு நீண்ட உரோமங்களை யுடையவனும் சம பார்வையுடையோன், மெதுவாய் நடக்கவல்லவன், அதிகச் சிலவு செய்யாது சிக்கனமாய்ச் சிலவு செய்யுங்குணமுடைய வன் பெரியோர் நேசம்பிரதாபவான் என்னுங்குணங்களை யுடைவனென்றுங் கூறுவாயாக.

## அவிட்டம்

அவிட்ட நக்ஷத்திரத்தில் பிறந்தவன் பலனைச்சொல்லு மிடத்து திரண்ட செல்வந்தனும், தனவந்தரிடத்தில் சினேக மும் அவர்கள் மூலமாக பொருள் சேர்க்கையும் செல்வாக்கு முடைய களத்திரம்மும் எத்தொழிலையும் உண்மை ஞாயம் இவைகளையனு சரித்து செய்பவனும் தன் பிதாவால் நேர்ந் த்றொணச்சல்லியங்களை நிவர்த்தி செய்வோனும், தராதர மரிந்தவன்பிறரால் நேரும் அபவாத நிந்தைகளைப்பொருக் கப் படாதவனும் பிறர் பொருள் மீது கொஞ்சமேனும் ஆசை யில்லாதவனும் பிராமணர்களிடத்து பக்தியமுடையவனு மாகும்.

## சதயம்

சதய நக்ஷத்திரத்தில் பிறந்தவன் பலனைச் சொல்லுமி டத்து சிற்சில காலங்களில் வியாதிகளால் கஷ்டப்படுவான் எக்காரியத்திலும்துணிச்சலதிக முடையவன், நீண்டதைரிய

மும் வலுவுமுடையவன் யந்திரத் தொழில் கார்ப்போன், சந்தோஷவசனன் பற்பலகலைளையறி வோன் ஜலத்தில் விளையாடப் பிரியமதிக முடைவன் தன்னை எதிர்த்தோர் களை ஜெயிக்கும் சக்தி வாய்ந்தவன், ஞாயமான தீர்ப்பு சொல்லுவோன் அன்னிய ஜனங்களிடத்தும் ஸ்திரீ களிடத்தும் ஆசை யதிகமுடையவன் ராஜாக்களிடம் பக்தியுள்ளவனென்றும் கூறுக.

## பூரட்டாதி

பூரட்டாதி நக்ஷத்திரத்தில் பிறந்தவன் பலன்களைச் சொல்லுமிடத்து அடிக்கடி வியாதியால்கஷ்டப்படுவோனும் நெய். தயிர், பால், வெண்ணையிவைகளைப் புசிக்க நீண்ட பிரிய முடையவனும் யாவுங் கடந்த சன்யாசியைப் போன்றவனும், அனைவருக்கும் ஆசி கூறுந்தன்மையையுடையவனும் எல்லாவிதமான கல்விகளையும் ஆராய்ந்தறிந்தவனும் பெண்களிடம் சினேகியாதன் இல்வாழ்க்கையில் வெறுத்தவன் அடிக்கடி திரிவதில் சஞ்சலப்படாதவன் திருட்டுச்செய்கை முதலியவைகளும் கீடுபடாதவ னென்றுங் கூறுக.

## உத்திரட்டாதி

உத்திரட்டாதி நக்ஷத்திரத்தில் பிறந்தவன் பலன்களை சொல்லுமிடத்து எந்த காரியத்தையும் விடாமல் வழக்கு தொடுத்து பேசுவோன் வெகு சிரமப்பட்டு கல்வி கற்போன் ஒருவர்க்கொருவர் சுலகம் மூட்டுவதில் மிக்க சாமர்த்தியன் தாம்பூலங்களை யருந்த மிக்க ஆசையையுடைய விறிந்த மார்பும், பரத்த முகத்தையுமுடைவவன், பிற்காலங்களில் செல்வமும் சிறப்பு முடையவன் அன்னிய ஜனங்கள் செய்யுங் காரியங்களில் வெருப்பும் பொறாமையு முடையவன் பிறர்க்குக் கடன் கொடுத்து அவர்கள் பொருளைக் கைக்கொள்வான்.

## இரேவதி

இரேவதி நக்ஷத்திரத்தில், பிறந்தவன் பலனைச் சொல்லுமிடத்து ஏழை எளியவர்க்குப காரம் செய்வோன் தன் கையிலுள்ளவரை பிறர்க்குத் தருமம் செய்ய ஆசைப்படுவோன் பின் புறத்தில் மச்சமுடையவன் இச்செய்யுள் யாவும் ஏட்டும் பிரதியினின்று வறைந்துள்ளதாகும்.

மற்றும், அந்திர, சூக்ஷப், பிராண, பலன்களையும் மற்று மனேக விஷயங்களையும் நான்காம் பாகம்பார்க்கவும்.

சோதிட ஆசான் மூன்றாம் பாகம் முற்றிற்று

——( — )——

உ

கடவுள் துணை,

ஜாதக கணிதாரம்பம்

என்னும்

# சோதிட ஆசான்

(பிறர் உதவியின்றி சோதிடம் கற்கும் சுலபமான முறை)

நான்காம் பாகம்

நூலாசிரியர் :
மு. மார்க்கலிங்க சோதிடர் அவர்கள்
குமாரரும் சிஷ்யருமான
பால ஜோதிட கணித நூற்புலவர்
மா. தெய்வசிகாமணி சோதிடர் அவர்கள்

பதிப்பாளர் :

**சண்முகானந்த புக்டிபோ**
67, T, K. முதலி தெரு,
சூளை, சென்னை-600 112.

# விஷய அட்டவணை

# மதிப்புரை

ஜாதக கணிதாரம்ப மென்னும்

சோதிட ஆசான்

நான்கு பாகங்கள். பால சோதிட கணித நூற்புலவர் மா, தெய்வசிகாமணி சோதிடர் எழுதியது ஸ்ரீ மான் கே.ஏ. மதுரைமுதலியார் வெளியிட்டது சென்னை பார்க்டவுன் சண்முகானந்தா புக்டிப்போவில் கிடைக்கும்.

சோதிடமென்பதே இன்னதென்று அறியாதவர்களும் அடி முதல் நுனி வரையில் அதைஅறிந்து கொள்ளக்கூடியவழியில்இது எழுதப்பட்டிருக்கிறது. ஆசிரியர் சோதிட பரம்பரையில் வந்தவராதலால் தகப்பனாரிடம் கேட்ட றிந்ததையும் ஆதாரமாகக் கொண்டு இதை வெளியிட்டிருக்கிறார். கிரக சமய விவரத்தை அறிந்து கொள்ளும் மார்க்கமும் இதில் குறிப்பிடப்பட்டிருக்கிறது அந்தத் தசாபுத்தியின் பலாபலங்கள் ஜனன காலத்தில்கிரகங்கள் இருந்த இந்த சமயத்தை அனுசரித்தே யிருக்குமாதலால் இந்த அம்சததை எல்லோரும் தெரிந்து கொள்வது உபயோகமாக இருக்கும்.

சுதேசமித்திரன்

சென்னை. (11-9-34)

# மதிப்புரை

சென்னை பார்க்டவுன் சண்முகானந்தா புக்டிப்போ,நிர்வாகிகள் அனுப்பியதுசோதிட ஆசான் முதற்பாகமும் இரண்டாம் பாகமும் வரப் பெற்றோம். சோதிடம் கற்க விரும்பு வோருக்கு இந்நூல்கள் மிகவும் உதவியாக இருக்கும் என்பதற்கு சந்தேகமில்லை. பிறர் உதவியின்றி எல்லோரும் சோதிடம் கற்று பயன் அடையுமாறு சோதிட நுட்பங்களை இந்நூல்களில் வெகு தெளிவாகவும் எளிய நடையிலும் விளக்கிக் கூறப்பட்டிருக்கின் றன.

இந்தியா,

சென்னை (15-9-34)

## நேரிசை வெண்பா

சீராயும் பார்மேற் சிறப்புடைய சோதிடத்தோ
ராராயுஞ் சோதிட ஆசானுக்குப் பேராயும்
வெற்பசுத்தின் றத்தைவேத முதலா தரிக்கும்
கற்பகத்தின் பொற்பதமே காப்பு

## வாணி துதி

துதிமணக்குஞ் சோதிட ஆசானென்
றின துரைக்கச் சொல் விழாமல்
விதிமணக்கும் பளிங்கனையாள் கைகால்வாய்
மிகச் சிவந்தாள் வேற்கண் கூந்தல்
பதிமணக்குங் கறுநிறத்தான் புத்தகதன்
னீர்கரகம் படிகமாலை
மதி மணக்குஞ் சின்ன முத்திரையிலங்கு
பாரதித் துணைத்தாள் மனத்துள் வைப்பாம்

——( ஓ : ஓ )——

## அவை யடக்கம்

நிலைகொண்ட மகமேரு வரையடுத்து
கரகமும் பொன்நிறம் பெற்றார்போல்
வலைகொண்ட பாற்கடலைச் சார்ந்தநதி
யெல்லாம் பாலாகினாற்போல்
கலைகொண்ட பாற்கடலைச் சார்ந்தநதி
கட்கடை படுமக் காட்சியா லென
தலைகொண்ட புன்சொல்லுநன் சொல்வாய்
பிறங்கிக்கத் தக்கதாமால்

கற்பாயும் பெரியோர்கள் சாபானும்
கிரகமுள்ள காட்சியோர்கள்
பொற்பாய சோதிடமாய் வடமொழியை
தமிழ் படுத்தி புலவோர் முன்னம்
ஏற்பாயும் சோதிட ஆசானென்
றேயடியே னிம்யபு வண்ணம்
மற்பாய சாபக்தி தனைத்தொடர்ந்து
கழுகு சென்ற வண்மையாமே

ஆசாரியார்க்கு வாழ்த்து

திங்கள்வளர் உவதைபோல் எந்தன் குரு
வேங்கிட
சிங்கமெனும் பேர் வழங்க
எங்கணும் பேரோங்க பக்கம் வ்ராதபடி
சிங்காரமா யருளுவாய்
தங்கமயில் வாகனா நங்கையர்கள் மோகனா
எங்கணும் நிறைந்த குருவே
சங்கரியின் ரலனே எங்கள் குருவே தணிகை
யங்கிரிய மர்ந்த குருவே.



உ

முருகன் துணை

ஜாதக கணிதாரம்பம் மென்னும்

# சோதிட ஆசான்

(நான்காம் பாகம்)



## விநாயகர் துதி விருத்தம்

பூதமெல்லாம் புகழும் புண்ணியமிங்கு
கண்யம் வரும் புலவர் போற்றுஞ்
சோதிட ஆசானென்னுமித் தமிழ்க்குதவித்
தந்தருளும் சதுர் வதத்துக்
காதரவாம் பாரதத்தைக் கோடொடித்து
மேருவெற்றி லரைந்த கோமான
பாதத்தை தேவியர்க்கும்
ஆதிவிக்கி னேச்சுரன்றன் பதுமனத்தானே

## லக்கின பலன் மேடம்

போற்றியதோர் மேடமதி லுதித்த பேர்க்கு
புகலுகின்றேன் தீர்க்காயுட் கல்வி செல்வம்

நாற்றிசையும் புகழுடையன் தியாகி சீலன்
நலமான வாணிபத்தில் மகிழ்ச்சியுள்ளான்
சாற்றியதோர் அன்னை தந்தை தமக்கு மன்பன்
சரசமொரு யுடையவனாம் சாந்தனாகும்
கீர்த்தியுளா னிருசிவப்பன் நேயனாகுங்
கிருபையுளான் பலபேர்க்கும் நேயனாமே

(இ-ள்) யாவருந்துதிக்கப்பெற்ற மேடராசியில் ஜெனித்தோர் பலன்களாவன் தீர்க்காயுசும் உடையவனும் கல்வி சம்பத்தும் செல்வ சம்பத்தும் நிறைந்தவனும் நான்கு திக்கிலும் புகழத்தக்க மேம்பாடுடையவனும்தருமம் செய்ய ஆசைபடுபவன் சீலமுடையவன், வியாபாரம் செய்ய ஆசையும் தாய் தந்தை மீது மிகுந்த பிரியமுடையவனும் சரச மொழியும் சாந்தமான வார்த்தையும் கீர்த்தியும் இருவிதமான சிவப்புயுடையவனும் கிருபை பொருந்தியவனும் பலருக்கும் நேயனாகவு மிருப்பான் (எ-று)

நல்லவனே மேடத்தில் பிறந்தோ ரெல்லாம்
நலமான வித்தையெல்லாம் பரிக்ஷை செய்வான்
வல்லவனு முன்னதனு மாவானாவான்
வளமான புகர்திசைதான் கொல்லும் கொல்லும்
சொல்லிடு வீர் சுக்கிரனும் சப்தமத்தில்
தோன்றிடவே குருபாரா திருப்பாராகில்
அல்லலுரு மவன் திசையில் கண்டமென்று
அரைந்திடுவீர் ஆடுதித்த அவனியோர்க்கே

(இ-ள்) மேடராசியில் பிறந்தோர் யாவரும் நல்லவனும் நன்மையைத் தரும கல்வியாவுமாராய்பவனும் வல்லமைசாலியும் உன்னதமயன சரீரமுடையவனும், இந்த லக்கினத்தோர்க்கு சுக்ரன் மகா திசையே கெண்டம் செய்யுமெனவும் ஷெ சுக்கிரன் சப்தமஸ்தானத்திலிருந்து குருபாராதிருந்தாரேயானால். மேற்படி திசையில் கட்டாயம் கண்டமுண்டாகுமென்று இப்பூமியின் கண்டமேடராசியில் பிறந்த ஜாதகர்களுக்குக் கூறுவாயாக (எ-று)

## ரிடபம்

ஆசையுள் ரிடபமதிற் பிறந்தோர்க் கெல்லாம்
ஐயமில்லைக் கல்வியிலேயே சிறந்தோராவர்

பேசிடுவா யிவனுக்கே பூர்வபூமி
பிறபல்யமாக வுண்டு பெருமையுண்டு
தேசமெல்லாம் புகழ்ந்திடுவார் செல்வமுண்டு
செழித்திடவே வாழ்ந்திடுவார் ஆயுள் தீர்க்கம்
வாசமுள சகோதரர் மேலாசை யுள்ளான்
வளம் பெரவே வாழ்ந்திடுவான் வளமைபாரே

(இ-ள்) யாவரும் விரும்பப்பெற்ற ரிடப ராசியில் பிறந்தவன் கல்வியில் தேர்ச்சியுடையவனும் பூர்வோர்க் திர பூமி அனேகமுடையவனும், பெருமை பெற்றவனும் இத்தே முழுமையும் புகழத்தக்க மேம்படும் செல்வமுடையவனும், வறுமையின்றி வாழத் தக்கவனும், தன்னுடன் பிறந்தசகோ தரர்கள்மேல் ஆசையுடையவனும், நாளடைவில் நன்கு மதிக்கப்பெற வாழ்வான என்றுங் கூறுவாயாக (எ-று)

அந்தமுளகரமானைப் போலழகு முள்ளான்
அறிவையர்கள் போகமதி லாழ்ந்து நிற்பன்
சிந்தையின்றி பலனென்ன முடையனாகும்
சிறப்புடையன் பொன்னிதைத் செல்வனாகும்
பொருந்துரை மனுக்களுக்கு விரோதமில்லான்
புகழ்ச்சியுளான் மககிழ்ச்சியுளான் போகவானாம்
விந்தையுள வேசையினால் விபத்தேயுள்ளான்
விளம்பிடுவா யிப்பலனை விருப்பத்தோட

(இ-ள்) அழகிய மன்மதனைப்போல் ரூபலாவண்யங் களமைந்தவனும் பெண்டுகள் மோகத்தி லாழ்ந்து கிடப்ப வனும் மனதிற் பற்பலவிதமான யெண்ணங்களை யுடைய வனும் சிறப்பும் திரண்ட செல்வத்தைப் படைத்தவனும், இப்பூமியில் உதித்த மக்கள் யாவருக்கும் வெறுப்பு விரோத மில்லாதவனும், புகழ்ச்சி மகிழ்ச்சியே அதிகமுடையவனும், அழகிய வேசையர்களால் அவமான முடையவனும் ஆவா னெனக் கூறுவாயாக (எ-று)

குறிப்பு:—கொத்து, என்பது பாட்டின் யிசைக்காமல் கூறப்பட்டதாகும்.

## மிதுனம்

சீரப்பாமி துனத்திலுதித்த பேர்க்கு
சிறப்புடனே சொல்லுகிறேன் பலன்களெல்லாம்
பாரப்பாபணிகனுமாம் வியாபாரத்தில்
லோகார்ய மறித்திடுவான் சமர்த்துமுன்னான்
பேரப்பச யிவனுக்கு பூமி கொஞ்சம்
பிரபல்ய மாயுருப்பான் வஞ்சநெஞ்சன்
சீரப்பா அரசர்களாள பொருளும் சேர்ப்பான்
சிறத்தையொடு ஜீவனங்கள் செய்வான் பாரே

(இ-ள்) சிறப்பு பெற்ற மிதுனராசியில் பிறந்த பேர் அனுபவிக்க தக்க பலன்களென்னவெனில், வாணிகரைப் போன்று வியாபாரம் செய்யும் திறமும் யுக்தியும் பற்பல கார்யங்களை மிக்க சாமர்த்தியமாய் அறியும் வல்லவனும் பூமிகள் கொஞ்சமுடையவனும் பிரபலயமான வாழ்க்கையு டையவனும் சிறப்புடைய அரசர்களால் பொருள் சேர்க் குந்திர ுமுடையவனும், மிக்க சிறத்தையோடு ஜீவனம் செய்யு சாமார்த்தியனுமாகுவான் (எ று)

## கடகம்

பாரே நீஜஸ்வர்ய மனேக முள்ளான்
பரத்தையர்கள் மோகமிலான் பருத்த தேகன்
சீரேரு நகரமதில் வாழ்ந் திருப்பான்
சிவனடியார் பக்தியுள்ளான் சிறப்பு முள்ளான்
பாரே நீ அஸ்வமுதல் யாவும் சேர்ப்பான்
பரிந்துரைக்கும் வார்த்தையுளான் பல்பேருக்கும்
சீரே நீ யிப்பலனை யுரைப்பாயானால்
சிறப்பிலுஞ் சிறப்பதிகம் பெருகு வாயே

(இ-ள்) நீண்ட ஐஸ்வர்யமுடையவனும். தாசிகள் யோகமில்லாதவனும், பெருத்த சரீரத்தை யுடையவனும், சிறப்புடைய பட்டணங்களிலே வாசம் செய்யத் தகுந்த வனும், சிவனடியார் கூட்டங்களுக்கு பக்தியும் தொண்டும் புரிபவனும், பரிந்து வார்த்தை சொல்பவனும்,

ஆவானெனக் கூறுவாய் இப்பலனை யிவ்வுலகோர்க்கு உரைப்பாயாயின், மிக்க சிறப்பும் பெருமையும் பெருவாய் (எ-று)

## சிங்கம்

வல்லவசிங்கந் தனில்பிறந்தோன் மகிமைப் பிரதாபன்
வணங்கான் மற்றோர் தம்னபிரதாப சீலன்
மெல்லநடந் தபசரிக்குந் தனமதிக முடையான்
சொல்வார்த்தைக்கேளாதான் சூக்ஷமதேகியுமே

(இ-ள்) மகிமை பொருந்திய சிங்கராசியில் பிறந்தவன் பலன்களைச் சோதிக்குமிடத்து மகிமை யதிக முடையவனும் பிரதாப சாலியும் பிறர்பொருளை அபகரித்து சேர்க்குந் கனமே அதிசயமுடையவனும் பிறர் சொல்லும் வார்த்தையைக் கேளாதவனென்றும் கூறுவாயாக

தேக்கிய சிங்கந்தனிற் பிறந்தோன்
சிறப்பு மேன்மை யுடையவனாம்
ஆக்கிய புவியிலனை வரையும்
அவர் மதித்சே பேசிடுவான்
பாக்கியச் செருக்கால் பலவனையும்
பணியும் மணிய மிழந்திடுவான்
யோக்கினைப் போலே நடித்தச்
செய்வான் கொலை களவையுமே

(இ-ள்) சிங்கவிராசியில் பிறந்தவன் மிக்கச் சிறப்பும் மேன்மையும் உடையவராயினும் இவ்வுலகில் பிறந்தஅனை வரையும் அவமதித்துப் பேசத்தக்கவனும் தன் கையிலுள்ள ரொக்கத்தின் செருக்கால் துற்காரியங்களில் பிரவேசித்து அணி பணிகளை யிழந்து கோபவனும் உண்மை வாளனை போலவே நடித்து கொலைகளவு செய்பவனு மாவானெனக் கூறுவாயாக (எ-று)

## கன்னி

இப்பாரில் கன்னியெனும் ராசி தன்னில்
ஏற்றுமைந்தன் தானுந்தாலத்தைச் சொல்வேன்.
ஒப்பாகும் பெண்களுக்கு தேசனாவன்

ஒருவருக்குந் தெரியாமல் லீலை செய்வான்
தப்பாரும் ஸ்திரீ வடிவையுடையோ னாவான்
தயவுடையோன் வேதாந்த ஞானியாகும்
எப்போது மகிழ்ந்திருப்பான் இன்பமுள்ளான்
இனிதுடையான் பலபேர்க்கு நேயனாமே

(இ-ள்) கனனியென்னும் ராசியில் பிறந்தவன் பலன் களைச் சோதிக்குமிடத்து அழகுடைய பெண்களுக்கு நேய னும் யாருமறியாமல் பிறஸ்திரீகளை லீலை செய்பவனும் ஸ்திரீகள் போன்ற வடிவத்தை யுடையவனும், வேதாந்தங் களை யறிந்த ஞானியும் எக்காலமும் நீங்காத சந்தோஷத் தையே யுடையவனும் நன்மையை யுடையவனும் பலபேருக் கும் சினேகிதனாவானெனக் கூறுவாயாக (எ-று)

சீர் சிறந்த உடல்தனிலே மச்சரேகை
சிறப்புடைய நெற்றியிலே வடிவமுள்ளான்
பேர்சிறந்த பூமியிலே லீலைக்காரன்
பிரபல்ய மாயிருப்பான் பெரியோர் நேசன்
வீர் நிறைந்தோர் தமைக்சண்டு அஞ்சுவானாம்
வித்தகையர் மோகமதி லாழ்த்து நிற்பன்
தாற்கொண்ட சேங்கையினன் பலபேர் நேயன்
தயவுடையன் அறிவுடையன் தனத்தினானே

(இ-ள்) கன்னியா ராசியில் ஜெனித்தவன் உடலில் மச்சரேகையை யுடையவனும், நெற்றியில் மச்சமுடைய வனும் இப்பூமியில் லீலைக்காரன் என்னும் பெயரும் மிகப்பிரதாபசாலியாயும் பெரியோர்களுக்கு நேசனாயுமிருப் பதோடு பரக்கிரமம் பொருந்தியவரைக் கண்டு அஞ்சு வோனும் மாதர்களின் மோகத்தி லாழ்ந்து கிடப்பவனும் பல பேர்க்குத் தருமம் செய்பவனும் தயவும் அறிவும் உடைய வனாவானென கூறுவாயாக (எ-று)

## துலாம்

கோலென்னுமிராசி தனிலுதித்ததோ ரெல்லாம்
குறைவில்லை ஆயுளுக்கு தேசாவசி

ஆலென்னும் மடந்தையர்கள் மோகத்தாலே
அலைந்திருப்பான் பலபேர்க்கும் வஞ்சனாவான்
மேலெனனுங் காரியத்தில் முயற்சி யுள்ளான்
மிகுந்த வயதுடையாளை மணமே செய்வான்
பாலன்னாம் புசிப்பதிலே பிரியனாவன்
பாக்யவதி யிறண்டுடையன் பிரிக்ஷை பாரே

(இ-ள்) கோலென்று செல்லும் துலாராசியில். பிறந்தவர் பலனைக் சொல்லுமிடத்து குறையாத ஆயுளை யுடையவனும் தேசாரதிரங்களில் வாழ்பவனும், பெண்கள் மோகத்தால் அலைந்து திரிபவனும் பலபேர்க்கும் வஞ்சம் செய்பவனும் தான் வாழக்கூடிய கார்யங்களில் ஆசையதிகமுடையவனும் முதிர்ந்த வயதுடைய பெண்ணை விவாகம் செய்துக் கொள் வோனும், பரலில் கலந்த அன்னத்தை புசிக்கப் பிரியமுடை யவனும இரண்டு மனைவிகளை யுடைய வனுமாவானென்று கூறுவாயாக [எ-று]

கரிக்குச்சி வீடுதனில் பிறந்தோரப்பா
கணக்குடையோன் பலசாஸ்திர மரிந்தோனாகும்
பரிகஜமும் பலவில்லந் தேடதல்லான்
பலமாதர் தன்னொடு யிணக்க்ஞ் செய்வான்!
செரித்தவய திருபதினில் விவாக முண்டு
தேசத்தோர்க் க்பிமானன் தியாகியாவான்
மரிக்கு வயதினில் பலபேர் துவஷியாகும்
மனமரிந்து பொய்சொல்லான் மகிழ்ச்சியானே

[இ-ள்] சனிக்கு உச்சவிடமான துலாராசியில் ஜெனித்தவர் பற்பலவிதமான கணக்குகளையும் சாஸ்திரங்களையும் அரிய வல்லவனும் குதிரை யானை அனேகவீடுகள் முதலியவைகளைச் சேர்ந்துத் கொள்வோனும் பற்பலஸ்திரிகளிடம் நேசம் செய் வோனும் தான் ஜெனித்த இருபதாவது வயதில் விவாகம் செய்துக் கொள்வோனும் இவ்வுலத்தோரால் நன்கு மதிக்கப்படுவோனும் தான் இறக்குங் காலங்களில் பலபேராலும் துவேக்ஷிக்கவனும் உத்தமமானபதி விரதையை விவாகம் செய்துக் கொள்வோனுமாவான் [எ-று]

## விருச்சிகம்

கொடியதேள் தனல் பிறந்தோன் விரதசீலன்
குலவுஜனப் பிரியனுமாம் கோபமுள்ளான்
படியதனில் யாவருக்கும் விரோதமென்பார்
பன்னுவாய் திருப்பதினில் யோகமுண்டு
வடிவான அழகுள்ளான் பெரியோர் நேயன்
வாசிக்கும் வித்தையுள்ளான் காமியாகும்
துடியாகப் பின்வயதில் தணமுணடு.
துன்மார்க்கன் என்றுலகோர் பேசுவாரே

(இ-ள்) கொடிய தேள் போன்ற உருவத்தையுடைய விருச்சிகம் என்னும் ராசியில் பிறந்தவன் சகலஜனக்குடும்ப பிரியமுடையவனும், கோபமுடையவனும், பிற்காலங்களில் அனைவருக்கும் விரோதமுடையவனும் தான் ஜெனித்த இருபதாண்டில் யோகத்தையுடையவனும் யாவரும் புகழ் பெற்ற தேஜஸ் உடையவனும், மிகுந்த கல்வியும் காமிழமாவதோடு பிற்காலங்களிலும் திரண்ட தன முண்டாகும் அன்றியும் இவ்வுலகில் துர்மார்க்கனென்ற பெயருடையவனும் ஆவான். (எ-று)

உரைசெவ்வாய் விருச்கித்தோர் குறைவிராது
உயர்குலத்தோன்சமர்த்தனுமாம் உண்மையாளன்
துரைராஜ பூஜித்வான் பிதாதனத்தை
துலைத்திடுவான் நடுவயதில் யின்னங்கேளு
தரையில் பயிர்செய்தவனு மன்ன முண்பான்
சண்மார்க்கன் சாந்தமுளான் தயாளசீலன்
புறையுடைய கள்ளர்களால் தனமுஞ்சேரும்
பொர்ப்புடைய மங்கையரின் நேசனாமே

(இ-ள்) விருச்சிக ராசியில் பிறந்தோர்க்கு என்னாளும் குறைவில்லை எனவும் உயர்ந்த குலத்தையுடையவனும் சமர்த்துடையவனும் ராஜாக்களால்ஆதரிக்கப்படுவோனும் பிதாவின் தனத்தைத் தன் பத்திய வயதிலே ஒழிந்து விடுப வனும் பிற்காலங்களில் பூமி மூலமான கிருஷி தொழிலால் ஜீவிப்பவனும், சன்மார்க்கம் சாந்தக் யிவைகளையுடைய

வனும் தன்பொருளிற் சில திருடரால் களவு போகவும், அழகிய பெண்களிடத்து நேசம் செய்பவனுமாவானெனக் கூறுவாயாக ]எ-று]

## தனுசு

திடமான தனுபதிலே ஜெனித்தோர்க்கு
செப்புகிறேன் பலாபலன்கள் ஜெகத்தோருக்காண
அடமுடைய வீடுவாசலுமே யுண்டாம்
அன்னை தந்தை தமக்கதன்பன் அழகனாகும்
படபடவென பேசவல்லரன் ஞானியாகும்
பக்தி வைராக்கியமுள்ளான் கோபமில்லான்
வடவரைப்போல் தனங்குவிப்பான் மனது நோகான்
வாழ்வுண்டு மக்களுண்டு மதித்துகூறே

[இ-ள்] பெருமை பெற்ற தனுசு ராசியில் பிறந்தோர் பலாபலன்களைக் கூறுமிடத்து பெருமையுடைய வீடுவாசல் களையுடையவனும் தாய் தந்தையர்கள் மீது மிகுந்த ஆசை யுடையவனும் அழகுடையவனும், படபடவெனப் பேசுபவ னும், பக்தி வைராக்கியங்களையுடைவனும் கோபமில்லாத வனும் மலைபோன்ற தனத்தை சம்பாதித்துக் கஷ்ட மின்றி புத்திர சம்பத்துடன் வாழ்ந்திருப்பானெனவும் கூறுவாயாக [எ-று]

குருராசி தனலுதித் தோர்குறை விராது
கொஞ்சி விளையாடுவான் குழந்தைபோல
பெருகியதோர் பட்டணங்களான வல்லான்
பிரபல்யமாயிருப்பான் பெருமையுள்ளான்
வரும் வயது பதினைந்தில் யோக சீலன்
வட்டமதி போலிருப்பான் போகஞ் செய்வான்
அரும்பலர் மேலாசையுளான் நேசமுகும்
நங்கையர்கள் உறவாளன் நயப்புளானே

(இ-ள்) குருவுர் காக்ஷிவிடான தனுசு ராசியில் பிறந் தோர்க் கென்னாலும் குறைவில்லை யெனவும் குழவி களைப் போல் கொஞ்சி விளையாடற் தக்கியவனும் பிரபல்

யமான பட்டணங்களை யாளவல்லவனும், மெலிமையும் பிரபல்யமுமுண்டாவதோடு தானுதித்தவயது 14-ல் யோக முடையவனும் சந்திரனைப்போன்ற திரேக காந்தியும் போக பிச்சையில் மிகுந்தவனும் அருமையான வாசனை நிறைந்த புஷ்பங்களின் மீது ஆசையுடையவனும் ஸ்திரீ களிடம் சினேகம் செய்பவனும் ஆவானெனக் கூறுவாயாக (எ-று)

## மகரம்

மரபுடைய மகரத்திற் பிறக்கி லபிமானி
மனவர்மீ ஞ்தைரியனும் பாலவயதினிலே
திரமுடையோக மதையே யனுபவிப்பான்
திருடர்களால் தனமதனையே சிலவு செய்வான்
விரவுருந்தன் காரியத்தைச் சமர்த்தாக முடிப்பான்
வேறொருவர் காணாமலு மகததிற றிறிவான்
பரவுமிந்த பூவுலகி வனைவருக்கும் நண்பன்
பாக்கியவானென்று சொல்லுவார் பாருயிற்கிற்பாரே

(இ-ள்) மகரராசியிற் பிறந்தவர்களின் பலனைச் சொல்லுமிடத்து அபிமானியும் மனதில் வர்மமுடையவனும், தைரியனும் வாலிப வயதிலே நல்ல யோகத்தையுடையவ னும் திருடர்களுக்காய்த் தனத்தைக் சிலவு செய்பவனும், தன் சுய காரியங்களை வெகு சமர்த்தாய் முடிக்க வல்லவ னும் பிறறறியாமல் இவ்வுலகில் உலாவி வருபவனும், அனைவருக்குஞ் சினேகனும் பாக்கியமுடையவனுமா னெனக் கூறுவாயாக. (எ-று)

மதியுளான் மன்னனாவன் மருத்துவ முடையயானாகும்
பதிபெருமக்களுள்ளான் பாக்கிய சேர்க்கையுள்ளான்
சதியுறுமிவனிக்கப்பா சாற்றிய இருபத்தைந்தில்
அதிசயயோகமுண்டு அனைவர்க்கும் நேயனாமே

(இ-ள்) புத்திசாலியும் அரசாளத் தக்கவனும் பிரதாப சாலியும் யோகமுடைய புத்திரர்களையுடையவனும் இவன் ஜெனித்த இருபத்தைந்தாமாண்டில் மேன்மைப்பெற்ற யோகமுண்டெனவுங் கூறுவாயாக (எ-று)

## கும்பம்

கும்ப லக்கிணத்தோன் மிக்க
  கோபியாம் பெருமை யுள்ளான்
அம்புலியோர்கள் போன்ற அவனியில்
  வாழ்வான் மேலும்
வம்பலர் குழலினாதை வதைசெய்யும்
  மூர்க்கனாவன்
தெம்புளோன் பலபேர் நேயன்
  துரையைப்போல் வாழ்பவன்பாரே,

(இ-ள்) கும்ப ராசியில் பிறந்தவர்களின் பலனைச் சொல்லுமிடத்து பல..ருக்குந் தோழனும் மிக்க கோபமும் பெருமையுமுடையவனும் இவ்வுலகின் கண் அனைவரும் சந்தோஷபடத்தக்க வாழ்க்கையுடையவனும் பெண்களை வதைத்து வேடிக்கைப் பார்க்கும் மூர்க்கனும் சந்தோஷத் தையே யுடையவனும், அரசனைப்போல் வாழத்தகுந்தவனு மாவானெனக் கூறுவாயாக (எ-று)

போற்றிடும் கும்பத்தோர்க்கு
  புகழ்ச்சியே யனேக முண்டு
ஏற்றியவயது பத்தி விவனுக்கே
  யோக முண்டு
சாற்றிய வித்தையெல்லாம்
  சரிவரக் கற்பான் மேலும்
ஆற்றிய மாதுர் தான் னாலரும்.
  பொரு ளுண்டுதானே

(இ-ள்) கும்ப ராசியில் பிறந்தோர்க்கு என்னாளும் புகழ்ச்சியே அதிகமுண்டெனவும், ஜெனித்த பத்தாவது வயதிலேயே யோகமுடையவனெனவும், எல்லா வித்தையும் வாசிக்கத் தகுந்தவனும் மாதுர் மூலமான தனச்சேர்க் கையையடையவனெனவுங் கூறுவாயாக (எ-று)

## மீனம்

பெருமைசேர் மீனத் தனிலுகித்தோர்க்குப்
பிரபல யோகமே யுண்டு
அருமைசேர் கணித சாஸ்திர மரிவான்
அவனியில் புகழ்பெற வாழ்வான்
ஒருமையாய்த் தனது காரியம் பார்ப்பான்
ஒருவரை வேண்டிடான் சிறியன்
மருவுவன் பலரை வஞ்சகமே செய்வான்
வழுத்துவா யிப்பலன் நிஜமே

(இ-று) பெருமை படைக்க மீனமென்னு மிராசியில் பிறந்தவன் பலன்களைச் சோதிக்குமிடத்து பிரபலயோக முடையனெனவும் கணித சாஸ்திரமாகிய சோதிட சாஸ் திரங் கற்பவனெனவும், இப்பூமியில் மிக்க புகழ்ச்சியோடு வாழ்ந்திருப்பானென்றும் தன் சுய காரியங்களைப் பிறருதவியில்லாமலேயே முடிப்பவனும், பருத்த தேகமும் குள்ளவனும் பல பேரை நேசித்து வஞ்சம் செய்யத் தகுந்த வனுமாவானென்று கூறுவாயாக (எ-று)

சூரமெத்த கோபியா மெவர்க்கும்
துரையென விளங்குவான் வேலும்
கோரமா கொடிய காரியம் செய்வான்
குணங்குறி நன்மையை யுடையான்
வீரமாயெவர்க்கும் விளங்குவான் நல்ல
விதரண சாலியே யாகும்
பிரமாங்கால சந்தியை யறிவான்
பிரறியாதவனென்னே

(இ-ள்) சூரனும் பெரிய கோபமுடையவனும், பெரிய துஷ்டத்தனமான காரியங்களை தைரியத்தோடு செய்பவ னும் குணம் குறி முதலியவைகள் நன்மையை யுடையவனும் எல்லோர்க்கும் ஓர் சிங்கத்தைப் போன்றவனும், விதறண முடையவனும் முக்கால பலனையும் அறிந்து கொள்ள சக்தி வாய்ந்தவனு மாவானெனக் கூறுவாயாம் (ஈ-று)

### வேறு

கருத்த அழகிய விழிகளையுடையன எக்காரியத்தையும் வெகு சாமர்த்தியமாய்ச் செய்து முடிப்போன் அழகிய மைந்தர்களையுடையவன் தார தரமறிந்து சிலவு செய்வோன் பழி வார்த்தை சொல்லவும் துஷ்ட காரியங்களைச் செய்யவும் ஆசைப்படுவோன் என்றுங் கூறு.

# இங்கு 12 ராசிகளும்

## கிரகங்கள் நின்ற பலன்

### 1. சூரியன் நின்ற பலன்

க்ஷாத்ரீகன் தனவந்தன், சூரன் முன்கோபி படபடப் போடு பேச வல்லவன் உஷ்ண தேகி தவசிகளுக்கு நேசன் பேதன் தருமம் கார்ப்போன் ஆயுள் நிறைந்தவன் இஷ்ட தேவதா பக்தியுள்ளவன் மதுர வாக்கன்.

### 2. சூரியன் நின்ற பலன்

அரசர்கணுகூலன், நேத்திரரோகி வித்தை விரோதி முகரோகி, பரவவசனன் தனச்சேதம் செய்வோன் சோதிடம் கற்போன், வாய் ஜாலன், வாகனச் சேர்க்கையிலான்.

### 3. சூரியன் நின்ற பலன்

சகோதர பீடை தியாக மீவோன் துற்ஜன நேசன்பகைவரை ஜெயிப்போன் பத்து சேர்க்கையன், பத்திரபீடைஅற்பம் மகா பலவான், வழி நடப்போன், அறிவுள்ளவன்.

### 4. சூரியன் நின்ற பலன்

மனஸ்தாப தரித்திரமுள்ளோன், பத்து ஹினன், அன்னிய தேசவாசி பிதுர்தன நாசன். மாதுர் பீடையன் பலவித துக்கம் பிரபுநேசன் குரூர சித்தன்.

### 5. சூரியன் நின்ற பலன்

புத்திர நாசம் தரித்திரமுள்ளோன் சர்வஜன விரோதி வனவாசம் செய்வோன் வித்தையா நேசன் புத்திவான் தயவுள்ளோன் மாந்திரிகம் கற்போன் சோம்பலுள்ளவன் துலங்கிய சரீரம்.

## 6. சூரியன் நின்ற பலன்

புத்திர ரதிகமுடையவள் மோகமதிகமுடையவள் சூரன் அபிமானி ராஜ்சினேகன் பசிபொறாதவன் சண்டைக்காரன் கீர்த்திப் பிரதாபன் சகல ஜனவிரோதி கடலில் நீந்துவோன் உண்மை சொல்வான். தனமதிக முடையோன் பலமதிக முடையோன்.

## 7. சூரியன் நின்ற பலன்

சகல கார்ய பயம் தாழ்ச்சியுண்டாதல் கடினரோகிய வான் கடன் வாங்கிய மீளான் சஞ்சார ஆசை சிவந்த சரீர முடையவன் களத்திர நோய் அழகிய மனைவி யுள்ளவன் பலவான் துற்காமி விசனம் சுகமுடையோன்.

## 8. சூரியன் நின்ற பலன்

அற்ப ஆயுள் கண்ணோயுளன் கல்வியதிகமுளன் வியாதியதிகமுண்டு பேராசை யுள்ளவன் அக்கினியால் பய முண்டு இஷ்டஜன நேசன் பிற்கால விரோதி அழகியபாட்டு பாடுவோன் சுகங் கெடுதல் தனச் சிலவுண்டு கெடுவியாயி ருப்பான்

## 9. சூரியன் நின்ற பலன்

துராசை யுள்ளன் பாவம் செய்ய நினைப்போன் புத்தி ரர்களுக்கும் பிதாவுக்கும் குருவுக்கும் தோஷம் பிதுர் ஜன துவேஷி தருமம் செய்வோன் புத்திசாலி ராஜ சேவையுளன் புத்திரரைப் பெற்றிழப் போன் கார்யஜெயம் சாமர்த்தியன் தந்திரமாய் ஜெயிப்போன்.

## 10. சூரியன் நின்ற பலன்

வாகனம் சேர்ப்போன் தரவ வியாபாரி பலவித வித்தை யுளன் பிதுர் துவேஷி தருமம் செய்வோன் புத்திசாலி ராஜ சேவையிளன் புத்திரரைப் பெற்றிழப்போன் கார்ய ஜெயம் சாமார்த்தியன் தந்திரமாய் ஜெயிப்போன்,

## 11. சூரியன் நின்ற பலன்

வெகு தனவான் மன்னரால் லாபம் பிரக்யாதியுளன் அடிமை செய்வோன் பிரியமில்லாதான் தன் காரியத்தை வருத்தத்தோடு செய்வோன் கவனமில்லான் தனந்தேடி வைப்போன் சகலஜனப்பகைவன் சாதுநோயுள்ளவன் சகல காரிய லாபம் ஆள் அடிமை சேர்ப்போன்.

## 12. சூரியன் நின்ற பலன்

பூமி நாசம் தனநாசம் திருடர் பயம் அக்கினி பயம் கணக்கு விரோதி உஷ்ண வியாதி மனோபபங்காரி பிதுர் செல்வ மில்லாதான் ராஜ தண்டனை யோம் அன்னிய நேச வாசி பிதுர் ஜனதுவேஷி மனவியாதியுள்ளவன்.

## 1 சந்திரனின்ற பலன்

சன்மார்கன் குளிர்ந்த தேகன் ஜலத்தால் கண்டம் அபாய வேலை செய்வோன் மாதுர் ஜனநேசி மாதாவிலு மதிகன் உறவின் ரதிகள் பொய் சொல்லான் ஸ்திர புத்தி ஸ்தானப் பிரியன் அயிஸ்வர்யவான் மனோவர்மி.

## 2 சந்திரனின்ற பலன்

சிறு குரலன் மர்மவித்தை யரித்தோன் வாலியவிவாகம் செய்துகொள்வோன் நல்லவார்த்தை யுள்ளவன் தனச் சேர்க்கையுள்ளவன் அழகுள்ளவன் நற்கீர்த்தியுள்ளவன் ஜலலோகமுள்ளவன் சினேக ரதிகமுள்ளவன் புத்திர சம்பத்துளன் காம மதிகன் அற்ப தனமுடையவன்.

## 3 சந்திரனின்ற பலன்

ஆடையாபரண சிங்காரன் கர்ணபூஷணமணிந்தோன் தர்ம கதை கேட்போன் சூரன் அதிகாரன் பெண்ணதிக முடையவன் சவுக்யமுள்ளவன் சிரேட்டன் குற்றமதிக முள்ளவன் நற்குணமுளன் வித்தையதிகமுளன் ஸ்திரீ நண்பன் அரசர் சமானன்.

## 4 சந்திரனின்ற பலன்

அன்னியதார இச்சையன் அழகுடையவன் திரிபோகி ஒழுக்கமுடையவன் அற்பசிலவுள்ளவன் வீடுவாசலுடைய வன் ஆபரணச் சேர்க்கையன் ருசியாக ஆகாரம் சாப்பிடு வோன் வித்தையதிகமுள்ளன் அலங்காரப் பிரியன் சொந்த ஜன விரோதி மாதாவுக்கு பீடை.

## 5 சந்திரனின்ற பலன்

புத்திரக் குறைவு நாசம் சதா துக்கி மனமார்த்த சிலவு புத்தியுள்ளவன் தேஜஸ் அதிகமுளன் மாதா ஜனச் சேர்க்கை உறவினர் நேசம் வறுமையிலான் ஆயுத சேர்க் கை தந்திர வித்தை பக்தியுளன்.

## 6 சந்திரனின்ற பலன்

ஜலத்தால் கண்டமுண்டு சகல காரியத்தாழ்ச்சியுளன் சயரோகமுளன் உத்தியோகம் செய்வான் கடன் வாங்கி மீளான் சஞ்சாரப் பிரியன் தீர்க ஆயுள் வியாதி யதிகம் சீதள தேகி சத்ருவால் பல கஷ்டமுடையோன் மதுர் ஜன நாசன்.

## 7 சந்திரனின்ற பலன்

தாஷண்ய முளன் செல்வந்தன் நல்ல களத்திரன் ஸ்திர வசியன் சஞ்சார்ப் பிரியன் களத்திரத்தால் லாபம் போக பாக்கியன் புற்கால வறுமை சொந்த ஜன சேவைக் காரன்.

## 8 சந்திரனின்ற பலன்

அதிக தருமம் செய்வோன் புத்தி யுள்ளவன் ரூபலா வண்ய முள்ளவன் ஞானவான் நற்குணம் வித்தையா வினோதன் கன்ம காரியன் அற்ப ஆயுள் ஜலத்தை கண்டம் விஷபேதி யுண்டு க்ஷயரோகம் நீர் கடுப்பு சண் டாள வேலைக்காரன்.

## 9 சந்திரனின்ற பலன்

தெய்வ பக்தி திரண்ட செல்வமுள்ள புத்திர ரதிகம் சினேகதைரயுடையவன் யிதாவிலதிகன் சீதளதேகி உதார வாக்கு குணவான் மோக மலகன் அன்னிய ஸ்திரீ சேர்க்கையன் மௌன வாக்கு.

## 10 சந்திரனின்ற பலன்

வல்லவன் தொடுத்த காரிய ஜெயன் பிரசித்தன் தீர்த்த யாத்திரை செய்வோல். கல்வியதிகறிவுடையவன் மாதுர்வழி கர்மி சொற்ப சிலவுடையவன் தனதான் லாப முடையன் காக்ஷி வினோதன் ஸ்திரீ லோலன் நன்மார்க்கன் தனமதிக முடையவன்.

## 11 சந்திரனின்ற பலன்

மாதுர் ஜனவிரோதி பயிர் செய்வோன் ஜவுளி வியாபா ரம் செய்வோன் ஆளடிமைகளையுள்ளவன் அழகிய மைந்த ருள்ளவன் நன்மார்க்கமுடையவன் தீர்க ஆயுளுள்ளவன் மாந்திரீகம் கற்போன் பேசபாக்கியன் சூரத்துவன் குலத் தொழில் செய்வோன் பிரசித்தி பெற்றவன்.

## 12 சந்திரனின்ற பலன்

குணபேதகன் இரணதேகன் சூரன் தரித்திரன் இடக்கண் நோயுடையவன் அ னிய தேசவாதி ஜலகண்டம் உண்டு பயிர் செய்வதால் நஷ்டம் மாதுர் வழியில் காமி மன மறிந்து பொய் சொல்வோன் தயாளகுணன் வியாபாரம் செய்வோன் அன்னிய ஸ்திரீ நேசன்

## 1 குஜனிருந்த பலன்

சிவ பக்தன் திரேகத்தில் மச்சமுள்ள சன்மார்க்கன் தரித்திரன் உயர்த் மெய்யன் பெண்வடிவுள்ளவன் பாராக்கிரமமுடையவன் வாக்குவாதம் செய்வோன் பாவத்தொழில் செய்வோன் மனஸ்தாப மில்லான் மாந்திரீகன் தனவந்தன்.

## 2 குஜனிருந்த பலன்

சஞ்சலமுடையோன் இருவித்தையுள்ள குரூர முகத்தன் நேத்திரரோகி வாக்கு விரோதி தனமதிகமுடையோன் கொடிய கோபி துட்ட சேவையன் மனைவியை பகைசெய்யவன் சத்தியவான் பொல்லாதவன் சிலையைப்போன்ற உருவினன்.

## 3 குஜனிருந்த பலன்

சகோதர பீடை பிதாவிற்கு தோஷம் கலக்கம் பீடை குணவான் பூமியாய் லாபமுடையவன் ஆபரணமுடையோன் நயநரோகமுளன் துற்புத்தியுளன் தைரியவான் ஆசாரவான் அரசனைப்போன்றவன் துர்ஜனசேர்க்கை

## 4 குஜனிருந்த பலன்

சினேகிதத் துவேஷம் கருவியால் பயம் சொராக்கினி பயம் மாதாவுக்கு தோஷம் தொடுத்த காரிய அபஜெயம் அன்னிய வீட்டில் வசிப்போன் மனைவியை பகை செய்வோன் தனம் நாசம் பாமரவசனன் தைரியன் பிற்கால யோகவான் பந்துஜனப் பகைவன்.

## 5 குஜனிருந்த பலன்

புண்பட்ட கிலேசி மனசஞ்சலன் சஞ்சாரன் ரொக்கமில்லாதோன் காரியநாசன் பரவசிந்தையன் கலகம் செய்வோன் புத்திரநாசன் நீச கமிலா வைராக்கியமுடையவன் தைரியமுடையவன் அற்ப பிதுர்தனம்.

## 6 குஜனிருந்த பலன்

மோகமதிக முடையவன் பிறசித்திப் பெற்றவன் தூல தேக முடையவன் சோரரால் துன்பமுடையவன் மேம்பட்ட வன் விறாதிவீரன் சேனாதிபதியாவான் புஷ்ப வியாபாரி வெற்றியையுடையவன் சத்துயில்லாதவன் எலும்பைப்பற் றிய வியாதி மாந்திரீகன்.

## 7 குஜனிருந்த பலன்

போக்களத்தின் ஆபரணம் அலங்காரி தை யன் காமி குருது வேஷி பெண்களால் லாபம் பிரசித்த பெற் றோன் பாக்கியவான் சிலகாலம் களத்திரந் துவேஷீ அன்ன தானம் செய்வோன் நித்திரையில்லாதோன் அலைச்சலு டையவன்.

## 8 குஜனிருந்த பலன்

களத்திரதோஷம் பதிவிரதையையடைந்தவன் பாபவ னன் மோகமுடையவன் கலகம் செய்வோன் சஞ்சாரம் செய் வோன் களத்திர சுகங்குறைவு களத்திரத்தால் துன்பம் தனந்சேத முடையன் சண்டை செய்வோன் சிலவதிக முளன் முன்கோபி

## 9 குஜனிருந்த பலன்

செல்வ நாசம் பிதுர் தோஷம் அறிவு குறைந்ததன் துற் கர்மம் செய்வோன் சகல ஜனநிந்தையுளன் சகோதர சக முடையவன் குருதோஷம் செய்வோன் பிதுர் செல்வ நாசன் எந்நாளும் கஷ்டப்படுவான் பருத்ததேகன் புராணம் வாசிப் போன் அகால போஜனம் செய்வோன்

## 10 குஜனிருந்த பலன்

சூரன் தாட்டீகமுடையோன் ஆசாரமுளன் கண்டி வார்த்தை சகல ஜனவசியம்கஷ்டப்பட்டு தனம்தேடுவோன் நினைத்தை முடிப்போன் ராஜ பூஜிதன் புத்திர பாக்கிய வன் திருடர் பயம் கருவி பயம் தராதரமரிந்து சொல்வோன்.

## 11 குஜனிருந்த பலன்

புண்பட்ட நெஞ்சன் சூராதிசூரன் செவிடன் நன்வசி னன் சதுரவாக்கன் சந்தோஷ முடையவன் காமமதிக முடையவன் பூமியையுழுது சாப்பிடுவோன் பொன் சேர்க்கை யுளன் வியா பூரா லபாமுளன்.

## 12 குஜனிருந்த பலன்

சகோதர தோஷம் பொருள் சேதம் காரவிரோதன் கால் முடக்கமுளன் நேத்திர ரோசன் துற்கம்மி தரித்திர முளன் கட்டுப்பட்டவன் அபிமானி அனைவர் விரோதன் ரோகவான் சிலவதிகம் செய்வோன்.

## 1 புதன் நின்ற பலன்

தந்திர வாக்கன் சிவந்த தேகி நல்லவசனம் வியாவாரம் செய்வோன் பழி வசனன் பிரக்யாதி பெற்றவன் மாதுர் தன முடையோன் நல்ல யோகவான் மந்திரவான் விஷ்ணு பக்தன் மாபிரவுக்கு தீர்க ஆயுள் பலவித எண்ணமுளன்.

## 2 புதன் நின்ற பலன்

சகல கல்வியுளன் ருசியான பதார்த்தபிரியன் பரிசுத்த மனமுடயவன் கொடுமையில்லான் நல்ல வாக்குடையவன் வாலிபத்தில் விவாகம் சவுந்தர்யவான் நயன வசனமுடைய வன் சாஸ்திரம் கர்ப்போன் மந்திரியைப் போன்றவன்.

## 3 புதன் நின்ற பலன்

நட்பிணரதிகன் தாக்ஷண்யமுள்ளவன் பெரியோர் சேர்க்ககயன் தர்மம் செய்வோன் ஞானவான் காவியம் கற் போன் கண்டித வார்த்தையன் நிஷ்டூரமுள்ளன் முற்கோபி மந்த புத்தியன் அற்ப சகோதர முளன் நல்வுறவுளன்.

## 4 புதன் நின்ற பலன்

முற்கால ஆபத்துள்ளவன் பிற்காலபாக்கியவான் தீர்க ஆயுளுள்ளவன் சேனாசைன்ய முள்ளவன் துாஷண வார்த் தையன் வாகன லாபமுள்ளவன் சவுக்கிய போஜவான் குதிரை பசுவுடையவன் சங்கீதத் திலாசையன் ஞானமார்க் மரிந்தவன் பிற்கால செல்வன் போகவான்.

## 5 புதன் நின்ற பலன்

மாதாவுக்கு தோஷம் புத்திர தோஷம் சந்தோஷவான் பிர[illegible] வைத்தியங் கற்போன்  பெரியோர் நேசன் வாய்ச்சாலகன் தீர்க ஆயுளுள்ளவன் ராஜ சினேகன் பாட்டானுக் கறிட்டம் அழகிய சரீரஸ்.

## 6 புதன் நின்ற பலன்

மேனா துக்கி சத்துரு விரோதி உண்மை வசனம் சோம் பலுடையவன் துங்காமி கலசப்பிரியன் அற்ப ஆயுள் பந்து ஜன விரோதி வித்தையா வினோதன் நுட்ப பக்தியான் வாயுவால் பீடை கருவிபயமுண்டு

## 7 புதன் நின்ற பலன்

தனம் சம்பத்துளன் ராஜ யோகவான் சஞ்சாரமுடைய வன் நல்லதாரமுடையவன் சமர்த்துடை யவன் சத்தியவான் புத்திர சோபன்னன் வாலிபபுத்திரு முள்ளவன்.

## 8 புதன் நின்ற பலன்

சதா ரோகி வாதை பீடையுளன் பலனடையவன் தீர்க ஆயுளுடையவன் திரண்ட செல்வன்னன் மன்னவர்சமானன் கீர்த்தியுள்ளவன் ஆக்கினையடைவோன் வித்தைமதிகன் அகாலபோஜனன் வித்தையாலவம ் னன் சிறப்புள்ளவன்.

## ; புதன் நின்ற பலன்

கீர்த்தி பிரதாபன யோகவான் ஜாலவார்த்தையுளன் சமர்த்துடையவன் வித்தையதிகமுளன் சீலவான் தருமம் செய்ய ஆசையுளன் திரண்ட செல்வமுளன் அழகிய மனைவியை யுள்ளவன் தபசிகள் நேசன் உத்தம சீலன் ஞாபக குறைவு.

## 10 புதன் நின்ற பலன்

பிறதானி ஆசார முள்ளன் பிரதான முள்ளவன் அன்னி திய நேசவாகிஞானம் புத்திவான் பிராமண தெய்வபக்தி பிரசண்ட கல்வி நித்தியகர்மிதன முடையவள் சாத்ரீகமுடை யவன் நினைத்தபடி முடிப்போன் சரசவினாதன்.

## 1ı புதன் நின்ற பலன்

ஆளடிமை யுள்ளவன் கீர்த்திப் பிரதாபன் சந்தோஷ முடையவன் வியாபார லாபன் வல்லமையுளன் கணக்கு வழக்குறைப்போன் சினேகித தனமுளன் பந்துஜனச் சேர்க்கை ரொக்கதன முளன் நயன வார்த்தையுளன் ஆரோக்கியவான் வித்தையால் லாபம்.

## 12 புதன் நின்ற பலன்

சோம்பலுடையவன் திரவிய நாசன் தரித்திரன் வாத நோய் முடக்கல் சூலைகிராணி யுடையவன் இளைத்த சரீரன் வயிற்றுவலி யுடையவன் சஞ்சலமுடையவன் கலகம் செய்ய ஆசையன் பந்து ஈனன் விரோதி யதிகமுளன்கடன் பட்டவன்.

## 1 குரு நின்ற பலன்

வேக மரிந்தவன் சகலருக்குமந் தெரிந்தவன் சன்மார்க்கன் சவுக்கிய தேகி பந்றுதிரளுள்ளவன் மது மானவசனன் ரொக்கதன முடையவன் நல்ல புத்தி பிராமண நேசன் அலைச்சலில்லான தராத்ர மரிந்தவன் உண்மை வசனன்.

## 2 குரு நின்ற பலன்

நல்ல கல்விமான் தனமுடையவன்மதுரவாலிபவிவாகம் போக யோயக்யன் பிராமண நேசன் பக்திமான் மன்னவர் நேசன் சபைமெச்சப் பேசுவோன் வாய்ச் சாலகன் சொற்ப சிலவுளன் சவுக்ய போஜனாவான்.

## 3 குரு நின்ற பலன்

துணைவாரா லவமானன் ஞான உபதேசன் தருமம் செய்வோன் காவியங் கேட்போன் அற்ப ஆயுள் ஆபரணப் பிரியன் ராஜசேவையுள்ள நீண்டமெய்யன் சொற்ப திரவியன் கியான வித்தையன் ஸ்திரிகள் நண்பன் ஜெயமுடையவன.

## 4 குரு நின்ற பலன்

அன்னிய தேச அதிபதி பந்துஜனச் சேர்க்கையன்தீர்க்க ஆயுள்ளவன் பலவான் கர்த்திதனமுடையவன் வஞ்சக நெஞ்சன் சிரேட்டமுள்ள சிறந்த வித்தை சவுக்கியதேவி வீடு வாசலுள்ள அரச மானன் நலமானன்.

## 5 குரு நின்ற பலன்

பெரியோர் நேசன் வாய் ஜாலகன் தீர்க்க ஆயுளுள்ளவன் விவேகி சாஸ்திர நிபுணன் ராஜ சினேகன் தாயைப் பெற்றோர் கரிட்டம் சம்பத்துடன் கீர்த்திவான் சவுக்கிய தேகி பால் அன்னப் பிரியன் குற்றமில்லாதவன்.

## 6 குரு நின்ற பலன்

ஞானமில்லாதவன் கைப்பொளினன் பிராமணதுவேக்ஷி புத்திர துவேக்ஷி கலகவான் பொசிப்பிலவமாளன்சத்ருபலம் காமமதிகமுளன் அற்ப ஆயுள் வியாதியுள்ளவன் சொல்லில் அவமானன் சினேகித துவேக்ஷி.

## 7 குரு நின்ற பலன்

அன்னியதார யிச்சையன் வேசை விருத்தை சேர்க்கை பாக்கியவான் கெற்வி ஆயுதம் பழகுவோன் சர்வஜனவசன துஷ்டகளத்திரன் சோம்பல் நித்திரைப் பிரியன்யாவருகரிந் தவன் மொழி பிசகாதான் சர்வஜன நேசன்.

## 9 குரு நின்ற பலன்

புத்திவான் தீற்க ஆயுளுள்ளவன் கீர்த்திவான் ஆசார யீனன் பந்துஜனநேசன் சினேகிதப்பிரியளிவாய் ஜாலகன் உத்தியோக செய்வோன் காமமதிகன் பொல்லாதவன்.

## 9 குரு நின்ற பலன்

சகலமுமறிந்த மந்திரி புகழ்ச்சியுள்ளவள் ஞானவான் தாட்டீகமுடையவன் மன்னவர் சேவையுளான் சீலதிமகன் சபைவல்லவன் பாக்கிய முடையவன் ராஜாக்களால் லாபம் சமதேகி ஆசாரி எத்தொழிலும், செய்வோன்.

## 10 குரு நின்ற பலன்

தொடுத்த காரிய ஜெயன் வாகனமுடையன் நல்லவன் தனவந்தன் தர்மவான் கல்வியுள்ளவன் தீற்க ஆயுள் பிராமண பூசிதன் நற்காரியம் செய்வோன் பிரசித்தி பெற்ற வன் மன்னவர் சமானன் கீர்த்தி ஜெயமுடையவன்.

## 11 குரு நின்ற பலன்

மன்னவர் சமானன் நல்ல புத்திவான் நற்கேள்வி உண்மை ஞானம் பொன் வியாபாரி பிராமணன் பொருளுள் புத்திரரால் யோகம் வித்தையா லாபம் ஆபரணமுள்ளவன் பிராமணருக்குதவி சத்விஷன் கோபமில்லாதவன்.

## 12 குரு நின்ற பலன்

புத்திரரால் சிலவு பிராமணரால் கஷ்டம் வாய்வு பீடை மனமார்ந்த சிலவன் தனமில்லான் புத்திரரால் துன்பம் ராஜ தண்டனை எண்ணிய காரியம் ஜெயமிராது பசிநோயுள் ளோன் மதுரமான வாக்கன் சீவன் குதைவு உபதேசமுள் ளவன்.

## 1 சுக்கிரனிருந்த பலன்

பொன் அதிகமுள்ள சம்பாஷனை, பெண்களால், லாபம் பொன் வியாபாரி சயன விரோதன் அன்னியதேவி சுவாசி இஷ்ட போஜனன், வாகனமுடையவன் துற்காமி, பெண்கள் நேசன் விறாத்தை போகன் நயவஞ்சகன்.

## 2 சுக்கிரனிருந்த பலன்

நயன ரோகவான், காமசாஸ்திரன் தெரிவோன். சேஷ் டையுடையவன் அபிமான முடையவன் கல்வியுள்ளவன் வாலிபத்தில் விவாகம் வறண்டசெல்வமுளன் சந்தியவாக் கன் முக்தாபரண்முளன் பாத்திரப் பிரியன்.

## 3 சுக்கிரனிருந்த பலன்

மோகவான் கோபவான் தாக்ஷன்யன் கலகம செய் வோன் சதா துக்கி பாவசிந்தை அடிமையிலான் பெண் சகோதரன் நித்திரை யதிகன் ஆடைமீது பிரியன் அலங் கார முளன், தாசி சேர்க்கை.

## 4 சுககிரனிருந்த பலன்

வித்தையால் சவுக்யன் சுயகதை ஜேரடிப்போன் அடி மையுள்ளவன் பசுவிகுத்தி யுளான் தீர்க்காயுசுள்ளவன் வெகு ஜன மித்திரன் சங்கீத ச மர்த்தியன் வித்தையா பிரசங்கி தன் தேசாதிபதி மோகவான் புத்திரவான் சயவனான்.

## 5 சுக்கிரனிருந்த பலன்

வித்தையில் வல்லவன், புராண ஆசையுளன், சவுக்ய தேகன், பெண்களதிசும் வினோதவான் சங்கீதப் பிரியன், மடவார் நேசன் வெகுஜன முடையோன், கீர்த்தியுளன் மந்திரி மனோதைரியன் நானாவிதத் தொழிலறிந்தேன்.

## 6 சுக்ரனிருந்த பலன்

வெகுகாமி சதா துக்கி தரித்திரமுளன் சத்ரு நாசன், அதிக பொசிப்பன் பந்துஜன துரோகி பயங்காரி விஷய ரோகி கல்வியில்லான் மனைவியாலவமானம் சகல ஜன துவேஷி வெருப்புள்ளவன்.

## 7 சுக்ரனிருந்த பலன்

ரூபலாவண்யன் ஜனச்சேர்க்கையன் காமி கல்வியதிகம் அன்னிய ஸ்திரீ போசன் தர்மசிந்தையன் தியாகம் செய்வோன் உபயகளத்தின் ஸ்திரீ சுகன் தூக்கமதிகன் சதுரவாக்கன் உண்மை சொல்வோன்

## 8 சுக்ரனிருந்த பலன்

நற்குணமுள்ளவன் தீற்க ஆயுள் ராஜயோகன் பலமுடையவன் களத்திரத்தால் கேடு வாகனத்தால் கண்டம் புருடலக்ஷணன் அவமானன்கேடில்லான் ஒழியாத ரோகவன்.

## 9 சுக்ரனிருந்த பலன்

தீற்க ஆயுள் வித்தை யதிகன் களத்திர பாக்கியன்தரும நிந்தையன் சொல்தவராதவன் வியாகூலமில்லான் தெய்வ பக்தியுளன் பிரக்யாதியுள்ள ஜனக்கூட்டுறவன் உபாயன் உதாரவாக்கன் புதல்தருளன்.

## 10 சுக்ரனிருந்த பலன்

பூசிதன் தொடுத்த காரியஜெயன் கல்வியுள்ளவன்தீற்க ஆயுளுள்ளோன் யூகி மந்திரி பிரசித்தி பெற்றவன் தனவந்தன் அழகுடையவன் வெகுமானம் வாங்குவோன் ஸ்திரீகளால் லாபம் பாக்கியவான் செய்த நன்றிமறவான்.

## 11 சுக்ரனிருந்த பலன்

அற்ப ஆயுளன் வஞ்சகன் குரூர சிந்தையன் பரத்தையா கமனன் சுமைப்போன் வெள்ளியால் லாபம் முத்து வியாபாரி முப்பழப் ப்ரியன் பொன் வியாபாரி சங்கீதத்தால் லாபம். அன்னிய ஜனநேசன் வித்தையில் தேர்ச்சி பெற்றோன்.

## 12 சுக்ரனிருந்த பலன்

பந்துஜனப் பகைவன் கண்டித வார்த்தை பாக்கியம் மதிகம் அச்சமுடையவன் அன்னிய ஸ்திரீ நேசன் அபவாத நித்தை சோம்பல் தன நாசமுளன் சுகங்குறைந்தோன்.

## 1 சனி நின்ற பலன்

சூரன் தந்திரம் தெரிந்தோன் அடையாள முண்டாகும் நயவஞ்சகன் உண்மை சொல்லான் தீர்க்க யுளுள்ளவன் பேசி ஜெயிப்போன் நற்கியாதியுள்ளவன் மனமாத்தமாய் பொய் சொல்வோன் தாக்ஷண்யமில்லான் கண்டித வார்த் தையன் ஆசாரயீனன்.

## 2 சனி நின்ற பலன்

வெகுகளத்திரன் மோகவான் தனக்கினவள்ளன் வாக்கு விரோதி ஆதியில் பொருள் நாசம் மந்தபுத்தியுளன் வீண் சண்டை செய்வோன் தாமத காரியன் பரதாரக மனன் அன்னியர் பகைவன் பஞ்சாரன் நயன வார்த் தையன்.

## 3 சனி நின்ற பலன்

உயர்ந்தவன், பிரகானி, கீழ்பட்டவன். தாழ்ந்தோரை நேசிப்போன் நீச்ச கிருத்தியன் காமமதிகன் தைரியவான் சேட்டர் தோஷன் மந்த செவியுள்ளவன் சுயஜனத்தை மதி யான் ஆனாசாரன் சிறப்புள்ளவன்.

## 4 சனி நின்ற பலன்

மாதாவுக்கு தோஷம் பந்து ஜனப்பகை குடிசை வீடு களுள்ளவன் ஆசாரமிலான் சதாதுக்கரோகி இருக்கால் முடக்கன் வாகனமில்லா வாதவாசின் பீடைபந்துநாசம் வாகனத்தால் பயம் யோகமுள்ளவன்.

## 5 சனி நின்ற பலன்

தருமசிந்தையோன் அற்ப புத்தி அற்ப ஆயுள் புத்திர நாசம் சத்துரு வுண்டாதல் புத்திர கெண்டம் பிற்கால புத்திரருண்டு பிதாவுக்கு தோஷம் தேகபலயீனம் பிறரை நிந்தித்தல் சதாதுக்கி அற்பன்.

## 6 சனி நின்ற பலன்

துக்கமுளன் நீச்சரால் பயம் குஷ்டங் காணல் பெரிய உருவம் தைரிய குறைவு குலத்தவர் பகை பசிபொறாதவன் தனச்சேர்க்கை மோகமதிகன் சத்ரு ஜெயம் துக்கமே உடையோன் இலாபமுடையவன்.

## 7 சனி நின்ற பலன்

தரித்திர முளன் சஞ்சாரன் தீர்க்க ரோகி சுமைப் போன் பாவபுத்திசொற்பதன முளன் பயங்காப்போன் இனிமை யான் சொல்வைத்தியம் செய்வோன் நீச்சகனமிசொந்த ஜனப்பகை களத்திர அவமானன்.

## 8 சனி நின்ற பலன்

வாலிப மரணம். பிதாவுக்கு தோஷம் பசிபட்டினியிருப் பான் அருமையான தனமுயைன் தைரியமுடையோன் பொய் ன் அனாசாரன் உலுதத குணம் இருநேத்திர ரோகி புருஷ லக்ஷணன் ஒழியாத ரோகி ஆசன வியாதிஸ்தன்,

## 9 சனி நின்ற பலன்

பிதுர்தன முள்ளோன் பிதாவுக்கு தோஷம் நீச்சரால் செல்வம் அருமையுடையோன் அலைச்ச லுள்ளவன் தரித் திர முளன் புத்திர ஈனன் பந்து ஈனன் சசுல ஜனத்துவேஷி சகோதர ஈனன் பாவசிந்தையன் ஜனநிந்தை யுளன்.

## 10 சனி நின்ற பலன்

மந்திரியைப்போன்றவன் பாக்கியமுடையவன் பிரா மண பக்திகிராமாதிகாரம் செய்வோன், பசுவாகனம் சேர்ப் போன் மாதாவுக்கு விரோதி தனலாபமுள்ளவன் ஆசார முளன் வடிவிற் சிறந்தவன் யாத்திரை செய்வோன் புத்தி வான் அபிமான முடையவன்.

## 11 சனி நின்ற பலன்

ஞான வான் சர்ஸ்திர நிபுணன், யுக்திசாலி உயிர் வதை செய்வோன், சுமைசுமைப்போன், சகோதர சந்தோஷமுளன் மந்த செவியுளன், ராஜாக்கள் நேசன் தனலாபமுள்ளோன், மதுவிற்போன்.

## 12 சனி நின்ற பலன்

அவமிருந்து கெண்டாதிதோஷம், மனைவிக்கு கேடு சஞ்சலப்புத்தி வஞ்சகம் செய்வோன் மூர்க்கன் பொல்லாத வன் அன்னியதேசவாசி, வியாதிவிசனின் ஜுரமுடையவன் செய் நன்றி மறப்போன், தனவான்.

## 1 இராகு நின்ற பலன்

கொடியதுஷ்டன் அலைச்சலுள்ள விகாரதேகன் மருவு மச்ச முள்ளசத்ருஜெயன் விசனமுடையவன் நீச்சத்தொழில் செய்வோன் தனவவந்தன் அனைவருக்கும் பகைவன் சவுக்கியன் போஜனப்பிரியன், மாமிசபக்ஷணி.

## 2 இராகு நின்ற பலன்

தரித்திரன் கிலேசமுளன் நிற்முடன் வித்தையாவிகட வாக்கன் நடுவயதில் பாகசியம் மந்திரி க்ஷாத்ரீகன் வாக்கு விரோதி நேத்திர ரோகம் பல்நோயுளான் விஷவாக்கன்

## 3 இராகு நின்ற பலன்

தீர்க ஆயுள் ஒழுக்க முடையோன் புகழ்ச்சி யுள்ளவன் அரசர் சமானன் பிரதாய இராசம் டாடுவோன் சகோதரன் பீடை திரவியமுடையவன் கீர்த்திபெற்றவன் திரவியந்தேட வல்லவன் நீச்சகாறகன் உபசாரமிலான்

## 4 இராகு நின்ற பலன்

பந்து ஜபைப்பாகை வாகன நதி மாதாவக்கு தோஷம், சொற்ப சிலவு யாத்திரை செய்வோன் நட நம்முயிளைப்போன் கோபமுடையவன் வீடுவாசலதிகமுளன் வினோத கட்டட முடையவன், படபடவென பேசுவோன்மூன்று காலபூஜை செய்வோன் செல்வன்.

## 5 இராகு நின்ற பலன்

புத்திர அற்பம் பெண் அதிகம் பலவேசை சமனன் சரசவினோதன், செப்பிடு வித்தை வாசித்தோர் நேசியன் கிராம சஞ்சாரன், பாவசிந்தை, மனோநீதி, தரித்திரன் துற்கர்மி, அனாசாரன்.

## 6 இராகு நின்ற பலன்

பல முடையோன், தனம்கீர்த்தியுளன், நல்சைனன் பகைவர் ஜெயம். திற்குவிஜயன், துரைத்தனம் செய்வோன் பிரதாபி வீரமுடையவன். சணமரிந்து நடப்போன் தந்திர மரிந்தன் செல்வாக்குளன் வியாதியில்லான்

## 7 இராகு நின்ற பலன்

பரதார கமணன். வேசை நேசன். போகப்பாக்கிவன். கெற்வி. ஆயுதசீலன், துட்டகளத்திரன். தூரஸ்திரி, மண சோம்பல், வஞ்சகன், துக்கன், சஞ்சாரன் மூர்க்கன்

## 8 இராகு நின்ற பலன்

வைசூரியுண்டதால், விஷமுண்ணல், கள்ளரால் பயம், சர்பபயம், தனச்சேதம், தைரியன் புண்பட்ட நெஞ்சன் ஆபத்து மத்தியவயதில் புத்திரயோகம், மந்திரசித்தி பயப் படுவான்,

## 9 இராகு நின்ற பலன்

மாந்திரீ த்தால் பொருள், விகடவினோதன், பிரசங்க தனமுளன் தீர்கவான், கீர்த்திவான் அதிகப்பிரசிங்கி செல்வமுடையோன் பிதுர்துவேஷி குருவே மதியாதவன் அயிஸ்வர்வயான், தர்மிஷ்டி பொருமையிலான்.

## 10 இராகு நின்ற பலன்

அனேக களத்தில் அற்ப புத்திவான் மாடகூடமுளன் உபகாரி பிரதாரவிருத்தி 'புண்ணியவான் சாமர்த்தியன் துற்கர்பி திருடன் அனாசாரன் மன்னவர் சாமனன் வெகு மானி.

## 11 இராகு நின்ற பலன்

பின்புத்திநோயாளன்பண்டிதன் சகலவல்லவன் தெய்வ பக்தியோன் பிராமணபக்தியோன் கண்டிதவார்த்தை செவி மந்த முடையவன் பிராதுரு விருத்தியிலான அணிபணி யுள்ளவன் ஸ்ரீகள் நண்பன் அலைந்துதிருவோன்,

## 12 இராகு நின்ற பலன்

துற்காமி பாதத்தில் வியாதி இளைத்த சரீரன் காம முடையோன் பூர்வ தனநாசன் அருமையான தனமுளன் சகோதர நண்பன அன்னிய தேசஞ்சாரன் அதிக சிலவு ளன் தரதரவறியான் கவன பிழையுளன் சத்துருவுள்ளவன்.

## 1 கேது நின்ற பலன்

துற்சேஷ்டை கடுஞ்சொல் அகாலப் போஜனன், அங் கப்பழுது தந்த விகாரி தராதரமறியாதான் அலைச்சலையு ளன் புத்திகுறைச்சல் மனவியாகூலன், பேசாமௌனி, 'சமரச சல்லாபன், தனவந்தன்.

## 2 கேது நின்ற பலன்

கூடுபாயும் மந்திரம், விஷவாக்கு வினையபுத்தி, வஞ்ச னைத் தொழில், தனலாபமுடையவன். பந்துஜனவிரோதி புறஞ்சொல்லுவோன், சம்பத்துளன் அன்னியதேசவாசி வீண்வார்த்தையோன், சொற்பேதம் செய்வோன். தரித் திரன்.

## 3 கேது நின்ற பலன்

சாயியத்தா இக்கி வீரபராக்கிரமன், தயவில்லான் சாஸ்திரற்கேட்போன் கபாலரோகிபிதுர்தோஷமுடையவன் உபசாரமில்லான சகலஜனப்பகை மனோவியாதி தரித் தரன் உண்மை சொல்லான், விகடன்.

## 4 கேது நின்ற பலன்

அடுந்தமனைப்பாழ் மேளான கட்டடமுளன் முதலில பீடைமாதாவுக்கு தோஷம் பிறர் நிந்தையுடையவன் சதா துக்கி சயனச் சந்தோஷி அற்பசந்தோஷி பிறபலவான் காம மதிகமுள்ள சன்மார்க்கமுள்ள வேந்தர்ரீபனகவன்.

## 5 கேது நின்ற பலன்

ஞானி புண்பட்ட நெஞ்சன், கிலேசி, புத்திரநாசம், வஞ்சன் குரூரன், சதாரோகி, பெற்றினைப்போன், பூத வயித்தியன் துற்காமி, பாவபுத்தி. மனைவியிற்பொசிக்கன் அளைந்த ஜீவனம்.

## 6 கேது நின்ற பலன்

கீர்த்தி சத்துரு ஜெயமுளன், ஞானியர் விரோதன் உதிரவேதனை வயித்தியன் இன்பமுடையவன் சத்ருகு, ஜெயன் விந்துவான், தைரியஸ்தன் மனோகெற்வி, சண் மார்க்கமிலான், வஞ்சகன், ஆசாரமுள்ளேன்.

## 7 கேது நின்ற பலன்

தூரஸ்திரீகமணன், வேலை செய்ய அஞ்சுவோன் பிர தேச ஆசையுளன், மூர்க்க குணமுடையோன் உபயகளத் திர முடையோன் சயனமில்லாதவன் என்னாளும் திரி வோன் ஆசையில்லான் களத்திர விரோதி, அயிஸ்வர்ய மில்லான், பிற்காலயோகவரின் பூஷணமுடையோன்.

## 8 கேது நின்ற பலன்

வித்தையதிகமுளன், பாவசிந்தையன், புத்திரசனன், பேய்கொண்டோன், சாபபயம், சூலைநோயுடையவன் தாசியாசனசயன், அன்னியர் பொருளாசையன், விஷத்தையுண்போன், உன்னததேகி, ரோகவன் துராசையுளன்

## 9 கேது நின்ற பலன்

மாமன் மாமிதோஷம் தந்தைக்குகெண்டம், வாய்சாலகன், தீரமுடையோன், கோபி நெறியில்லாதவன், பாவபுத்தி சுரவித்தையன், சோரவித்தை நீச்சவித்தையுளன் தன்னறிவால் தனம் சேர்ப்போன் பிதாவுக்கு பகைவன்.

## 10 கேது நின்ற பலன்

புந்திரவிரோதி, சர்வஜனப்பகைவன். அழகுடையவன் பெலமுடையவன். பூமியதிகமுளன், ஞானவான், பொருளதிகமுடையவன் உலோபி சஞ்சரரன் தேஸி உடையவன் அலங்கார சேவைத் தொழில் செய்வோன்.

## 11 கேது நின்ற பலன்

சகோதர துன்பம் மகிழ்ச்சியுள்ளவன், கெம்பீரவதனன் பற்திர தனமுடையவன் வியாபாரம் நீச்சரரல்தனசேர்க்கை உபாய புத்தி காமதிகன் சுயகர்மி வியாதியதிகன் உற்றார் விரோதி.

## 12 கேது நின்ற பலன்.

வாகன பலயீனம் நேத்திரரோகி பாதத்தில் வஙிநூதன மந்திரம் கற்போன் நீச்சரால் பயம் சத்துருவதி கன்வஞ்சனைத் தொழிலன் வாணிபத்தால் விறயன் பொறாமை கவன குறைவு செய்நன்றி மறப்போன் அபவாதமுளன்

இதுவரையில் இலக்கன முதல் பன்னிரண்டு ராசியிலும் கிரகம் சஞ்சரிக்கும் சலனை 144 அங்கங்காளாய் பிரித்து பலன் சொல்லினோம், இவை கிரகங்களிலுள்ள விஷயங்களை ஒருங்கே ஆராய்ந்தெழுதியதாகும்மேற்சொன்ன 144 அங்கங்களிலுள்ள பலாபலனும் பிழையர நுட்பமாய்க்கண்டுறைப்பதோடு அந்தந்த ராசியின் கிரகங்கள் பெற்ற பஞ்சவர்க்கமென்கிற ஆக்ஷி உச்சம் நீச்சங் பகை உலவு முதலியவையும் அனுசரித்தே தீரவேண்டும்.

ஏனெனில் கேது 5 லிருந்திடில் புத்திர அற்பமென்பது சாஸ்திரச் சம்மதம் இவை அனுபோகத்தில் நூற்றுக்கு 50 ஒற்றுமையாயும் மற்றுமுள்ளவை மாராகவும் நடந்து வருகிறது இவற்றிற்குக் காரணம் மேற்சொன்ன பஞ்சவர்க்கங்களோடு பார்வை சேர்க்கை கிரகம் நின்ற ஷேத்திராதிபதிக்கும் தனக்குமுள்ள சத்துரு மித்துரு சமம் என்பவைகளால் மாறுபடுகின்றன வாதலால் மேற்சொன்ன விஷயங்களைக் கட்டாயமாக யோசித்தே தீரவேண்டும் ஆக்ஷி உச்சம் நீச்சம் பகை என்பவை பற்பல சாஸ்திரங்களில் சில மாறுபாடாக சொல்யிருப்பினும் முக்கியமான விஷயங்களை மாறாகக் கூறவில்லை ஆதலால் கீழ்க்காட்டிய அட்டவணையில் சாதக சிந்தாமணி முதலிய சாமம்பெறா நூற்களிலிருந்து தேர்ந்தெடுக்கப்பட்டு இங்குவிவரிக்கப்பட்டன.

## கிரகப்பலங்குறைதல்

சூரியனுடன் கூடிய சனிக்கும் சனியுடன் கூடிய குஜனுக்கும் குஜனுடன் கூடிய குருவுக்கும் குருவுடன் கூடிய சுக்கிரனுக்கும் சுக்கிரனுடன் கூடிய புதனுக்கும் புதனுடன் கூடிய சந்திரனுக்கும் பலமில்லையென சாதக சிந்தாமணி 130-வது செய்யுள் கூறிய விதியையும் அவ்வாறு கூட்டங் கூடிய கிரகங்களால் ஏதேனுமொரு கிரகம் ஹீன மடைந்திருக்குமாயின் அவர்களாளேற்படும் தோஷத்தை தீர்க்கக் கூடிய கிரகமுமுண்டாகையால் அவ்விதியையும் கவனித்தல் நலமென ஏற்படுகிறது எவ்வாரெனின்.

## பலமுண்டாகும்

இராகு கேதுக்களாலுண்டாகும் தோஷத்தை புதன் தீர்ப்பான் இராகு புதன் இவ்விரு கிரகங்களின் தோஷத்தையும் சனி தீர்ப்பான் இராகு சனி புதன் இம் மூன்று கிரகங்களின் தோஷத்தையும் குஜன் தீர்ப்பான் இராகு சனி புதன் குஜன் இந்நால்வர்களின் தோஷத்தையும் சுக்கிரன் தீர்ப்பான் இராகு சனி புதன் குஜன், சுக்கிரன் இவர்கள் தோஷத்தை குருதீர்ப்பான் மேற்சொன்ன ஐந்து கிரகங்களின் தோஷத்தையும் சந்திரன் தீர்ப்பான் மற்றெல்லா ஏழுகிரகங்களின் தோஷத்தையும் சூரியனே தீர்ப்பானென்பதையும் கவனிக்கவும்.

அன்றியும் புதன் தினசரிக் கிரகவரிசைப்படி சுபகிரகமென்பது அனேகரின் கொள்கை இதனை ஆராயுமிடத்து சுப கிரகங்களுடன் கூடிய புதனே சுபமெனவும் பாவ கிரகங்களுடன் கூடிய புதன் முழுகொடியவனென்றுங்

கூறியதனாலறியலாம் இவ்வாறு ஒழிந்த பிறகே ஜாதக பலன் சொல்ல வேண்டுமென்பது சாஸ்திரகொள்கை உதாரணமாக குரு கடக ராசியில் உச்சமென வைத்துக்கொள்வோம் ஆதலால் ஒன்றே கால்பலமுடையதென முன்பே கூறியுள்ளேன். அதற்கு குருவோடு குஜனும் சகிதம் பெற்றிருப்பானாகில் மேற்படி குருவின் ஒனறேகால் பலனும் அந்த ஜாதகனுக்கு ஏதொரு சக்தியும் செய்ய உடையதாக மாட்டாது ஆயினும் சூரியன், ஜென்ம லக்கினத்திற்கு 1, 4, 7, 10 என்னும் க்ஷேத்திரங்களில் ஆக்ஷி உச்சம் பெற்று பார்ப்பானாயின் பேற்படி குருவுக்குள்ள தோஷம் நிவர்த்தியாகும் மற்றுமுள்ளவைகளுக்கும் இவ்வாறே கொள்க.

## யோகங்களை விளக்குகின்றன

நாலுடனேழுபத்து நாட்டிய உதயத்தன்னில்
சாலடேழுகோளுஞ் சார்ந்திடில் சுமலயோகம்
கோலியபயன் யாதென்னிற் குணமுளோன் கீர்த்தியுள்ளான்
ஞாலமேல் வெகு சம்பத்தை நயந்நவனென்று கூறே

லக்கின நாலு எழுபத்து இந்நான்கு ராசியில் மாத்திரம் ஏழு கிரகங்களும் அமர்ந்திருக்கு மேயாயின் கமலயோக மென்றும் அதன் பலன் என்னவெனில் நற்குணம் கீர்த்தி சம்பத்து முதலியவைகளுடையவனென்று கூறுக.

தடமுறு மூன்று ராசி தனிலேழுகேளு நிற்கின்
றிட முறு சூலயோகந் றேகத்திற் றழும்புள்ளோ
னானடர்கொலை ஜாதகங்களவுடன் செய்வல்லான்
றுடருறு தரித்தவனாவன் றோகைமாமயிலினனாளே

மூன்று ராசியிலேயே ஏழு கிரகங்கள் அமர்ந்திருக்குமாயின் சூலயோக மென்றும் அதன் பலனென்ன வெனில், உடலில் தழும்பென்ற அடையாள முடையவனும் கொடிய செய்கையும் கொலை செய்யப்படுவோனும். தரித்திரனுமாவானெனக் கூறுவாயாக.

தாவிய விரண்டு ராசிதனி லெழுகேளு நிற்கிற்
பாவிக்கு யூகயோகம் புகழொன்று தரித்திரத்தை
னோவியமிலின தேக முடுக்கையும் வினமாகும்
காவியங் கண்ணோய் கேளாய் கணித நூலுரைத்த வாறே

இரண்டு ராசியிலே ஏழு கிரகங்கள் அமர்ந்திருக்குமாயின் பூகயோகமென்றும், அதன் பலனென்னவெனில் தரித்திரமில்லாதவனுக்கும் மெலிந்ததேகனும் செல்வ மதிகமில்லாதவனென்றும் சாஸ்திரங்களை யறிந்தோர் கூறுவார்

ஒரு ராசிதனிலே தானே ரெழுகோளு நிற்க
விருமாயாங் கோளயோகமிதன் பனேவமையாளன்
பெறுமையாஞ்சிறப சாஸ்திரம் பிடவையிலழிக்குண்டானோன்
மருமலர்க் குழலேகேளாய் வருபலன் தெரிந்து கூரே

ஒரே ராசியில் ஏழுகிரகங்களும் அமர்ந்திருக்கு மேயானால் கோள யோகமென்றும் அதன் பலனென்னவெனில் வருமையுடையனும் பெறுமைப்பெற்ற சிற்ப சாஸ்திர மரிந்தவனும் அழுக்குடையவனும் இவை பெலமரிந்து சொல்ல வேண்டும்

ஒன்றிய கோட்களெழு முதயத்தொட்டேழு மட்டும்
நின்றிடறிறைடுக்காய் நிகர்சங்கியா யோகந்தான்
வென்றிசேர் கீர்த்திசெல்வ மிகு பொருளுடையோனா(வான்
மன்றின மேற்றனபு முள்ளான் வாய்ந்த தீர்காயுளானே

ஜெனன லக்ணமுதல்-ஏழு ராசிவரையில் ஏழுகிரகங்கள் வரிசைப்பெற அமர்ந்திருக்குமேயானால் சாங்கியா யோகமென்றும் அதன் பலனென்ன வெனில் கீர்த்தியுடையவனும் செல்வ முடையவனுந் திரண்ட ரொக்கஸ்திதியுடையவனும் தீர்க ஆயுளுடையவனுமாவானெனக் கூறுவாயாக

## ஷை பலன் வேறு

நிகருதய முதலேரு ராசியிற் கோளேழு
நின்றக்காற் கீர்த்தி மாலாயோகமாகும்
மகிழ்வித்தை கீர்த்தி தனதான்னிய ராஜாங்கம்
வாகனபாக்கியன் பெரியோன் பூச்சியனென்றுரைப்(பார்
ரீகலிரண்டு முதலெட்டு வரையுற் கோளேழு

மிருக்கிலு ரத்தாவளி யோகபலன்றான்
பகரமுக பிதுர்பக்தி கெணித முளன் றனவான்
பார்த்தீபன் றீரல் பெரியோன் காலமறிபவனே

உதய ராசிமுதல் ஏழு ராசி வரையில் ஏழு கிரகங்கள் வரிசைப்பெற அமர்ந்திருக்குமாயின் மால யோகமென்றும் அதன் பலனென்னவெனில் வித்தையில் வல்லவனும் கீர்த்தியுள்ளவன் தனவான் தான்யமுடையவன் ராஜரீகம் செய்வோன் பாக்கியமுடையோன் பிரதாபமுடையவன் பெரியோர் மதிக்கத்தக்க வெனவும் ஜெனனா ராசிக்கிரண்டாம் ராசி முதல் எட்டாம் ராசிவரையில் ஏழு கிரகங்கள் வரிசைப்பெற அமர்ந்திருக்குமேயாயின் ரத்னாவனி மாலிகரயோகமெனவும் அதன் பலனென்னவெனில் அழகுடையவன் பிதாவிடம் பக்தி செய்வோன் கணித சாஸ்திர மரிந்தவன் ராஜாக்களுக்குச் சமானவன் பெருந்தன்மை யுடையவன் முக்காலங்களையுமரிந்தவனென்றுங் கூறுக.

மூன்றுமுத லொன்பது மட்டேழ் கோள் நிற்கின்
மொழியு மதிவிரண்டுகோள் கேந்திரமாகி
லன்ற ரத்னாவளி மாலயோகமிதன் பலன்றா
னிராசரீ கந்தனையுடையவன் போகி வித்துவானால்
கீன்ற வனயங்களுள் நிரோகி ஜெயமுடையோன்
கிளரும வாய் ஜாலகனாஞ் செயவல்லோன் றிரன்
மான்றினை வேலைக்கயலை கடுவை மாவடுவை
மதனன் வாளியைப் பழித்த வாட்டங்கண்மயிலே

ஜெனன லக்கினத்திற்கு மூன்றா மிராசி முதல் ஒன்பதாம் ராசி வரையில் வரிசைக் கிரமமாய் ஏழு கிரகங்கள் அமர்ந்திருக்குமாயின் அவற்றிலிரண்டு கிரகங்கள் நேத்திரம் பெருமாதலின் இந்த ஜாதகனுக்கு ரத்னாவளி மாலா யோகமென்னும் பெயர் அதன் பலனைச் சொல்லுமிடத்து இராஜரீகம் செய்வோனும் போக சுகமுடையவனும் வித்வ சாமர்த்தியமுடையவனும் விநயவார்த்தையுள்ளவன் வியாதியில்லான் எக்காரியத்திலும் ஜெயத்தையே யடைவான் வாய்ச் சாலகன் எல்லாம் செய்ய வல்லவன் என்றுங் கூறுவாயாக.

நாலுமுதல் பத்துமட்டுங் கோளேழுநிற்கில்
நண்ணியதோர் வேந்துமாலா யோகப்பலன்றான்
மாலுடைய பத்திபத்தை தெய்வ வீரதிட்டை
மகாராஜன் வெகு தேசாதிபதி யாஞ்
சாலவே குரு தெய்வ பிராமணர் தனபத்தி
சவுக்கியன் பாக்கியன் ரோகிவிநோதத்திற் பிரியன்
காலமொரு மூன்றுமரிந்தியற்கை தேவராதவன்
கணித்தலோ ருரைத்த காக்ஷியின் வையாமே

ஜெனன லக்கினத்திற்கு நான்கா மிராசிமுதல் பத்தாம் ராசிவரையில் ஏழுகிரகங்கள் வரிசைப் பெற அமர்ந்திருக்குமாயின் அந்த ஜாதகனுக்கு மாலாயோகமென்பதுண்டாகும் அதன் பலனென்னவெனில் பக்தி வித்தை தெய்வ வழிபாடு ராஜர்களில் மிகச்சிறப்பு பெற்ற தேசாதிபதியும் குருவிடத்தும் பிராமணரிடத்தும் பக்திவைராக்கியமுடையவன்சவுக்கியமும் பாக்கிய சம்பத்து முடையவன் ரோகமுடையவன் வினோதத்தில் சந்தோஷம் முக்காலங்களையுமறிந்த மேதாவி என்றும் கணித வல்லவர் கூறுவார்.

## ஜோதிடங்களிலுள்ள சந்தேகம்

முன் தூலாதரவால் ஜோதிஷர்கள் வருங்கால பலனை விளக்கி விக்கிரார் என்பது உண்மையே.

சாஸ்திரங்களிலே ஆண் பெண்என்பவற்றையறியமாந்திரம் முதலாவது ஓரையாலும் இரண்டாவது இலக்கணத்தாலும், கூறவேண்டுமெண்பது சாஸ்திர நிபந்தனை.

ஓரை யென்பது தமிழ் நாழிகையில் இரண்டரை நாழிகைக்கொரு முறை மாரி வருகிறதென்றும், இராசியென்பது நாலேகால் நாழிகை முதல் ஐந்தரை நாழிகை வரையிலும் மாரி வருவதாயு மேற்படுகிறது இவ்வாறு ஸ்தூலமானமார்க் கங்களால் ஆண் பெண் என்றறிவது மிக்க துற்பலமே அவ்வாரறியினும், வருங்கால பலன்கள் செவ்வனே விளக்க மட்டா.

மற்றும் சில நூற்கள் சனி ஒற்றைராசியி யிருப்பானாகில் ஆண்பிள்ளை ஜெனிக்குமென்றும், செவ்வாய்இரட்டை ராசியிலிருந்தால் பெண்பிள்ளை ஜெனிக்குமென்று கூறு

யிருப்பது கற்காலசோக்கை யறியவேண்டிய சூக்ஷமேயன்றி மேற்சொன்ன விதங்களால் ஆண் பெண்ணென நிர்ணயிப்பதும் மிக்க-ஸ்தூலமார்க்கமேயாம்.

## மற்றும் ஆயுள் விஷயங்களை நிர்ணயிக்க

சரந்துடனே சாரந்தீர்க்கந் திரந்தான் மத்திபமாஞ்
சாற்றுசரமு பயமெனிற்றா னர்ப்பமாகும்
திரத்துடனே திரமற் மந்திரஞ் சாமர்த்தியமாந்
திக்கலு பயந்தீர்க்கஞ் செழுங்கமற் கண்மயிலே
வரத்திலு பயத்துடனே உபயமற்பமாகும்
வரமுபய சரமெனின் மத்திபமாகுமென்பா
உரத்து பயத்துடன் நிரமே தீர்கவயதாகும்
ஓராசாரந் தனிலே யுரைத்த திவையாமே

என்ற ஓசார வசனப்படி ஜெனன லக்ணம் சரராசியாயும் ஆயுள் லக்ணமும் சர ராசியின் தீர்க்க வயதெனவும் ஜெனனம் சரராசியாகிய ஆயுள் லக்ணம் ஸ்திரராசியாயின் மத்திப வயது ஜெனனம் சரராசியும் ஆயுள் லக்ணம் உபய ராசியாஜன் அற்ப வயது

ஜெனனம் ஸ்திரராசியும் ஆயுள் லக்ணம் ஸ்திரராசியாயுமிருக்கில் அற்பமெனவும் ஜெனனம் ஸ்திரராசியாயும் ஆயுள் லக்ணம் சர ராகியாயுமிருக்கில் மத்திப வயதும் ஜெனனம் ஸ்திர ராசியும் ஆயுள் லக்ணம் உபயமாயுமிருக்கில் தீர்க்க வயது.

ஜெனனம் உப ராசியாயும் ஆயுள் லக்ணமும் உபயமாயின் அற்ப வதெனவும் ஜெனனம் உபயராசியும் ஆயுள் லக்ணம் சர ராசியாயின் மத்திப வயதென்றும் ஜெனனம் ஸ்திர ராசியும் ஆயுள் லக்ணம் உபயமாயுமிருக்கில் தீர்க்க வயது.

ஜெனனம் உபராசியாயும் ஆயுள் லக்ணமும் உபயமாயின் அற்ப வயதெனவும், ஜெனனம் உபயராசியும் ஆயுள் லக்ணம் சர ராசியாயின் மத்திப வயதென்றும் ஜெனனம் உபயராசியாயும் ஆயுள் லக்ணம் ஸ்திரராசியாயின் தீர்க வயதெனவும் கூறியது பொருந்த தக்கதும் அனுபவத்திலும் ஒற்றுமை யுடையதெனினும் மிக்க ஸ்தூலமாக்மானதென்பதற்குச் சந்தேகமில்லை.

## மற்றும் சில சந்தேகம்

ஜோதிடத்திலே சொல்லும் சர்வ நிபந்தனைகளையும் தேனுமொரு செய்யுளால் நிலைகூறி விடுவது மிக்க அசாத்யம் முன்கூறிய செயயுளில் ஜெனன லக்ணமும் ஆயுள்

லக்னமும் சரலக்ன மென்கிற மேஷம் கடகம் துலாம் மகரம் என்னுமிராசியின் தீர்க்க வயதென்று கூறியிருப்பது பலரும் ஒப்புக் கொள்ளத்தக்க விஷயமாயினும் இரண்டாவ தாக ஷெ ஜெனன லக்னாதிபதியாலும் ஆயுள் லக்னாதி பதியாலும் அவர்களுக்குத் தாரதரவன்மையால் முன் சொன்ன தீர்கவயது மாறாதெனவும் (அ) மாறுபடுமென வுங் கூறவேண்டியதாகிறது இவ்வாறு ஆயுளைக் குறித்து ஒவ்வொரு விஷயங்களுக்குமே ஆராய்ந்தே தீர வேண்டும் எப்படியெனில்,

பன்னிருதானந்தன்னிலே நல் கும்பலன் சொல்லும்
பண்பது கூறில்
உன்னுமோர் தானந்தனக்குய ரதிபனுகந்தங்கே
யிருந்தவர் பார்த்தோர்
மன்னுகாரக னென்னுரைத்திடு மவரான் வரும்பயன்
வகுந்திடலாம்
முன்னுமீறாந் தானத்தின் பலனை மொழிவார்கள்
புலவரின் முறையே

என்ற வ. க்கியப்படி ஜெனனராசி முதல் விரயம் வரை யிலுள்ள 12 ராசியைப்பற்றியும் பலனுரைக்கும்போது அத் தந்த ஸ்தானாதிபதி யிருக்குந்தன்மையும், அவனுடன் கூடிய கிரகத்தைக் குறித்தும் பார்த்த கோட்களின் திரத்தை குறித்து மஸ்தானாதிபதியோடு காரகனிக்குந் தராதரத்தாலே அவரவர்கள் பலனை கட்டாயமாய்க்கூற வேண்டுமென்பது சாஸ்திரங்களின் முறைபடாடாகையால் பெரும்போக்கான செய்யுளால் நிலைகூறாதிருக்கும் வண்ணம் வற்புறுத்துறேன் ஏனெனில், சாஸ்திரங்களைக் கறைகண்ட மேதாவிகளெல்லாம் நெடுநாள் ஒருவருக் கொருவர் தர்க்கித்து வாதாடி முடிவில் கூறியதாவது,

தானத்தா லாய்ந்து சொல்லவேண்டும்
தற்காலபலனை-யெல்லாந்
ஞானத்தாலிருந்தே வருகு பலனெல்லாம்
நவிலுவர ரறிவினிற் பார்த்தே
மனத்தாற் குருவே நின்றதோர் தானம்
வாதனை யாக்கவே மதரும்

பானத்தாஞ் சனிய னுரைக்கின்ற தானப்
பலன் கெடும்பீடையுங் காணும்.

என்றபடி முதலில் ஸ்தான பலனைக்கொண்டே தற்காலம் நடக்கும் பலனைச் சொல்ல வேண்டுமென்றும் ஞானத்தால் தனை நிலைகூற வேண்டும். ஏனெனில் நல்லதென றேற்படும் ஸ்தானமே கொடியதாயுங் காணும் என்பதனால் நன்கறியலாம் இவ்வளவிற்குங் காரணம் முதன்முதல் நாம் ஆராய்ந்து பார்க்கும் உதயநாழிகையாகும் பற்பல நூலாசிரியர்கள் தமிழ் வினாடியில் 1 வினாடி பிறந்து போகும் 1 ஜாதகம் பிறந்து போமெனக் கூறியிருப்பதை நன்கறியலாம் உதயாதி நாழிகையை தெளிவாயறிய பொதுவாய் பிரசவ வீட்டிலுள்ளவர்கள் சொல்லும் தோராயமான மணியைக் கொள்ளாமல் அறிவிற் சிறந்த மேதாவிகளால் அக்ஷாம்சமென்று வருஷந்தோறும் வெளிவரும் பஞ்சாங்கத்தில் போட்டபடி உதயபத்திப அஸ்தமய முதலியவைகளை கணக்கிட்டு உதயாதி நாழிகையைச் செவ்வனே யறிந்து கொளவோயின் வருங்கால பலன் யாவும் பிழையின்றி விளங்குவதற்கேதுவாகும்.

## பொதுவிதி அறிதல்

ஆறினை யெட்டப்பன் னிறதண்டனை
யடைந்திடுங் கோளுமல்லாது
கூறுமாறெட்பீரர் நினுக்குடைய
கோலுடனிருக்கும் மக்கோனும்
ஊறுசெய்திடுமே யலது நற்பலனை
யுதவிடா கறன்றோ குணர்ந்தோர்.

என்ற வாக்கியப்படி ஜெனனலக்கினத்திற்கு 5 8 12-ல் நின்ற கிரகங்களும் ஷ 6 8 12-க்கு குடைய கோட்களும் மரணத்திற் கேதுவான விபத்தைத் தரும் (அ) நற்பலனென்பதே யில்லாது கொடிய பலனையே விளைவிக்கும் என்பதே.

இம்முறைப்படி 6 8 12-ல் நின்ற கிரகங்களும் 6 12-ம் ராசிக்குடைய கிரகங்களும் நற்பலனென்பதையே தருவதற்கிடமில்லை யெனத் தோன்றுகிறது மற்றும் சாதக அலங்காரம் முதலிய நூற்களில் 6-ல் ராகுகேதுக்களிருக்கின் எதிரிகட்குச் சிங்கம் போன்றவன் சத்துருயில்லாதவன்

சண்முகக் கடவுளைப் போன்றவனென்று விளக்கியிருப்பதும் சம்மதிக்கத் தகுந்ததேயன்றி வெருக்கத் தகுந்ததல்ல.

ஆறாம் யிடமென்பதைப் பற்றிய விவரமும் மற்றும் 11 ஸ்தான விவரங்களையும் முன்னரேயே கூறியுள்ளேன். ஆனால் மேற்சொன்ன செய்யுளில் 5 8 13 இம்மூன்றையும் பொதுவாக் குறித்து விளக்கியுள்ளார்.

அனுபவ வாயிலாய் ஒவ்வொருபாவத்தையும்யோசிக்குமளவில், அந்த பாவங்கனிலவர்களடைந்த பலமே காரணமாகி கொடிய க்ஷேத்திரங்களிலுள்ள கிரகங்கள் சமபலனையும் விளைவிப்பது முறையென்றே எண்ணிடமுண்டாகிறது சாஸ்திர வல்லுணர்கள்.

எந்தத் தானத்தின் பலனது சொலுங்
காலியம் புதலுதமாய் வைத்தே
யந்திரத் தவிராசிப் பன்னிறண்டையுந்
தான்சந்த மாயடைவிலே பார்த்து
சிந்தித்த முறையாய்ப் பலன்களைத் தெரிந்து
செப்புவர் குரு கடாக்ஷத்தால்
அந்திக்கு முன்னங்குடக செழுபிறைபோல
கியதரு நூதலணங்கே

என்று கூறியதனாதன்க ஆதலால் எவ்வகை பாவ பலன்களைச் சொல்லவேண்டுமெனினும் அவர்கள் கடந்த பாதைகளையும் இனி கடக்க வேண்டிய பாதைகளையும் அனுசரித்தே கூறவேண்டும் என்பதாம்.

மின் ஆராமி ராசியில் நின்ற ராகு கேதுக்களைப் பற்றி சத்ரு ஜெயம் விஷந் தீண்டல் முதலியவைகளை பற்றி மாத்திரம் கூறினாரே யொழிய பலாபலன்களைப் பற்றி கூறவில்லையாதலால் இங்கு நாம் முதன்முதல் எடுத்துக்கொணட செய்யுளிலுள்ள விஷயங்களையும் சம்மதிக்க இடமுண்டாகிறது.

அன்றியும் பாவாதிபர்களில் குனாகுணம் பலாபலன் முதலியவைகளைப் பற்றியும் ஆராயும்போது கீழ்கண்ட விஷயங்களை கட்டாயம் கவனித்தே தீரவேண்டும் எல்லாரெனின்.

அதிபதி யெனவுங் கராக னெனவு
வறைதிதிடு மிருவர் கடாமு

முதிரி லக்கினத்தோன் றனக் குறலாயின்
மொருந்திடு பயனு முண்டாகாமல்
சதிசெய்யத் துருவேயாயி டிற் பலன்றான்

ஓர் பாவத்தைப் பற்றி ஆராயும்போது அந்த பாவதிப னுக்குறிய காரனையும் ஆராய வேண்டுவதாகையால் அதி பதிக்கும் இவ்விருவருக்குஞ் சததுருவாயின் அவர்கள் பலன் யாவும் யாராகவே நடக்குமெனக் கூறிப்போகாத படிமேஷ லக்கினத்திற்கு சகோதர காரகனான் குஜனுக்குப் பகை வன் புதனென்பது சாஸ்திர முறைபாடு மேற்சொன்ன சுலோகப்படி காரனுக்கும் ஸ்தானாதி பதிக்கும் சத்துருவா கையால் அந்த ஜாதகனின் சகோதர பலன் யாவும் மாராக வே நடக்கும் மென்பதில் சந்தேகமில்லை.

ஆதலால் மற்றுமுள்ள கிரக அடவியைக் கொண்டே பலாபலன்களை நிலை கூற வேண்டுவது கடமையாகும் இவ்வாறே மற்றுமுள்ள பலாபலன்களையும்முள்ள வர்க்கா திபருடைய விருத்திமுதலியவைகளையும்ஆராய்த்துக்கூறுக பாவ பலன்களை முன் இரண்டாம் பாகத்தில் சொல்லிய படி 2 வங்கபாளிலும் காண்க.

யாதொரு கிரகமரயிருக்கினும் அந்த கிரகம் நட்புஆஹி உச்சம் பெற்றும் சூரியனுடன் கூடியும் அதன் பகைவர்களு டன் சேராது உறவானர்களுடன் கூடியுமிருந்தால் அந்த ராசம் எந்த ஸ்தானாதிபதிபந்தியம் பெற்றதோ ஸ்தானாதி பரும காரகரும் நற்பலனே யடைவார்களென்பதில் ஐய மில்லை யென்க.

ஏதேனுமொரு வற்கத்தாரைக் குறித்து ஆராயுமிடத்து அந்த வற்ககாரகரால் நின்ற க்ஷேத்திரத்திற்கு வலமிடங் களிலும் நின்ற ஸ்தானத்திற்கு 5 9-ம் யிடங்களிலும் மற்று முள்ள எட்டு கோட்களும் அமர்ந்திருப்பாரேயானால்அந்த வற்கத்தாற்கு ஏதொரு பலனு முண்டாகாதென்பது திண்ணம்.

(பொது) எந்தகாரனும் நற்க்ஷேத்திரத்திலிருந்தால் நற் பலனும் துர்க்ஷேத்திரத்திலிருந்தால் அற்பபலனுமே விளை யும் சுக்கிரன் மாத்திரம் இரட்டை ராசியான ரிடபம் கடகம் விருச்சிகம் மகரம் மீனமென்னும் மிராசிகளிலிருந்து (அ) ஸ்திரிகோட்களுடன் கூடினாலும் மனைவி விருத்தியில்லை யென்றே கூறுக.

ஓராசாரம் 226 எத்த ஸ்தானாதிபர்களாயினும் அந்த ஸ்தானாபதியோடு காரகனுங்கூடி திரிகோணம் கேந்திரம் என்னுமிடங்கள் லிருந்தால் அந்தவர்த்திகாதிகளும் காரர்களும் நற்பலனையே யடைவார் என்பதில் ஐயமில்லை.

## இங்கு காரிகன் விபரங்கள்

ததிரவன் றத்தை மதியன்னை செவ்வாய்க்
கனிட்டாராம் புதன் மதிமாமன்
முதிர்குரு மைந்தர் வெள்ளியே மனையாள்
மூந்துவாகனஞ் சனி வாழ்நாள்
சதிருள வடிமை யென் றனரிவார்கள்
சாற்றியவிவ்வகைக் கெல்லாம்
அதிபர்காரக னென் றறைந்தனர் முறையே
யறிந்து சொல்வது பலமென்பார்

| | | |
|---|---|---|
| சூரியன் | பிதுருகாரகன் | ஆத்மா |
| சந்திரன் | மாதுருகாரகன் | மெய் |
| குஜன் | சகோதரகாரகன் | தந்தத்தினுள்ள மூளை |
| புதன் | அம்மான்காரகன் | தோல் |
| குரு | புத்திரகாரகன் | அறிய |
| சுக்கிரன் | களத்திரகாரகன் | இந்திரியம் |
| சனி | ஆயுள்காரகன் | நரம்புகள் |

## வற்காதிபரின் நெறியான விஷயங்கள்

காரகன் புகலுந் தானத்திற் கோட்கள்
கலந்தநாளா ரெட்டேயாகிச்
சாருட்டிரிகோணத்திற் றீக்கோட்கள்
சாந்தநாட்சனி வருநாள்
ஒருமிக்க கோட்க ளுணவருங் காலத்

தோதிய கோட்டுள் வர்க்கானோர்
பாருள் மாணந் தன்னையே யடையர்
பவளவாய் தவளவெண்ணகையே

ஒவ்வொரு காரகர்களும் இவர்கள் எந்த நக்ஷத்திரத்தில் நின்றார்களோ அந்த நக்ஷத்திற்கு 6, 8-வது நக்ஷத்திர ராசிகளுக்கு திரிகோண ராசிகளில் சனிவாசம் செய்யுங் காலம் கோசாரப்படி கூட்டம் பெற்ற பாவக்கிரகங்கள் வாசம செய்யுங்காலம் அந்த வர்க்கத்திற்கு மரணமுண்டாகும்.

## உதாரணம்

| | | | |
|---|---|---|---|
| | ல சனி | ரா | |
| | இராகு | | சு |
| | | | அ சூரி |
| | கேது | சந் | புத குரு |

மேற்கண்ட சக்கரத்திற்கு பிதுர் கெண்ட காலங்களை யறிய வேண்டின் பிதுர் காரனாகிய சூரியன் மற்ற நான்காம் பாதத்திற்கு சிங்கராசியில் பிரவேசித்தானாகையால் மேற்படி மக நக்ஷத்திரத்திற்கு, சுவாதி இந்நாட்குரிய துலாம், கும்பம், மிதுனம் என்னுமிராசிகளிலும் 8-ஆம் நக்ஷத்திரமானது அனுஷம் இந்நாட்குறிய ராசியான. விருச்சிகம், மீனம்,கடகம் என்னுமிராசிகளிலே கோசாரம்படி சனி இரண்டரை வருஷம் வாசம் செய்யும்போது மேற்படி சனியிடன் மற்றுமுள்ள கொடிய கிரகங்கள் வாகும்செய்யுங்காலமே பிதாவுக்கு கண்டத்தைத் தருங்காலமாகும், மற்றுமுள்ள வர்க்கத்தார்க்கும் இவ்விடையே கண்டு கூறுக.

ஜெனன லக்கினத்திற்கு எட்டாம் வீட்டதிபதி எந்த ராசியிலிருந்தானோ அந்த ராசி மாதங்களின் எட்டாம் வீட்டதிபதி எந்த நக்ஷத்திரலிருந்தானோ அந்த நக்ஷத்திரம் வரும் நாளிற் அந்த ஜாதகனுக்கு இரணகாயங்களும் வியாதி ராஜக்களால் பகை வெறுப்புகளுண்டாகு மென்றுங் கூறுக.

## காக குணா குணம்

## ஆயுள் அறிவது

ஜெனன லக்னாதிபதியும் 10-ஆம் வீட்டதிபதியும் சந்திரன் கூரை சார்ந்திருக்கில், அந்த ஜாதகனுக்கு உயிருண்டு சூரியன் தனது கூரையே சேர்ந்திருக்கில் சாவுண்டு சூரியன் கூறும் சந்திரன் கூறும் கலந்திருக்கில் நோயுண்டாகும்.

கூறு என்பது பங்கெனப் பொருள்படும் சூரியனுக்கும் சந்திரனுக்கும் பன்னிரண்டு ராசிகளையும் பகுக்கப்பட்டுள்ளன எப்படியெனில்,

வெகுவுறு சிங்கங்கன்னி கோற்சான்பீன்
விருட்சிக மிரவியின் கூறும்
மருண்மறி விடையாழ் கடகமான்சிலை
யிவ்வாரு சற்சந்திரன் கூறாம்.

சிங்கம், கன்னி, துலாம், கும்பம், விருச்சிகம், மீனம் இவ்வாறும் சூரியன் கூறெனவும்.

மேடம், ரிடபம், மிதுனம், தனுசு, கடகம், கன்னி யிவ்வாறும் சந்திரன் கூறெனவும் கொள்ள வேண்டும்.

இவை ஆயுளைப்பற்றி கவனிக்க ஓர் சூக்ஷமமாகும். இத்துடன் ஜெனனகால நாழிகை வினாடிப்படி தற்கால ஆருடத்தைக் கொண்டுங் கூறுவது நலம் விபரம் பின்வரு மாறு சந்திர சரராசியிலிருந்து ஆருடலக்கிணமும், சர ராசியின் உயிருண்டு சூர்ய சந்திராள் சரராசியிலும் ஆருடம் திரராசியாயு மிருக்கில் நோயுண்டு உபய ராசியில் சூரிய சந்திராளும் சரராசியில் ஆருடமாயின் சாவுண்டு திரமும் உபயமுமாயின் உயிருண்டு (ஆயுளுண்டு) திரமும் சரமுமாகில் நோயுண்டு.

## கிரகங்களுண்டாகும் வியாதி

பகை, விஷம், பித்தரோகம், அரசரால் துன்பம் முதலியவைகள் சூரியனாலும் முதற்பாகத்தில் காணலாம்.

## அட்டவர்க்கத் திரிகோணம் காணுதல்

ஆடசி தனுசுவிடை கன்னி மகர
மாகிய மிதுனங் கோல் கும்பம்
முடிய கடக விழ்ச்சிக மீனமும்
மூன்றுமோர் திரிகோணம்
கூடிய திரிகோணந் தனி லொன்று
குறைந்திடிற் மற்றிரண்டையுந் தான்
சாடி குறைதற் கொப்பஞ் செய்மூன்றுஞ்
சரியறின் முழுவதுங் களையே

ஒவ்வொருவர் அஷ்டவர்க்கினும் திரிகோணம் என் பதைக் காணும் விபரமெப்படியெனில். (மேஷம், சிங்கம், தனுசு, ரிஷபம், கன்னி, மகரம், மிதுனம், துலாம், கும்பம், கடகம், விருச்சிகம், மீனம்) இவை திரிகோண ராசிகளா கையால் மேலே சொல்லப்பட்ட மூன்று ராசிகளிலேதேனு மொரு ராசியில் குறைந்த எண்களிருக்குமாயின் மற்றிரண்டு ராசியிலுள்ள பிந்தையும் முன் குறைந்த ராசியிலுள்ள பிந்து படி சரிசெய்து ஓர் ராசியிலடைப்பதாகும்.

## ஏகாதிபத்திய சோதனை

எதிரெதிரேயுள்ள ராசிகளில் ராகு கேதுக்கள் தவிர மற்றுமுள்ள கிரகங்களிலிருந்து மேற்சொன்ன இரண்டு ராசியிலும் பிந்துக்கள் ஏற்றக்குறைச்சலாயிருக்கினும் சரியாயிருக்கினும் சோதனையில்லை ஷ இரண்டு ராசிகளி லும் கிரகங்களுல்லாதிருந்து பிந்துக்கள் சரியாயிருக்கின் எல்லா பிந்தையும் எடுத்து அவ்விராசியைக் காலி செய்ய வேண்டும் ஷ கிரகமில்லாத இரண்டு ராசியிலேயே பிந்துக் கள் ஏற்றக் குறைச்சலாயிருக்குமாயின் குறைந்த பிந்துபடி அதிகப்பட்ட பிந்தை மற்றொரு ராசியில் நீக்கிவிடுக ஒரு

ராசியில் கிரகமிருந்தும் மற்றொரு ராசியில் கிரகமில்லா மிருந்து கிரக முள்ள ராசியில் அதிகப்பட்ட பிந்தும் கிரக மில்லா ராசியில் குறைந்த பிந்துமிருந்தால், குறைந்த பிந்தின்படியே கிரகமுள்ள ராசியிலுள்ள அதிகப்பட்ட பிந்துவை குறைக்கவேண்டும் கிரகமுள்ள ராசியிலும் கிரக மில்லா ராசியிலும் சரி பிரித்திருக்குமாயின் எல்லா பிந்தை யும் நீக்குக கிரகமிருப்பினு மில்லாதிருப்பினும் ஹ இரண்டு ராசிகளொன்றில் மாத்திரம் பிந்துக்களிருந்து ஓர் ராசியில் பிந்தில்லாது சூன்னியமாயிருக்கின் சோலனையின்றி விட்டு விடவேண்டியதேயாம், கடகம் சிங்கம் இவ்விரண்டிற்கும் எப்போதும் சோதனையில்லை.

## எதிரெதி ராசிகளென்பது

| | |
|---|---|
| மேஷத்துக்கு | விருச்சிகம் |
| ரிஷபத்துக்கு | துலாம் |
| மிதுனத்திற்கு | கன்னி |
| மகரத்திற்கு | கும்பம் |
| மீனத்திற்கு | தனுசு என்பவைகளாம் |

## இராகு குணாகாரன் காண்பது

முன்சொன்ன ஏகாதிபத்திய ராசியிலுள்ள பிந்துவா லேயே இராசி குணாகாரம் காணவேண்டும் மேட முதல் மீனம் ஈன்றாகப் பன்னிரண்டு ராசியிலுள்ள பிந்துவைகீழே குறிக்கப்பட்ட எண்களால் பெருக்கி ஓர் ராசியில் போடு வது இராசி குணாகாரமெனப்படும் எப்படியெனில், மேடத் திலும் துலாத்திலுமுள்ள பிந்துவை ஏழிலும் மிதுனத்திலும், விருட்சகத்திலுள்ள பிந்துவை எட்டிலும், மகரத்திலும் கன்னியிலுள்ள பிந்துவை ஐந்திலும் கடகத்திலுள்ள பிந்து வை நான்கிலும் ரிடபம், சிங்கம், இவ்விரண்டிலுள்ள பிந்து வைப் பத்திலும், தனுசிலுள்ள பிந்துவை ஒன்பதிலும் கும்பத்திலுள்ள பிந்துவைப் பதினொன்றிலும் மீனத்திலுள்ள பிந்துவைப் பன்னிரண்டிலும் பெருக்கி ஓர் சக்கரத்தடைத் துக் காண்பதே இராசி குணாகாரமெனப்படும். இதனை முதல் பாகத்திலும் கூறியிருப்பதை அறியலாம்.

## கிரக குணாகாரம்

ஏகாதிபத்திய ராசியிலுள்ள பிந்தினாலேயே கிரக குணாகாரம் செய்யவேண்டுமென்பது சாஸ்திரக் கொள்கையாதலின் இராசி சக்கரத்தில் ராகு கேதுக்கள் தவிர மற்றும் ஏழு கிரகங்கள் நின்ற ராசியில் ஏகாதிபத்தியராசியிலுள்ள பிந்துவால் பெருக்கி ஒரு ராசியில் போடுவதாம்.

## விபரம் கீழ்வருமாறு

| | |
|---|---|
| சனி, சந்திரன், புதன், சூரியன் இவர்களுக்கு | 5 |
| குஜனுக்கு | 8 |
| சுக்கிரனுக்கு | 7 |
| குருவுக்கு | 10 |

## உதாரணம்

இராசி சக்கரத்தில் கடகத்தில் குருவென வைத்துக் கொள்வோம். 'யோகாதிபத்திய ராசியில் கடகத்தில் 3 பிந்தெனக் கொள்வோம் 10-க்கும் 3-க்கும் பெருக்க 30 ஆகும். ஷ 30-ஐ கிரக குணாகார ராசியில் கடகராசியில் போடுவதேயாம் இவ்வாறே மற்றுமுள்ள கிரகங்களும் மேலே குறித்த எண்களை யோகாதிபத்தியராசியில் தான் கிரககுணாகாரமாம்.

ஆக குண சமூகமென்பது ராசி குணாகாரத்தில்மேஷம் கிரக குணாகாரகத்தில் மேஷத்திலுள்ள பிந்து இவ்விரண்டையும் ஒன்றாய்க்கூட்டி ஓர் சக்கரத்திலடைப்பது இம் முறைப்படியே இராசி குணாகாரம் 12 ராசியும் கிரக குணாகாரம் 12 ராசியும் கிரக வெவ்வேறாகப் பிரித்து ஓர் ராசியிலடைத்துக் காண்பதே குண சமூகமெனப் பெயர் பெறும்.

பிதாவினாயுள் சொல்லவேண்டுவதாயின் சூரியனஷ்டக வர்க்க ஏக குண சமூகத்திலுள்ள மொத்த பிந்துவை 7-ஆல் பெருக்கி 27 பேருக்குப் பங்கிட்டுக் காணும் துகை வருஷமென்றும் மிச்சமுள்ளதை 12-ஆல் பெருக்கி 27 பேருக்கு பங்கிட்டு நின்றது மாசமெனவும் அதில் நின்ற சேடத்தை 30-ல் பெருக்கி 27 பேருக்குப் பங்கிட்டுக் காண்பது நாள் என்றும் அதில் நின்ற சோதிடத்தை 60-ல் பெருக்கி பேருக்குப் பங்கிட்ட துகைவினாடி

யுமாகும் இவ்வாறு கணிட மொத்த ஈவுத் தொகையை 364-ல் பெருக்கு 365 பேருக்குப் பங்கிட வரும் ஈவே பிதா வுக்குரிய ஆயுளாகும் இதனின்று மிச்சமுள்ளவைகளை முன்போல் களைந்து மாதம் நாள் நாழிகை வினாடி முதலி யவைகளைக் காண்க.

## சர்வ அட்டக வர்க்கம்

ஈரிலாவேழு கிரக விந்துவையுமியல்புடனொன்றதாய்க் கூட்டுன் மாரிலாச் சருவர் வட்டகர்க்கமா மென்பர் என்ற வாக்கியப்படி சமுதாய சக்கரத்திலுள்ள பிந்துக்களை சூரி யன் முதல் சனி வரையிலுள்ள சப்த கிரகங்களின் அஷ்ட வர்க்கிலும் மேஷ ராசியிலுள்ள பிந்துக்களனைத்தும் கூட்டி சருவா அட்டவர்க்க மேஷ ராசியிலும் ரிடப ராசியிலுள்ள பிந்தனைத்துங் கூட்டி சருவா அஷ்டவர்க்கரிடபராசியிலும் மிதுன ராசியிலும் இவ்வாறு 12 ராசிகளையும் தவராது கூட்டி சர்வா அட்டவர்க்கா ராசியிலடைந்து காண்பதே சருவா அட்டகவர்க்கமெனப்படும்.

சர்வா அட்டகவர்க்கம் காணும் விபரங்களை மாத்திரம் ஒருவரும் மதபேதமின்றி கூறியுள்ளாராயினும் அதன் பலா பல விபரங்கள் பின்வருங் காரணங்களாலறியலாம்.

மீனமே முதலாய் கூறியரும் பவரைபனிரெண்டும்
குலவிய மூன்று கூறாக்கி
மீறிய மூன்றிற் கூட்டி விந்தெல்லாம்
வெவ்வேறு தொகையை தாய்க் கொள்ளே.

என்ற வாக்கியப்படி மீனம் முதல் கும்பம்வரையிலுள்ள பன்னிரண்டு ராசிகளை மூன்று பங்காய்க் கூட்டிக் காண வேண்டுமென்றபடி.

1. மீனம், மேஷம், ரிடபம், மிதுனம்.
2. கடகம், சிங்கம், கன்னி துலாம்.
3. விருச்சிகம், தனுசு, மகரம், கும்பம்.

எனப் பிரிந்து 3-பாகங்களாய் பிரித்து போடுக இவ்வாறு கூட்டிக் காண்போமாதுன் அந்த ஜாதகனுக்கு உண்டாகும் யோக விபரங்களையறி யேதுவாகும் எப்படியெனில்.

கொண்டதோர் தொகைகள் முன்றி னாற்ற னே
குறித்திடும் பலன்கள் யாதொன்றிற்
கண்டிடுமொரு வர்க்குள்ள வாயுளைத் தான்
கருதிடு மூன்று கூறாக்கிய
பண்டைமுன் நடு வீராகவே பகுத்துப்
பண்புரு விந்து களதனால்
விண்ட மத்தனமே பேரிகைத் துடியே
விளக்கு மெக்காலமு மென்பர்,

என்றபடி முன்னே சொல்லியுள்ள படியால் ஜாதகனுக்குறிய ஆயுளைக் கணக்கிட்டு அவனுக்கேற்படும் வயதை மூன்று பாகமாக்கி பின்னால் சொல்லி சர்வா அஷ்டவர்க்க பிந்தையும் மேற்சொன்ன ராசிகளைக் கூட்டி, மூன்று பாகமாய்ப் போட்டு முதலில் பிந்து அதிகமாயிருக்கின் பேரி யோகமென்று கடைசியில் பிந்து அதிகம் காணின் துடி யோகமென்றும் மத்தியில் பிந்து அதிகமாயின்மத்தளயோகமென்றுங் கண்டுகொள்வதோடு முதலில் பிந்ததிகமாயின் முன்னே அவனுக்குரிய வயதை மூன்றாகப் பகிர்ந்தவருஷம் வரையில் தான் யோகமுடையவனென்றும், இரண்டாவததிகமாயின் முதல் பங்குக்கேற்பட்ட வருஷத்தை நீக்கி அதன் பின்னால் யோகமெனவும் கடைசிபிந்ததிகமாயின் இரண்டு மாக வயதைக் கூட்டிய துகைக்குமேல் மரண பரியந்தம் யோகமுடையவனெனவுங் கூறுக.

## ஒவ்வொரு ஜாதகர்களின் லக்ஷண மறிவது

கருமத்தானத்திலிருந்த விந்துதனக்கு
கனம் பெரு மிலாபத்தின் மீறிற்
றருமிக்கு லாபமிலா பத்துக்கே தான்
சாற்றிய வியமது குறைந்தாற்
பெருநரு செலவாம் வியத்துக்கே யுதயம்
பெருகிடுற் செல்வமும் புகழும்
வருமிகக லாக்கி லுயத்தை மீறல்
வல்லமை வித்தையுண்டே

என்ற ஆன்றோர் வாக்கியபடி சருவா அட்டவர்க்க சக்கரத்திலே ஜெனன ராசிக்கு 10-ம் ராசியிலுள்ள பிந்தைவிட 1-ம் இராசியில் பிந்துக்களதிகமாயின் அந்த ஜாதகன் மிக்க செல்வாக்குடையவனாகவே யிருப்பான் 11ம்இராசியிலுள்ள பந்தைவிட 12-ம் இராசியிலும் பிந்துக்கள் குறைந்திருந்தால் அந்த ஜாதகன் சிலவதிகமில்லாதவனும், மீதியுள்ளவனுமாவான்.

## மற்றும் சில சந்தேகம்

12-ம் ராசியிலுள்ள பிந்தைவிடஜெனன ராசியில் பிந்து அதிக மிருப்பின் அந்த ஜாதகன் செல்வமதிக முடையவனும் புகழ்ச்சி யதிகமுள்ளவனுமாம் ஜெனன லக்கினத்தை விட இரண்டாம் ராசியில் பித்துக்களதிக மிருப்பின் அந்த ஜாதகன் வல்லமைவாக்கு சாதுர்யம் பற்பல வித்தைகளை யுடையவனாக யிருப்பான்.

குறிப்பு 10 ஐ விட 11-ம் ராசியில் பிந்து குறைந்தால் விறயமதிகமுள்ளோன் அதாவதுதான் சம்பாதிக்கும்பொருளை விட சிலவதிகமுள்ளவனும் 2ஐ விட ஜெனனராசியில் பிந்து குறைந்தாலும் யோகமில்லாதவனேயாயும் 4 ஜெனன லக்கிணத்தை விட இரண்டில் குறைந்த பிந்திலுள்ள வித்தையதிகமில்லாதவனும் வில்லமை யில்லாதவனுமாவானென்பது இச் செய்யுளால் விளங்குகிறது.

## பிதுர் கெண்டமரிது

சூரியனுக்குறிய சுத்த பிண்டத்தை சூரிய நின்ற ராசிக்கு ஒன்பதாம் ராசியிலுள்ள பிந்தால் பெருக்கி, 27-பேருக்கு கொடுத்தது போய் மிகுந்துள்ள் எண்ணுக்கு அஸ்வினி முதலெண்ணில் எந்த நக்ஷத்திரம் வருமோ அந்த நக்ஷத்திரராசியிலும் அதற்கு 5, 9-ம் ராசியிலும் சனி வரும்போது (கோசாரப்படி) அந்த ஜாதகனின் பிதாவுக்கு மரணமுண்டாகுமென்றும், மேற்படி ராசியில் குரு வரும்போது சவுக்கியம் திரவியம்முதலிய யோகங்களுண்டாகுமென்பதும் சாஸ்திரங்களின் சம்மதியாகும்.

மேற்படி சூரியனுக்குரிய சுத்த பிண்டத்தை குருநின்ற ராசியில் எத்தனை பிந்துள்ளனவே. அதனால் பெருக்கி 27-ல் வகுத்து நின்ற எண்களுக்கு அஸ்வனி முதலெண்ணினால் படும் நக்ஷத்திர ராசியில் குருவருங்காலமும் மரணமென்பர்,

சூரியன் சுத்தபிண்டத்தை சூரிய நின்ற ராசியில் எத்தனை பிந்துள்ளனவோ அதனால் பெருக்கி 27-ல் வகுத்து நின்ற எண்களுக்கு அஸ்வனி முதலெண்ணிய நக்ஷத்திர ராசியில் சூரியன் வருங்காலமும் அந்தஜாதகனின் பிதாவுக்கு அரிட்டமுண்டாகுமென்பது சாஸ்திரங்களின் கொள்கையாகும்,

இந்த முறைப்படியே மாதுகொண்டாதி கெண்டமரி தற்கு சந்திரனுக்குரிய சுத்த பிண்டத்தை சந்திரனின்ற ராசிக்கு நான்காம் ராசியிலுள்ள பிந்துவால் பெருக்கி 27-ல் கழித்தும் சகோதர கெண்டமறிய வேண்டின் குஜனுக்குறிய சுத்த பிண்டத்தை குஜநின்ற ராசிக்கு மூன்றாம் ராசியிள்ள பிந்துவால் பெருக்கி 27-ல் கழித்தும்

அம்மான் கெண்டகாலங்களையறியவேண்டின் புதனுக் குறிய சுத்த பிண்டத்தைபுதநின்ற ராசிக்கு5-ம் ராசியிலுள்ள பிந்துவால் பெருக்கி 27-ல் கழித்தும்

புத்திர கெண்டா காலமறிய வேண்டின் குருவின் சுத்த பிண்டத்தை குருநின்ற ரா க்கு 5-ம் ராசியிலுள்ள பிந்து வால் பெருக்கி 27-ல் கழித்தும் களத்திர கெண்டகால மறிய வேண்டின் சுக்கிரன் சுத்த பிண்டத்தை சுக்கிரனின்ற ராசிக்கு ஏழாம் ராசியிலுள்ள பிந்துவால் பெருக்கி 27 ல் கழித்தும்

ஜாதகனின் கெண்டகாலமறிய வேண்டின் சனி நின்ற ராசிக்கு 8-ல் ராசியிலுள்ள பிந்துவால் சனியின் சுத்த பிண் டத்தை பெருக்கி 27 ல் கழித்து நின்ற சேடங்களுக்கு ஜெனன காலங்களில் வளர்பிறையாகில் அஸ்வனி முதலும் தேய்பிறையாகில் அவிட்டம் முதலும் எண்ணிக்கண்ட நக்ஷத்திர ராசியில் ஐந்து ஒன்பதாம் ராசியிலும் சனி வருங் காலகெண்டாதிகெண்டமுண்டாகுமென்பதுசாஸ்திரசித்தம் இதனை முதல் பாகத்திலும் சிலவற்றைக் கூறியுள்ளோம்.

## அட்டவர்க்க பலன் விளக்கம்

அட்டவர்க்கங்களுள்சப்த கிரகங்களின் அட்டவர்க்கை யும் சோதியாமுன் சமுதாயசக்கரத்துள் 1 2 3 பிந்துக்களே யிருக்குமாகில் அந்தராசி மாதங்களில் தன தான்னிய நாசம் நாற்கால் ஜீவநாசம் முதலிய கொடிய பலனையுண்டாக்கும் நான்கு பிந்துக்களிருக்குமாயின் எவ்விதமான பலனும் சம மாகவே யிருக்கும் நான்கு பிந்துகளுக்குயேல் ஏழு பிந்துக் கள் (அ) எட்டு பிந்துகளிருந்து சர்வ காரிய லாபமும் நினைத்த காரிய ஜெயமும் அந்தராசி மாதங்களில் ராஜ யோக பலனாக்வே நடக்கும்.

சனி அட்டவர்க்க சமுதாய சக்கரத்துள் சனி நின்ற ராசியிலும் சனிநின்ற ராசிக்கு 9 11 முதலிய யிடங்களில்

4 பிந்துகளுக் கதிகமாக விருக்கின் அந்த ஜாதகனுக்கு எல்லா விதமான இலாபங்களு முண்டாவதோடு ஆயுள் விருத்தியும் உண்டாகும் சனி நின்ற ராசிக்குப் பத்தாம் ராசியில் பி துகளில்லாது சூன்யமாயிருந்தது அந்த ராசியில் கோசாரப்படி சனிபிரவேச காலம் செய்தொழில் விக்கினம் ஏற்படும் 12-ம் ராசியில் பிந்தில்லாது சூன்யமாயிருந்து அந்த ராசியில் மேற்சொன்ன சனி கோசாரப்படி வாசம் செய்யுங்காலம் தனநாசமும் உயிர்சேதமும் உண்டாகும் என்பது திண்ணம்.

ஜெனன லக்னம் மேஷம் (அ சிங்கமாயிருந்து ஷை சூரிய ளட்ட வர்கத்துக்குள் சூரியனின் ராசியில் 1 2 3 4 5 பிந்துகளுள்ளிருக்கும் அந்த ஜாதகன் மேலான ராஜ யோகத்தையுடையனாகவேயிருப்பான் ஷை சூரியனுடன் இராசி சக்கரத்துள் 3 கிரகங் கூடி இருக்குமாயின் தீர்காயுள் உண்டு. கடக ராசியில் சூரியனிருக்கவும் மேற்படி சூரியன் 3 4 5 பிந்துடனிருப்பாராயின் அந்த ஜாதகன் ஜெனித்த 17-ம் ஆம் ஆண்டில் பிதாவுக்குக் கட்டாயம் கெண்டம் கொடுக்கும் என்பது திண்ணம்.

சூரியன் ஜெனன ராசிக்கு 1 4 5 7 10 முதலிய யிடங்களில் 5 பிந்துடன் நின்றிருக்கில் அந்த ஜாதகன் ஜெனித்த 22-25-ம் வயதிலும் 30-ம் வயதிலும் பிதாவுக்கு கெண்டம் காட்டும். சூரியன் சந்திரன் புதனுடன் கூடி 4-பிந்துவுடன் எந்த ராசியிலிருக்கினும் அவன் பிதாவுக்கு ராஜாதிகாரமும் லாபமும் உண்டாகுமென்பதாம்.

சமுதாயசக்கரத்துள் 4 5 7 8 பிந்தோடு சூரியன் மேஷம் சிங்க முதலிய ராசிகளிலிருந்து அவை ஜெனன ராசிக்கு கேந்திரமாயு மிருக்கில், ஆதன் பிதா நூறு யோசனை தூரம் அதிபதியென வழங்குவான். இதோடு பிதுருஸ்தானாதிபதியும் குருவாயிருக்கில் பற்பல யாகங்கள் செய்வோனும் சுக்கிரனால் பற்பல தேசங்களை யாளும்சக்கிரவர்த்தியும்திரவியமுள்ளவனும் பிரக்யாதி பெறறவனென்றுங் கூறுக.

குறிப்பு:- அட்டவர்க்கத்தை குறித்துப் பேசும் போது கிரக அடவியையும் கவனிக்கவும்

பண்டைகாலத்தோர் பகற்காலங்களில் சூரிய சாயையாலும் இரவில் சந்திர சாயை நக்ஷத்ர உச்சம் முதலியவைகளால் கட்டாயமணி நிமிஷங்களென்கிற நாழிகைவினாடிகளை செவ்வனே அறிந்து அதற்கு தக்கப் பலாபலன்களை

மோரக் குறைத்து பெருமை பெற்றாரென்று பற்பலசாஸ்திர மூலமாய் நாமறிகிறோ மல்லவா.

அதைப்போலவே தற்கால சோதிடர்களும் மேற் சொன்ன சூரிய சந்திர சாயையாலும் நக்ஷத்திர மூலமான உச்ச அஸ்தம்ய உதய முதலியவைகளாலும் உதய கால வினாடிகளை நன்கு அறிந்துணர்தல் நலம்.

இவ்வாறு உதய காலநாழிகை வினாடிகளை பிழை யின்றியரிபோமாகில் நிகழ்கால பலன்கள் சரிவர நிகழு மென்பதற்குச் சிறிதேனும் மையமில்லை. பன்முறை கூறி யுள்ளதோடு இதன் விபரங்களை முதல் பாகத்தில் செவ் வனே விளக்கியுள்ளேன்

உதயகால நாழிகையைச் சரிவரத் தெரிந்தோமாயினும் உதயலக்ணம், சந்திரலக்ணம் ஹொராலக்னம், கடிகால லக்ணம், ஹோராதியலக்கணம், ஆருடலக்ணம், நக்ஷத்திர லக்ணம் ஆதரிசலக்ணம் முதலியனவகளை யறிந்து ஜாதக பலன் சொல்ல வேண்டுமென்பது சாஸ்திர முறைபாடு இவ் வாரின்றி (ஜெனன லக்ணம்) உதயலக்ணம் சந்திரலக்ணம் முதலியவைகளைக் கொண்டு ஜெனனகால அடையாளங் களிற் சில தெரிந்து கொள்வதனாலேயே அக்கால உதய நாழிகையைச் சரியென் றெண்ணுவது சரியல்ல இதனாலே யே சாதக சிந்தாமணி நூலுடையார் தமது பொதுப்பாயிரம் நூலுதவி பொருள் என்னும், 11 செய்யுளில்

மன்னுகோன நட்பாட்சி பகையுச்ச நீச்சம்
வகுத்த கசவிர்க்கு கிரியாக மனந்திக்கில்
உன்னுப்பயங்கிரக உயித்திக் கிரகங்கூடடல்
உதயமத்தமாம் பார்வை திசைகால சக்ரம்
பின்னுமங்கச் சக்கரங்கிரண பயிண்டிகமும்
பேசிலட்டவர்க்க முடன் சருவாட்ட வர்க்கம்
மின்னுதயம் பகலிரவிராசி குணகராம்
வேதை நாட்டிதி வருகிற் பலன் சாதகமே.

கூறியுள்ளாராதலின், வாரம், திதி, நக்ஷத்ரம் யோகம் கரணம் இராசி கிரகம் அயனம் பக்ஷம் ருதுமாதம் வருஷம் என்னும் பறபலவிதமான பொருள்களையுணர்ந்து ஜாதகப் பலனுரைப்பது சிலாக்யமென்பது முன்னூற் கொள்கை யாகும்.

## இங்கு ஒவ்வொரு ஸ்தான பலன்களைக்கூறுவாம்

இலக்கிண முதயங் கீர்த்தியில் மூர்த்தி சீவனங்கந்
துலக்கு கல்வியா வாரங்கத்தோற்றமே தலைசொரூபம்
பலப்படு சிரசு பாங்கங் பகர்சவுக்கியம் போசித்தல்
பெலக்குமரபு வைஸ்தானத்தைப் பேசுவர் கணித
நூலோ

சாஸ்திரங்களை யரிந்த மேதாவிகள், இலக்கிணமாகிய ஒன்றாம் ஸ்தானத்தால், அந்தந்த ஜாதகனின் கீர்த்திப் பிரதாபங்களையும் மூர்த்தி சரம் தான் செய்யுந்தொழில் கற்குங் கல்வி சரீரத்தின் கூறுபாடு சொரூபம் பலத்தை யுடைய சிரசு செய்தாகி விட்டது அவனுடையும் சவுக்கியம் புசிக்கும் பதார்த்தம் ஆயுள் முதலியவைகளைப் பற்றி கூறுவார்.

இலக்கணம் என்னும் 1 ஆம் ராசியில் ஆயுள் சொரூபம் முதலிய முக்கிய காரணங்களை யறியலாமென்பது இச் செய்யுளின் கருத்தாகும் ஆயுள் என்னும் ஸ்தானத்தைக் குறித்து எட்டாமிடமென்பது பல சாஸ்திர சம்மதம் ஆயி னும் இங்கு ஜெனன லக்னத்தை கொண்டே ஆயுள் சொல்லலாமெனக கூறியுள்ளார் ஜெனன லக்கினத்தில் அந்த ஜாதகனுக்குறிய ஆயுள் எவ்வளவேற்படுகிறதென அறிந்து பின்பு எட்டாம் ராசியில் நிலை கூறவேண்டு மென்பது அனுபவத்திலும் தமிழ் சாஸ்திரங்களின் முறையாகும்.

இலக்கணத்தைச் சுபகிரகங்கள் ; பார்க்கினும் லக்னத்தி லிருக்கினும் ஆயுள் பூரணமென்றும் தீய-கிரகங்களால் பார்க்கப்பட்டு (அ) சகிதம் பெற்ற லக்னத்தோர்க்கு மத்திய வயதென்றுங் கொள்க ஏனெனில்.

தூயகோணின்ற ஓரை நாதனுக்கு தொகுத்திடுப்பல னுந் தூயதாகும்.

தீயகோணின்ற விராசி யாதியர்க்குச் செப்பிய பலனுந் தீதாகும் என்ற தாலறியலாம்.

## இரண்டாமிடம்

வாக்கு நேத்திரம் குடும்பம் வந்தனம் வித்தைலாபம்
நோககுரு முகமுத்தாரம் நூவலுபகரா தாரம்
ஆக்குமாஞ்சத்த சாத்ரமாத்திரத்தோடு சற்பாத்திரம்
தூக்கிய குருவோடல் லாற்சுபர் சாதியிரண்டாந்தானம்

லக்கினத்ற்கு இரண்டாமிடமாகிய ராசியால் தனம் வித்தை உண்ணும் பாத்திரம் பார்க்கும விழி உதாரவார்த்தை உபயதாரம், சாத்திரங்கேள்வி அவரவர் குணம் குரு உபதேசம், முதலியவைகளை யறியும் க்ஷேத்திரம்.

இரண்டா மிடமெபது வேதபுருஷனது நெற்றியாகையால் ஷ இரண்டாமிடத்தில் மேற்சொன்ன விஷயங்களை யறியலாமெனக் கூறியுள்ளார். சிற்சில சாஸ்திரங்களில் 11-ம் ராசியை உபயதாரமெனக் கூறுவதுண்டு அவையும் பொருத்தமுடைய தென்றே கூறலாம். நேத்திரமென்று இராண்டாமிடத்தைக் குறித்து பொதுவாய்கூறியுள்ளவராயினும், அலங்காரம் முதலிய நூற்களில் இரண்டாமிடத்தை வலது விழியெனவும் பன்னிரண்டாமிடத்தை இடது கண்ணென்றும் கூறியதும் பொருத்தமுடையதாயும் அனுபவத்திலும் சம்மதிக்கப்பட்டு வருகிறது.

அன்றியும் கிரயம் விக்ரயம் என்னும் வியாபாரங்களுக்கும் ஷ இரண்டாம் ராசியையே முக்கியமாய்க் குறித்துப் பேசியிருக்கிறார். மற்றுஞ் சிலா நான்காம் ராசியில் வியாபாரத்தைக் குறித்து கவனிக்க வேண்டிய க்ஷேத்திரமென கூறியுள்ளார் இதை கவனிக்கு மிடத்து இரண்டாமிடம் பெருளை வியாபாரம் செய்தல் அதாவது வட்டிக்குப்பணம் கொடுத்தாலும் நான்காமிடம் சரக்கு இரும்பு முதலிய வியாபாரங்கள் செய்யுமிடமெனவும் ஏழாமிடமென்பது ஜவுளி பருத்தி முதலிய நூல் வியாபார மெனவு மேற்படுகிறது. முக்கியமாய் இரண்டாமிடம் என்பது தனம் கும்ப தேக்ஷதிரம் மருத்துவம் வாக்கு முதலியவைகளை முக்கியமாய் குறித்த க்ஷேத்திரமாகும்.

## மூன்றாம் இடம்

சொன்ன விக்கிரமங் கேள்விச்
சரங்குறற் றுணையர் மார்பு
கர்ணபூஷன மென்காது கடித்
துண்ணற் செவியே யுத்தம்
உன்னிய பலங்குனத்தோ டுரைத்திடும்
மூன்றாம் தானம்.

மன்னக மணியே காட்டும்
பையரவல்கு லாளே.

அழகிய அல்குலையுடையபெண்ணே, ஜென்ம லக்கி ணத்திற்கு மூன்றாம் ராசியில் விக்ரமம் கேள்வி தன்னுடன் பிறந்தசகோதரர் மாாபு காது கர்ணபூஷணம் உண்ணல் காது செவிடுபடல் யுத்தம் செய்தல் தன்பதம் நன்மார்க்க மான மொழி இவைகளைக் குறித்த க்ஷேத்திரமாகுமெனகூறு வாயாக,

மூன்றாம் ராசியில் அவுணர் நீலகண்டர், பராசர் முதலி யோர் எண் வகையான சம்போகத்தைக் குறித்தும், சங்கீத வித்தை கொடிய ‹ தாழிலைச் செய்யும் இடம் என்று கூறி யுள்ளார்.

3-ஆம் இடமென்பது காலபுருஷனுடைய மார்பு ஆத லால்! இருதயதான் மூன்றாமிடத்தில் மேற்படி விஷயங் களைப் பேசலாமென்பது கொள்கையாகும்.

மற்றும் சிலர்மூன்றாம் ராசியைக் குறித்து விருது சண்
டை இவ்விரண்டை மாந்திரமே முக்கியமாய் கூறியுள்ளோர்
மேற்படி மூன்றாந்தானத்தைப் பற்றி இவ்வாறு நூற்களா
தாரத்தால் நீக்குவனவமறை நீக்கி மற்றுமுக்கிய விஷயங்
களை தேர்ந்தெடுக்கப்படும்போது மூன்றாமிடமென்பது
இளைய சகோதரஸ்தானமே முக்கியமென ‹ தென்படுகிறது
மற்றுமுள்ள விஷயங்களும் முக்கியமேயாயினும் மற்ற விஷ
யங்களை அந்தந்த கிரகங்களைக் கொண்டும் அவரவர்கள்
பெற்ற அங்சீசம் நட்பு, ஆஷி உச்சம் நீச்சம் பகை முதலிய
பல்வேறு அங்கங்களைக் கொண்டும், நிலை கூறவேண்டும்
மூன்றாமிடத்ததிபனாலும் மூன்றாம் ராசியாலும் கனிஷ்ட
சகோதர பாவங்களை சகோதரம் உண்டென்பதும் இல்
லையென்றும் கவனிப்பதோடு மேற்சொன்ன சகோதர
விஷயங்களுக்கும் பற்பல அங்கபரிசோதனை யாலேயே
நிலை கூறுவதே சிலாக்யம்.

மாதுரு கிரேககேந்திரம் வாகனம் பந்துமித்ரம்
ஓதுதானியம் நாற்காலியுரு சுகடுர வித்தை
தீதில் பாதாள மூக்குச் செலஞ்சுலைத்தனர் குழம்பு
மாதடா காதிபால் நெய்வணங்குடை யிதங்க மென்பர்

ஜென்ம லக்கினத்திற்கு நான் காமிடகாகிய ஸ்தானத் தில் மாதுரு குடியிருக்கும்க்ஷேத்திரம் வாகனம் பந்து ஜென னம் சந்கேதர்கள் தானியம் மற்றெல்லாவித நாற்கால்

ஜீவன்கள் அதனாலடைய வேண்டிய சுகம் கடூரமான வித்தை மூக்கு சுரங்கம் செய்தல் அடிமை வைத்துண்ணல், குழம்பு பெரிய தடாக முதலியவைகளுண்டாக்கல் பால் நெய் குடை கொடி முதலிய காரணங்களை யறியும் க்ஷேத்திரமாகும்.

## ஐந்தாமிடம்

மந்திரிங் கியானந்தெய்வ மந்திர தாரஞ் சோரம்
சந்ததித் தவசுபுத்திச் சத்தியம் வயிறுதன்மை
அந்தமாம் பிதுர்குருக்கள் ளாத்துமமிகு நிவாசன்
முந்திய நேத்ரரோகமெருகண்போசனம் பாவிப்போர்

ஜென்ம லக்கினத்திற்கு 5-ம் இராசியால் மந்திரம் தியானம் தெய்வபக்தி தன்மனைவி சோரம் போதல் தனக்குண்டாகும் புத்திரர் தவசு புத்தி சத்யம் வயிறு அவன் தன்மை அழகும் குருபிதுர் ஆத்ம சுத்தி நேத்திர வ்யாதி ஒற்றைக்கண்போஜனம் முதலியயவைகளை குறித்தறியும் க்ஷேத்திரமாகும்.

ஐந்தாமிடமென்பது தாய் மாமன் புத்திரன் தாய் பாட்டான் வித்வம் முதலிய விஷயங்களை யறிய முக்ய க்ஷேத்ரம் அம்மான் என்று தாய் வகுப்பு யாவற்றையும் பற்றிய விஷயங்களை யறியலாம் அம்மானுடைய தாய்தந்தை அம்மானுக்குண்டாகும் புத்திரர்கள் புத்திரிகள் முதலிய விஷயங்களை அம்மான் லக்கினம் 5-ம் இராசியாய் வைத்து மற்றுமுள்ள 2, 3, 4, 5, 6, 7, 8, 9, 10, 11, 12 முதலிய க்ஷேத்திரங்களையே முறையாய் ஆராய்தல் வேண்டும் இவ்வாறே ஒவ்வொரு வகுப்பாருக்கும் அறாய்வது சிலாகயமாகும்.

## ஆறாம் இடம்

சத்துரு சாதிரோகஞ் சயன்சடன் விரணங்காயம்
பத்தியாக்கினைக் குள்ளாதல் பகைகடை வாயிடுப்பு
சுத்தமாம் பற்கள் வீழ்தல் சுயதேசம் பலதேசத்தோ
டொத்த தோருலகா யென்றிங் குறைந்தன ருணர்ந்
(தோர்தாமே

சாஸ்திரங்களை யறிந்த மேதாவிகள் லக்கிணத்திற்கு ஆறாம் ராசியில் தனக்குண்டாகும் சத்துரு வியாதி தான் வாங்குங் கடன் இரணகாயம் பிரராலாக்கினைக்குள்ளாதல் பகையுண்டாதல் கடைவாய் யிடுப்புபற்கள் வீழ்ந்துபோதல் சுயதேசம் அன்னிய தேசத்தின் ரோடுறவாடல் முதலியனவற்றை யறியும் க்ஷேத்திரமாகும்.

ஆறாமிடமாகிய ஸ்தானத்தால் தனக்கேற்படும் சத்ருக்கள் யார் அவையாவன சுயபந்துக்களா அன்னிய பந்துக்களா வென்றும் அவர்களில் பிரம்ப க்ஷத்திரிய வை ய சூத்திரரென்றும் நான்கு வகுப்பினருள் எவ் வகுப் பைச் சேர்ந்தவரெனவுங் காணும் க்ஷேத்திரமாகும் அன்றி யும் அவர்களுண்டான கடன் எவ்வளவிருக்கும் அவை எவ் வகையிலுண்டாம் அக்கடன் தொந்தரவுண்டாகுமா? இல் லையா வென்றும் மேற்சொன்ன ஆறாம் ராசியாலும் அவ் விராசியதிபனாலும் சூக்ஷமமாய்க் கூறுக.

## ஏழாம் இடம்

களத்திரங் காமஞ்சூது கழுத்து
வாய் குய்யமாகை
யளப்பில் தேசாந்திரம் போல்
அன்பொடு தனத்தை யுண்ணல்
வளைப்பிடு திரியன் போக
மன்னியத் திரிவிரோதம்
தளப்பமின் மனைவி தன்னாற்
றருமங்காம மேலெழுக் கென்பார்

ஜென்ம லக்கினத்திற்கு ஏழாம் ராசியால் மனைவி அவனவன் மோகம் சூது செய்தல் வாய் குய்யம் ஆசை அன்னிய தேசங்களுக்குச் செல்லல் திரண்ட தனத்தைச் சம்பாதித்தால் மோகத்தால் அலைதல் அன்னிய ஸ்திரி ஜனதுவேஷம் தன் மனைவியாலுண்டாகும் காம முதலிய வைகளை யறியும் க்ஷேத்திரமாகும்.

ஏழாமிடமான களத்திர ஸ்தானத்தால் மனைவியின் ரூபா ரூபங்களையும் தான் சயனம் செய்யுந் தன்மையையும் எவ்வளவு பொக்கிஷ அதிகாரியா யிருப்பானென்றுஞ் சூக்ஷமாராய்ந்து கூறுக.

## எட்டாமிடம்

அட்டமங் கொண்டமாயு ளென்றையும்
அரண தத்துவப் புயலிங்கம்
நட்டமாம் விழுதல் பரிகொடுத் திடுதல்

நவிலன்ன தானம் சித்திரத்தோ
டொட்டிய சோம்பி லாயனம் வஞ்ச
முக்கிர மவன் சீனப் படுதல்
இட்டா நேத்திர ரோக நீரேற்ற
மிலகு நாற்காலகாற் பயமே

ஜென்ம லக்கினத்திற்கு எட்டாம் மிராசியால் அந்தந்த ஜாதகனுக் கேற்படும் கெண்டாதி கெண்டங்களையும் அவனாயுளையும் தத்துவம் வீர பராக்கிரமம் நஷ்டம் உயர்ந்த இடங்களிலிருந்து விழுதல் பறிகொடுத்ததில் அன்னதானம் செய்தல் வஞ்சம் முன்கோபம் சினப்படல் நேத்திரரோக பயமுண்டாதல் நாற்கால் பிராணிகளால் க்ஷீணம் முதலியவைகளைக் குறித்து கவனிக்கத்தகுந்த க்ஷேத்திர மாகுமெனக் கூறுவர்.

## ஒன்பதாம் இடம்

தரும பாக்கியமே வத்ரம் தவங்
குரு பிதுர் புயத்தோ
டிருதுடை போகபக்கிய மினி
துடன் கூட வுண்டோர்
மெருமெய் யாறவுந் தர்மம் பிதுர்
பயம் விரோத மல்லால்
அருமையா மகிமை யென்ன
வறைந்தன ரொன்பதுக்கே.

ஜெனன லக்கினத்திற்கு ஒன்பதாம் ராசியில் தருமம் பாக்யம் வஸ்திரம் தவஞ்செய்தல் குரு உபதேசம் இரண்டு துடைபோகம் போக்கியம் தன் கூடவுண்ணுஞ் சிலாக்கியர் பெருமை புறராலேற் டும் ஆதரவு கிலேசம் விரதம் அவர்களுடைய மகிமை முதலியவைகளைக் குறித்து கவனிக்கத் தக்க க்ஷேத்திரம்.

ஒன்பதாமிடமென்பது முக்கியமாம் பிதாவையே குறித்த வீடாகும் அன்றிய ஷெ ஒன்பதாம் ராசியால் அவனவன் பிரக்யாதியைக் குறித்து அவையாவன உலகத்தா ரெல்லாம் பெருமையோடு மெச்சத் தகுந்தவனாயில்லையா வென்பதையும் அவ்வாறான பிரக்யாதி எதனாலுண்டாகு மென்றும் அறியத்தக்க க்ஷேத்திரமாகும் இவை யாவும் ஒன்பதா மிராசியதிபனே எவனோ அவன் பிரக்யாதியையே கூறவேண்டும் மற்றும் அவனிருக்கும் பலன்களைக் குறித்தும் கவனிக்கத்தாகும்.

## பத்தாமிடம்

அரியதோர் கருமமாக்கினை முழங்காலரசர்
சேவை ஜெயங் கீர்த்தி
பரிவிற்கால வருமைவரை வயுறுண்ணற்
பாரிசந்தேவா பக்தி
புரியுங் காரியங்கள் கெடுதி பின் பிழைத்தல்
பேசுமே காங்கிசனாகித்
தெரியபிமானஞ் சிறிதுடனூமை செய்ய
ஞானந்தான் பாணமுமே

ஜெனன லக்கினத்திற்குப் பத்தாமிராசியால்அவனவன் செய்யுந்தொழில் ஆக்கினை முழங்கால் அரசர் சேவை ஜெயம் கீர்த்தி பிரதாபப் கால் வயிறு உண்ணும் விதம் தெய்வ பக்தி நன்மார்க்கச் செயல்கள் கெடுதியுண்டாதலும் அவை நீங்குதலும் சோகச் சொற்கள் எசம் அபிமானம் ஊமை ஞானம் முதலியவைகளைக் குறித்து கவனிக்கத் தக்க க்ஷேத்திரமாகும்.

பத்தாமிடம் என்பது விசேஷமாய் அவனவன் செய்யுந் தொழிலைக் குறித்து முக்கியமாய் கவனிக்கத்தக்கதுதொழில் என்றால் அவன் செய்யுஞ் செய்கை முதலியவைகளையுங் குறித்தும் உதாரணமாக 10-ம் வீட்டுகுடையவர் குருவாகில் தேவஸ்தான அர்ச்சகராயிருப்பார் என்பதுசாஸ்திரங்களின் கொள்கை ஆயினும் 10 வீட்டோன் பலயீன மடைந்து நீச்சம் பெற்ற கிரகங்களுடனாவது நீச்சம் மனைவியிலாவது இருக்க ஷெ தேவஸ்தான அர்சனரென்பது தவறி, நீச்ச காரியங்களில் பிரவேசிப்பானென்பதற்குத் தடையில்லை. ஆதலால் தொழிலைக் குறித்து கவனிக்கும் போது எவ்வித மான தொழில் என்றும் அவை யாரால் உண்டாகுமென்றுங் கூறுக 10-ம் வீட்டோர் எந்த கிரகமாயினும் அவருக்குறிய தொழில் விபரங்களை மூன்றாம் பாகம் பார்க்கவும்.

## பதினொன்றாமிடம்

வந்திடுமி லாபதன் சமுசாரம் வருந்திரவிய
புதைத்திடுதல்
உந்திய புதயலெடுத்தாலே செவிடு
மொளிர் துணைக்காற்கன்னத்தோர்
முந்து சந்தோடத்தி னிலுண்ண விதய
முறமையா மூத்தவர் நடக்கை

யந்தமா பலபலலாமனுதினம்
வருவது காண்பார்.

ஜெனன லக்கினத்திற்கு 11-ம் ராசியில் அந்த ஜாதக னுக்கு வரும் லாபத்தையும் உபயதார விஷயமும் தனக்கு எவ்விதத்தில் லாபம் சேருமென்பதையும்தனத்தைபுதைத்து வைத்தல் முதலியவைகளையும் புதயலெடுத்தல் செவிடாதல் கணைக்கால், கன்னம், மூத்தச் சகோதரம் சந்தோஷம் உண்ணல் மனதிலுள்ள நன்மை தீமை தனக்குமுன் பிறந்த வரின் நடக்கை பற்பலவிதமான லாபம் முதலியவைகளை யறியும் க்ஷேத்திரமாகும்.

## பன்னிரண்டாம் இடம்

சயனங்காற் செலவுலோபஞ்
சயனப் பிரதாபமெத்தை
சயனங் கொடுடனே நாபி நாடி
நிச்சய மாய்த் தூங்கல்
அயர்வில் பாத்திரத் தானத்
தோடாபாயத் தான மென்றும்
பயன்குறி கணித நூலோர்
பகர்ந்தனர் வியத்துக்கென்றே

ஜெனன லக்கினத்திற்கு 12-ம் இராசியால் துக்கம் சிலவு லோபத்தனம் சயனகீர்ததிமெத்தையின் மீதுரங்கல் கெடுதி உண்டாகுங் காலம் நாபிதன் கையிலுள்ள நாடி நிச்சயம் அதிக தூக்கம் பாத்திரமுண்டாகுங் காலம் அபாய முண்டாகுங் காலம் இவைகளை சாஸ்திரங்களை யறிந்த மேதாவிகள் 1<sup></sup>-ம் ர்ராசியைக் கொண்டு கூறுவர்.

இதுவரையில் மேஷமுதல் மீனம் வரையில் பன்னி ரண்டு ராசிகளுக்கும் ஜெனன லக்னமுதல் 12-ம் ராசி களைப்பற்றியும் ஒவ்வொரு இடங்களைப்பற்றி இன்னின்ன விஷயங்களைப் பற்றி பேசலாமென நமது ஆசிரியர் சாதக சிந்தாமனி நூலுடையார் கூறியவண்ணம் எடுத்துக்காட்டி யுள்ளேன் மேற் சொல்லியபன்னிரண்டு தானங்களிலும் 1-ம் இடம் அந்த ஜாதகனின் பொதுப்பலன் யாவும் பேசலா மெனவும்இரண்டாமிடத்தால் அவன்குடும்பம் வித்தைதனம் முதலியவைகளையும் நான்காமிடத்தில் அவன் அன்னை

சுகம் முதலியவைகளையும் 5-ம் இராசியில் அவன் தாயுடன் பிறந்த அம்மான் கருவிலுத்த புத்திரன் இவர் களைப் பற்றியும் 8-ம் இராசியால் ஒவ்வொருவரின் ஆயுள் விபரத்தையும் ஒன்பதாம் இராசியால் பிதா அவனுக்கு நிலைத்திருக்கும் பாக்கியம் முதலியகளையும் 10-ம் இராசி யால் ஒவ்வொருவரும் செய்யுந் தொழில் உத்தியோகம் முதலியவையும் 11-ம் இராசியால் அவனுக்கேற்படும் லாபம் முதலியவைகளையும் 12-ம் இராசியாம் நிறியாண மாகும் விபரங்களையும் ஆலோசிக்கத் தகுநத இடமென ஏற்படுகிறது.

## விபரம்

1. லக்னம்
2. சனம்
3. சகோதரம்
4. மாதா
5. புத்திரன், அம்மான்
6. சத்துரு கடன்
7. களத்திரம்
8. ஆயுள்
9. பிதா பாக்யம்
10. தொழில்
11. லாபம்
12. விறயம்

எனப் பொதுவாய்க் கூறியுள்ளதாகும் இவ் வாரான பாவம் 12 ஆராய்ந்த பிறகு அவரவர்களின் பால பலன் களைக் கூறுவதற்கு விசேஷமாய் வர்க்க பரிசோதனை வேண்டும் வர்க்கம் என்பதை அனேகர் அனேகவித்மாய் கூறியுள்ளனர் அவையாவன.

1. ஆறுவர்க்கமென சிலரும்
2. ஏழுவர்க்கமென சிலரும்
3. பத்து வர்க்கமென சிலரும்
4. பன்னிரண்டு வர்க்கமென சிலரும்
5. பதினொரு வர்க்கமென சிலரும

ஆறுவர்க்கம் மென்பது: 1-வது இராசி
2-வது ஹோரை
3-வது திரிகோணம்
4-வது அம்சம்
5-வது துவாதசம்
6-வது திரிசாம்சம்

இராசி என்பது ஜெனன நாழிகையை அறிந்த பின்னர் ஜெனன மாதத் தேதியன்று அம்மாத ராசியில் எத்தனை நாழிகையும் வினாடியும் செல்லலாயின மற்றும் எத்தனை நாழிகையும் வினாடியுமுள்ளன வென்றறிந்த பிறகு இருப்பாகிய நாழிகையுடன்.

| | | | | |
|---|---|---|---|---|
| மேஷம் | நாழிகை | 4 | வி· | 15 |
| ரிஷபம் | ,, | 4 | ,, | 45 |
| மிதுனம் | ,, | 5 | ,, | 15 |
| கடகம் | ,, | 5 | ,, | 30 |
| சிங்கம் | ,, | 5 | ,, | 15 |
| கன்னி | ,, | 5 | ,, | 0 |
| துலாம் | ,, | 5 | ,, | 0 |
| விருச்சிகம் | ,, | 5 | ,, | 15 |
| தனுசு | ,, | 5 | ,, | 30 |
| மகரம் | ,, | 5 | ,, | 15 |
| கும்பம் | ,, | 5 | ,, | 45 |
| மீனம் | ,, | 4 | ,, | 15 |

எனக் கூட்டிக்கொள்வதேயாம் உதாரணம் கீழ் வருமாறு

பவஹு புரட்டாசிமீ 2௳ பகல் நாழிகை 15-க்குக் குழந்தை பிறந்ததாக வைத்துக் கொள்வோம்.

## புரட்டாசிமீ கன்னிய இராசி

அவ்விராசிக்குறிய நாழிகை 5 அதனை அம்மாத நாட்கள் 30-க்கு பங்கிட்டால் நாள் ஒன்றுக்கு நாழிகை 0 வீ 10 ஆகும். ஜெனன தேதிக்கு முன் ஓர் தேதி சென்று போனமையால் 10-வினாடி சென்று போயின. மாற்று மிகுந்துள்ள

நாழிகை 4 வி 50
இப்பால் துலாம் நாழிகை 5 வி 10
விருச்சிகம் துலாம் நாழிகை 5 வி 5

அக மொத்தம் 15 5
ஜெனன நாழிகை 13 0

போக இருப்பு நாழிகை 0 வி 5

இவையே ஜெனன லக்னமாகும். இவ்வாறே மற்றுமுள்ள ராசி (அ) நாழிகைகளுக்கும் மேலே சொன்னபடி கூட்டியும் கழித்தும் காண்பதே ஜெனன லக்னமாகும். இதனை முதன் பாகத்தில் விமரிசையாய்க் காணலாம்.

## அந்தர பலன் விபரம்

சூரியன் மகா திசையில் சூரியன் சுயபுத்தி
மாதம் 3-நாள் 18-ல் சூரியன் சுய அந்திரம்
நாள் 5-நாழிதக 24-க்கு அந்தரபலன்

திரேக உஷ்ணம் நலி ஜாட்டியம், கொடுத்த கார்யவிக்னம், பிதுர்வர்க்க பீடை மனஸ்தாபம் லாவாதேவிவிக்கினம் தானாவிதமான கார்யங்களிலலைச்சல்.

ஷ சூரியன் 1 4, 7, 10-ல் பலன் பெற்றுநற்கோட்களுடன் கூடி பலம் பெற்றிருந்தால் வியாபார தனலாபம் தொடுத்த காரியஜெயம் அன்னிய ஜன சகவாசம், உற்றார் நேசம். கைவிட்ட தன தான்னிய சேர்க்கை.

## சூரியன் புத்தி சந்திரன் அந்தர பலன்

விவகாரதனார்ச்சிம். ஆயுளாரோக்கியம் தான தருமம் உபகாரம், பெண்கள் மூலமான சந்தோஷம், உற்சாகம் ஆலயங்களுக்குச் சென்று வருதல் விவசாய தனலாபம் வித்தியா அப்பியாசா விருத்தி ஷ சந்திரன் தேய்பிறையுடையதனாகிய 6. 8, 12-லிருந்தால் குடும்ப கலகம்மனோ வியாகூலம் உயர்ந்த மனுஷனால் தான் கோரிய காரிய விக்கினம். அலைச்சல் திரிச்சல் முதலிய பலனே நடக்கும் என்பதாம்.

## சூரியன் புத்தியில் குஜன் அந்திரம் நாள் 6-நாழிகை 18-க்கு பலன்

வீண் விவகாரங்களில் தலையிடுதல் அன்னிய ஜன கலகம், உஷ்ண சம்பந்தமான பிணி பீடை ஆயுளாரோக்கியம், இஷ்டஜனங்களால் பீடை மேலான பிரபுக்களாலும் வயிரியராலும் தான் கோரிய காரிய விக்கினம், தனது சொந்த பந்துக்களால் பகை, தொந்திரவு சைவஜன துவேஷம் முதலிய பலன் நடக்கும்.

## சூரியன் புத்தி இராகு அந்தரம் நாள் 16 நாழீகை 12-க்கு பலன்

விஷப் பிணி பொன்னாணயங்கதன கைவிட்டுப்போதல் விவசாய அற்ப லாபம் மேலான பிரபுக்கள் விரோதம் திரேகநதி ஜாட்டியப் முதலிய தொந்தரவு செய்தொழில் மூலமான கஷ்டம் அன்னிய ஜனங்களால் தன் கையிலுள்ள பொருளை யிழத்தல் தேவாலயங்களுக்கு சென்று கஷ்டமடைதல். வழிமார்க்கங்களில் பயப்படுதல், தனதான்ய விரயம் முதலிய பலன் நடக்கும் என்பதாம்.

## சூரியன் புத்தி குரு அந்திரம் நாள் 14-நாழிகை 42-கக்கு பலன்

செய்தொழில் மூலமான விசேஷ தனலாபம், உத்தியோக முதலியசேவகா விருதி. லாவாதேவிகளால் நாணய சிலாக்யம் தான் கொண்ட எண்ணம் ஈடேருதல் ஆயுளாரோக்கியம் இஷ்ட ஜனப்பிராப்தி, பால்பாக்கிய விருத்தி தொடுத்த காரியார்த்லன் முயிமாய் பொருட்சிலவு செய்தொழில் முலமான விசேஷ தனலாபம் எத்தேச காலமும் சத்தோஷத் தோடிருந்தால் சிலாக்கியம், ராஜசம்ரமம் முதலிய பலன் நடக்கும்

## சூரியன் புத்தி சனி அந்திரம் நாள் 17-நாழிகை 6-க்கு பலன்

நீச்ச காரிய சந்தோஷம், திரேகத்தில் ஓர் விதமான நலி லாவாதேவிகளால் விக்கினம், தான தரு

மங்கொடல், தாயாதி ஜனங்களால் தொந்திரவு திவாந்திர வஸ்திர பூஷண லாபம் தான் நினைத்த காரிய மூலமாய் அலைந்து திரிதல் பயம் விவசாய தனநஷ்டம் கொடுக்கல் வாங்கல் முதலிய காரியங்களில் விக்கினம், தனதான்னிய நாசம் முதலிய பலன் நடக்கும் என்பதாம்.

### சூரியன் புத்தி கேது அந்திரம் நாள் 15 நாழிகை 18-க்கு பலன்

வியாபார தனலாபம் எத்தேச காலமும் சந்தோஷ முதலிய காரியங்களிலேயே யிருத்தல், ஆயுளாரோக்கியம் ஜன பிராப்தி லாவாதேவிகள் மூலமான சந்தோஷம் தயவு தாக்ஷண்ணிய உதவி மேம்பாடு எத்தன காரிய அனுகூலம் வைஷ்ணவ ஜன மனுஷனால் உபகாரமும் விருத்தியுமுண்டாவதோடு எக்காலத்திலும் வியாபார தனார்ச்சிதமுண்டு என்பதாம்.

### சூரியன் புத்தி புதன் அந்திரம் நாள் 6 நாழிகை 18க்கு பலன்

தன தான்னிய நாசம் விவகார தனலாப விக்கினம் செய்தொழில் மூலமான வியாகூலம் நஷ்டமும் உண்டாவதோடு தனது வர்க்க மனுஷாள் மூலமான சூதகாதி தோஷங்களும் காட்டும் அகாலபோஜனமும் அன்னியஜன கோபம் தெய்வ கோரிக்கை விக்கினமாதலால், தேசாந்திர வஸ்திர பூஷண நஷ்டமும் ஆலஸ்யமான புத்தியும் உண்டாகும் என்பதாம்.

### சூரியன் புத்தி சுக்கிரன் அந்திரம் நாள் 18-க்கு பலன்

நவரத்தின லாபம், செயதொழில் லாபம் மனஸ்தாப நிவர்த்தி, உத்தியோக முதலிய செய்தொழில் மூலமான பொன் நாணய விருத்தி சமரசமான விரயம் தனதான்னிய லாபம் தேவாலய புண்ணிய தீர்த்த ஸ்தானம் சர்வ ஜன சந்தோஷம் முதலிய சுப பலன் நடக்கும் என்பதாம்.

### சூரியன் மகாதிசையில் சந்திரன் புக்தி சந்திரன் அந்திரம் நாள் 15-க்கு பலன்

திவாந்திர வஸ்திர பூஷணலாபம் மனஸ்தாப நிவர்த்தி அன்னியஜன சந்தோஷம் லாவாதேவிகளால் நாணய

சிலாக்கியம், சிறப்பு மேன்மை வித்திய அப்பியாச விருத்தி ஓர் சைவ ஜன ஸ்திரீயால் பொருள் வந்து சேர்தல் ஐஸ்வர்ய விருத்தியும் அன்னிய ஜன சேவகாவிருத்தி முதலிய பலா பலன்கள் நடக்கும் என்பதாம்.

### சந்திரன் புக்தி குஜன் அந்திரம் நாள் 10 நாழிக்கை 30-க்கு பலன்

விவகார தாருட்டிய குறைவு சயனதுவேஷம், எடுத்த கார்ய பின்னம், தன் களத்திர ஜனங்களால் அலைச்சல் திரிச்சல் ஆயாசம் மனவிறக்தி குடும்ப மூலமான வழக்கு வாது முதலியவைகளாகும்.

தீய வார்த்தைகளும் கோள்கலகங்கள், ஓர் மனுஷனை நாடிச்செல்லுதலும் அதன் மூலமான வியாகூலம் ராஜதண்டனை முதலிய கொடிய பலன் நடக்கும்.

### சந்திர புக்தியில், இராகு அந்திரம் நாள் 27-க்கு பலன்

நடந்து மெலிந்தால் உபகாரஸ்தர்கள் தன்னைப் பகைக்குதல் ஆடையாபரண விரயமுண்டாதல் அன்னிய தேசங்களினின்று; ஆபத்தான சங்கதி வருதல் லாவாதேவி களால் மன வியாகூலம் சமரசமான லாபமும் உத்தியோக முதலிய வியாபாரங்களில் நஷ்டம் ஆயுத பூஷண விரயம் மரத்தின் மீதிலேறி வீழ்குதல், அன்னிய ஜனப்பகை,

### சந்திர புக்தியில் குரு அந்திரம் நாள் 24-க்கு பலன்

ராஜ சம்பாஷனை ஆயுளாரோக்கியம் கெம்பு முத்தாபரணச் சேர்க்கை, சுயகிராமவாசம் உற்சாகம் மனோதைரியம், ராஜ மூலமாக காரிய சித்தி இஷ்ட அன்ன போஜனம் கொடுக்கல் வாங்கல் முதலிய காரியங்களில் சந்தோஷம், தான் எக்காரியத்தைச் செய்யினும் லாபம்.

### சந்திரன் புக்தியில் சனி அந்திரம் நாள் நாழிகை 30-க்கு பலன்

நீச்ச ஜனப்பகை, ஸ்திரீ ஜனப்பகை உபவாசம் அன்ன துவேஷம் ஆபத்தான காவியங்களிலே செல்லுதல், மனோ வியகூலம் தான்னியவகையான வியாபாரங்களில் நஷ்டம்

அன்னியோன்னியமான நேசமானவர் பகையாகுதல் விவகாரங்களில் அபஜெயம், உத்தேச விக்னம்.

### சத்திரன் புத்தியில் புதன் அந்திரம்
### நாள் 25 நாழிகை 30-க்கு பலன்

விஷ்ணு ஆலய தரிசனம் தராதரமறித்து பேசுதல், வித்தையா அப்பியாச விருத்தி மேலான அதிகாரிகளால் தன வியாகூல நிவர்த்தி அன்னிய ஜனங்களால் மரியாதை லாவா தேவிகளில் நாணய சிலாக்கியம் தேசாந்திர வஸ்திர பூஷண அலங்கிருதம் தாயாதி ஜனங்களால் சந்தோஷம் ஆனடுமை தேர்தல் வித்தையா கேழ்வி

### சந்திரன் புக்தியில் கேது அந்திரம்
### நாள் 10 நாழிகை 30 க்கு பலன்

லோபத்தாவமானம், செய்தொழில் பங்கம், குடும்ப சஷ்டாடகம் அயிஸ்வர்ய நாசம் நரம்பு மூலமான பிணி செய்தொழில் நாசம் மனைவிக்கு கெண்டத்திற்குச் சமமான பிணி உயர்தர மனுஷனால் ஆலஸ்மான புத்தியும்மனோ பயங்கரமும் உண்டாவதோடு தனது பிதுர்வர்க்க ஜனங்களால் கெண்டத்திற்குச் சமமான கெண்டாதி பிணி பீடையுண்டாகும்.

### சந்திர புக்தியில் சுக்கிர அந்திரம்
### மாதம் 1-க்கு பவன்

பொன் மூலமான தொழிலாரம்பம் செய்தல் அதன்மூலமான விசேஷ தனலாபமும் ஸ்திரீகளால் சந்தோஷமும் நூதன போக ஸ்திரீ வந்து சேர்தலுமாம் தன் திரேகத்திலுள்ள வியாதி நிவர்த்தியாகுதல் அன்னிய தேசங்களிலிருந்து பொருள் வந்துசேர்தல், விவசாய தனலாபம் அயிஸ்வர்ய விருத்தியும் தனதான்னிய சம்பத்து.

### சந்திரன் புக்தியில் சூரிய அந்திர
### நாள் 9-க்கு பலன்

நானாவிதமான அலைச்சல். மணிமந்திர அவுஷதசித்தி அன்னியஜன கோபமும் இஷ்டஜன பிராப்தி, ஆபரண விரயம், கைப்பொருள் விரயம், மனஸ்தாபம் பிதுர்ஜன பீடை விவசாய தனலாபம், எக்காலமும் வியாதியோடிருத்தல் சனபதாம்

### சூரிய மகா திசையில் குஜன் புக்தி
### குஜன் அந்திரம் நாள் 7 நாழிகை 21-க்குபலன்

குடும்ப மூலமான கலகம் நீச்சமிலேசரால் சஷ்டாடகம் திரவிய நாசம் கொடுக்கல் வாங்கல் முதலிய காரியங்களில் விக்கினம், பகையிடையூரு தன்பிரபுக்களால் வியாகூலம், செய்தொழில் மூலமாக விக்கினம், தனபிரபுக்களால் மரியாதைக் குறைவு

### குஜன் புக்தியில் இராகு அந்திரம்
### நாள் 18 நாழிகை 54-க்கு பலன்

விஷப்பிணி மனவியாகூலம் ஆளடியார் சித்தி குறைவு நீச்ச ஸ்திரீகளுடன் சண்டையிடுதல் ஆபரணவிரயம் கெம்பு முத்தாபரணங்களால் வழக்குவாது சுயஜன விரோதம் அன்னியதேச கவனம் பிதுர்தன நாசம் சகோதர பீடை லாவாதேவி விக்கினம், கட்டிச் சிரங்கு காமாலை வீக்கம் விஷபேதி முதலியவைகளுண்டு.

### குஜன் புத்தியில் குரு அந்திரம்
### நாள் 16 நாழிகை 48-க்கு பலன்

பூமி மூலமான விசேஷ தனலாபம் ஆடையாபரண அலங்கிருதம் போட்டிம் பொல்லாங்கு நிவர்த்தி, சயனசுக போக யின்பம் மனவியாகூல நிவர்த்தி அன்னிய ஜன மரியாதை விலையுயர்ந்த ஆபரணங்கடை வாங்குதல் நானா விதமானத் தொழிலாலும் சேவகாவிருத்தியாலும் நினைத்த கார்ய ஜயமும் சந்தோஷமும் உண்டாகும்.

### குஜன் புக்தியில் சனி அத்திரம்
### நாள் 19 நாழிதை 57-க்கு பலன்

தீர்த்த யாத்தினரச் செல்ல எத்தனம், அயிஸ்வர்ய விருத்தியும் ஆடையாபரணச்சேர்க்கை தனது எஜமானனரலும் தன்சொந்த பந்துக்களாலும் மனவியாகூலமுண்டாதல் லாவாதேவிகளால் கலகம் பகை யிடக்காதில் நோய் எதேச்சையாய்த்திரிதல்உச்தேசவிக்கினம்முதலியபலனுணடாகும்

### குஜன் புக்தியில் புதன் அந்திரம்
### நாள் 17 நாழிகை 51-க்கு பலன்

வியாபார மூலதன லாபம் தராசுத் தொழிலில் லாபம் தான்கொண்டகார்யார்த்த மூலமாய்வடக்குதிசைச்சென்று

வருதல் ஆடையாபரண வருத்து மனஸ்தாப நிவர்த்தி அயிஸ்வர்ய விருத்தியும் தனலாபங்களுமுண்டாதல் வித்தையா அப்பியாச விருத்தியும் புராணக் காவியக் கேள்வியுமாம்

குஜன் மத்தியில் கேது அந்திரம்
நாள் 7-நாழிகை 21-க்குப் பலன்

விஷப்பிணி அன்னிய ஜன கலகம் கலகத்தினால் ராஜ முலமான வழக்கு வாது லாபகரமாகிய பொருள் முகாந்திரங்களில் கலகம் அன்னிய தேச கவனம் எத்தன காரியார்த்த மூலமாய் பகை இடது கண்ணில் நோய் அனாவசியமானச் சண்டைச் சச்சரவு இடபேதக வாசம் கோபத்தால் பல தொந்திரவு முதலிய பலன் நடக்கும் என்பதாம்.

குஜன் புத்தியில் சுக்கிர அந்தரம்
நாள் 21-க்கு பலன்

களத்திர மூலமான மன சந்தோஷம் விவகார தாருட்டியம் எத்தன காரிய அனுகூலம் நாற்கால் ஜீவன்களைவாங்தில் கிராமம் பூமி வாங்குதல் களத்திர ஜனங்களால் மரியாதையும் அயிஸ்வர்ய விருத்தியுமாம் ஓர் அன்னியநீச்சஸ்திரீயால் கோரிய காரியம் யீடேறுதல் சகல ஜன சேவசுாவிருத்தியும் நூதன மான தொழில் ஆரம்பம் செல்தலுமாம்.

குஜன் புத்தி சூரிய அந்திரம்

நீச்ச மிலேச்ச துவேஷம் ஆளடியார் பின்னம் ஆயாசம் கிருகிருப்பு மனஸ்தாபம் தாபஜரம் அன்னியி தேச கவனம் அயிஸ்வர்ய குறைவு.

சந்திர அந்திரம் நாள் 10
நாள் 6 நாழிகை 18 க்கு பலன்

நானாவிதமான புஷ்ப அலங்காரம் மாதுர் ஜனநேசம் தாசிகளிடத்தும் சன்யாசிகளிடத்தும் நேசம் தேவ பிராமண ப தி ஆயிராரோக்கியம் எத்தன காரிய அனுகூலம்.

சூரிய திசையில் ராகு மாதம் 10
நாள் 24க்கு அந்திர பலன் விபரம்

ராகு புக்தி ரரகு அந்திர மாதம் 1
நாள் 18-நாழிகை 6க்கு பலன்

நீச்ச ஜன சத்ருஷ்டி ஆயுராரோக்கிய குறைவு மனஸ தாபம் மன பயங்கரம் ஆபரண பூஷண லாபம் தராதரக் குறைவு தனதான்ய வருமான விக்கினம்.

ராஜாக்களாலும் மன்னவராலு மனுகூலம் கிராமவாசம் மனஸ்தாப நிவர்த்தி.

குரு அந்திரம் மாதம் 1 நாள் 13
நாழிகை 12-க்கு பலன்

ராஜாக்களாலும் மன்னவராலு மலுகூலம் கிராம வாசம் மனஸ்தாப நிவர்த்தி.

சனி அந்திரம் மாதம் 1 நாள் 21
நாழிகை 18-க்கு பலன்

நாணாவிதமான கார்யார்த்த பின்னம் அன்னிய கிராம வாசம் பரிமள சுகந்த வாசனைத் திரவியங்களாலனுகூலம் இத்திரிய சம்பந்தமான வியாதி அசௌக்கியம்.

புதன் அந்திரம் மாதம் 1 நாள்
15 நாழிகை 5-க்கு பலன்

வியாபார தனலாபம் வைசிய ஜனதுவேஷம் ஆபத்கால திரேகபிணி மனதிலுள்ள கார்யார்த்தமாய் அன்னியகிராமம் அல்லது தேகத்திற்குச் சென்று கஷ்டப்படுதல்

கேது அந்திரம் நாள் 18 நாழிகை 54-க்கு பலன்

சயன துவேஷம் நீச்ச பிரபுக்களால் தன்சுய ஜனதுவே ஷம் ஆபரண விறயம் தனதான்ய விரயம் பாட்டன் பாட்டி வகையில் சூதகம்.

சுக்ர அந்திரம் மாதம் 1 நாள் 24-க்கு பலன்

களத்திர ஜனசயன சந்துருஷ்டி மனமார்த்தமாய்ப் பிறறை மோசம் செய்தல் நூதன ஸ்திரீ சம்போகம் ஆளடி மார்சித்தி,

சூரிய அந்திரம் நாள் 16 நாழிகை 12-க்கு பலன்

மாதுர் வகை ஜனங்களாலும் சுயமாதுருவாலும் தூர தேசம் செல்ல எத்தனம் காமாலை பிற்கால சுகம் ஐஸ்வரிய குறைவு தன தான்ய சம்பத்து.

குஜன் அந்திரம் நாள் 18
நாழிகை 54-க்கு பலன்

மனதைரிய குறைவு ஆபரண பூஷண அயிஸ்வர்ய குறைவு மனதிலுள்ள சந்தேகம் நிவர்த்தி தராதர விக்கினம்.

இராகு புக்தி அந்திரம் பலன் முற்றும்

சூர்ய திசையில் குரு சுய அந்திரம்
மீ 1 நாள் 8 நாழிகை 34-க்கு பலன்

பிராமணப் பிரபு தேசம் தனதான்ய சம்பத்து ஐஸ்வர்ய விருத்தி ராஜகார்ய அனுகூலம் தயவு தாக்ஷண்யம் மந்திர தியானம்

சனி அந்திரம் மாதம் நாள் 15
நாழிகை 36-க்கு பலன்

தூர தேசசஞ்சாரம் அனாசார விருத்தி குறைவு நவதான்ய பலித குறைவு மனஸ்தாபம் பிற்கால சுகம்.

புதன் அந்திரம் மாதம் 1 நாள் 20
நாழிகை 48 க்கு பலன்

விவகார தாருட்யம் மனோவியாகூல நிவர்த்தி நூதன வியாபாரம் செய்தல சமரச லாபம் உத்தேச கார்ய அனுகூலம்.

கேது அந்திரம் நாள் 10
நாழிகை 48-க்கு பலன்

நீச்ச கிருத்தியம், அன்ன துவேஷம் ஆளடியார்பங்கம் நானாவிதமான வகையிலும் அலைச்சல் மனஸ்தாபம்.

சுக்ர அந்திரம் மாதம் 1 நாள் 18-க்கு பலன்

களத்திரத்தாலும் மற்றும் அன்னிய ஸ்திரீ ஜனங்களாலும் சந்தோஷம், சயன சுயபோகம் தைரியவிருத்தி அற்ப லாபம்.

சூரிய அந்திரம் நாள் 14
நாழிகை 21-க்கு பலன்

வீண் விரயம் வியாபார மந்தம் மனவியாதி பிதுர்ஜன கலகம் சகோதரரால் பல தொந்தரவு ஆளடியார் விருத்தி குறைவு.

சந்திர அந்திரம் நாள் 24-க்கு பலன்

வியாபார தனலாபம் தனதான்ய விருத்தியும் தன்திரேகத்திலுள்ள வியாதி நிவர்த்தியாதலுமாம்.

அக்கினியா லாபத்து திடீரென ஓர் காரியத்தைச் செய்யவேண்டும் ஆரம்பித்தல் அயிஸ்வர்ய குறவு.

ராகு அந்திர மாதம் 1
நாள் 15 நாழிகை 12-க்கு பலன்

வழக்கு வாது உண்டாதல் பொருள் விரயம் நரம்பு முகாந்தி ரங்களில் ரெணசாயம் ஏற்படும்.

சூரிய திசை சனி புக்தி மாதம் 11 நாள் 21-ல்
சனி சுய அந்திரம் 1 மாதம் நாள் 24
நாழிகை 9க்கு பலன்

செய்தொழில் மூலமான தனலாப குறைவு இட பேதக வாசம், அன்ன துவேசம்.

புதன் அந்திரம் மாதம் 1 நாள் 10
நாழிகை 28-க்கு பலன்

ஜல தாடகமுண்டாக்குதல் ஆயுளாரோக்கியம் விவசாய தனவான்னிய விருத்தி.

கேது அந்திரம் நாள் 19
நாழிகை 57-க்கு பலன்

கோபத்தால் பல தொந்திர வுண்டாதல் அன்ன துவேஷமும் நீச்சர்களிடம் அவுஷத முண்ணல்.

சுக்ர அந்திரம் மாதம் 1 நாள் 28-க்கு பலன்

பரிமளத்திரவிய லாபம் செய்தொழில் பலிதம் உதிரேக ஆரோக்கியம் சுகம்.

சூரிய அந்திரம் நாள் 17 நாழிகை 6-க்கு பலன்

தான தருமு விக்கினம் செய்தொழில் விக்கினம் விலையுயர்ந்த ஆபரண விக்றயம்.

சந்திர அந்திரம் நாள் 5 நாழிகை 30 க்கு பலன்

அன்னிய ஜனக்கூட்டுறவு பிரகாசமான பாத்திர வருமானம் நானாவிதமான சவுக்கியம்.

குஜன் அந்திரம் நாள் 19 நாழிகை 57-க்கு பலன்
தீவாந்திரங்களி லுற்பத்தியாகும் வஸ்துவால் நஷ்டம்

சயன மின்மை சந்தேகம் கலகம்

இராகு அந்திரம் நாள் 19
நாள் 21 நாழிகை 18க்கு பலன்

வீண்காரியங்களில் பிரவேசிக்குதல் அயிஸ்வர்யவிருத்தி குறவு மனோவியாதி வியாகூலம்.

குரு அந்திரம் மாதம் 1
நாள் 15 நாழிகை 33-க்கு பலன்

ராஜாக்களைக்காண்குதல் ஆளடியாரனுகூலம், சினேகித நட்பு முதலிய சந்தோஷம்.

சனி புக்தி அந்திர பலன் முற்றிற்று

சூரிய திசையில் புதன் புக்தி மாதம்
நாள் 9 -க்கும் புதன் சுய அந்திரம் மாதம் 1
நாள் 13 நாழிகை 21-க்கு பலன்

எக்காரியத்தைச் செய்யினும் லாபம் லாவாதேவிகளால் நாணய சிலாக்கிய அயிஸ்வர்ய விருத்தி.

கேது அந்திரம் நாள் 17 நாழிகை 51-க்கு பலன்

கட்டிச்சிறங்கு ஊஷ்ணாதிபத்தியம், விசனம் கடன்படுதல்

சுக்கிர அந்திரம் மாதம் 1 நாழிகை 18க்கு பலன்

தேவ பிராமணட்க்தி ஆவஸ்யம் தனதான்னியவருந்து புத்திர ருண்டாதல்

சூரிய அந்திரம் நாள் நாழிகை 18-க்கு பலன்

வீண் காரிய விக்கினம் தன்பிதாவுடன் சண்டையிடுதல் அசௌக்கியம் பிற்கால சுகம்.

சந்திர அந்திரம் நாள் 25 நாழிகை 30க்கு பலன்

குடும்ப மூலமான சுபசோபனம் உதாரன தருமம் செய்தல் ஆயுரோக்கியம் எத்தன காரிய அனுகூலம்.

குஜ அந்திரம் நாள் 17 நாழிகை 51க்கு பலன்

விருஷ வகையில் விற்றல் வாங்கல் முதலிய வியாபாரம் செய்தல் அதனால் சமதிலிதம் உண்டு.

ராகு அந்திரம் மாதம் 1
நாள் 15 நாழிகை 34-க்கு பலன்

அலைச்சல் திரிச்சல் இடபேதக வாசம் தன தான்ய விருத்தி குறைவு தயாளமின்மை.

குரு அந்திரம் மாதம் 1
நாள் 18 நாழிகை 27-க்கு பலன்

தேவாலயபுண்ணிய தீர்த்தஸ்தானம் மனோதுக்க நிவர்த்தி ஆளடியார் சேர்க்கை

சனி அந்திரம் மாதம் 1
நாள் 18 நாழிகை 27-க்கு பலன்

தூரதேச பிரயாணம் எத்தன காரிய பங்கம் இந்திரிய சேஷ்டையால் வியாதி.

புதன் புக்தி அந்திரம் பலன் முற்றிற்று.
சூரிய திசையில் கேது புக்தி கேது அந்திரம்
நாள் 7 நாழிகை 2 க்கு பலன்

ரசாயன காரியவிருத்தி குறைவுநாணய பழுது அன்னிய கிராமம் சொல்ல யெத்தனம் விசனம்.

சுக்கிர அந்திரம் நாள் 21க்கு பலன்

நூதன ஸ்திரீபோகம், அன்னிய ஜனங்களால் பொருள் வருத்து விவசாய லாபம்

சூரிய அந்திரம் நாள் 6 நாழிகை 18க்கு பலன்

நீச்ச காரிய அனுகூலம் லாவாதேவிகளல் நாணய சிலாக்கியம் பிற்கால விறயம்

சந்திர அந்திரம் நாள் 10 நாழிகை 30க்கு பலன்

சமாதான விருத்தி அவிமான காரிய சிந்திபுராபுனகாவிய சித்தி விவசாய தனலாபம்

குஜ அந்திரம் நாள் நாழிகை 27-க்கு பலன்

வீண் விரயம். தனதான்ய வருத்து காலதாமதம் விவசாய வருத்து குறவு.

இராகு அந்திரம் நாள் 18
நாழிகை 54-க்கு பலன்

துஷ்ட சினவு அன்னிய ஜனங்களானுகூலம் பிற்கால நஷ்டம் தொந்திரவு

குரு அந்திரம் நாள் 16 நாழிகை 48-க்கு பலன்

தேவபிராமணர்களா லனுகூலம் ஓமம் யாகம் எக்யம் செய்தல் சத்துருஷ்டி.

சனி அந்திரம் நாள் 19 நாழிகை 48க்கு பலன்

ஓர் கருத்த மனுஷனால் நினைத்த காரிய அனுகூலம் சந்தோஷக் கீர்த்தி.

புதன் அந்திரம் நாள் 17 நாழிகை
51க்கு பலன்

வியாபார தனலாபம் தொடுத்த காரியம் ஈடேருதல் அயிஸ்வரிய விருத்தி சந்தோஷம்.

கேது புத்தி அந்திர பலன் மூற்றிற்று.

சூரிய திசையில் சுக்கிர புக்தி வருடம் 1க்குபலன்

சுக்கிர சுய அந்திரம் மாதம் 2க்கு பலன்

களத்திர புத்திர சந்தோஷம் ஆயுளாரோக்கியம் தன தான்ய சம்பத்து.

சூரிய அந்திரம் நாள் 18க்கு பலன்

திரேக உஷ்ணம் தனச்சேதம் எத்தன காரியவிக்கினம் வியாகூலம்.

சந்திர அந்திரம் மாதம் 1 க்கு பலன்

தீவாந்திர வஸ்திர பூஷண அலங்காரம்தயாளசிந்தைக் கூர்மையான புக்தி.

குஜன் அந்திரம் நாள் 21 க்கு பலன்

தயாளமின்கை சயன சந்துருஷ்டி வித்தையா பங்கம் நீக்க விருத்தி.

ராகு அந்திரம் மாதம் 1 நாள் 24-க்கு பலன்

திருடராலும் கள்வராலும் பயங்கரம் சந்தோஷ விருத்தி மயக்கம்.

குரு அந்திரம் மாதம் 1 நாள் 27-க்கு பலன்

தேசாந்திர வஸ்திர பூஷண அலங்கிருதம் அன்னதா செய்தல் சந்தோஷ வார்த்தை

சனி அந்திரம் மாதம் 1 நாள் 27க்கு பலன்

நீச்ச ஜனங்களாலனுகூலம் தராதரமின்மை கோபத் தொந்திரவு.

புதன் அந்திரம் மாதம் 1 நாள் 21க்கு பலன்

வியாபார தனலாபம் மந்திரசித்தி சயன சத்துருட்டி வித்தை அப்பியாசம்.

கேது அந்திரம் நாள் 21-க்கு பலன்

தயாளத்தா லாபத்து இஷ்ட ஜனப்பகை வியாபாரதன லாபம் சந்தோஷம்.

சந்திர மகாதிசையில் வருடம் 10க்கு
சந்திரன் சுய புத்தி மாதம் 10-ல் சந்திரன்
சுய அந்திரம் நாள் 25-க்கு பலன்

ஆபரண வருத்து கடன் நிவர்த்தியாதல், யாகாதி மிருத்தியங்களைச் செய்தல் நன்மை.

குஜன் அந்திரம் நாள் 17
நாழிகை 30-க்கு பலன்

லாவாதேவி பங்கம், தொடுத்த காரிய பின்னம் நாண யப் பழுது இடபேதக வாசம் விசனம்

இராகு அந்திரம் மாதம் 1 நாள் 15க்கு பலன்

வியாபார மந்தம் வீக்கமுண்டதால் அன்னிய ஜனங்க ளால் கலகம் மனஸ்தாபம் உபவாசம்

குரு அந்திரம் மாதம் 1 நாள் 10க்கு பலன்

தீர்த்தயாத்திரை செல்லல், சென்றயிடத்தில் குரு தரிச னம் சுகம், வியாகூல நிவர்த்தி,

சனி அந்திரம் மாதம் 1
நாள் 17 நாழிகை 30-க்கு பலன்

சரீரத்தில் றெணமுண்டாதல் அலைச்சல் திரிச்சல், ரத்தின பூஷண விரயம் தனவிரயம்.

புதன் அந்திரம் மாதம் 1
நாள் 12-க்கு நாழிகை 30-க்கு பலன்

வியாபார மூலமான விசேஷலாபம், ஆயுளாரோக்கியம் அன்னிய ஜன சவகாசம், செய்தொழில் விருத்தி.

கேது அந்திரம் நாள் 17 நாழிகை 30-க்கு பலன்

விஷபேதி, அவுஷத முண்ணல் மனைவியால் தொந்திரவு அயிஸ்வர்ய குறைவு.

சுக்கிர அந்திரம் மாதம் 1 நாள் 20க்கு பலன்

சயனசுகபோகம், ஆயுதபூஷண லாபம், நினைத்த காரிய ஜெயம் சகல காரிய ஜெயம் சயன சுகம்.

சூரிய அந்திரம் நாள் 15-க்கு பலன்

தனதான்ய பலித முறவு, விருதாவான கார்யங்களில் அலைந்து திரிதல், திரவிய சித்தி,

சந்திர திசையில் குஜன் புத்தி மாதம் 7-க்கு
சுய அந்திரம் நாள் 12 நாழிகை 15க்கு பலன்

கலகம் சச்சரவு, திரவிய விரயம். அன்னமுண்ணாமை கோபம் நாசம்.

சந்திரபுத்தி அந்தர பலன் முற்றிற்று
இராகு அந்திரம் மாதம் 1
நாள் 1 நாழிகை 30-க்கு பலன்

நீச்ச ஜன சந்தோஷம் கைகளால் பிடிப்பு, எத்தன காரிய பின்னம் நாற்கால் ஜீவ நஷ்டம்.

குரு அந்திரம் நாள் 28-க்கு பலன்

கிருஷிதான்யபலிதம், ஆயுளாரோக்கியம், பகை நிவர்த்தி மன சந்தோஷ முதலியவை.

சனி அந்திரம் மாதம் 1
நாள் 3 நாழிகை 30க்கு பலன்

நடந்து அலைதல் செய்தொழில் மந்தம் எத்தன காரி யார்த்தமாய்ப் பொருட் சிலவு.

புதன் அந்திரம் நாள் 30 நாழிகை 45-க்கு பலன்

சைவஜன விஸ்வாசம் ரதசராதி லாபம் இஷ்ட அன்ன போஜனம் நினைத்த காரிய ஜெயம்,

கேது அந்திரம் நாள் 12 நாழிகை 15-க்கு பலன்

திரவிய விரயம் புத்திரப்பகை நவதான்ய நாசம் அயிஸ் வர்ய விருத்தி குறைவு.

சுக்கிர அந்திரம் மாதம் 1 நாள் 5-க்கு பலன்

நூதன ஸ்திரீ சம்போகம் ஆதாரம் நினைத்த காரிய ஜெயம் நானாவிதமான கருத்து.

சூரிய அந்திரம் நாள் 10 நாழிகை 30-க்கு பலன்

பிதுர்ஜன சந்தோஷம் அன்னிய ஜனப்பகை இடையூ ருண்டாதல் அன்னமுண்மை.

சந்திர அந்திரம் நாள் 17 நாழிகை 30க்கு பலன்

குடும்பமூல சந்தோஷம் தயாதி ஜனக்கூட்டுறவு எத்தன காரிய அனுகூலம்.

குஜன் புக்தி மாதம் 7-க்கு
அந்திர பலன் முற்றிற்று.

சந்திர மகா திசையில் இராகு புக்தி வருடம் 1
மாதம் 6-ல் இராகு சுய அந்திரம்
மாதம் 2 நாள் 21-க்கு பலன்

பகை வருண்டாதல் நானாவிதமான விரயம் விசனம் விஷயம் சர்ப்ப பயம்.

குரு அந்திரம் 2 நாள் 12-க்கு பலன்

பிராமண பிரபு நேசம் ஆளடியார் சித்தி தொடுத்த காரியம் யீடேருதல், வித்தையா அனுகூலம்.

